श्रीगुरुभ्यो नमः

# स्मृतिमुक्ताफलम्

श्रीवैद्यनाथदीक्षितविरचितम्

सप्तमो भागः ஏழாவது பாகம்

## तिथिनिर्णयकाण्डः प्रायश्चित्तकाण्डश्च

# ஸ்ம்ருதி முக்தாபலம்

## திதி நிர்ணய காண்டமும் - பிராயச்சித்த காண்டமும்




வெளியிடுபவர் :

வேத தர்ம சாஸ்திர பரிபாலன ஸபை

ஸ்ரீ காஞ்சீ காமகோடி பீடம், ஸ்ரீமடம் ஸம்ஸ்தானம்,

காஞ்சீபுரம்

உ

श्रीगुरुभ्यो नमः

# स्मृतिमुक्ताफलम्

श्रीवैद्यनाथदीक्षितविरचितम्

सप्तमो भागः

## तिथिनिर्णयकाण्डः प्रायश्चित्तकाण्डश्च

# ஸ்ம்ருதி முக்தாபலம்

ஸ்ரீ வைத்யநாத தீக்ஷிதர் இயற்றியது

ஏழாவது பாகம்

## திதி நிர்ணய காண்டமும் - பிராயச்சித்த காண்டமும்

தமிழுரையுடன்

தொகுத்தளிப்பவர் :

வைத்ய S.V. ராதாகிருஷ்ண சாஸ்திரி, ஸ்ரீரங்கம்

வெளியிடுபவர் :

**வேத தர்ம சாஸ்திர பரிபாலன ஸபை**

(கும்பகோணம்) சார்பில்

ஸ்ரீ காஞ்சீ காமகோடி பீடம், ஸ்ரீமடம் ஸம்ஸ்தானம்

1, சாலைத் தெரு, காஞ்சீபுரம் - 631 502

கர ௵ 2011

**SMRITI MUKTAPHALAM - PART - 7**

**TITHINIRNAYAM - PRAYASCHITTHA KANDAM**

With Tamil translation :

Khara 2011 - II Edition

Edited by :

Vaidya **S.V. Radhakrishna Sastri, Srirangam**

Published on behalf of

**Veda Dharma Sastra Paripalana Sabha**

Kumbakonam

by

**Sri Kanchi Kamakoti Peetam,**

Sri Matam Samsthanam

1, Salai Street, Kancheepuram=631 502.

Lasertypeset & Prnted at :

**V.K.N. Enterprises**

164, R.H. Road, Mylapore, Chennai-4, Phone : 98402 17036

Phone : 044-2722115 e:mail:skmkanci@md3.vsnl.net.in
Fax : 044-27224305, 37290060

Sri Chandramouleeswaraya Namaha:
Sri Sankara Bhagavazdpadacharya
Paramaparagatha Moolamnaya Sarvagnapeeta:
His Holiness Sri Kanchi Kamakoti Peetadhipathi

**JAGADGURU SRI SANKARACHARYA SWAMIGAL**
**Srimatam Samasthanam**
**No.1, Salai Street, KANCHEEPURAM - 631 502.**



मङ्क्त्वा सत्स्मृतिसागरे सुगहने लब्ध्वा वरं मौक्तिकं
श्रुत्यम्बागलभूषणं समतनोत् श्रीवैद्यनाथो महान् ।
भूयस्तद्द्रविडानुवादकनकैस्तन्वन् स्रजं सुन्दरीं
राधाकृष्णसुधीस्सदा विजयतां श्रीचन्द्रमौलीक्षणात् ॥

अक्षैर्मा दीव्येति आम्नायामृताम्बुधिबिन्दुभिः निखिलस्मृतिनिचयेन च प्रभुसम्मिततया, इतिहासपुराणबृन्दमाक्षिकधारया सुहृत्सम्मिततया, काव्यरसानुभूतीक्षुसारवर्षैः कान्तासम्मिततया च प्रतिपादितः धर्मकलापः सूक्ष्मगतिको विलसति । धर्म एव विशिनष्टि समाजं समजात् । मनीषिमनोगोचरस्य तस्य धर्मस्यावगतये परमकारुणिका ऋषयः स्मृतिग्रन्थान् विलिख्य महदुपकारमतानिषुः । धर्मकलापापकलनकलापटौ कलौ मानवानां बोधनाय वैद्यनाथदीक्षिताख्यो विद्वदग्रेगण्यः स्मृतिसागारं निर्मथ्य

पीयूषमाचिन्वन् स्मृतिमुक्ताफलाख्यं ग्रन्थमरीरचत् । सोऽयं ग्रन्थः वर्णाश्रमधर्मकाण्डः, आह्निककाण्डः, आशौचकाण्डः, श्राद्धकाण्डः, तिथिनिर्णयकाण्डः तथा प्रायश्चित्तकाण्डश्चेति काण्डषट्केन निखिलमपि धर्मं प्रतिपादयति । यं वै रक्षसि धर्मं त्वं धृत्या च नियमेन च । स वै राघवशार्दूल धर्मस्त्वामभि-रक्षत्विति श्रीमद्रामायणवचनेन धर्मो रक्षति रक्षित इति सुष्ठु अवगम्यते । लोकानां धारणाद्धर्म इति सार्थाभिधां बिभ्रतो धर्मस्य सेवनं लोकव्यवस्थायाः स्थिरीकरणमिति न संशीतिः । सोऽपि धर्मः अनेन ग्रन्थरत्नेन सुष्ठ्ववगम्यते । तस्यैतस्य ग्रन्थस्य वर्णाश्रमधर्मकाण्डादिः भागशः **वैद्यश्री शिवे. राधाकृष्णशास्त्रिभिः** द्रविडानुवादेन सह परिष्कृत्य वेदधर्मशास्त्रपरिपालनसभाद्वारा प्रकाश्यते इति ज्ञात्वा भृशं मोदामहे । सोऽयं यत्नः श्रीमहात्रिपुरसुन्दर्यम्बा-समेत श्रीचन्द्रमौलीश्वरकृपया सफलो भवत्विति ग्रन्थ-सम्पादकः एवमेव ग्रन्थरत्नानि प्रकाशयन्नैहिकामुष्मिकश्रेयो-विलासैः समेधतामिति प्रकाशने साहाय्यकर्तारश्च समस्त-मङ्गलानि अवाप्नुयुः पठितारश्च धर्मसेवनेन निखिलश्रेयांस्यधि-गच्छन्त्विति चाशास्महे ।

शङ्करसंवत्सरः २५२०

काञ्चीपुरम्

नारायणस्मृतिः ।

## ஸ்ரீ குருப்யோ நம: ।

# நூல் அறிமுகம்

ச்ருதி, ஸ்ம்ருதி, புராணம் என்ற மூன்றும் பாரதப் பண்பாட்டை வகுத்தளித்த மூல நூல் வரிசை. கௌதம மஹர்ஷி தன் தர்ம ஸூத்ரத்தைத் தொடங்கும்போது "வேதோ அகிலோ தர்ம மூலம்"; "தத்விதாம் ச ஸ்ம்ருதி சீலே" என்று இதனைக் குறிப்பிடுகிறார். மனுவும் வேதோऽகிலோ தர்ம மூலம். ஸ்ம்ருதி சீலே ச தத்விதாம்" எனக் குறிப்பிடுகிறார். தர்மம் மனித வாழ்வின் இலக்கு. அதற்கு வேதமே அடிப்படை. வேதம் உணர்த்திய நல் வழியில் முதலில் மனித ஸமூஹம் பண்பட்டது. அந்த பண்பாட்டு முறையை மனித ஸமூஹத்தின் ஆதித் தலைவர்களான முனிவர்கள் பின்பற்றி மேனிலை பெற்றனர். தாம் பெற்ற மேனிலையின் பெருமையையும் தேவையையும் அனுபவித்துணர்ந்த முனிவர்கள் மற்ற மாந்தரையும் அவ்வழியில் இட்டுச் சென்று பண்படுத்தி மேனிலையை அடையச் செய்தனர். அந்த அறநெறி வேதம் உணர்த்திய நன்னெறி - தர்மம், உலகிற்கே உகந்ததெனக் கண்டு அதனை நினைவுக் குறிப்புகளாக - ஸ்ம்ருதி நூல்களாகத் தொகுத்து மாந்தருக்கு அருகிலிருந்து உணர்த்தினர். உபதேசித்தனர். வழிகாட்டி நடைமுறையில் பழக்கினர் - ஆசாரமாக்கினர்.

அவ்வாறு அறத்தை நடைமுறையில் பழகி, அதன் அருமைகளை உணர்ந்தவரின் நடைமுறையையும் மேனிலையையும் வியாஸர் முதலானோர் புராண நூல்களாகத் தொகுத்து மாந்தரிடையே உபதேசித்தனர். இவ்வகையில் பாமரரும் நன்குணர்ந்து நடைமுறை பழக உதவிய புராணங்கள் ஸதாசார (நன்னடைமுறை)ப்பழக் கத்திற்குப் பெரிதும் உதவின. இவ்வாறு வேதம், அதன்

நினைவுப் பெட்டகமான ஸ்ம்ருதி, அதன்படி வாழ்ந்து மேனிலை பெற்ற மக்களின் வரலாற்று நூலாகப் புராணம் என மூன்று படிகள் இடம் பெற்றன.

ஸ்ரீ சங்கர பகவத் பாதர் முதலிய சான்றோர்களை ''ச்ருதி ஸ்ம்ருதி புராணாநாம் ஆலயம்'' என்றே வணங்குகிறோம். வேதம் அநாதி. என்று வெளிவந்தது எனக் காலவரை குறிப்பிட இயலாதது. காலமும் அநாதி. என்று இந்த உலகம் தோன்றியது என்று வரை காண இயலாதது. ஒரு நற்கருமத்தைத் தொடங்கும் போது இந்த அநாதி என்ற நிலையைக் குறிப்பிட்டே, அத்யஸ்ரீ பகவத: விஷ்ணோ: ஆஜ்ஞயா ப்ரவர்த்தமாநஸ்ய என்று தொடங்கும் ஸங்கல்பத்தில் வரை காணாத தேசகாலங்களுக்கிடையே ஏழாவது வைவஸ்வதமந்வந்தரத்தில் 28வது கலியுகத்தின் முதல் பாதத்தில் தொடங்கியுள்ள 5112வது வருஷமாகிய கர வருஷத்தில் ஜம்பூ த்வீபத்தில் பரத கண்டத்தில் பாரத வர்ஷத்திய தக்ஷிணபாரதத்தில் என்று குறிப்பிடுகிறோம். இத்தனை காலதேசவரைகளுக்கு உட்படாத உலகத் தோற்றத்தின் காலதேசங்களில் வேதம் வழக்கிலிருந்தது. அதில் குறிப்பிட்ட தர்மமே இன்றுவரை நம் நடைமுறைக்கு - தர்மத்திற்கு வழி காட்டியாக உள்ளது. அவற்றைக் காலபரிணாமத்திற்கேற்கத் தொகுத்துத் தந்த முனிவர்களின் உபதேசமான மனுஸ்ம்ருதி, கௌதம தர்ம ஸூத்ரம், பராசர ஸ்ம்ருதி என்ற நூல்களின் மூலமே நம் வரை வழி காட்டிக் கொண்டு நிற்கிறது.

ஆயிரக் கணக்கான அந்நூல்களின் உபதேசங்களைச் சுருக்கி 300 ஆண்டுகளுக்கு முன் பாரதத்தின் தென் பகுதிக்கான வழிகாட்டியாக ஸ்ம்ருதி முக்தாபலம் என்ற நூல்வடிவம் பெற்றது.

நூலின் உட்பொருள் நம் நடைமுறைக்கு உகந்த மேலான நடைமுறை - தர்மம் எனப்படுகிறது. உடல் உள்ளம் உணர்வு அறிவு ஆத்மா என நம்முள் பல பகுதிகள் தனித் தனியே இயங்குகின்றன. இவை ஒற்றுமையுடன்

செயல்படும் நிலையும் உண்டு. முரண்பட்டுச் செயல்படும் நிலையும் உண்டு. ஒற்றுமையுடன் செயல்படவே அவை அமைந்துள்ள போதிலும் வெளியுலகமும் உள்ளுலகமும் வழி மாறி முரண்பட நேர்கிறது. கணப் பொழுது இன்பம் தருபவை மூலம் நிலைத்த இன்பம் தருகிற சூழ் நிலையைக் கெடுக்க வாய்ப்பு அதிகம். இதனைச் சமச்சீர் நோக்குடன் ஆராய்வதற்கேற்ற உள்ளத்து உறுதி நிலையாய் இருப்பதில்லை. அதனால் நல்லோரின் நடைமுறையை நல்லதென உணர்ந்து நல்லோரின் வழிகாட்டலில் நற்பயிற்சி பெற்றுப் பழகி, அமைந்த நற்பழக்கத்தை வழக்கமாக இயல்பாக அமைத்துக் கொள்வது அவசியமாகிறது. அதில் பொருளாசையோ உடல் - உள்ளத்தாசையோ குறுக்கிட்டுக் கெடுத்துவிடாமல் அந்த அர்த்த- காமங்களை நன்னெறிக்கு இணைவதாக அமைக்கக் கடும் பயிற்சி தேவைப்படுகிறது. இதனையே நன்னெறி - தர்மமாக முன் நிறுத்திக் கொள்கிறோம்.

எது தர்மம்? ஒழுங்கு மீறாத உடல், உள்ளம், அறிவு, நான் என்ற முனைவு இவற்றின் கூட்டமைப்பால் நிகழ்கிற செயல் தர்மம் எனலாம். ஒவ்வொரு உயிரினமும் அத்யாத்மம், அதிபூதம், அதிதைவம் என்ற மூன்றின் ஆளுகைக்கு உட்பட்டது. பூமி, ஜலம், நெருப்பு, வாயு, ஆகாசம் என்ற ஐந்து பூதங்களின் கலவையானது வெளிப்படையாக தெரிகிற உடலமைப்பு, அதற்கு வெளி உலகம் தந்து உதவுகிற உணவு, உடை, குடியிருப்பு முதலியவை, இவை அதிபூத ஆளுகைக்குட்பட்ட நிலை. மனிதன் தான்தோன்றியாகத் திடீரெனத் தோன்றியவனல்ல. பல பிறவிகளை முன்னர் எடுத்து அவற்றின் வினைப் பயனுகப் பலவாகப் பலவாறாக வாழ்ந்து மறைந்த ஜீவன் இன்று இங்கு இக்குலத்தில் இவர்களைப் பெற்றோராகக் கொண்டு இத்தனை ஆண்டுகள் இவ்வாறு வாழவாய்ப்புப் பெற்றுள்ளான். வினை தந்த வாழ்விற் கேற்ப இவனது உடலும் உள்ளமும் அமைந்துள்ளன. இவை இரண்டும் இப்பிறவியில் புதிதாகப் பெற்றதெனினும்

இவனது உள்ளத்தின் அடித் தளத்தில் வாஸனை - ஸம்ஸ்காரம் என்ற இரண்டு, சித்தம் என்ற உள்ளப் பகுதியில் முன் பிறவிகளில் பெற்ற அனுபவமும் பழக்க வழக்கங்களும் அதி ஸூக்ஷ்மமாக முதலீட்டுப் பொருளாக அமைந்துள்ளன. இவையனைத்தின் கூட்டே இவன் இவள் இது எனப் பெயர் பெற்ற ஜீவன். (ஜீவன் தந்தை தாய்களால் மட்டும் உருப்பெற்றதல்ல) இந்தப் பகுதியே அத்யாத்மம் எனப்படுவது.

வாக்கில் அக்னியும், கண்களில் ஸூர்யனும் காதுகளில் திக்தேவதைகளும் மனத்தில் சந்த்ரனும் என்றவாறு இந்த்ரியம், மனம் முதலானதைத் தேவர்கள் செயலில் தூண்டுகின்றனர். இதை அக்நிர் மே வாசிச்ரித: என்று தொடங்குகிற ஸூக்தம் விளக்கும். இந்த்ரியமும் மனமும் செயல்படத் தேவர்களின் உதவி தேவை. கண் கெட்டபின் ஸூர்ய நமஸ்காரம் எனப் பழமொழி. இது அதி தைவப் பகுதியின் ஆட்சி. இவ்வாறு பூத சக்தி ஆத்ம சக்தி. தேவசக்தி என்ற மூன்றின் ஆளுகைக்குட்பட்டே வாழ்கிறோம்.

இந்த மூன்று புலப்படாத சக்திகளுக்குக் குந்தகம் விளைவிக்காதவாறு நம் நடைமுறையை அமைத்துக்கொள்ள நேர்கிறது. நேர்கிறது. இதுவும் தர்மத்தின் ஆசரணமே.

ஸத்யம், அஹிம்ஸை, பூததயை சௌசம், புலனடக்கம், மனவடக்கம், என்றவாறு நீள்கிற பல நற்பழக்கங்களும் தர்மத்தின் உட்பட்டவையே. இவற்றில் எது நல்லதென்ற கேள்வி பொருளற்றது. **தர்மோ விச்வஸ்ய ஜகத: ப்ரதிஷ்டா,** (தர்மம் உலகமனைத்தின் மூலாதாரம்) **யோ வை தர்ம: - ஸத்யம் வை தத்** (உண்மை பேசுதலே தர்மம்). **அக்ரோதோ தர்ம:,** (கோபிக்காதிருப்பதே தர்மம்), **அஹிம்ஸா பரமோ தர்ம:** (அஹிம்ஸையே பெரும் தர்மம்). **ப்ரதிக்ருஹ்ய பவேத் தேயம் ஏஷதர்ம:** (ஏற்றதைத் திருப்பித் தருவதே தர்மம்). **ஆந்ருசம்ஸ்யம் பரோ தர்ம:**

(இவன் பொல்லாதவன் எனப் பிறர் குறை கூறப்படாது வாழ்வதே தர்மம்). க்ருதே ச ப்ரதிகர்தவ்யம் ஏஷ தர்ம: ஸநாதந: (செய்த உதவிக்கு ஈடாக ப்ரதி உதவி செய்வதே பெரும் தர்மம்). ந ஹி வைரேண வைராணி சாம்யந்தி. அவைரேண ச சாம்யந்தி ஏஷதர்ம: ஸநாதந: (வைரத்தால் வைரம் (எதிர்ப்பு உணர்ச்சியுடன் எதிரியாக நினைத்து எதிர்ப்பது) அடங்காது. வைரமின்றி உள்ளன்புடன் பழக வைரம் அடங்கும். அதுவே தர்மம். என்று நற்பழக்க வழக்கங்கள் அனைத்தும் தர்மம் என்ற சொல்லின் பொருளே. ஆபஸ்தம்பர் அழகாக இதனை விளக்குகிறார். न धर्माधर्मौ चरतः - आवां स्व इति । न देवाः, न गन्धर्वाः, न पितरः, आचक्षन्ते अयं धर्मः अयमधर्म इति । अतः यत्तु आर्याः क्रियमाणं प्रशंसन्ति, स धर्मः । यत् गर्हन्ते सः अधर्मः इति । தர்மமோ அதர்மமோ தாமே முன்வந்து நான் தான் தர்மம், நான்தான் அதர்மம் எனக் கூறாது. உன் செயலைக் கண்டு சான்றோர் இது தர்மம், எனப் பாராட்டுவது தர்மம். இது அதர்மம் எனக் குறை கூறுவது அதர்மம் எனக் கொள்வீர்''. மிகத் தெளிவான விளக்கம் இது. ஸ்ம்ருதி முக்தாபலத்தில் பல இடங்களில் இது சிஷ்டர்களால் ஏற்கப்பட்டது. இது சிஷ்டர்களால் ஏற்கப்படாதது என்ற விளக்கத்தைக் காணலாம்.

சில சமயங்களில் ஒருவனுக்குத் தர்மமாயிருப்பதே மற்றொருவனுக்கு அவனுக்கு அமைந்துள்ள சூழ் நிலையில் அதர்மமாகக் கூடும். विद्वद्भिः सेवितः सद्भिः नित्यमद्वेषरागिभिः । हृदये नाभ्यनुज्ञातो यो धर्मस्तं निबोधत । என மனு இதனை விளக்குகிறார். விருப்பு வெறுப்பற்றவரும் நற்பண்புள்ளவரும் பேரறிஞருமானவர் எதனைத் தன் வழக்கில் கொண்டு நடைமுறைப்படுத்தியிருக்கிறாரோ எதனை உள்ளமார்ந்து அனுமதிக்கிறாரோ அது தர்மம்.

வைசேஷிக ஸூத்ரம் यतोऽभ्युदयनिःश्रेयस सिद्धिः - अथातो धर्मं व्याख्यास्यामः எனக் கூறும். இதன்படி மேனிலையும் பந்தம் நீங்குவதும் எதனால் விளையுமோ அது தர்மம். ஆக அறவழி

எனப்படும் தர்மம் வாழ்வின் மேனிலையையும் நிம்மதியையும் உள்ளார்ந்த ஆனந்தத்தையும் அளிப்பதே.

இதன் பூர்ண நிலையைப் பின்பற்றுவது எல்லோருக்கும் எளிதல்ல. தாய் தந்தையரிடமிருந்து பிறந்த ஜீவன் என்று நிலை மட்டும் போதாது. இதற்கென பிறந்த கணத்திலிருந்து வாழ்நாள் முழுவதும் ஒவ்வொரு நிலையிலும் தன்னைப் பண்படுத்திக்கொள்ள (ஸம்ஸ்காரம் பெற) வேண்டியிருக்கிறது. பிறந்த நொடியிலிருந்து உபநயனம்வரையுள்ள ஸம்ஸ்காரங்களைச் செய்விப்பது தந்தையின் (பெற்றோரின்) கடமை. பின் ஸ்நாதக வ்ரதத்திலிருந்து பல்வேறு ஸம்ஸ்காரங்களைத் தகுதிக் கேற்ப செய்து கொள்வது அவரவர் கடமை. உபநயனத்தால் ஜீவன் வாழ்ந்து கொண்டே மறு பிறப்பு அடைவதால் 'த்விஜன்' ஆகிறான். இந்த த்விஜ நிலைக்குக் குலமும் உதவுகிறது. அந்தணனளவில் இந்த மறு பிறப்பாளனுவது மிக மிக முக்யக் கடமை. அதற்கேற்பத் தன்னைப் பண்படுத்திக் கொள்வது அவசியமாகிறது. இதற்கு குலப் பிறப்பு, பெற்றோரின் நிலை, குலாசாரம், தனி மனிதனின் ஆசாரம் எனப் பல நிலைகளும் உதவுகின்றன. அனைத்திற்கும் இலக்கு வாழையடி வாழையாகவந்த தார்மிகப் பண்பைக் காப்பதே. இதையே தர்மசாஸ்திரம் தன் முக்கிய நோக்காகக் கொண்டுள்ளது.

தர்ம சாஸ்திரத்தை விளக்கவந்த மூல நூல்கள் ஆயிரக் கணக்கில் இருந்தாலும் மிகச் சில நூல்களே இன்று முழு அளவில் அறிஞர் உலகின் ஆராய்வில் உள்ளன. அவ்வாறு ஆராய்பவரும் இன்று நூற்றுக்கும் குறைவானவரே. 300 ஆண்டுகளுக்கு முன்னிருந்த கண்டிர மாணிக்கத்தைச் சேர்ந்த பேரறிஞர் ஸ்ரீ வைத்யநாத தீக்ஷிதர் அவர்கள் இன்றைய ஆராய்வாளருக்கு உதவும் வகையில் **ஸ்ம்ருதிமுக்தாபலம்** என்ற நூலைத் தொகுத்தளித்தார். ஸம்ஸ்க்ருதத்திலிருந்த அந்நூலைப் பற்றி எளிதில் தமிழில் உரையாற்றி விளக்கிய மகான் **பண்டிதமண்டன ஸ்ரீ நாராயண** சாஸ்திரீ அவர்கள் சென்ற நூற்றுண்டில்

வாழ்ந்தவர். அவரது ஸம்ப்ரதாயத்தையொட்டிய தமிழுரை இன்றையத் தலைமுறையினருக்குப் பேரருட் ப்ரஸாதம்.

அப்பணியை ஊக்குவித்துத் தமிழ் மக்களிடையே தர்ம வழி பற்றிக் கண் திறந்து வைத்தது கும்பகோணத்தில் இயங்கிவந்த வேத தர்மசாஸ்திர பரிபாலன ஸபை. சென்ற நூற்றாண்டில் வேதமும் தர்மமும் வழக்கொழிந்துவிடுமோ என்று கவலைப்பட்ட ஆஸ்திகப் பெருமக்களின் கவனத்தை வேதத்திடமும் தர்ம சாஸ்திரத்திடமும் திருப்பி அவற்றில் ஆழ்ந்த நம்பிக்கையையும் பெருமையுணர்வையும் ஊட்டியது காஞ்சீ காமகோடி பீடத்தின் கடும் உழைப்பே. உலகமே போற்றும் அருட் சக்தி பெற்ற ஸ்ரீ காஞ்சீ காமகோடி பீடத்தின் ஜகத்குரு ஸ்ரீ சங்கராசார்யர்களாக விளங்கிய ஸ்ரீ ஸ்ரீ பரம பூஜ்ய மஹாபெரியவாளான ஸ்ரீ சந்திரசேகரேந்திர ஸரஸ்வதீ பரமாசார்யர்களின் பேருள்ளம் வேத தர்ம சாஸ்திர ரக்ஷணத்தைத் தம் பெரும் முக்கியக் கடமையாகத் திருவுள்ளம் கொண்டதே ஸ்ம்ருதி முக்தாபலம் முதலிய பல நூல்களைத் தமிழ் விளக்கங்களுடன் வெளியிட முற்பட்டதன் காரணம்.

ஸ்மிருதி முக்தாபலம் என்ற நூலின் மறு பதிப்பின் அவச்யத் தேவையை நன்குணர்ந்த காஞ்சீ காமகோடி பீடத்ததிபர்களாக விளங்குகிற பரமாசார்ய ஜகத்குரு ஸ்ரீ ஜயேந்திர ஸரஸ்வதீ ஸ்ரீ சரணர்கள் அதன் மறுபதிப்பை - கிரந்தலிபியிலுள்ள மூலத்தைத் தேவநாகரி லிபியில் மாற்றுவது என்றொரு மாற்றத்துடன் இப்போது வேத தர்ம சாஸ்திர பரிபாபலன ஸபையின் சார்பில் வெளியிட அருள் பாலித்துள்ளார்கள்.

வர்ணாசிரம தர்ம காண்டம், ஆஹ்நிக காண்டம், ஆசௌச காண்டம், சிராத்த காண்டம் என்ற அதன் நான்கு காண்டங்களும் அச்சேறி வெளியாகியுள்ளன. மற்ற திதி நிர்ணய காண்டமும், ப்ராயச்சித்த காண்டமும் இப்பதிப்பில் வெளியாகி ஸ்ரீமதாசார்ய ஸ்ரீ சரணர்களின் உள்ளக்கிடக்கை நிறைவு பெறுகிறது.

திதி நிர்ணய காண்டம் - பஞ்சாங்கம் என்பது திதி, வாரம், நக்ஷத்திரம், யோகம், கரணம் என்ற ஐந்து அங்கங்களை அறிய உதவுவது. வருஷம், மாஸம், தேதி, அயனம் முதலிய வேறு பகுதிகளும் அதில் இடம் பெறுகின்றன. ஆங்கில வருஷ கணனம் போல், 28-29, 30-31 என்ற நாட் கணக்கோ 24 மணிகள், நிமிஷங்கள், விநாடிகள் என்ற நேரக் கணக்கோ இதில் இடம் பெறுவதில்லை. இவற்றைக் காண காலண்டர் உதவாது. கணிதஜ்ஞர் அமைத்துத் தந்த பஞ்சாங்கத்தைக் கொண்டே காலக் குறிப்பை அறிய முடியும். பொதுவாகத் திதிக்கு இதில் முக்யப் பங்கு உண்டு. பகல் இரவு நேரங்களிலும் ப்ராத: காலம், ஸங்கவம், மத்யான்ஹம், குதபம், ஸாயங்காலம், முதலிய காலப் பகுதிகளுக்கு முக்கியத்துவம் உண்டு.

விரதம், பண்டிகை, ஜன்ம நக்ஷத்திரம், சிராத்த திதி இவற்றின் குறிப்பிட்ட காலவரையை இக்காண்டம் நிர்ணயிக்கிறது. ப்ரதமை முதல் அமாவாஸ்யை அல்லது பௌர்ணமி என்ற திதிகள், சுக்ல க்ருஷ்ண பக்ஷங்கள், மாஸ ஸங்க்ரமணம் என்று சுபாசுப கர்மங்களைச் செய்கிற நேரம் தனித்துக் கணிக்க வேண்டிவருகிறது. இதனைப் பற்றிய விளக்கம் பெருமளவில் ஆந்ஹிக - ஆசௌச - ச்ராத்த காண்டங்களில் விளக்கப் பெற்றுள்ளதென்பதும் கவனத்துக்குரியது.

நல்லது செய்யின் நல்லது விளையும். கெட்டது செய்யின் கேடு விளையும், இது தவிர்க்க இயலாத பின் விளைவு. செய்த தவற்றை உணர்ந்து அதற்கேற்ற கழுவாயை - பரிஹாரத்தைச் செய்யச் சான்றோர்கள் வழி வகுத்துள்ளதை பிராயச்சித்த காண்டம் விளக்குகிறது. விரும்பி ஒருவன் தவறு செய்வதற்கும் அறியாமல் சூழ்நிலையால் நேர்ந்த தவற்றிற்குமிடையே பின்விளைவில் பெரும் வேறுபாடு உண்டு. செய்த தவற்றைப் பச்சாத்தாபத்துடன் உணர்ந்து பரிஹாரமாகத் தண்டனை ரீதியில் தானே வருத்திக் கொள்வது பரிஹாரமாகலாம்.

தவறு செய்த பிறகும் அதனை உணராமல் வீம்புடன்தான் தவறே செய்யாதவன் என இறுமாந்திருப்பதால் கடும் பரிஹாரமாகிய தண்டனையை அனுபவித்த பிறகும் முழுதும் முன் வினை நீங்காமலிருப்பதும் உண்டு. அங்கும் ப்ராயச்சித்தத்தால் முன் வினையின் பின் விளைவைக் கூர் மழுங்கச் செய்யலாம். பின் விளைவில் கொடிய நரகபாதையும் அடங்கும். நரகவாதனையைக் கற்பனைக் கண்களால்தான் இப்போது காண முடியும். நரகம் என்பதே கற்பனையல்ல. நரகவாதனை அனுபவித்த பிறகும் செய்த தவற்றை உணர்ந்து பச்சாத்தாபம் கொள்ளாதவனுக்கு மறு பிறவியிலும் நரகவாதனைக்கு ஈடான துன்பம் நேரும்.

இவ்வாறு பல கோணங்களில் ஆராய்ந்து இயன்றவரை இப்பிறவியிலேயே பாபத்தின் கொடும் பின்விளைவுகளைக் குறைக்கவாவது செய்யலாம்.

இதுதான் ப்ராயச்சித்தம் என நிர்ணயிக்கவும் இயலாது. தவறு செய்தவனின் சூழ்நிலை, அவனது வளர்ப்பு, கல்வி, வாழ்க்கை எனப் பலவற்றின் தாக்கமும் பாபத்தின் அளவைக் கூட்டவோ குறைக்கவோ பயன்படும். இவற்றை முன் அறிவதால் தவற்றின் அளவை, கொடுமையைக் குறைக்க இயலலாம். நல்லோரின் இணக்கம் இதற்கு உதவலாம். கெட்டவரின் இணக்கம் வாதனையை அதிகப்படுத்தலாம்.

ஆராய்ச்சிப் பார்வையுடன் இப்பகுதியைப் பரிசீலனை செய்ய அறவழி பெரிதும் உதவும்.

ஸ்ம்ருதி முக்தாபலம் மறுபதிப்பைக் காண்பது காஞ்சி காமகோடி பீடத்துப் பரமாசார்யர்களின் பேரருளால் நேர்கிறது. இவனுக்கு இதனை வெளிக் கொணர்வதில் உள்ள பங்கு அப்பெரியோர்களின் பேரருளால் நிறைவுறுகிறது. இவற்றை ஸ்ரீ சரணர்களின் திருவடிகளில் ஸமர்பணம் செய்து கடைத் தேறியுள்ளேன்.

*ஸ்ரீரங்கம்* — வைத்ய S.V. ராதாகிருஷ்ண சாஸ்திரி

*11.8.2011*

# முகவுரை

*அக்நிஹோத்ரம் - ஸ்ரீ கோபால தேசிகாசார்யர்*
*(பிராயச்சித்த காண்ட முதற்பதிப்பில்)*

*மிக ப்ரஸித்த வைதிக ச்ரேஷ்டராகிய ஸ்ரீ வைத்யநாத தீக்ஷிதர் அருளிச் செய்த ''ஸ்ம்ருதி முக்தாபலம்'' என்ற தர்ம சாஸ்த்ர க்ரந்தத்தின் உயர்வு பற்றி ச்ராத்த காண்ட முகவுரையில் விவரிக்கப்பட்டுள்ளது. இப்போது அந்த க்ரந்தத்தில் ஒருபாகமாகிய ''ப்ராயச்சித்த காண்டம்'' என்கிற பாகமானது வேத தர்ம சாஸ்த்ர பரிபாலன ஸபையால் தமிழ் மொழி பெயர்ப்புடன் ப்ரசுரிக்கப் பட்டிருப்பதை ஆஸ்திக ஸமூஹத்தினர் ஸந்தோஷத்துடன் வரவேற்கிறார்கள். தற்காலம் நமது தர்ம தேசத்தில் ஸநாதன வைதிக தர்மங்களான வர்ணாச்ரம ஆசாரங்களுக்கு, விபரீதமான காலதேசாதி பலவித அஸந்தர்ப்பங்களால் பரம ஆஸ்திகர்களாலும் யதாவத்தாக அநுஷ்டிக்க முடியாத, தவிர்க்கமுடியாத நிலைமை ஏற்பட்டிருக்கிறது. சாஸ்த்ர விதிகளையோ, நிஷேதங்களையோ யதாவத்தாக அநுஸரிக்க முடியாத ஆஸ்திகர்களுக்கு ப்ராயச்சித்தந்தான் பரிஹாரமாக அமைந்து அவர்களைக் காப்பாற்றி, சாஸ்த்ர வரம்பை மீறுதவர்களாகச் செய்கிறது. அந்தந்தத் தோஷங்களுக்கு விதிக்கப்பட்ட ப்ராயச்சித்தங்களைச் செய்து கொண்டுவிட்டால், அதனால் அவன் சுத்தனாகி பூர்ணாநுஷ்டானியாயும் ஆகிவிடுகிறான். ப்ராயச்சித்தங்களின் கருணை நிறைந்த கார்யம் இதுவேயாகும். இந்த அநுக்ரஹ புத்தியுடன்தான் நமது ச்ருதி ஸ்ம்ருதிகள் ப்ராயச்சித்த உபதேசம் செய்ய முன்வந்தன.*

*லௌகிக தண்டனை உதாஹரணம் :-வைதிக மதமானது ப்ராயச்சித்தங்களைக் காட்டியும், பயமுறுத்தியும், நிர்ப்பந்தித்தும் தர்மங்களை அநுஷ்டிக்க*

வற்புறுத்துவதால் அந்த மதத்தின் பலஹீனமே வெளிப்படும், மதத்தில் உயர்வும், ஸாரமும், ஹிதமும் இருந்தால் ஜனங்கள் தானுகவே அதைப் பின்பற்றமாட்டார்களா ! ப்ராயச்சித்த பீதி எதற்கு ! என்று சிலர் வாதிப்பதை அறிவோம். உலக தத்துவத்தை அறியாதவரது வாதமே இது. வைதிக மதத்தில் ஸகல ப்ராணிகளும் க்ஷேமம் பெறக் கூடிய தத்வஹித புருஷார்த்தங்கள் அடங்கியிருப்பதால் யாவரும் தானுகவே விரும்பி அதன் சட்டத்திட்டங்களுக்குக் கட்டுப் படுகிறுர்களேயல்லாது நிர்ப்பந்தமோ, பயமுறுத்தலோ காரணமில்லை.

உலகில் எந்த மத ஸ்தாபனங்ளிலும், ராஜாங்கத்திலும், லௌகிக ஸ்தாபனங்அ

களிலும், அவைகளில் சேர்ந்துள்ளவர்கள் அதனதன் சட்டதிட்டங் களுக்கும், வரையறைகளுக்கும் கட்டுப்பட்டே நடக்கவேண்டுமென்ற நியமம் இருக்கிறது. நியமத்தை மீறுகிறவர்களுக்கு அபராதம், தண்டனை அல்லது பஹிஷ்காராதிகள் விதிக்கப்படுகின்றன.

**தண்ட நீதி பற்றி மனு** :- ராஜாங்க உத்யோகங்களில் உறுதிமொழி கொடுத்துச் சேர்ந்திருப்பவர்களும் மற்றும் தொழிற்சாலை, பாங்கு, பள்ளிக் கூடங்கள், ஸங்கங்கள், ஸமாஜங்கள் போன்ற ஸகல லௌகிக ஸ்தாபனங்களிலும் கட்டுப்பாட்டை மீறியவர்களுக்கும், கடமையைச் செய்யாதவர்களுக்கும் அந்தந்தக் குற்றங்களுடைய தன்மையை அனுஸரித்துத் தண்டனைகள் ராஜ நீதிகளில் விதிக்கப்படுகின்றன. தண்டனை பயமிருப்பதால் அவரவர்கள் தங்கள் தங்கள் கடமைகளை ஊக்கத்துடன் செய்கிறுர்கள். மனு, தண்ட நீதியின் ஆவச்யகதையை வெகுவாக வற்புறுத்தியுள்ளார். தண்ட நீதியை ப்ரயோகிக்காவிடில் ராஜ்யம் வ்யவஸ்தையற்று அழிந்துவிடும்.

दुर्लभो हि शुचिर्नरः மனித ஸ்வபாவத்தில் சுத்தனு யிருப்பவன் துர்லபன். ஆதலால் அந்யாய வழியிலிருப்ப வர்கள் மீது தண்டத்தை அவச்யம் ப்ரயோகிக்க வேண்டும். அப்படிச் செய்தால் தண்ட பயத்தால் ப்ரஜைகள் (स्वधर्मान्न चलन्ति च) ஸ்வதர்மத்திலிருந்து நழுவத் துணியமாட்டார்க ளென்றும் மனு கூறுகிருர். தண்ட பயத்தால் எல்லாம் அமைதியாக நடக்குமென்றும், தண்டத்தை ப்ரயோகிக்கா விடில் ராஜ்யத்தில் கீழ், மேல் என்ற வ்யவஸ்தை அழிந்துவிடுமென்றும் கூறுகிருர். भिद्येरन् सर्वसेतवः ।

இந்த 20-வது நாகரிக நூற்ருண்டில் கூட ஸகல தேசங்களும் பற்பலவித தண்டோபாயத்தின் பலத்தாலேயே ராஜ்யம் நடத்துவதைக் காண்கிருேம். ராஜாங்கம் மட்டுமல்ல, எல்லாவித ஸங்கங்களும், ஸமாஜங்களும் இந்த தண்ட உபாயத்திலுலேயே நடக்கின்றன. இந்தப் பாதுகாப்பு மிக அவச்யமாகிறது. ராஜாங்கத்திலும், ஸங்கங்களிலும் அங்கத்தினர்களாகச் சேருகிறவர்கள் சட்ட திட்டங்களுக்குக் கட்டுப்படாமல் அவரவர் தம் தம் மனப் போக்கின்படி நடந்துவந்தால் அந்த ஸ்தாபனம் ஒரு க்ஷணம்கூட ஜீவித்திருக்க முடியாதல்லவா!

**ப்ராயச்சித்தம் வைதிக தண்டனை :-** இவ்வாறு மனித ஸங்கேதத்தால் ஏற்பட்ட ஸ்தாபனங்களிலேயே கட்டுப்பாட்டை மீறியவர்களுக்குத் தண்டனைவிதி யிருக்கையில், பகவானுலேயே நியமிக்கப்பட்டவைக ளாயும், ச்ருதி ஸ்ம்ருதி போன்ற உத்தம ப்ரமாணங்களால் விதிக்கப்பட்டவையாயுமுள்ள தர்மங்களையும், ஆசாரங்களையும் மீறுவோர்களுக்கு சாஸ்த்ரீயமான ப்ராயச்சித்த தண்டனை விதிக்கப்படுவது ந்யாயமே. பரம்பரையாக இன்ன வேதத்தை அநுஸரிப்பேனென்றும், இன்ன ருஷிகளின் கோத்ர ஸூத்ர தர்மங்களின்படி நடப்பேன் என்றும், தேவ, ப்ராஹ்மண, அக்னி ஸன்னிதியில் ப்ரதிஜ்ஞை செய்து உறுதியளித்த வைதிகன் அவைகளை மீறி, அந்தத் தர்மங்களைக் கைவிட்டால், அது

தெய்வ ஆஜ்ஞையையும், சாஸ்த்ர ஆஜ்ஞையையும் மீறிய தோஷமாகிறது. இம்மாதிரி ஒவ்வொருவரும் தர்ம ஆசாரங்களை மீறி நடந்தால் அந்த வேதமதம் எப்படி நிலைத்திருக்கும்! ஸன்மார்க்க நெறி எப்படி நிலைக்கமுடியும்? ஆகையால் கட்டளையை மீறிய தோஷத்திற்காக வைதிக தண்டனையான ப்ராயச்சித்தத்தைச் செய்து கொள்ளும்படி சாஸ்த்ரங்கள் உபதேசித்துள்ளன. இது ந்யாயமே.

சாஸ்த்ரமென்ற நியமங்களை மீறும் தோஷமானது பகவானுடைய ஆஜ்ஞையை மீறும் தோஷமென்று வைதிகமத ஸித்தாந்தமாகும். ஆகையால் அந்தத் தோஷங்களுக்குப் பரலோகத்தில் தண்டனை விதிப்பவன் பகவானே. ப்ராயச்சித்தங்களால் த்ருப்தியடைந்து பிறகு அநுக்ரஹிப்பவனும் பகவான்தான் என்று மனு முதலிய மஹர்ஷிகளின் நிர்ணயமாயிருக்கிறது.

**ப்ராயச்சித்தம் செய்துகொள்ளாவிட்டால் தோஷம்** :- யாஜ்ஞவல்க்யர் கூறுகிறார் :- विहितस्य अननुष्ठानात् निन्दितस्य च सेवनात् । नरः पतनमृच्छति । "சாஸ்த்ர விஹிதத்தைச் செய்யாததாலும், சாஸ்த்ரத்தால் நிஷேதிக்கப்பட்ட அதர்மங்களைச் செய்வதாலும் மனிதன் ப்ரஷ்டனாகிறான்" அதாவது சாஸ்த்ர வழியிலிருந்து நழுவியவனாகிறான். ஆகையால் அந்தத் தோஷத்திற்காக அவன் ப்ராயச்சித்தத்தைக் கட்டாயமாகச் செய்துகொண்டு சுத்தியடைய வேண்டும். चरितव्यमतो नित्यं प्रायश्चित्तं विशुद्धये । இங்கு "நித்யம்" என்று ஸ்ம்ருதி கூறுவதால் ப்ராயச்சித்தாநுஷ்டானம் கட்டாயமானதென்று நினைவுபடுத்தப்படுகிறது. இதை மிதாக்ஷரையில் விஜ்ஞானேச்வரர் தெளிவுபடுத்தியுள்ளார்.

प्रायश्चित्तमकुर्वाणाः पापेषु निरता नराः என்ற வசனத்தில் யாஜ்ஞவல்க்யர், பாபம் செய்யும் மனிதர்கள் ப்ராயச்சித்தம் செய்துகொள்ளாவிடில் பற்பல நரகங்களை அடைவதுடன் திர்யக் ப்ராணி ஜந்மத்தையும் அடைவதாக தோஷம்

சொல்லியுள்ளார். ஆகையால் அந்தந்தத் தோஷங்களுக்கு விதிக்கப்பட்ட ப்ராயச்சித்தத்தைச் செய்து கொண்டால் தோஷியானவன் சுத்தனுகி, பரலோகத்தில் நரகாதிகளிலிருந்து மீளுவதுடன் பகவத் க்ருபையையும் பெற்று இஹலோகத்திலும் சிஷ்ட ஜனங்களால் கொண்டாடப்படுகிறுன். திருட்டு முதலிய பாபம் செய்தவர்கள் அந்தத் தோஷத்திற்காக அரசால் தண்டிக்கப்பட்டுவிட்டால் அந்த ராஜ தண்டனையாலேயே அவர்கள் திருட்டு தோஷத்திலிருந்து விடுபட்டு பரிசுத்தராகி விடுகிறதாக நமது ராஜ தர்ம நீதி கூறுகிறது. राजभिः धृतदण्डास्तु कृत्वा पापानि मानवाः । निर्मलाः स्वर्गमायान्ति, இந்தத் தர்ம தத்வத்தை ஸ்ரீ ராகவன் வாலிக்கு உபதேசித்தார். இந்த உதாஹரணம் கொண்டே வைதிக ப்ராயச்சித்த தண்டனையின் தத்வத்தை அறியலாம். இதையெல்லாம் அறிந்து ஆஸ்திகர்கள் சீர்திருந்தவும், கவனத்துடன் இருக்கவும் இந்தப் புஸ்தகமும் இதன் மொழிபெயர்ப்பும் மிகுந்த ப்ரயோஜனம் உள்ளதாகும்.

**பாப ஸமூஹங்கள் :-** மனிதன் தனது வாழ்க்கையில், தெரிந்தும், தெரியாமலும் செய்யும் குற்றங்கள், அதாவது தோஷங்கள் அபரிமிதமானவை. அவைகளனைத்தையும் குறிப்பிடுவதோ, அவைகளுக்கு ப்ராயச்சித்தம் விதிப்பதோ ஸாத்யமல்ல. ஆயினும் ஸ்ம்ருதிகள் பெரும்பாலும் இந்தக் கார்யத்தைச் நிறைவுறச் செய்திருக்கின்றன. நிபந்தனகாரர்களும் விரிவுக்கு அஞ்சாமல் உலக க்ஷேமார்த்தமாக அவைகளைப் பற்றி விசார, நிர்ணயாதிகள் பெரும்பாலும் செய்திருக்கிறுர்கள். ப்ரஹ்மஹத்யை முதலாக, ஈ, எறும்பு, கிருமி வரையிலுள்ள ப்ராணி வதங்கள், ஹிம்ஸைகள், அவைகளிலுள்ள அநேக பிரிவுகள், உள் பிரிவுகளான தோஷங்கள், ஸுராபானம் முதல் வெகு சிறிய வஸ்து வரையில் பான, ஆஹார தோஷங்கள், ஸ்வர்ண ஸ்தேயம் முதலாக பற்பலவித திருட்டுக் குற்றங்கள், கணக்கற்ற வ்யபிசார தோஷங்கள், வாங்கக் கூடாதவைகளை வாங்குதல், விற்கக்

கூடாதவைகளை விற்பது, சாப்பிடக் கூடாதவைகளைச் சாப்பிடுதல் போன்ற அபரிமிதமான தோஷங்களைக் குறிப்பிட்டு அவைகளுக்காக ப்ராயச்சித்த விதிகளையும் சுத்திகளையும் சாஸ்த்ரம் விதித்துள்ளது. 'ஸத்யம் வத', 'தர்மம் சர', 'அஹரஹ: ஸந்த்யாமுபாஸீத' இத்யாதி விதிகளை அதிக்ரமித்ததற்கும் விரிவாக ப்ராயச்சித்தம் கூறப்பட்டுள்ளது.

**பாபங்களின் பிரிவும், பலாபலமும் :-** இந்த பாபங்கள் அல்லது தோஷங்களில் சில வெகு ப்ரபலமாயும், சில நடுத்தரமாயும், சில அல்பமாயுமிருப்பதால் அதற்கு ஏற்றபடி ப்ராயச்சித்தங்களிலும், குரு, லகு என்ற விபாகம் செய்து ப்ரயோகிக்க விதி காணப்படுகிறது. பாபங்களில் மஹாபாதகம், அதிபாதகம், பாதகம், உபபாதகம், ஸாதாரண பாபம் என்று பிரிவினை செய்யப்பட்டிருக்கிறது. மஹாபாதங்கள் என்பவை ப்ரஹ்மஹத்யா - ஸுராபான - ஸ்வர்ணஸ்தேய - குருதல்பகமனாதிகள் இவைகளுடன் சில ப்ரபல பாபங்கள், "ஸமபாதகம்" என்ற பெயரால் ப்ரஹ்ம ஹத்யைக்கு ஸமமாக சிலவும், ஸுராபானாதிகளுக்கு ஸமமாக சிலவும் பொறுக்கப்பட்டு அவைகளும் மஹாபாதகப் பிரிவில் சேர்க்கப்பட்டிருக்கின்றன. அதிபாதகமும் பெரிய தோஷத்தில் சேர்ந்ததே. பாதகம் சிறிது குறைவான தோஷமுள்ளது. உபபாதகம், ஸாதாரண பாபம் இவை வெகு சிறியவை. தோஷமும் ஸ்வல்பமானதே. இந்த மஹாபாதகாதிகளில் எந்தெந்தத் தோஷம் எந்தெந்தப் பிரிவில் சேர்ந்ததென்பதை சாஸ்த்ரங்களே பாகுபாடு செய்துவிட்டன. நாமாக கல்பிக்க முடியாது.

இவைகளில் பஞ்சமஹாபாதகம், ஸமபாதகம், அதிபாதகம் என்ற பிரிவில் சேர்ந்த பாபங்களைச் செய்தவர்கள் "பதிதர்கள்" அதாவது ப்ரஷ்டர்களாகிறார்கள். அவர்கள் ஸந்த்யாதி தர்மங்களை அநுஷ்டிக்க அர்ஹதையற்றவராவதுடன் பரலோகத்தில் நரகத்தையும் அடைகிறார்கள். இவர்களுடன் போஜனாதி கலப்புக்கள்

செய்துகொள்ளக் கூடாது. இதைக் கௌதமாதிகள் द्विजातिकर्मभ्यो हानिः पतनम्, परत्र चासिद्धिः । என்ற ஸூத்ரங்களால் தெளிவாக்கியுள்ளனர். ஆதலால் மஹாபாதகியாயும் அதிபாதகியாயுமுள்ளவர்கள் பதிதர்களாகையால் சாஸ்த்ரீய ப்ராயச்சித்த சுத்தி ஏற்படும் வரையில் விலக்கத்தக்கவர்கள். ஆனால் பாதகம், உபபாதகம் ஆகிய பிரிவுகளில் சேர்ந்த பாபங்களைச் செய்தவர்களுக்குப் பாதித்யம், அதாவது ப்ரஷ்டத்வம் ஏற்படுகிறதில்லை. நரகமோ, பஹிஷ்காரமோ கிடையா தென்று நிர்ணயிக்கப்பட்டிருக்கிறது. ப்ராயச்சித்தம் மாத்ரம் செய்து கொள்ளவேண்டும்.

**ஸம்ஸர்க்க தோஷம் கலியில் இல்லை :-** ப்ரஹ்மஹத்யாதி பஞ்சமஹா பாதகங்களைச் செய்தவனுடன் ஒருவன் கலப்புச் செய்தால் அந்த ஸம்ஸர்க்க (தொடர்பாலான) பாபத்திற்கும் ப்ரஹ்மஹத்யா ப்ராயச்சித்தமே சாஸ்த்ரங்களில் விதிக்கப்பட்டிருக்கிறது. ஆனால் கலியுகத்தில் ஸம்ஸர்க்க தோஷம் கிடையா தென்றும் அதாவது பாபம் செய்தவனுக்குப் போல் ஸம்ஸர்க்கிக்கு ஸமமான ப்ராயச்சித்தம் வேண்டியதில்லை யென்றும், லகுவான வேறுவித சுத்தி ப்ராயச்சித்தமே போதுமென்றும் நிர்ணயிக்கப்பட்டிருக்கிறது. संसर्ग दोषः पापेषु என்பதால், பாபங்களில் ஸம்ஸர்க்க தோஷம் கலியில் கிடையாதென்று வசனம் கூறுகிறது. कर्तारं तु कलौ युगे என்பதால் நேரிடையாகப் பாபம் செய்தவனையே விலக்க வேண்டுமென்றும், அவனுடன் கலப்பு செய்து கொண்டவனை விலக்க வேண்டியதில்லையென்றும் நிர்ணயம். கலப்பு செய்துகொண்டவனுக்கு அதேமாதிரி தோஷம் கிடையாதென்று தாத்பர்யமேயல்லாது, இவனும் வேறு லகுவான ப்ராயச்சித்தம் செய்துகொள்ள வேண்டியதுதான் என்று தீக்ஷிதீயத்தில் நிர்ணயிக்கப் படுவதை அறியவும்.

**புத்திபூர்வகம், அபுத்தி பூர்வகம் :-** இந்த பாபங்கள் புத்திபூர்வகம், அபுத்தி பூர்வகம் என்று இருவகைப் பட்டவை. பாபத்தை நன்ருக அறிந்து, அதைச் செய்ய வேண்டுமென்கிற இச்சையுடன் செய்யப்படும் தோஷமானது புத்திபூர்வகமாகும். அதாவது நன்கு தெரிந்து, வேண்டுமென்றே செய்யப்படுகிற பாபங்களாகும். தெரியாத்தனத்தாலும், தவறுதலாகவும் செய்யப்படுகிற பாபங்கள் அபுத்தி பூர்வகங்கள். இதை மிதாக்ஷரை தெளிவாக்கியுள்ளது. स्वतन्त्रप्रवृत्तिः विषयज्ञान कामनाभ्यां नियता। तयोरन्यतराभावेऽपि तस्या असम्भवात्॥ என்று. பாபத்தைச் செய்கையில் அதில் ஸ்வதந்த்ரமாக ப்ரவ்ருத்திப்பதில், புத்தி பூர்வகமாகச் செய்கையில் விஷய ஜ்ஞானமும், இச்சையும் சேர்ந்திருக்க வேண்டும். இவ்விரண்டில் ஒன்று இல்லாவிட்டால்கூட அது புத்திபூர்வகமாகாது.

இருட்டில் கம்பம் அல்லது மரம் என்ற ப்ராந்தியால் ஒரு ப்ராஹ்மணனை ஒருவன் வதம் செய்துவிடுவதாக வைத்துக்கொள்ளுவோம். இது புத்திபூர்வக பாபமாகாது. ப்ராஹ்மணனைக் கொல்லுகிறோம் என்ற விஷய ஜ்ஞானம் அவனுக்கு இல்லை. காமனையும் இல்லை. ப்ராஹ்மணனைக் கொல்ல வேண்டுமென்ற இச்சையும் அவனுக்கு இல்லை. ஆகையால் இது புத்திபூர்வகமானதன்று. ம்லேச்சாதிகளால் பலாத்காரமாகக் கோவதம் செய்யும்படி தூண்டப்படுகிறான். அல்லது பலாத்காரமாக ஸுராபானம் செய்யும்படி நிர்ப்பந்திக்கப்படுகிறான். இதுவும் புத்திபூர்வக பாபமில்லை. ஸுராபானம் செய்கிறோம், கோவதம் செய்கிறோம் என்ற விஷயஞானம் இருந்தபோதிலும் இங்கு காமனை அல்லது இச்சை இல்லை. ஸுராபானம் செய்ய வேண்டுமென்கிற இச்சை அவனுக்கு இல்லை. ஆதலால் இதுவும் புத்திபூர்வகமில்லை. அபுத்தி பூர்வகம்தான்.

**ரஹஸ்ய பாப ப்ராயச்சித்தம் :-** மேற்கண்ட மஹாபாதகாதி, சிறிய பாபம் வரையில் உள்ளவைகளில் ஒருவன் ரஹஸ்யமாக ஒருவருக்கும் தெரியாமல் ஒன்றைச் செய்திருந்தால், அவன் ப்ராயச்சித்தத்தையும் ரஹஸ்யமாகவே செய்துகொள்ளலாமென்று அநுமதிக்கப் பட்டிருக்கிறது. பரிஷத் கூட்டி அனுமதி கேட்க வேண்டியதில்லை. இந்த ரஹஸ்ய ப்ராயச்சித்தத்தால் அவன் சுத்தனுகிவிடுகிருன். यत्पापं कर्तृव्यतिरिक्तेन केन चिदपि न ज्ञातं तत् रहस्यम्। तस्य प्रायश्चित्तमपि रहस्येव कर्तव्यम्। என்று தீக்ஷிதர் நிர்ணயிக்கிருர். ப்ரமாணவச்யர்களான ஆஸ்திகர்களுக்கு இது பெரிய உபகாரமாகும்.

**ப்ராயச்சித்தங்களின் தன்மையும், ஸமூஹக் கலப்பும் :-** இனி ப்ராயச்சித்த ப்ரயோஜனங்களைப் பற்றியும், சாஸ்த்ராபிப்ராயத்தையும், தீக்ஷிதர் நிர்ணயத்தையும் சுருக்கி இங்கு எடுத்துரைப்பது ஆவச்யமாகும். பாபங்களுக்கு இரண்டு சக்தியுள்ளது. ஒன்று பரலோகத்தில் நரகாதிகளைக் கொடுப்பது. மற்ருென்று இஹலோகத்தில் சிஷ்ட ஜனங்களுடன் கலப்பு செய்வதைத் தடுப்பது. இதுபோல் ப்ராயச்சித்தங்களுக்கும் இரண்டு சக்தியிருக்கிறது. ஒன்று பரலோகத்தில் நரகாதிகள் ஏற்படாமல் தடுப்பது. மற்ருென்று இஹலோகத்தில் பஹிஷ்காரத்தைத் தடுத்து கலப்பு ஏற்படச் செய்வது. ஸாதாரண சிறிய பாபங்கள், உபபாதக பாபங்கள் முதலியவைகளுக்கு அவையவைகளுக்கான ப்ராயச்சித்தத்தைச் செய்து கொண்டுவிட்டால் அதனுல் இஹ-பர சுத்தி உடனேயே ஏற்பட்டுவிடுகிறது. உபபாதகாதிகள் புத்திபூர்வகங்களாகச் செய்யப்பட்டாலும் ப்ராயச்சித்தத்தால் தோஷம் நீங்கிவிடுவதாக நிர்ணயிக்கப்பட்டிருக்கிறது. மஹாபாதக அதிபாதகங்களில் சிறிது சிறிது சர்ச்சையிருக்கிறது.

**எந்தப் பாபத்திற்கும் ப்ராயச்சித்தமுண்டு :-** அபுத்தி பூர்வகமாகத் தவறுதலால் செய்யப்பட்ட ப்ரஹ்மஹத்யா,

ஸுராபாநாதிகளில் பாதித்யம் (ப்ரஷ்டத்வம்) கிடையா தாகையால் ப்ராயச்சித்தம் செய்துகொண்டவுடன் சுத்தி ஏற்பட்டு கலப்பு முதலியவைகளும் ஸந்தேஹமின்றி ஏற்பட்டுவிடுகின்றன. ஆனால் புத்திபூர்வகமாகச் செய்யப்படும் ப்ரஹ்மஹத்யா, ஸுராபான, ஸ்வர்ணஸ்தேயாதி பாபங்களைச் செய்தவன் பதிதனாகிறான். அவனுக்கு ப்ராயச்சித்தம் உண்டா? செய்துவைக்கலாமா? இவ்வளவு பெரிய பாபிக்கு ப்ராயச்சித்தமே கிடையாது. அர்ஹதையில்லை என்று சில ருஷிகள் கூறினார்கள். வேறு சில ருஷிகள் புத்திபூர்வக மஹாபாதகங்களுக்கும் ப்ராயச்சித்தம் உண்டென்றும், செய்துவைக்கலாமென்றும் அபிப்பிராயப்பட்டார்கள். இதில் வ்யவஸ்தை செய்யப்பட்டது. ப்ராயச்சித்தமே கிடையாதென்று சொன்ன ருஷிகளுக்கு ப்ராயச்சித்தத்தால் பரலோக நன்மை ஏற்படாதென்பதில் நோக்கமென்று சொல்லப்பட்டது. அதாவது ப்ராயச்சித்தம் செய்துகொண்டாலும் நரகம் போகாதென்று கருத்து. ஆதலால் எவ்வளவு பெரிய புத்திபூர்வக மஹாபாபங்களிலும் ப்ராயச்சித்தம் உண்டு என்பது ஸித்தாந்தம். தன் மட்டில் அவன் சுத்தனாகிறான்.

**ப்ராயச்சித்தம் செய்துகொண்டபிறகும் கலப்பு செய்யக் கூடாதவை :-** சில பாபங்களில் ப்ராயச்சித்தம் செய்துகொண்டாலும் அதனால் அவனுக்கு சிஷ்ட ஜனக் கலப்பு இல்லாமல் விலக்கியே வைக்கவேண்டுமென்று நிர்ணயிக்கப்பட்டிருக்கிறது. பாலஹத்தி செய்தவன், க்ருதக்னன், சரணாகதனைக் கொன்றவன், ஸ்த்ரீஹத்தி செய்தவன் ஆகிய பாபிகளுக்கு ப்ராயச்சித்தம் செய்தாலும் பிறகு அவர்களுடன் கலக்காமல் விலக்கியே வைக்க வேண்டும். ஸந்யாஸி, நைஷ்டிகன் முதலியவர்கள் ஸ்த்ரீ ஸம்ஸர்க்காதி பாபம் செய்துவிட்டால் ப்ராயச்சித்தம் மட்டும் செய்துவைக்கலாமேயல்லது வேறு கலப்பு செய்துகொள்ளக் கூடாது என்று ப்ரஹ்ம ஸூத்ரத்திலும், பாஷ்யங்களிலும் நிச்சயிக்கப்பட்டிருக்கிறது. இம்மாதிரி இன்னும் பல உண்டு.

**குரு-லகு ப்ராயச்சித்தங்கள் :-** இந்த ப்ராயச்சித்தங்கள் ப்ராஜாபத்யாதி க்ருச்ரங்களெனவும், சாந்த்ராயணம், உபவாஸம், பஞ்சகவ்யம், கூச்மாண்ட ஹோமம், வேதபாராயணம், ப்ராணாயாமம், காயத்ரீ ஜபம் போன்ற பலவிதங்கள், அந்தந்தப் பாபங்களுக்கு இந்த ப்ராயச்சித்தமென்று விதிக்கப்பட்டிருக்கிறது. ப்ராயச்சித்தம் விதிக்கப்படாத தோஷங்களுக்கு பரிஷத் அதைக் கல்பனை செய்து விதிக்க அநுமதி கொடுக்கப் பட்டிருக்கிறது. प्रायश्चित्तं प्रकल्प्यं स्यात् यत्र चोक्ता न निष्कृतिः । தோஷிகளுக்கு இந்த ப்ராயச்சித்தங்களை ப்ரயோகிக்கையில் குரு-லகு என்ற பாகுபாடு செய்தும், தேசம், காலம், வயது, சக்தி முதலிய ஸந்தர்ப்பங்களைக் கவனித்தும் ப்ரயோகிக்க வேண்டுமென்று ஸ்ம்ருதிகாரர்கள் நியமித்துள்ளார்கள். ஶரீர பலத்தினாலோ, தேச கால அஸந்தர்ப்பத்தினாலோ, சாந்த்ராயணாதி தபஸ்ஸுகளைச் செய்யச் சக்தியற்றவன் மீது அவைகளைத் திணிக்காமல், அதற்கு அடுத்தபடியுள்ள கௌண கல்பங்களை நியமித்து ப்ராயச்சித்தம் செய்து வைக்க வேண்டுமென்று கருணை மிகுதியால் மஹர்ஷிகள் வழிவிட்டிருக்கிறார்கள். அதுவும் இக்க்ரந்தத்தில் ஆங்காங்கு கூறப்பட்டிருக்கிறது.

**ப்ராயச்சித்த ப்ரதிநிதிகள் :-** பாபங்களுக்கு விதிக்கப்பட்டுள்ள ப்ராயச்சித்தங்களை இந்தக் கலியுகத்தில் யதாவத்தாக ஒருவன் அநுஷ்டிப்பது ஸாத்யமில்லை.. இதனால் மஹர்ஷி பராசரர் கலியுகத்திற்கென்றே லகுவான ப்ராயச்சித்தங்களை உபதேசித்துள்ளார். மனு யாஜ்ஞவல்க்யாதி மற்ற ஸ்ம்ருதிகாரர்களும் கடின ப்ராயச்சித்தங்களை விதித்து விட்டு அசக்தர்கள் விஷயத்தில், கௌண கல்பங்களையும், ஆபத்கல்பங்களையும் விதித்துள்ளார்கள். இக்காலத்தில் இவைகளை அனுஷ்டித்து சுத்தி பெறலாம். சாந்த்ராயணம் ஒரு மாஸம் வரையில் செய்ய வேண்டிய ப்ரயோகமாகும். இது போல் மற்ற க்ருச்ரங்களும் பலநாள் வ்ரதமிருந்து செய்யக் கூடியவை. க்ருச்ரங்களுள் லகுவாக நினைக்கப்படும் ப்ராஜாபத்யமே 12

நாள் வ்ரதம் இருக்க வேண்டியது. இவைகளையெல்லாம் இக்காலத்தில் யதாவத்தாக அநுஷ்டிக்கும் அதிகாரி ஒருவன்கூட இருக்க ஸாத்யமில்லை. ஆகையால் மஹர்ஷிகள் கருணை நிறைந்த ஹ்ருதயத்துடன் இக்கால ஸாத்யமும், அநுஷ்டான ஸாத்யமுமான வழிகளையும் உபதேசித்தார்கள். ப்ராயச்சித்த தபஸ்ஸுகளில், த்ரவ்ய தானத்தை (பணத்தைக் கொடுப்பது) ஓர் ப்ரதிநிதியாக சாஸ்த்ரகாரர்கள் சேர்த்திருப்பது மிகுந்த உபகாரமானது. தன் கைப் பணத்தைத் தானம் செய்வது ஓர் தபஸ் என்றே ச்ருதியும் கூறுகிகிறது. एतत्खलु वाव तप इत्याहुः यः स्वं ददातीति । லௌகிக ராஜநீதி தண்டனைகளிலும் பண அபராதம் விதிப்பது இக்காலத்தில் எல்லாத் தேசங்களிலும் நடந்துவருகிறது. இக்காலத்தில் பலநாள் ஸாத்யமான தபஸ்ஸுகளை ப்ராயச்சித்தமாக அநுஷ்டிக்க முடியாதாகையால், ஜபம், ஹோமம், உபவாஸம், ப்ராணாயாமம், த்ரவ்யதானம் போன்ற லகு வழிகளைச் செய்து சுத்தியடையலாமென்று சாஸ்த்ரம் இருக்கிறது.

**எதற்கும் ப்ராஜாபத்யம் ப்ரயோகிக்கலாம் :-** ப்ராஜாபத்யம் என்ற க்ருச்ரத்தை ஸகல ப்ராயச்சித்தங்களுக்கும் ப்ரதிநிதியாக (பதிலாக) அநுஷ்டிக்கும்படி சாஸ்த்ரம் அநுக்ரஹித்திருக்கிறது. உசநஸ் கூறுகிறார். यत्रोक्तं यत्र वा नोक्तं महापातक नाशनम् । प्राजापत्येन कृच्छ्रेण शुद्ध्यते नात्र संशयः । மஹாபாதகாதி பாபங்களில்கூட ப்ராயச்சித்தம் விதிக்கப்பட்டிருந்தாலும் ப்ராயச்சித்தமே விதிக்கப்படாத இடங்களிலும் ப்ராஜாபத்ய க்ருச்ரத்தை அநுஷ்டித்து சுத்தியடையலாமென்று இதில் கூறப்படுகிறது. வேறு சில ருஷிகளும் இதை அநுமதித்துள்ளார்கள். இது மிதாக்ஷரையில் ஸ்பஷ்டம்.

ஆகையால் ப்ரஹ்மஹத்யா, ஸுராபானாதிகளான மஹாபாபங்களில் ப்ரபல ப்ராயச்சித்தங்கள் விதிக்கப்பட்டிருந்தாலும் அவைகளுக்குப் பதிலாக ப்ராஜாபத்ய க்ருச்ரத்தை அநுஷ்டிக்கலாமென்று இதில்

விதிக்கப்படுகிறது. அந்த மஹாபாதக ப்ராயச்சித்தம் எவ்வளவு பெரிதோ அதற்கு ஸமமாயிருக்கும்படி ப்ராஜாபத்யத்தைக் கணக்கு செய்து பெருக்கி அநுஷ்டிக்கலாமென்று மிதாக்ஷரையில் விஜ்ஞாநேச்வரர் விரிவாகக் கூறியுள்ளதைப் பார்க்கலாம். ஆகையால் எவ்வளவு பெரிய ப்ராயச்சித்தத்திலும் ப்ராஜாபத்யம் ப்ரதிநிதியாக விதிக்கப்பட்டிருப்பது இக்காலத்தில் விசேஷ உபகாரமாகும்.

**ப்ராஜாபத்யத்திற்கும் ப்ரதிநிதிகள் :-** ப்ராஜாபத்ய க்ருச்ரமும் இக்காலத்தில் முக்ய கல்பமாக அநுஷ்டிக்க முடியாததே. ஆகையால் அதற்கும் ப்ரதிநிதியாக ருஷிகள் சில அநுகல்பங்களை உபதேசித்திருக்கிறார்கள். प्राजापत्यक्रियाऽशक्तौ धेनुं दद्यात् विचक्षणः । धेनोरभावे मूल्यं स्यात् तदर्धं पादमेव वा ॥ என்பதால் ப்ராஜாபத்யத்திற்குப் பதிலாக ஒரு கோ (பசு) கொடுக்கலாம். பசு கொடுக்க சக்தியில்லாவிட்டால் அதன் மூல்யமாக ஒரு நிஷ்கம் அளவுள்ள ஸ்வர்ணம் கொடுக்கவும். गोमूल्यं च यथाशक्ति देयं என்று தீக்ஷிதீயம். ஒரு நிஷ்க அளவு கொடுக்க சக்தியில்லாவிட்டால், அதில் பாதியாவது, அதற்கு சக்தியில்லையாகில் கால்பங்காவது கோமூல்ய ப்ரதிநிதியாகக் கொடுத்தால் போகும். இதனால் ப்ராஜாபத்யம் முக்ய கல்பமாக அநுஷ்டித்த பலன் கிடைத்து விடுகிறது. சாஸ்த்ரம் இதைப் பூர்ணமாக அங்கீகரித்துவிட்டது. இந்த அநுகல்ப ப்ராஜாபத்யம் இக்காலத்தில் ஸகல சிஷ்டர்களாலும் அநுஷ்டிக்கப் படுகிறது. ப்ராஜாபத்ய ப்ரதிநிதியாக இன்னும் சில அநுகல்பங்களும் சொல்லப்படுகின்றன. தீக்ஷிதரும் அவைகளைக் கடைசியில் நிரூபித்துள்ளார். பத்தாயிரம் காயத்ரீஜபம், பனிரெண்டு ப்ராஹ்மண போஜனம், ஸமுத்ர காமினியான நதியில் ஸ்நானம் இவைகளும் ப்ராஜாபத்ய ப்ரதிநிதிகள். இவைகளில் ஒன்றை அநுஷ்டிக்கலாம். வேறு சில ருஷிகள் இருநூறு ப்ராணாயாமம், திலஹோமம்

ஆயிரம் காயத்ரியால் செய்வது, உபவாஸம், வேதபாராயணம் முதலியவைகளையும் ப்ராஜாபத்ய ப்ரதிநிதியாகச் சொன்னார்கள். இவைகளில் ஏதாவது ஒன்றைக் காலதேச ஸந்தர்ப்பத்திற்கும், தோஷத்திற்கும் ஏற்றபடி செய்ய வேண்டும்.

**ஸாதாரண பாப ப்ராயச்சித்தங்கள் :-** தெரிந்தும் தெரியாமலும் செய்யப்படும் பற்பல தோஷங்களுக்கு லகுவான சுத்திமுறைகளைச் செய்து கொண்டு பரிசுத்தியடையலாம். ஸ்நானம், ஸந்த்யோபாஸனம், ப்ராணாயாமம், உபவாஸம், பஞ்சகவ்ய ப்ராசனம் இவைகளை மனஸ்த்ருப்திக்காக ப்ராயச்சித்த ரூபமாக அடிக்கடி செய்துகொண்டால் பாபங்கள் நீங்கும். இரவில் செய்த பாபம் காலை ஸந்த்யாவந்தனத்தாலும், பகலில் செய்த பாபங்கள் ஸாயம் ஸந்த்யாவந்தனத்தாலும் நீங்கிவிடுவதாக சாஸ்த்ரங்கள் கூறுகின்றன. ஆகையால் ஸ்நான, ஸந்த்யா, ப்ராணாயாமாதிகளை அநுஷ்டித்துவந்தால் பற்பல பாபங்கள் விலகுகின்றன. यदह्ना पाप मकार्षम्, यद्रात्र्या என்று மந்த்ரம்.

**பஞ்சகவ்ய மஹிமை :-** பொதுவாக அநேக பாபங்களுக்கு, முக்யமாக அபோஜ்ய போஜனாதிகளுக்கும் பஞ்சகவ்யம் உயர்ந்த ப்ராயச்சித்தம் விதிக்கப்படுகிறது. பஞ்சகவ்யத்தில், கோமயம், கோமூத்ரம் இரண்டும் ப்ரபல சுத்திகர வஸ்துக்கள். ஆயுர்வேத க்ரந்தங்கள் கோமய கோமூத்ரங்களாலாகிய உயர்ந்த ஒளஷதங்களைப் போதிக்கின்றன. கோமய, கோமூத்ரங்களுக்கு விஷக்ருமி நாசகர சக்தி இருப்பதாக நவீன விஜ்ஞானிகளும் சொல்லத் தொடங்கியிருக்கிறார்கள். நமது ருஷிகளும் பஞ்சகவ்ய மஹிமையைப் பற்றி வெகுவாகப் புகழ்ந்துள்ளார்கள். அடிக்கடி பஞ்சகவ்யத்தை உபயோகிப்பது ஸகல பாப நிவ்ருத்தி ஹேதுவாகிறது.

**முக்யாதிகாரி லகுவை அநுஷ்டிக்கக் கூடாது :-** சாஸ்த்ரங்களில் ருஷிகள் பரம கருணையால் இக்காலத்திய

அசக்த அதிகாரிகளைக் குறித்து ப்ராயச்சித்த விதிகளில் லகு கல்பங்களையும் ப்ரதிநிதி கல்பங்களையும் உபதேசித்துள்ளார்கள். ஆனால் முக்ய கல்பமாக அநுஷ்டிக்க சக்தியுள்ள அதிகாரிகள் அந்த லகு வழியில் போவதை சாஸ்த்ரம் அனுமதிக்கவில்லை.

प्रभुः प्रथम कल्पस्य योऽनुकल्पे प्रवर्तते।
न सांपरायिकं तस्य दुर्मतेः विद्यते फलम्॥

என்பதால் சக்தாதிகாரிகள் அசக்த கல்பத்தில் போனால் தோஷம் கூறப்படுகிறது. ஆகையால் தெய்வ வஞ்சனையும், ஆத்ம வஞ்சனையும் செய்யாமல் ஒவ்வொருவனும்தான் அசக்தாதிகாரிதானா என்பதை நிர்ணயித்துக்கொள்ள வேண்டும். பரிஷத்தும் இதை நிர்ணயிக்க வேண்டும்.

**பச்சாத்தாபம் வேண்டும் :-** தோஷம் செய்தவனுக்கு ப்ராயச்சித்தம் செய்துகொள்ளுமுன் தனது அகார்யத்தில் அநுதாபம், பச்சாதாபம் மன: பூர்வகமாக உண்டாக வேண்டும். இரண்டாவதாக ப்ராயச்சித்தம் செய்துகொள்ள எண்ணம் வேண்டும். மறுபடியும் அத்தகைய பாபங்களைச் செய்வதில்லையென்ற ஒழிவும், உறுதியும் வேண்டும். பிறகுதான் அவன் ப்ராயச்சித்தாதிகாரியாவான். தான் பாபம் செய்துவிட்டதாக மனம் நொந்து பகவானிடம் மன்னிப்புக் கேட்டு இனி இம்மாதிரி செய்வதில்லையென்று உறுதி கொடுத்து சரணாகதி செய்கிறவனே உண்மையான ப்ராயச்சித்தாதிகாரி என்றும் சொல்லப்பட்டிருக்கிறது.

**க்ரியா ப்ராயச்சித்தங்கள் :-** ப்ராயச்சித்தத்தில் க்ரியா ப்ராயச்சித்தமென்று ஒரு பிரிவு உண்டு. அதாவது நாம் செய்யும் ச்ரௌத, ஸ்மார்த்த, விவாஹ, உபநயன, ச்ராத்தாதி கர்மாக்களில் மந்த்ர, தந்த்ர, லோபாதி தோஷங்களுக்காகச் செய்ய வேண்டிய ப்ராயச்சித்தங்களாகும். இந்த ப்ராயச்சித்த பிரிவு பெரிது. ஆவச்யகமானது. ஆனால் இந்தப் பொது நிபந்தனக்

க்ரந்தங்களில் பெரும்பாலும் அவைகள் குறிப்பிடப்படவில்லை. அவைகளை அந்தந்த ஸூத்ராதிகளிலிருந்து அறிந்துகொள்ள வேண்டும்.

**தீக்ஷிதீயத்தின் விசேஷம் :-** இவ்வாறு பாபங்கள், ப்ராயச்சித்தங்கள் இவைகளின் ஸ்வரூபத்தைப் பற்றிப் பொதுவாக வைதிகமத ஸித்தாந்தங்களையும் ஸ்ரீ தீக்ஷிதர் அவைகளைப் பற்றிச் செய்துள்ள நிர்ணயங்களையும் ஆஸ்திகர்கள் அறிந்துகொள்ள அவை இங்கு ஸங்க்ரஹித்துக் கூறப்பட்டன. ப்ராயச்சித்த விதிகள் பற்றி ஹேமாத்ரி போன்ற ப்ரபல நிபந்தனங்கள் பல இருந்தபோதிலும் தீக்ஷிதர் கடைசியான நிபந்தனக்காரராகையால் எல்லா நிபந்தனங்களின் அபிப்ராயங்களையும் விசாரித்து நிர்ணயிக்க ஸௌகர்யம் பெற்றிருந்ததால் இந்த நிபந்தனம் விசேஷத் தன்மை வாய்ந்தது. வைதிக மதத்திலுள்ள ஆஸ்திகர்கள் விஷயத்தில் நமது சாஸ்த்ரமும் முன்னோர்களும் எவ்வளவு கருணை வைத்து ப்ராயச்சித்தங்களை உபதேசித்துள்ளார்களென்பதை ஒவ்வொருவரும் அறிய வேண்டும். அநுஷ்டான சீலர்களான ஆஸ்திகர்களுக்கு ப்ராயச்சித்த ஞானம் மிகவும் ஆவச்யகமானது. ஆதலால் ஒவ்வொருவரும் இக்க்ரந்தத்தைப் படித்து பூர்ணநுஷ்டானிகளாக விளங்கி தெய்விக வாழ்க்கை நடத்தி பகவத் ப்ரீதியை அடையும்படி ப்ரார்த்திக்கப்படுகிறது.

# तिथिनिर्णयकाण्डविषयानुक्रमणिका

## திதி நிர்ணய காண்டம் - பொருளடக்கம்

பக்கம்


निमेषादिकालावयवा: - நிமிஷம் முதலிய காலப் பகுதிகள் ........ 2

तिथिः - खण्डतिथिश्च - திதி - கண்டதிதி .................................. 3

प्रथमातिथिनिर्णयः - பிரதமை திதி நிர்ணயம் .......................... 5

एकभक्तव्रतम् - ஏகபக்த விரதம் .............................................. 17

नक्तव्रतम् - நக்தவிரதம் ........................................................ 20

द्वितीयानिर्णयः - த்விதீயை நிர்ணயம் .................................... 31

तृतीयानिर्णयः - திருதீயை நிர்ணயம் ...................................... 32

चतुर्थी निर्णयः - சதுர்த்தி நிர்ணயம் ...................................... 32

पञ्चमीनिर्णयः - பஞ்சமீ நிர்ணயம் ......................................... 34

षष्ठीनिर्णयः - ஷஷ்டீ நிர்ணயம் ............................................ 34

सप्तमीनिर्णयः - ஸப்தமீ நிர்ணயம் ........................................ 35

अष्टमीनिर्णयः - அஷ்டமீ நிர்ணயம் ........................................ 36

गोकुलाष्टमी कृष्णजयन्ती - கோகுலாஷ்டமீ - க்ருஷ்ண ஜயந்தீ ... 37

नवमीनिर्णयः - நவமீ நிர்ணயம் ............................................. 56

श्रीरामनवमी - ஸ்ரீராமநவமீ .................................................... 57

दशावतारकलः - தசாவதார காலம் .......................................... 62

दशमीनिर्णयः - தசமீ நிர்ணயம் ............................................. 64

பக்கம்


एकादशीनिर्णयः - ஏகாதசி நிர்ணயம் .................................. 65

वैष्णवस्मार्तैकादशी - வைஷ்ணவ ஸ்மார்த்த ஏகாதசி .............. 67

एकादश्युपवास योग्याः - ஏகாதசி உபவாஸத்திற்கு ஏற்றவர் .... 90

सुमङ्गल्या उपवासनिषेधः - ஸுமங்கலி உபவாஸத் தடை........ 110

उपवासेऽशक्ताः - உபவாஸமிருக்க முடியாதவர் ................. 111

आशौचादौ उपवासः - ஆசௌசம் முதலிய

நிலையில் உபவாஸம் ................................ 114

एकादश्यां श्राद्ध प्राप्तौ - ஏகாதசியில் சிராத்தம் நேர்ந்தால் ....... 115

उपवासनियमाः - உபவாஸ நியமங்கள் ........................... 121

द्वादशीनिर्णयः - துவாதசீ நிர்ணயம் ................................ 124

त्रयोदशीनिर्णयः - திரயோதசீ நிர்ணயம் .............................. 124

चतुर्दशीनिर्णयः - சதுர்தசீ நிர்ணயம் ................................. 125

अनन्त-शिवरात्रव्रतादि - அநந்த விரதம், சிவராத்ரி விரதம்,

முதலியவை .............................................. 126

पञ्चदशी - पूर्णिमा-अमानिर्णयः - பஞ்சதசீ - பூர்ணிமை

அமா நிர்ணயம் ............................................ 138

इष्टिकाल निर्णयः - இஷ்டிக்கான காலம் ............................ 140

बोधायनकात्यायनमते अमा - போதாயன - காத்யாயன

மதத்தை ஒட்டி அமாவாஸ்யை ..................... 152

नक्षत्रादिनिर्णयः - நக்ஷத்திரம் முதலியதன் நிர்ணயம். ........... 159

உ

# प्रायश्चित्तकाण्डविषयानुक्रमणिका

## பிராயச்சித்த காண்டம் - பொருளடக்கம்

பக்கம்

प्रायश्चित्तं नाम - பிராயச்சித்தம் என்பது ........................ 165
प्रायश्चित्तार्हः - பிராயச்சித்தத்திற்கு அர்ஹன் ........................ 167
एकविंशतिर्नरकाः - 21 நரகங்கள் ........................ 168
पापफलम् - பாபத்தின் விளைவு ........................ 169
पापं नवविधम् - பாபம் 9 விதம் ........................ 180
फले तारतम्यम् - பலனில் ஏற்றத் தாழ்வு ........................ 184
अतिपातकानि - அதிபாதகம் ........................ 188
समपातकानि - ஸமபாதகம் ........................ 193
उपपातकानि - உபபாதகங்கள் ........................ 199
सङ्करीकरणानि - ஸங்கரீ கரணங்கள் ........................ 202
कामाकामकृतं पापम् - விரும்பியும் விரும்பாமலும் செய்தவை 204
मरणान्तिकप्रायश्चित्तम् - மரணம் ஈறான பிராயச்சித்தம் ............ 212
प्रकाशरहस्यकृतपापप्रायश्चित्तम् - பிறரறிய - அறியாதவாறு செய்த
பாப பிராயச்சித்தம் ........................ 213
परिषत् - ஸபை ........................ 215
प्रायश्चित्तविधानस्थलम् - பிராயச்சித்தம் விதிக்குமிடம் ............ 222

प्रायश्चित्तं - பிராயச்சித்தம்

ब्रह्महत्यायां - तदुद्यमे च - பிரும்மஹத்யையில், அதற்காக
முயன்றால் ........................ 224
क्षत्रियादि हत्यायां - க்ஷத்திரியன் முதலானவரின் கொலையில் .. 238

பக்கம்


शस्त्रग्रहणे - ஆயுதம் தரிப்பதில் ........................................243
गोवधे - பசுவின் கொலையில் ........................................245
प्राण्यन्तरहनने - மற்ற பிராணி கொலையில் ........................................257
वृक्षच्छेदादौ - மரம் முதலியதை வெட்டுவதில் ........................................263
सुरापानादौ - ஸௌராபானம் முதலியதில் ........................................265
विण्मूत्रादिभक्षणे - மலமூத்ராதிகளை உண்டால் ........................................275
अपेयपाने - பருகத் தகாததைப் பருகினால் ........................................277
परस्वहरणे - பிறரது உரிமைப் பொருளைத் திருடினால் ........................................284
माध्यस्थ्येन धनग्रहणे - மத்யஸ்தத்தால் தனம் பெற்றால் ........................................300
गुरुतल्पगमने - குருதல்ப கமனத்தில் ........................................302
सवर्णागमने - ஸவர்ணையுடன் சேர்வதில் ........................................309
अगम्या गमने - சேரக் கூடாதவளுடன் சேர்வதில் ........................................311
रेतः स्खलने - சுக்லம் நழுவச் செய்தால் ........................................330
ऋतुकालातिक्रमे - ருதுகாலம் தவறினால் ........................................334
शपथोल्लङ्घने - சபதம் மீறினால் ........................................335
परपुरुषगमनादौ स्त्रियाः - பரபுருஷனுடன் சேர்வதால் ஸ்த்ரீக்கு..338
गर्भपाते - கர்ப்பச் சிதைவிற்கு ........................................340
व्यभिचारे - விபசாரத்தில் ........................................341
भर्तृभार्यापरित्यागे - கணவன் - மனைவி தியாகத்தில் ........................................343
कर्मणः पातित्यहेतुत्वम् - நடைமுறை பதித நிலைக்குக் காரணம் .359
मिथ्याभिशंसने - பொய்யான அபவாதத்தில் ........................................364
ब्राह्मणापगुरणादौ - பிராமணனை அடித்தல் முதலியதில் ........................................368
गुर्वाद्यधिक्षेपे - குரு முதலியவர் மீது வீண் அபவாதத்தில் ........................................371
अशुचौ आचारे - அசுசி நடைமுறையில் ........................................375

பக்கம்

अभिचारे शापे - அபிசாரம் - சாபத்தில் ............................. 377

भृतकाध्यापनाध्ययने - கூலிக்கு வேதம் கற்பித்தலில் கற்பதில் ... 380

अनाश्रमित्वे - ஆச்ரமமின்றி வாழ்வதில் ............................. 383

ऊढाया: पुनरुद्वाहे - முன் மணக் கப்பட்டவளை மணந்தால் ...... 384

सगोत्रादिविवाहे - ஸகோத்ர விவாஹம் முதலியதில் ............... 385

परिवेदने - மூத்தவனிருக்க இளையவன் மணந்தால் ............... 387

उष्ट्रादियाने - ஒட்டகை முதலியதன் மீதேறிச் சென்றால் ........... 389

कारागृहवासे - சிறையிலிருந்ததால் ........................................ 390

कुग्रामवासे - குக்ராம வாஸத்தில் ........................................ 392

दुर्देशगमने - துர்தேசம் சென்றால் ........................................ 392

श्वसृगालादिदंशे - நாய் - நரிமுதலியவை கடித்தால் ................ 393

शरीरे क्रिम्युत्पत्तौ - உடலில் புழு தோன்றினால் ...................... 400

अभोज्य भोजने - உண்ணத் தகாததை உண்டால் ...................... 404

भोजनानर्हसत्रादौ भोजने - உணவேற்கத் தகாத ஸத்ரம் முதலியதில் உண்டால் ........................................ 410

कालोचित संस्काराकरणे - காலத்திற்கேற்ற ஸம்ஸ்காரத்தைச் செய்யாவிடில் ........................................ 426

उष्णोदकस्नाने - வென்னீரில் நீராடினால் ................................ 430

यज्ञोपवीतादिभ्रंशे - பூணூல் முதலியவை நீங்கினால் ............... 431

भोजनकाले क्षुतादौ - உண்ணும் போது தும்மல் முதலியவையில் ........................................ 432

शिवनिर्माल्य भोजने - சிவனது நிர்மால்யத்தை உண்டால் ........ 433

पत्न्यादिभि: सहभोजने - மனைவி முதலியவருடன் உண்டால் ... 434

नीलवस्त्रधारणे - நீல ஆடை தரித்தால் ................................... 435

परान्न भोजन- विषमवितरणादौ - பிறரது உணவு பக்ஷபாதத்துடன் பரிமாறுதல் முதலியவையில் ................................ 438

பக்கம்

नवश्राद्धादौ भोजने - நவ சிராத்தம் முதலியதில் உண்டால் ....... 438

श्राद्धचौलादि शिष्टान्न भोजने - சிராத்த சௌளாதிகளில் மீதியை உண்டால் ....... 445

अविक्रेयविक्रये - விற்கத் தகாததை விற்பதால் ....... 449

वार्धुषिकादिजीवने - வட்டி வாங்கி ஜீவிப்பதில் ....... 449

ऋणादिकृत्वा व्रताद्याचरणे - கடன் வாங்கி விரதம் முதலியவை செய்தால் ....... 456

अविक्रेयविक्रये - விற்கத் தகாததை விற்பதில் ....... 457

मरणोद्यमान्निवृत्तौ - தற்கொலை முயற்சியிலிருந்து திரும்பினால் 461

पारिव्राज्यात् प्रच्युतौ - துறவிலிருந்து நழுவினால் ....... 466

आत्मघातिनः शववहनादौ - தற்கொலை செய்துகொண்டவனின் சவத்தின் ஈமச் சடங்கில் கலந்துகொண்டால் ....... 470

अनृतभाषणे - பொய் சொல்வதில் ....... 473

मिथ्याशपथे - பொய்யாகச் சபதமிடுவதில் ....... 474

श्रौताग्नित्यागे - சுரௌதாக்னியை விடுவதில் ....... 478

नास्तिक्ये - நாஸ்திகத்தில் ....... 480

पंक्तिवैषम्ये दूषणे - உணவுப் பந்தியில் பாரபக்ஷத்தில் கெடுப்பதில் ....... 482

अनुपवीतेन कर्मकरणे - உபவீதமின்றி செயல்படுதலில் ....... 484

शयनानर्हस्थले शयने - படுக்கத் தகாதத் தலத்தில் படுப்பதில் ....... 484

श्राद्धे निमन्त्रितस्य कालातिक्रमे - சிராத்தத்தில் வரிக்கப்பட்டவனின் காலதாமதத்தில் ....... 485

अनभिवाद्याभिवादनादौ - வணங்கத்தகாதவரை வணங்குவது முதலியதில் ....... 486

दुष्टप्रतिग्रहे - தகாத தானத்தை ஏற்பதில் ....... 487

हिरण्यहस्त्यादिप्रतिग्रहे - தங்க யானை முதலியதை ஏற்பதில் ....... 498

பக்கம்

पञ्चलाङ्गलप्रतिग्रहे - ஐந்து கலப்பை ஏற்பதில் ........................513
धराप्रतिग्रहे - பூமிதானத்தை ஏற்பதில் ..................................515
विश्वचक्रप्रतिग्रहे - விச்வ சக்ரத்தை ஏற்பதில் ...........................517
कल्पलतापरिग्रहे - கல்பலதை ஏற்படுதில் ..............................517
सप्तसागरप्रतिग्रहे - ஸப்தஸாகரத்தை ஏற்பதில் .........................518
चर्मधेनुप्रतिग्रहे - தோலாலான பசுவை ஏற்பதில் ....................519
महाभूत घटादिप्रतिग्रहे - மஹாபூத கடம் முதலியதை ஏற்பதில் ..521
अतिपातकोपपातक संकरीकरणादीनां - அதிபாதகம் உபபாதகம், ஸங்கரீகரணம் முதலிய வற்றிற்கு ..........................525
प्राजापत्यादिकृच्छ्रम् - பிராஜாபத்யம் முதலிய க்ருச்ரம் ...........548
पराकपर्णफलवारुणादि कृच्छ्राणि - பராகம், பர்ணம் பலம், வாருணம் முதலிய க்ருச்ரங்கள் ..............................561
चान्द्रायणकृच्छ्रम् - சாந்த்ராயண க்ருச்ரம் ...............................570
ब्रह्मकूर्च (पञ्चगव्य) कृच्छ्रम् - ப்ரஹ்ம கூர்ச்ச (பஞ்சகவ்ய) க்ருச்ரம் ....................................................................579
कृच्छ्रप्रतिनिधिः - க்ருச்ரத்திற்கு மாற்று ................................583
महानद्यः - மஹாநதிகள் ......................................................587
अध्ययनवेदपारायणादौ अधिकारः - அத்யயனம், வேதபாராயணம் முதலியவற்றில் தகுதி .................589

श्री गुरुभ्यो नमः

# स्मृतिमुक्ताफलम्

## ஸ்ம்ருதிமுக்தாபலம்

## ।। तिथिनिर्णयकाण्डः ।।

# ஸ்ம்ருதிமுக்தாபலம்

## திதி நிர்ணய காண்டம்

### कर्माङ्गः कालः

अथ कालो निरूप्यते। स च कर्मण्यङ्गभूतः। तदाह गार्ग्यः — तिथिनक्षत्रवारादि साधनं पुण्यपापयोः। प्रधानगुणभावेन न स्वातन्त्र्येण ते क्षमाः इति। व्यासोऽपि — यत्तिथौ यत्र नक्षत्रे वारे यत्र च यद्यथा। विहितं वा निषिद्धं वा पालयंस्त्रिदिवं व्रजेत्। अपालयन् पुनर्मोहादपवित्रं पदं व्रजेत् इति।

### கர்மாங்கமான காலம்

இதி காலம் சொல்லப்படுகிறது. அது கர்மத்தின் அங்கமாய் உள்ளது. அதைச் சொல்லுகிருர்,கார்க்யர்:- திதி, நக்ஷத்ரம், வாரம் முதலியவை புண்யத்திற்கும்

பாபத்திற்கும் ஸாதனமாகியவை: ப்ரதானத்திற்குக் குணமாயிருப்பதால். இஃதன்றி அவை ஸ்வதந்த்ரமாகப் புண்ய பாபங்களைச் செய்வதற்குச் சக்தியுள்ளவைகளல்ல. வ்யாஸரும்:- எந்தத் திதியில், எந்த நக்ஷத்ரத்தில், எந்த வாரத்தில், எந்தத் தேசத்தில், எந்தக் கர்மம் எவ்விதம் விதிக்கப்பட்டுள்ளதோ அல்லது, நிஷேதிக்கப் பட்டுள்ளதோ அதை அவ்விதம் பரிபாலிப்பவன் ஸ்வர்க்கத்தையடைவான். அறிவின்மையால் பரிபாலிக்காதவன் அசுத்தமான நரகத்தையடைவான்.

निमेषादिलक्षणम् — काल एकोऽप्युपाधिभेदादनेक-प्रकारः । तथा च गार्ग्यः — अक्षिपक्ष्मपरिक्षेपो निमेषः परिकीर्तितः । द्वौ निमेषौ त्रुटिर्नाम द्वौ त्रुटी तु लवः स्मृतः । द्वौ लवौ क्षण इत्युक्तः काष्ठा प्रोक्ता दश क्षणाः । त्रिंशत्काष्ठाः कला प्रोक्ता कलास्त्रिंशन्मुहूर्तकः । ते तु त्रिंशदहोरात्र इत्याह भगवान् हरः इति ।

நிமேஷம் முதலியவைகளின் லக்ஷணம் - காலம் ஒன்றுயினும் உபாதி வசத்தால் அநேக ப்ரகாரமாய் உள்ளது. அதைச் சொல்லுகிறுர். கார்க்யர்:- "கண்ணின் இமையின் அசைவு ஒரு நிமிஷம் எனப்படுகிறது. இரண்டு நிமிஷங்கள் த்ருடி எனப்படும். இரண்டு த்ருடிகள் லவம் எனப்படுகிறது. இரண்டு லவங்கள் க்ஷணம் எனப்படுகிறது. பத்து க்ஷணங்கள் காஷ்டா எனப்படுகிறது. முப்பது காஷ்டைகள் கலை எனப்படுகிறது. முப்பது கலைகள் முஹூர்த்தம் (24 நிமிஷங்கள்) எனப்படுகிறது. முப்பது முஹூர்த்தங்கள் அஹோராத்ரம் (பகலும் இரவும்) என்றுர் பகவானுகிய ஹரன்"

## तिथिस्वरूपम् ।

तिथिस्वरूपमुक्तं कालादर्शे — रवीन्द्वोर्योगविरहौ क्रमाद्दर्शश्च पूर्णिमा । कलाप्रवेशनिर्याणैस्तिथयोऽन्याश्च पक्षयोः इति । सूर्याचन्द्रमसोः सन्निकर्षो दर्शः । विप्रकर्षः पूर्णिमा भवति । इन्दोः

कलानां रवेः प्रवेशनिर्याणैः कृष्णशुक्लपक्षयोः प्रतिपदादयस्तिथयो भवेयुरित्यर्थः।

திதியின் ஸ்வரூபம் திதியின் ஸ்வருபம் சொல்லப்பட்டுள்ளது காலாதர்சத்தில்:- ஸூர்யன், சந்த்ரன் இவர்களின் சேர்க்கையும் பிரிவும் முறையே தர்சம்(அமை) பூர்ணிமை எனப்படுகின்றன. இவ்விரண்டு பக்ஷங்களிலும் சந்த்ரனின் கலைகளின் ப்ரவேசம், வெளிவருவது இவைகளால் மற்றத் திதிகளும் ஏற்படுகின்றன. ஸூர்யன் சந்த்ரன் இவர்களுக்கு ஸமீபத் தன்மை தர்சம்(அமை)ஆகும். அவர்களின் தூரத்தன்மை பூர்ணிமையாகிறது. சந்த்ரனின் கலைகள் ஸூர்யனிடத்தில் ப்ரவேசிப்பது, வெளி வருவது இவைகளால் க்ருஷ்ணபக்ஷம் சுக்லபக்ஷம் இவைகளில் ப்ரதமை முதலிய திதிகள் உண்டாகும் என்பது பொருள்.

खण्ड तिथिलक्षणम्।

तत्र संपूर्णतिथौ नास्ति सन्देहः। यदा ह्रास वृद्धिवशेन खण्ड तिथिर्भवति, तदा निर्णयोऽपेक्ष्यते। ह्रासवृद्धी च गार्ग्येण दर्शिते — खर्वा दर्पा तथा हिंस्रा त्रिविधं तिथिलक्षणम्। धर्माधर्मवशादेव तिथिस्त्रेधा विवर्तते इति। खर्वा - समतिथिः। दर्पा - वृद्धियुक्ता। हिंस्रा - क्षययुक्ता। खण्डतिथौ विधिनिषेधव्यवस्थामाह वृद्धगार्ग्यः — निमित्तं कालमादाय वृत्तिर्विधिनिषेधयोः। विधिः पूज्यतिथौ तत्र निषेधः कालमात्रके। तिथीनां पूज्यता नाम कर्मानुष्ठानयोग्यता। निषेधस्तु निवृत्त्यात्मा कालमात्रमपेक्षते इति। दर्शे स्नात्वा पितृभ्यस्तु दद्यात् कृष्णतिलोदकम् इत्यादिविधिः कर्मानुष्ठानयोग्यतिथिमपेक्षते। अमावास्यायां न गच्छेत् प्राप्तकालामपि स्त्रियम्। तैलं च न स्पृशेदामं वृक्षादींश्च न छेदयेत् इत्यादिको निषेधस्तिथिमात्रमपेक्षत इत्यर्थः। एवं च सति खण्ड तिथौ पूज्यत्वं निर्णेतव्यं भवति। तत्र प्रतिपदमारभ्य

पञ्चदश्यन्तास्तिथयः क्रमेण निर्णीयन्ते।

**கண்ட(துண்டு) திதி லக்ஷணம்** - அவைகளுள் ஸம்பூர்ணமான திதி விஷயத்தில் ஸந்தேஹம் இல்லை. எப்பொழுது, குறைவு, உயர்வு இவைகளால் கண்ட(துண்டு) திதி ஏற்படுகிறதோ, அப்பொழுது நிர்ணயம் அபேக்ஷிக்கப்படுகிறது. குறைவு உயர்வு இவைகளும் சொல்லப்பட்டுள்ளன. **கார்க்யரால்:-** கர்வா, தர்ப்பா, ஹிம்ஸ்ரா என்று திதி மூன்று விதமாகும். தர்மாதர்மங்களின் வசத்தால் திதி மூன்று விதமாக மாறுகிறது. கர்வா ஸமமானதிதி. தர்ப்பா-உயர்வுள்ளது. ஹிம்ஸ்ரா- குறைவுள்ளது. கண்ட (துண்டு)திதியில் விதி நிஷேதங்களுக்கு வ்யஸ்தையைச் சொல்லுகிறார். **வ்ருத்தகார்க்யர்:-** காலத்தை நிமித்தமாக எடுத்துக்கொண்டு விதிக்கும் நிஷேதத்திற்கும் இருப்பு ஏற்படுகிறது. அவைகளுள் விதி என்பது ச்லாக்யமான திதியில் ஏற்படுகிறது. நிஷேதம் என்பது விலக்கப்பட்ட காலத்தில் மட்டில் ஏற்படுகிறது. விதிகளுக்கு ச்லாக்யத்வம் என்பது விதிக்கப்பட்ட கர்மத்தையனுஷ்டிக்க யோக்யதையுள்ள தன்மை, விலக்குவதை ஸ்வரூபமாகவுடைய நிஷேதமோவெனில், அக்காலத்தை மட்டில் அபேக்ஷிக்கின்றது. 'அமையில் ஸ்நானம் செய்து கறுப்பு எள்ளுடன் கூடிய ஜலத்தைப் பிதிருக்களின் பொருட்டுக் கொடுக்கவேண்டும்' என்பது முதலிய விதியானது அக் கர்மாஷனுடானத்திற்கு யோக்யமான திதியை(தின) அபேக்ஷிக்கின்றது. 'அமையில் ருது ஸ்நானம் செய்தவளாயினும் பார்யையினிடம் சேரக்கூடாது.காய்ச்சாத தைலத்தையும் தொடக்கூடாது. மரம் முதலியவைகளையும் வெட்டக்கூடாது' என்பது முதலிய நிஷேதமானது (விலக்கு) திதியைமட்டில் அபேக்ஷிக்கிறது என்று பொருள். இவ்விதமிருக்க, கண்ட(துண்டு) திதியில் ச்லாக்யத் தன்மை

*நிர்ணயிக்கத்தகுந்ததாய் ஆகிறது. அதில் ப்ரதமை முதற்கொண்டு அமை, பூர்ணிமை வரையில் உள்ள திதிகள் க்ரமமாய் நிச்சயிக்கப்படுகின்றன.*

प्रतिपन्निर्णयः :- प्रतिपद्द्विविधा — शुद्धा विद्धा चेति । या सूर्योदयमारभ्य पुनरुदयपर्यन्ता भवति सा शुद्धा, सर्वा ह्येताश्च तिथय उदयादोदयस्थिताः । शुद्धा इति विनिश्चेयाः षष्टिनाड्यो हि वै तिथिः इति स्मृतेः । शुद्धत्वात् प्रतिपदादिविहितं सर्वं निश्शङ्कैस्तत्रानुष्ठेयम् । विद्धा च द्विविधा - पूर्वदिने दर्शयुक्ता उत्तरदिने द्वितीयायुक्ता च इति ।

**ப்ரதமையின் நிர்ணயம்** - *ப்ரதமை இரண்டு விதம், வித்தா என்று. சுத்தா எந்தத் திதி ஸூர்யோதயம் முதல் மறு நாள் உதயம் வரையில் உள்ளதோ அது சுத்தா, 'இத்தத் திதிகளெல்லாம் ஸூர்யோதயம் முதல் மறு ஸூர்யோதயம் வரையில் உள்ளவைகளானல் சுத்தைகளென்று நிச்சயிக்கப்படவேண்டும். அறுபது நாழிகைகள் ஒரு திதியல்லவா' என்று ஸ்ம்ருதியிருப்பதால். சுத்தமாயிருப்பதால் ப்ரதமை முதலிய திதிகளில் விதிக்கப்பட்ட கர்மத்தை ஸந்தேஹமில்லாதவர்களாய் அந்தத் திதியில் அனுஷ்டிக்கவேண்டும். வித்தையென்பதும் இரண்டு விதமாயுள்ளது. முதல் நாளில் அமையுடன் கூடியது, மறுநாளில் த்விதீயையுடன் கூடியது என்று.*

तत्र पूर्वविद्धायाः पूज्यत्वमाह पैठीनसिः — पञ्चमी सप्तमी चैव दशमी च त्रयोदशी । प्रतिपन्नवमी चैव कर्तव्या संमुखा तिथिः इति । संमुखत्वं च स्कान्दपुराणे विवेचितम् - संमुखा नाम सायाह्नव्यापिनी दृश्यते यदा । प्रतिपत्संमुखा कार्या या भवेदापराह्णिकी इति । व्यासोऽपि — प्रतिपत्सैव विज्ञेया या भवेदापराह्णिकी इति ।

அவைகளுள், அமையுடன் கூடிய ப்ரதமைக்கு ச்லாக்யத்தன்மையைச் சொல்லுகிறார், பைடீநஸி:- பஞ்சமீ, ஸப்தமீ, த்ரயோதசீ, ப்ரதமை நவமீ இந்தக் திதிகள் ஸம்முகத் திதிகளானுல் ச்லாக்யங்களாம். ஸம்முகத் தன்மை என்பது ஸ்காந்தபுராணத்தில் : விவரிக்கப் பட்டுள்ளது. எந்தத் திதி ஸாயாஹ்ணத்திலுள்ளதோ அது ஸம்முகா எனப்பட்டுள்ளது. எந்த ப்ரமையை ச்லாக்யமாம். வ்யாஸரும்:- எந்த ப்ரதமை அபராஹ்ண வ்யாப்தியுடன் உள்ளதோ அதுவே விஹிதமாகும்.இந்தப் பக்ஷத்தையே பலப்படுத்துவதாக மறு திதியுடன் கூடிய திதிக்கு நிஷேதமானது(விலக்கு) சொல்லப்படுகிறது, ப்ருஹத் வஸிஷ்டரால்:- த்விதீயை, பஞ்சமீ, தசமீ, த்ரயோதசீ, சதுர்தசீ, இந்தத் திதிகள் உபவாஸ விஷயத்தில் தனது முன் திதி, பின் திதி இவைகளைத் தனது வேதத்தால் (சேர்க்கையால்) கெடுக்கும். த்விதீயை முதலிய திதிகள் தனது ''வேத''த்தால் முன் திதியையும், பின் திதியையும் கெடுக்கும் என்று சொல்லியதால், த்விதீயா திதியால் வித்தமான ப்ரதமை உபவாஸத்தில் நிஷித்தமாகிறது.

तथा च ब्रह्मकैवर्ते — प्रतिपत्पञ्चमीभूतसावित्र-व्रतपूर्णिमा। नवमी दशमी चैव नोपोष्या परसंयुता इति । सावित्र व्रतपूर्णिमा - सावित्रव्रतयुक्ता पौर्णमासी । एतच्च पूर्वविद्धायाः प्रतिपदः पूज्यत्वाभिधानं शुक्लप्रतिपद्विषयम्।

அவ்விதமே, ப்ரம்ஹகைவர்த்தத்தில்:- ப்ரதமை, பஞ்சமீ, சதுர்த்தசீ, ஸாவித்ரியின் வ்ரதத்திலுள்ள பூர்ணிமை, நவமீ, தசமீ இந்தத் திதிகள் மேல் திதியுடன் கூடியிருந்தால் உபவாஸத்திற்கு அர்ஹமல்லாதவை. ஸாவித்ர வ்ரத பூர்ணிமா ஸாவித்ர வ்ரதத்துடன் கூடிய பூர்ணிமையென்று பொருள்.இவ்விதம் முன் திதியால் வித்தமான ப்ரதமை ச்லாக்யம் என்றது சுக்லபக்ஷ ப்ரதமையைப்பற்றியது.

अत एवोक्तं निगमे — युग्माग्नियुगभूतानां षण्मुन्योर्वसुरन्ध्रयोः। रुद्रेण द्वादशी युक्ता चतुर्दश्या च पूर्णिमा। प्रतिपद्यप्यमावास्या तिथ्योर्युग्मं महाफलम् इति। युग्मं - द्वितीया। अग्निः - तृतीया। युगं - चतुर्थी। भूतं - पञ्चमी। षट् - षष्ठी। मुनिः - सप्तमी। वसुः - अष्टमी। रन्ध्रं - नवमी। रुद्रः - एकादशी। अत्र युग्माग्न्यादि सप्तसु युग्मेषु पूर्वा तिथिरुत्तरविद्धा ग्राह्या। उत्तरा तु पूर्वविद्धेत्युक्तं भवति।

நிகமத்தில்:- த்விதீயை, த்ருதீயை, சதுர்த்தீ, பஞ்சமீ, ஷஷ்டீ, ஸப்தமீ, அஷ்டமீ, நவமீ, ஏகாதசீ, த்வாதசீ, சதுர்த்தசீ, பூர்ணிமை, ப்ரதமை, அமாவாஸ்யை என்ற இரட்டைத் திதிகள் ஒன்றோடு ஒன்று சேர்ந்திருந்தால் விசேஷமான பலனைக் கொடுக்கக் கூடியவை. யுக்மம்=த்விதீயை. அக்னி=த்ருதீயை. யுகம்=சதுர்த்தீ. பூதம்=பஞ்சமீ. ஷட்=ஷஷ்டீ. முனி=ஸப்தமீ. வஸு=அஷ்டமீ. ரந்த்ர=நவமீ. ருத்ர=ஏகாதசீ. இங்கு த்விதீயை, த்ருதீயை முதலிய ஏழு இரட்டைகளுள் முதல் திதி அடுத்த திதியால் வித்தையானால ச்லாக்யம். இரண்டாவது திதி முன் திதியால் வித்தமானால் ச்லாக்யம் என்று சொல்லியதாக ஆகிறது.

स्मृत्यन्तरेऽपि — एकादशी तथा षष्ठी अमावास्या चतुर्थिका। उपोष्याः परसंयुक्ताः पराः पूर्वेण संयुताः इति। अन्यत्रापि — षष्ठ्यष्टमी अमावास्या कृष्णपक्षे त्रयोदशी। एताः परयुताः पूज्याः पराः पूर्वेण संयुताः इति।

ஓர் ஸ்ம்ருதியிலும்:- ஏகாதசீ, ஷஷ்டீ, அமாவாஸ்யை, சதுர்த்தீ இந்தத் திதிகள் மேல் திதியுடன் கூடியதாகில் உபவாஸத்திற்கு அர்ஹங்கள். மேல் திதிகள் அதற்கு முன் திதியுடன் கூடியிருந்தால் உபவாஸத்துக்கு அர்ஹங்கள். மற்றோர் ஸ்ம்ருதியிலும்:- ஷஷ்டீ, அஷ்டமீ,

அமாவாஸ்யை, க்ருஷ்ணபக்ஷத்திலுள்ள த்ரயோதசீ இந்தத் திதிகள் மேல் திதியுடன் கூடியிருந்தால் ச்லாக்யங்களாகும். மேல் திதிகள் முன் திதியுடன் கூடியிருந்தால் ச்லாக்யங்களாகும்.

अन्यत्र - प्रतिपद्यप्यमावास्या पराः पूर्वेण संयुता इति च अमावास्यायुतायाः प्रतिपद उपोष्यत्वाभिधानात् शुक्लप्रतिपद्विषयत्वं स्फुटमवगम्यते। न ह्येतानि कृष्णपक्षविषयतया कथञ्चिदपि योजयितुं शक्यन्ते। एतदनुसारेण प्रतिपत् सद्वितीया स्यात् द्वितीया प्रतिपद्युता इत्यापस्तम्बवचनं कृष्णपक्षविषयत्वेनैव सङ्कोचनीयम्। एवं च नोपोष्याः परसंयुताः इति द्वितीयायुतोपवासनिषेधः शुक्लपक्षविषयतया योजनीयः।

மற்றோர் ஸ்ம்ருதியில் ''ப்ரதமையுடன் கூடிய அமையும் என்ற இவைகள் பின் திதிகள் முன் திதிகளுடன் கூடியிருந்தால் ச்லாக்யம்'' என்று சொல்லியிருப்பதால். அமாவாஸ்யையுடன் கூடிய ப்ரதமைக்கு உபவாஸ யோக்யதையைச் சொல்லியிருப்பதால், சுக்ல பக்ஷத்திலுள்ள ப்ரதமையைப்பற்றியது, என்பது ஸ்பஷ்டமாக அறியப்படுகிறது. ஆகையால் இந்த வசனங்கள் க்ருஷ்ண பக்ஷத்திலுள்ள ப்ரதமையைப் பற்றியதென்று எவ்விதத்தாலும் சேர்ப்பதற்கு முடியாதவை. இந்த வசனத்தையனுஸரிப்பதால் ''ப்ரதமை த்விதீயையுடன் கூடியதாய் இருக்கவேண்டும். த்விதீயை ப்ரதமையுடன் கூடியிருக்கவேண்டும்'' என்ற ஆபஸ்தம்ப வசனமானது க்ருஷ்ணபக்ஷத்திலுள்ள ப்ரதமையைப் பற்றியதாகவே சுருக்கவேண்டும். இவ்விதமிருப்பதால், ''மேல் திதியுடன் கூடிய திதியில் உபவாஸமிருக்கக்கூடாது'' என்ற வசனம் த்விதீயையுடன் கூடிய திதியில் உபவாஸத்தை நிஷேதித்தது சுக்லபக்ஷத்தில் உள்ள ப்ரதமையைப் பற்றியதென்று சேர்க்க வேண்டும்.

यत्तु गोभिलवचनम् — खर्वा दर्पा तथा हिंस्रा त्रिविधं तिथिलक्षणम्। खर्वादर्पे परे कार्ये हिंस्रा स्यात् पूर्वकालिकी इति। यदपि बोधायनवचनम् — वर्धमानस्य पक्षस्य उदया पूज्यते तिथिः। यदा पक्षः क्षयं याति तदा स्यादापराह्णिकी इति। उदया - उदयगता इत्यर्थः। यदपि स्मृत्यन्तरवचनम् — सा तिथि स्तदहोरात्रं यस्यामभ्युदितो रविः। वर्धमानस्य पक्षस्य ह्रासे त्वस्तमया तिथिः इति। वृद्धौ तिथिरुदयगता पूज्या। क्षये त्वस्तगता पूज्येत्यर्थः। एतान्येकोद्दिष्ट विषयाणि।

ஆனால் கோபிலர் *"கர்வா, தர்ப்பா,* ஹிம்ஸ்ரா என்று திதிகள் மூன்று விதங்களாகும். கர்வா, தர்ப்பா என்ற இரண்டு திதிகளும் மேல் திதியுடன் கூடியதாகில் க்ராஹ்யங்களாகும். ஹிம்ஸ்ரா என்பது பூர்வ திதியுடன் கூடியதாகில் க்ராஹ்யமாகும்" என்றதும், போதாயனர்:- "சுக்லபக்ஷத்தின் திதியானது உதயத்திலிருந்தால் க்ராஹ்யமாகும். க்ருஷ்ணபக்ஷத்தின் திதி அபராஹ்ணத்திலிருந்தால் க்ராஹ்யமாகும் என்றதும். *(உதயா=உதயத்தில் இருப்பது)* மற்றோர் ஸ்ம்ருதியில்:- எந்தத் திதியில் ஸூர்யன் உதித்தானோ அந்தத் திதியே க்ராஹ்யமாகும். அந்தப் பகலும் இரவும் க்ராஹ்யமாகும். இது சுக்லபக்ஷத்தின் திதியைச் சேர்ந்தது. க்ருஷ்ணபக்ஷத்திலோவெனில் அஸ்தமயத்திலுள்ள திதி க்ராஹ்யமாகும். *(திதி வ்ருத்தியானால் உதயத்திலிருக்கும் திதி க்ராஹ்யமாகும். திதி க்ஷயமாகியதானால் அஸ்தமயத்தில் வியாப்தியுள்ள திதி க்ராஹ்யமாகும். திதி க்ஷயமாகியதானால் அஸ்தமயத்தில் வ்யாப்தியுள்ள திதி க்ராஹ்யமாகும் என்பது பொருள்.)* என்ற இந்த வசனங்கள் ஏகோத்திஷ்டத்தைப் பற்றியவை.

तदाह व्यासः — द्वितीयादिकयुग्मानां पूज्यता नियमादिषु। एकोद्दिष्टादिवृद्ध्यादौ ह्रासवृद्ध्यादिचोदना इति।

नियमादिष्वित्यादिशब्देन पित्र्यकर्मव्यतिरिक्तव्रतोपवासादि सकलकर्मणां ग्रहणम्। एकोद्दिष्टादीत्यादि शब्देन पार्वणश्राद्धस्य ग्रहणम्। कालादर्शेऽपि — प्रत्याब्दिकादिश्राद्धादौ वृद्धिह्रासादि-चोदना। द्वितीयादिकयुग्मानां व्रतादौ पूज्यता भवेत् इति। तदेवं वृद्धिह्रासानादरेण उपवासे शुक्लप्रतिपत् पूर्वविद्धा ग्राह्या। कृष्णप्रतिपदुत्तरविद्धेति स्थितम्।

*அதைச் சொல்கிறார் – வ்யாஸர் த்விதீயை முதலிய இரட்டைத் திதிகளுக்கு ச்லாக்யத்வம் என்பது வ்ரதம் முதலியவைகளில். ஏகோத்திஷ்டம் முதலியதிலும், வ்ருத்தி முதலியதிலும் குறைவு வ்ருத்தி என்ற சாஸ்த்ரம் ப்ரவர்த்தித்துள்ளது. நியமாதிஷு என்ற பதத்தில் உள்ள ஆதி சப்தத்தால் பித்ரு கர்மங்களைத் தவிர்த்த வ்ரதம் உபவாஸம் முதலிய ஸகல கர்மங்களையும் க்ரஹிக்கவேண்டும். ஏகோத்திஷ்டாதி என்ற பதத்திலுள்ள ஆதி சப்தத்தால் பார்வண ச்ராத்தத்தையும் க்ரஹிக்கவேண்டும். காலாதர்சத்திலும்:- ப்ரத்யாப்திகம் முதலிய ச்ராத்தம் முதலியதில் வ்ருத்தி குறைவு என்ற சாஸ்த்ரம் ப்ரவர்த்திக்கும். த்விதீயை முதலிய இரட்டைத் திதிகளின் ச்லாக்யத்வம் என்பது வ்ரதம் முதலியவைகளில் உள்ளது. ஆகையால், இவ்விதம் வ்ருத்தி க்ஷயங்களைப் பொருட்படுத்தாமல் உபவாஸ விஷயத்தில் சுக்லபக்ஷ ப்ரதமை பூர்வ வித்தையாஞல் க்ராஹ்யமாகும். க்ருஷ்ணபக்ஷ ப்ரதமை த்விதீயா திதியிஞல் வித்தமாகியது க்ராஹ்யமாகும் என்பது நிலைத்தது.*

तिथीनां वेधः पैठीनसिना दर्शितः — पक्षद्वयेऽपि तिथयस्तिथिं पूर्वां तथोत्तराम्। त्रिभिर्मुहूर्तैर्विद्ध्यन्ति सामान्योऽयं विधिः स्मृतः इति। पूर्वेद्युरुदयानन्तरममावास्या त्रिमुहूर्ता ततोऽधिका वा सा प्रतिपदं विध्यति। परेद्युरस्तमयात् प्राक् द्वितीया त्रिमुहूर्ता

ततोऽधिका वा साऽपि पूर्वां प्रतिपदं विध्यतीत्येवं सर्वतिथिसाधारणो वेधो विशेषवचनाभावविषये द्रष्टव्यः।

திதியின் வேதமானது பைடீனஸியால் சொல்லப்பட்டுள்ளது. பைடீநஸி :- சுக்ல க்ருஷ்ண பக்ஷங்களிரண்டிலும் உள்ள திதிகள் முன் திதியையும் பின் திதியையும் மூன்றுமுஹூர்த்தங்களால் அடிக்கின்றன. இது பொதுவான விதியாய்ச் சொல்லப்பட்டுள்ளது. முதல் நாளில் உதயத்திற்குப் பிறகு அமை மூன்று முஹூர்த்தம் அளவுள்ளதாயினும், அதைவிட அதிகமானாலும் அது ப்ரதமையை அடிக்கின்றது. மறு நாளில் அஸ்தமனத்திற்கு முன் த்விதீயை மூன்று முஹூர்த்தம் உள்ளதாயிலும், அதைவிட அதிகமானாலும் அந்த த்விதீயையும் ப்ரதமையை அடிக்கின்றது. இவ்விதம் எல்லாத் திதிகளுக்கும் பொதுவாகியது இந்த விதி: விசேஷ வசனம் இல்லாவிடில், என்றறியவும்.

वेध्याऽपि प्रतिपत् दिवा त्रिमुहूर्ता ततोऽधिका वा या भवेत् सा वेधार्हा भवेत् न न्यूना। तदुक्तं कालनिर्णये — शुद्धा विद्धा तिथिः शुद्धा हीना तिथ्याऽन्ययाऽहनि। उदये पूर्वया तिथ्या विध्यते त्रिमुहूर्तकैः। सायं तूत्तरया तद्वन्न्यूनया तु न विध्यते। वेध्याऽपि त्रिमुहूर्तैव न न्यूना वेधमर्हति । शुक्लपक्षे दर्शविद्धा कृष्णे विद्धा द्वितीयया । उपोष्या प्रतिपच्छुक्ले मुख्या स्यादापराह्णिकी । तदभावे तु सायाह्नव्यापिनी परिगृह्यताम्। प्रातः सङ्गवमध्याह्नापराह्णाः सायमित्यसौ। अत्राह्नः पञ्चधा भागो मुख्यो द्वित्र्यादि भागतः इति।

வேதத்திற்குரிய ப்ரதமையும் பகலில் மூன்று முஹூர்த்தம் உள்ளதாயினும், அதைவிட அதிகமானாலும் வேதத்திற்குரியது ஆகும். அதைவிடக் குறைந்ததாகில் வேதத்திற்கு அர்ஹமல்ல. அது சொல்லப்பட்டுள்ளது, கால நிர்ணயத்தில்:- திதி சுத்தையென்றும் வித்தையென்றும்

இரண்டும் விதம். சுத்தையென்பது பகலில் மற்ருெரு திதியால் ஸம்பந்தப்படாதது. ஸூர்யோதயத்தில் மூன்று முஹூர்த்தங்களுள்ள முதல் திதியால் அடிக்கப்படுகிறது. அவ்விதமே ஸாயங்காலத்தில் மூன்று முஹூர்த்தங்கள் உள்ள பின் திதியால் வேதத்தையடைகிறது. மூன்று முஹூர்த்தத்திற்குக் குறைந்த திதியால் வேதத்தையடைவதில்லை. வேதத்திற்குரிய திதியும் மூன்று முஹூர்த்தமுள்ளதாகில் வேதத்திற்கு அர்ஹமாகும்.அதைவிடக் குறைந்திருந்தால் வேதத்திற்கு அர்ஹமல்ல. சுக்லபக்ஷத்தில் உள்ள ப்ரதமை அமையால் வித்தமானுல் க்ராஹ்யமாகும். க்ருஷ்ணபக்ஷ ப்ரதமை த்விதீயையால் வித்தமானுல் க்ராஹ்யமாகும். சுக்லபக்ஷத்தின் ப்ரதமை அபராஹ்ணத்தில் வ்யாப்தியுள்ளதானுல் உபவாஸத்திற்கு க்ராஹ்யமாகும். இது முக்யம். இல்லாவிடில், ஸாயாஹ்னத்தில் வ்யாப்தியுள்ளது க்ரஹிக்கத்தகுந்தது ஆகும். ப்ராதக் காலம், ஸங்கவ காலம், மத்யாஹ்ன காலம், அபராஹ்ண காலம், ஸாயாஹ்ன காலம் என்று ஐந்து விதமான பகலின் பிரிவு இரண்டு மூன்று முதலியதாகப் பிரிப்பதைவிட இங்கு முக்யமாகும்.

पूर्वाह्णोऽपराह्ण इति द्वेधा विभागः । पूर्वाह्णो मध्याह्नोऽपराह्ण इति त्रेधा विभागः । पूर्वाह्णो मध्याह्नोऽपराह्णस्सायाह्न इति चतुर्धा विभागः । प्रातः सङ्गवो मध्याह्नोऽपराह्णस्सायाह्न इति पञ्चधा विभागः । द्वित्र्यादिविभागात्पञ्चधा विभागस्य बहुश्रुतिस्मृतिसम्मतत्वात् स एव मुख्य इत्यन्तिमश्लोकस्यार्थः । एवं च सत्युक्तेषु पञ्चसु अह्नो भागेषु पञ्चमं सायाह्नभागं व्याप्य ततः पूर्वं चतुर्थमपराह्णभागं या शुक्लप्रतिपत् स्पृशति, तादृशी पूर्वविद्धोपवासे पूज्या । स चोपवासो भविष्योत्तर पुराणे कार्तिकमासान्तदर्शे पायसभोजनादिनियमं विधाय प्रतिपदि विहितः । मार्गशीर्षे ततो मासि प्रतिपद्यपरेऽहनि । स्पृष्ट्वा गुरुं

चोपवसेन्महादेवं स्मरन् मुहुः इति । स्कान्दपुराणे कार्तिक शुक्लप्रतिपदि बल्युत्सवो विहितः । एवमन्यत्रापि द्रष्टव्यम् ।

பூர்வாஹ்ணம், அபராஹ்ணம், என்பது இரண்டுவிதமாய் பிரிவு. பூர்வாஹ்னம், மத்யாந்ஹம் அபராஹ்ணம் என்பது மூன்று விதமாகிய பிரிவு. பூர்வாஹ்ணம், மத்யாஹ்னம், அபராஹ்ணம், ஸாயாஹ்னம் என்பது நான்கு விதமாகிய பிரிவு. ப்ராத:, ஸங்கவம், மத்யாஹ்னம், அபராஹ்ணம், ஸாயாஹ்னம் என்பது ஐந்து விதமாகிய பிரிவு. இரண்டு, மூன்று முதலிய பிரிவைவிட ஐந்து விதமாகிய பிரிவு, அநேகம் ச்ருதிகளுக்கும் ஸ்ம்ருதிகளுக்கும் ஸம்மதமாயிருப்பதால், அதுவே முக்யமாகியது என்பது கடைசி ச்லோகத்தின் பொருள். இவ்விதமிருக்க முன் சொல்லப்பட்ட ஐந்து விதமான பகலின் பாகங்களில், ஐந்தாவதாகிய ஸாயாஹ்ன பாகத்தை வ்யாபித்து, அவ்விதமே அதற்கு முன் உள்ள பகலின் நான்காவது பாகத்தை எந்தச் சுக்ல பக்ஷ ப்ரதமை தொடுகின்றதோ அந்தத் திதியானது பூர்வ வித்தை யென்றாகும். அது உபவாஸத்தில் க்ரஹிக்கத் தகுந்ததாகும். அந்த உபவாஸம் பவிஷ்யோத்தர புராணத்தில் கார்த்திகமாஸத்தின் முடிவில் அமையில் பாயஸ போஜனம் முதலிய வ்ரத்தை விதித்து ப்ரதமையில் விதிக்கப்பட்டுள்ளது.'' பிறகு மார்க்கசீர்ஷ மாஸத்தில் மறுநாளாகிய ப்ரதமையில் குருவை ஸ்பர்சித்து அடிக்கடி மஹாதேவனை ஸ்மரித்துக்கொண்டு, உபவாஸமிருக்க வேண்டும்'' என்று. ஸ்காந்தபுராணத்தில் கார்த்திக சுக்ல ப்ரதமையில் பலியின் உத்ஸவம் விதிக்கப்பட்டுள்ளது. இவ்விதம் மற்றவிடத்திலும் அறியத்தகுந்தது.

पूर्वविद्धायां शुक्लप्रतिपदि योऽयमुपवासो विहितः, तस्य प्रातरेव सङ्कल्पः कार्यः । तदानीं ज्योतिःशास्त्रप्रसिद्धप्रतिपदभावेऽपि स्मृतिभिरापादितायाः प्रतिपदस्सत्वात् । अत एव देवलः — यां

तिथिं समनुप्राप्य त्वस्तं याति दिवाकरः । सा तिथिस्सकला ज्ञेया दानाध्ययनकर्मसु इति ।

அமையினால் வித்தமான சுக்லபக்ஷ ப்ரதமையில் விதிக்கப்பட்டுள்ள உபவாஸம் எதுவோ அதற்கு அந்தத் தினத்தின் ப்ராதக் காலத்திலேயே ஸங்கல்பம் செய்யவேண்டும். அப்பொழுது ஜ்யோதிச் சாஸ்த்ரத்தால் ப்ரஸித்தமான ப்ரதமை யில்லாவிடினும் ஸ்ம்ருதிகளால் சொல்லப்பட்ட ப்ரதமையிருப்பதால். ஆகையால்தான் தேவலர்:- எந்தத் திதியையடைந்து ஸூர்யன் அஸ்தமயத்தை அடைகின்றானோ அந்தத் திதி முழுவதும் தானம். அத்யயனம் ஆகிய கர்மங்களில் விஹிதம் என்றறியவும்.'' என்றார்.

अत्र कर्मस्विति बहुवचनादुपवासादि निखिलदैवकर्मपरिग्रहः । अत्रास्तमयात् पूर्वं मुहूर्तत्रयव्यापिनीं तिथिं समनुप्राप्येति व्याख्येयम् । न तु ततोऽल्पव्याप्तिर्विवक्षिता । तथा च वृद्धवसिष्ठः — यस्यां तिथावस्तमियात् सूर्यस्तु त्रिमुहूर्तकैः । यागदानजपादिभ्यस्तामेवोपक्रमेत्तिथिम् इति । स्कान्देऽपि — यां तिथिं समनुप्राप्य यात्यस्तं पद्मिनीप्रियः । सा तिथिस्तद्दिने प्रोक्ता त्रिमुहूर्ता यदा भवेत् इति ।

இதில் ''கர்மங்களில்'' என்ற பன்மையினால் உபவாஸம் முதலிய தைவ கர்மங்கள் எல்லாவற்றையும் க்ரஹிக்கவேண்டும். இவ்விடத்தில் அஸ்தமயத்திற்கு முன் மூன்று முஹூர்த்தங்கள் வ்யாப்தியுள்ள திதியையடைந்து என்று வ்யாக்யானம் செய்யவேண்டும். மூன்று முஹூர்த்தங்களைவிட அல்பகால வ்யாப்தியானது சொல்வதற்கு இஷ்டமுள்ளதல்ல. அவ்விதமே, வ்ருத்தவஸிஷ்டர்:- ''ஸாயங்காலத்தில் மூன்று முஹூர்த்தங்களுள்ள எந்தத் திதியில் ஸூர்யன் அஸ்தமிக்கின்றானோ, அந்தத் திதியிலேயே யாகம், தானம், ஜபம் முதலியதை ஆரம்பிக்கவேண்டும்'' என்று

ஸ்காந்தத்திலும்:- எந்தத் திதியையடைந்து ஸூர்யன் அஸ்தமயத்தை அடைகின்றானோ, அந்தத் திதி முழுவதுமே அந்தத் தினத்தில் அது மூன்று முஹூர்த்தங்கள் உள்ளதாகில் க்ரஹிக்கத்தகுந்தது.

सौरेऽपि — यां प्राप्यास्तमुपैत्यर्कस्स्याच्चेत् सा त्रिमुहूर्तगा। धर्मकृत्येषु सर्वेषु संपूर्णां तां विदुर्बुधाः इति । एवं च सायन्तनत्रिमुहूर्तशुक्लप्रतिपदुपेतायां तिथौ प्रातरेव सङ्कल्प्य प्रतिपदुपवासः कर्तव्य इति निर्णयः। पूर्वविद्धायां शुक्लप्रतिपदि उपवासं कृत्वा परेद्युस्तिथ्यन्ते पारणं कुर्यात् । तदाह सुमन्तुः — तिथिनक्षत्रनियमे तिथिभान्ते च पारणम्। अतोऽन्यथा पारणे तु व्रतभङ्गमवाप्नुयात् इति।

ஸௌர புராணத்திலும்:- எந்தத் திதியையடைந்து ஸூர்யன் அஸ்தமயத்தை அடைகின்றானோ அது மூன்று முஹூர்த்தங்கள் உள்ளதாகில் அந்தத் தினம் முழுவதும் அதே திதியாகும். தர்ம கார்யங்களெல்லாவற்றிலும் அந்தத் திதியே ஸம்பூர்ணதிதியென்று அறிந்தவர்கள் சொல்லுகின்றனர். இவ்விதமிருப்பதால், ஸாயங்காலத்திலுள்ள மூன்று முஹூர்த்தங்களின் வ்யாப்தியுள்ள சுக்லபக்ஷ ப்ரதமையுடன் கூடிய திதியில் காலையிலேயே ஸங்கல்பம் செய்து ப்ரதமையின் உபவாஸம் செய்யத் தகுந்தது என்பது ஸித்தாந்தம். பூர்வ வித்தையான சுக்லபக்ஷ ப்ரதமையில் உபவாஸம் செய்து மறுநாளில் திதியின் முடிவில் பாரணை செய்யவேண்டும். அதைச் சொல்லுகிறார் - ஸுமந்து திதியையும், நக்ஷத்ரத்தையும் பற்றிய வ்ரதத்தில் திதியின் முடிவிலும் நக்ஷத்ரத்தின் முடிவிலும் பாரணை செய்யவேண்டும். இஃதன்றி மாறிப் பாரணை செய்தால் வ்ரதபங்கத்தை அடைவான்.

निगमेऽपि — पूर्वविद्धासु तिथिषु भेषु च श्रवणं विना। उपोष्य विधिवत् कुर्यात्तत्तदन्तेषु पारणम् इति।

நிகமத்திலும்:- பூர்வதிதிவித்தமான திதிகளிலும் ச்ரவணம் தவிர்த்த நக்ஷத்ரங்களிலும் உபவாஸமிருந்தால், விதிப்படி அததன் முடிவில் பாரணம் செய்யவேண்டும்.

स्कान्देऽपि — तिथीनामेव सर्वासामुपवासव्रतादिषु । तिथ्यन्ते पारणं कुर्याद्विना शिवचतुर्दशीम् इति । अस्य च तिथिभान्तपारणस्यापवादः क्वचित् स्मर्यते तिथ्यन्ते चैव भान्ते च पारणं यत्र चोद्यते । याम त्रयोर्ध्ववर्तिन्यां प्रातरेव हि पारणम् इति ।

ஸ்காந்தத்திலும்:- எல்லாத் திதிகளுக்கும் உபவாஸம் வ்ரதம் முதலியவைகளில் திதியின் முடிவில் பாரணை செய்யவேண்டும். சிவ சதுர்த்தசியைத் (சிவராத்ரியை) தவிர்த்து. இந்த திதி நக்ஷத்ரம் இவைகளின் முடிவில் விதிக்கப்பட்ட பாரணத்திற்கு மறுப்பு ஒரு ஸ்ம்ருதியில் சொல்லப்படுகிறது. "திதியின் முடிவிலாவது, நக்ஷத்ரத்தின் முடிவிலாவது எந்த வ்ரதத்தில பாரணை விதிக்கப்படுகிறதோ அந்தத் திதியாவது நக்ஷத்ரமாவது மூன்று யாமங்களுக்குமேல் இருந்தால் காலையிலேயே பாரணை விதிக்கப்படுகிறது" என்று.

यत्तु देवलवचनम् — उपवासेषु सर्वेषु पूर्वाह्णे पारणं भवेत् । अन्यथा तत्फलस्यार्धं धर्ममेवोपसर्पति इति । धर्मो - यमः । तत्पूर्वविद्धाव्यतिरिक्तपरविद्धशुद्धतिथ्युपवासविषयम् । पूर्वविद्धायां विहितस्योपवासस्य केनापि निमित्तेन तत्रानुष्ठानासम्भवे सत्युत्तरविद्धा गौणकालत्वेन ग्राह्या, पौर्वाह्णिकास्तु तिथयो दैवकार्ये फलप्रदाः इति सामान्येन स्मरणात् । उक्तं च कालनिर्णयसङ्ग्रहे — अभावेऽपि प्रतिपदस्सङ्कल्पः प्रातरिष्यते । तिथिस्त्रियामतोऽर्वाक् चेत् तिथ्यन्ते पारणं भवेत् । मुख्यतिथ्यन्तराये तु तिथिशेषोऽपि गृह्यताम् इति ।

தேவலர்:- "உபவாஸங்களெல்லாவற்றிலும் காலையிலேயே பாரணை விதிக்கப்படுகிறது. அவ்விதமில்லாவிடில் அந்த வ்ரதத்தின் புண்யத்தின் பாதி தர்ம தேவதையான யமனையே அடைகிறது" என்று சொல்லிய வசனம் பூர்வித்தையான திதியைத் தவிர்த்து பரவித்தையான திதியைப் பற்றியது. பூர்வவித்தையான திதியில் விதிக்கப்பட்ட உபவாஸத்திற்கு ஏதாவது ஒரு காரணத்தால் அத்திதியில் அனுஷ்டானம் செய்ய முடியாவிடில் பின் திதியால் வித்தமான திதி கௌணபக்ஷமாய் க்ரஹிக்கத்தகுந்தது. "பூர்வாஹ்ணத்திலுள்ள திதிகள் தைவகார்ய விஷயத்தில் பலனைக் கொடுக்கக்கூடியவை" என்று பொதுவாய் ஸ்ம்ருதியிருப்பதால். கால நிர்ணய ஸங்க்ரஹத்தில்:- "ப்ரதமை இல்லாவிடினும் காலையில் ஸங்கல்பம் விதிக்கப்படுகிறது. திதியானது மூன்று யாமத்திற்கு உட்பட்டிருந்தால், திதியின் முடிவில் பாரணை விதிக்கப்படுகிறது. முக்யதிதியில்லாவிடில் உத்தரவித்தையான திதியை க்ரஹித்துக்கொள்ளவும்" என்று சொல்லப்பட்டுள்ளது.

## एकभक्तव्रतनिर्णयः

अथैकभक्तं निर्णीयते। तच्च त्रिविधम्, स्वतन्त्रम्, अन्याङ्गम्, उपवासप्रतिनिधिरूपं चेति। तेषु स्वतन्त्रं ब्रह्मपुराणे पठ्यते — प्रतिपद्येकभक्ताशी समाप्ते कपिलाप्रदः इति। तत्र कर्मकालव्यापिनी तिथिर्ग्राह्या। यो यस्य विहितः कालस्तत्कालव्यापिनी तिथिः इति स्मृतेः।

### ஏக பக்த வ்ரத நிர்ணயம்

இனி ஏக பக்தம் (ஒரு வேளை மட்டில் புஜிப்பது) நிர்ணயிக்கப்படுகிறது. அது மூன்று விதமாக உள்ளது. ஸ்வதந்த்ரம், அந்யாங்கம், உபவாஸ ப்ரதிநிதி ரூபம் என்று.

அவைகளுள் ஸ்வதந்த்ரம் என்பது சொல்லப்படுகிறது, ப்ரம்ஹபுராணத்தில்:- "ப்ரதமையில் ஏகபக்தத்தைப் புஜிப்பவன் வ்ரதத்தின் முடிவில் காராம் பசு தானம் செய்யவேண்டும்" என்று அவ்விஷயத்தில் கர்ம காலத்தில் வ்யாப்தியுள்ள திதிக்ரஹிக்கத்தகுந்தது. "எந்தக் கர்மத்திற்கு எந்தக் திதி விதிக்கப் பட்டுள்ளதோ அந்தத் திதி அந்தக் காலத்தில் வ்யாப்தியுள்ளதாயிருக்கவேண்டும்" என்று ஸ்ம்ருதியிருப்பதால்.

कर्मकालस्तत्कर्मस्वरूपं चेत्युभयं स्कान्दपुराणे दर्शितम् — दिनार्धसमयेऽतीते भुज्यते नियमेन यत्। एकभक्तमिति प्रोक्तमतस्तत् स्याद्दिवैव हि इति। देवलोऽपि — दिनार्धसमयेऽतीते भुज्यते नियमेन यत्। एकभक्तमिति प्रोक्तं न्यूनं ग्रासत्रयेण तु इति। अत्र दिनार्धस्योपरि सार्धमुहूर्तपरिमितः कालः एकभक्तस्य मुख्यः। दिनार्धेऽतीते सति समनन्तर भावित्वादस्तमयात् प्राचीनो गौणः कालः। दिवेत्यभ्यनुज्ञानात्। अत्र मुख्यकालव्यापिनी तिथिर्ग्राह्या।

கர்மகாலம், அந்தக் கர்மத்தின் ஸ்வருபம் என்ற இரண்டும் சொல்லப்பட்டுள்ளது, ஸ்காந்த புராணத்தில்:- பகலின் பாதிக் காலம் சென்ற பிறகு நியமத்துடன் புஜிப்பதென்பது எதுவோ அது ஏகபக்தம் என்று சொல்லப்பட்டுள்ளது. ஆகையால் அந்த ஏகபக்தம் பகலிலேயே செய்யப்படவேண்டும். தேவலரும்:- பகலின் பாதிக்காலம் சென்ற பிறகு நியமத்துடன் புஜிப்பதென்பது எதுவோ அது ஏகபக்தம் என்று சொல்லப்பட்டுள்ளது. அது மூன்று கபளங்களால் குறைந்திருக்க வேண்டும். இவ்விஷயத்தில் பகலின் பாதிக்குமேல் ஒன்றரை முஹுர்த்தமுள்ள காலம் ஏக பக்தத்திற்கு முக்யகாலம். பகலின் பாதிக்காலம் சென்ற பிறகு அடுத்திருப்பதால் அஸ்தமயத்திற்கு முன் உள்ள காலம் கௌணகாலம்: பகலில் என்று விதிக்கப்பட்டிருப்பதால். இவ்விஷயத்தில் முக்ய காலத்தில் வ்யாப்தியுள்ள திதி க்ரஹிக்கத் தக்கது.

अत एव पाद्मे — मध्याह्नव्यापिनी ग्राह्या एकभक्ते सदा तिथिः इति। बोधायनोऽपि — मध्याह्नव्यापिनी ग्राह्या एकभक्तव्रते तिथिः इति । अत्र निर्णेतव्यो विषयष्षोढा भिद्यते । पूर्वेद्युरेव मध्याह्नव्यापित्वम्, परेद्युरेव तद्व्यापित्वम्, उभयत्र तद्व्यापित्वम्, उभयत्र तदव्यापित्वम्, उभयत्र साम्येन तदेकदेशव्यापित्वम्, वैषम्येण तदेकदेशव्यापित्वं चेति । तत्र प्रथमद्वितीययोर्मध्याह्नव्यापित्वस्यैव निर्णायकत्वम्। तृतीये पूर्वविद्धा ग्राह्या, मुख्यकालव्याप्तेस्समत्वेऽपि गौणकालव्याप्तेरधि-कत्वात् । चतुर्थेऽपि पूर्वविद्धैव, उभयत्र मुख्यकालव्याप्त्यभावेऽपि गौणकालव्याप्तिलाभात्। पञ्चमेऽप्ययमेव न्यायो योज्यः । षष्ठे तु यस्मिन्दिनेऽधिकव्याप्तिस्सैव ग्राह्या । एवं स्वतन्त्रैकभक्तं निर्णीतम्।

ஆகையால் பாத்மத்தில்:- எப்பொழுதும் ஏகபக்த வ்ரதத்தில் மத்யாஹ்நத்தில் வ்யாப்தியுள்ள திதி க்ரஹிக்கத் தகுந்தது, என்று. போதாயனரும்:- ஏக பக்த வ்ரத்தில் மத்யாஹ்னத்தில் வ்யாப்தியுள்ள திதி க்ரஹிக்கத் தகுந்தது, என்று. இவ்விஷயத்தில் நிச்சயிக்கத் தகுந்த விஷயம் ஆறுவிதமாகப் பிரிகிறது;- முதல் நாளில் மட்டில் மத்யாஹ்னத்தில் வ்யாப்தியிருப்பது, மறுநாளில். மட்டில் மத்யாஹ்நவ்யாப்தி, இரண்டு நாட்களிலும் மத்யாஹ்ந வ்யாப்தி, இரண்டு நாட்களிலும் வ்யாபித்வம் இல்லாமை, இரண்டு நாட்களிலும் ஸமமாக மத்யாஹ்நத்தில் ஏகதேச வ்யாப்தி, இரண்டு நாட்களிலும் ஸமமாக இராமல் மத்யாஹ்நத்தில் ஏகதேச வ்யாப்தி, என்று அவைகளுள் முதல் இரண்டு பக்ஷங்களிலும் மத்யாஹ்ந வ்யாபித்வமே நிச்சயத்திற்குக் காரணம். மூன்ருவது பக்ஷத்தில் பூர்வதிதியால் வித்தையான திதியே க்ரஹிக்கத் தகுந்தது; முக்ய காலத்தில் வ்யாப்தி என்பது இரண்டு நாட்களிலும் ஸமமாக இருந்தாலும் கௌண கால வ்யாப்தி என்பது முதல் நாளில் அதிகமாக இருப்பதால். நான்காவது

பக்ஷத்திலும் முதல் நாள் திதியே க்ரஹிக்கத் தகுந்தது; இரண்டு நாட்களிலும் முக்ய கால வ்யாப்தி யில்லாவிடினும், கௌண கால வ்யாப்தி முதல் நாளில் கிடைப்பதால். ஐந்தாவதுபக்ஷத்திலும் இந்த ந்யாயத்தையே சேர்த்துக்கொள்ளவேண்டும். ஆறுவது பக்ஷத்திலோ எந்தத் தினத்தில் அதிக வ்யாப்தியுள்ளதோ அந்தத் திதியே க்ரஹிக்கத்தகுந்தது. இவ்விதம் ஸ்வதந்திரம் என்ற ஏகபக்தம் நிச்சயிக்கப்பட்டது.

अन्याङ्गं त्वपराह्णादौ कार्यम्। पूजाव्रतेषु सर्वत्र मध्याह्नव्यापिनी तिथिः इति मध्याह्ने पूजयेन्नृप इत्यादिशास्त्रैरङ्गिनः पूजादेर्मध्याह्ने विहितत्वेन एकभक्तस्य मुख्यकालासम्भवात्। उपवासप्रतिनिधि-रूपमेकभक्त मुपवासतिथौ कार्यम्, तस्य गौणोपवासत्वात्। अत एव सुमन्तुः — तिथौ यत्रोपवासस्स्यादेकभक्तेऽपि सा तिथिः इति।

அந்யாங்கம் என்ற ஏகபக்தவ்ரதம் அபராஹ்ணத்தின் ஆரம்பத்தில் செய்யத் தகுந்தது. "எல்லாவிதமான பூஜா வ்ரதங்களிலும் மத்யாஹ்னத்தில் வ்யாப்தியுள்ள திதி க்ரஹிக்கத்தகுந்தது" "ஓ அரசனே! மத்யாஹ்னத்தில் பூஜிக்கவேண்டும்" என்பது முதலிய சாஸ்த்ரங்களால், அங்கியான பூஜை முதலியவை மத்யாஹ்னத்தில் விதிக்கப்பட்டிருப்பதால், ஏகபக்தத்திற்கு அது முக்ய காலமாக ஆகாததால். உபவாஸப்ரதிநிதியாகிய ஏகபக்தம் உபவாஸதிதியில் செய்யப்படவேண்டும். அது கௌண உபவாஸமாகியதால். ஆகையாலேயே, ஸுமந்து:- எந்தத் திதியில் உபவாஸம் விதிக்கப்பட்டுள்ளதோ அந்தத் திதியே ஏகபக்தத்திலும் விதிக்கப்பட்டுள்ளது.

## नक्तव्रतम्।

अत नक्तं निरूप्यते। तच्च वराहपुराणे पठ्यते — मार्गशीर्षे सिते पक्षे प्रतिपद्या तिथिर्भवेत्। तस्यां नक्तं प्रकुर्वीत रात्रौ विष्णुं च

पूजयेत् इति । नक्तं प्रकुर्वीत - दिवा अभुञ्जानो रात्रिभोजनं कुर्वीतेत्यर्थः । तस्य काल उक्तः कालादर्शे — त्रिमुहूर्तोऽस्तमयात् प्राक् परतश्च तथाविधा । तस्यां नक्तव्रतं कुर्याद्धरिनक्तव्रतादृते इति ।

### நக்த வ்ரதம்

*இனி நக்த (இரவு) வ்ரதம் சொல்லப்படுகிறது. அது சொல்லப்படுகிறது, வராஹ புராணத்தில்:- மார்க்கசீர்ஷ மாஸத்தில் சுக்ல பக்ஷத்தில் எந்த ப்ரதமை வருகிறதோ அந்தத் திதியில் நக்த வ்ரதத்தைச் செய்யவேண்டும். இரவில் விஷ்ணுவையும் பூஜிக்கவேண்டும். நக்த வ்ரதத்தைச் செய்யவேண்டும் என்பதற்கு பகலில் புஜிக்காமல் இரவில் புஜிக்கவேண்டும் என்பது பொருள். அதற்குக் காலம் சொல்லப்பட்டுள்ளது காலாதர்சத்தில்:- அஸ்தமயத்திற்கு முன் மூன்று முஹூர்த்தமும் அஸ்தமயத்திற்குப் பிறகு மூன்று முஹூர்த்தமும் உள்ள திதி எதுவோ அதில் நக்த வ்ரதத்தை யனுஷ்டிக்கவேண்டும், ஹரிநக்த வ்ரதம் தவிர்த்து.*

कूर्मपुराणेऽपि — प्रदोषव्यापिनी यत्र त्रिमुहूर्ता यदा दिवा । तदा नक्तव्रतं कुर्यात् स्वाध्यायस्य निषेधवत् इति । एतत्, प्रदोषव्याप्तिर्मुख्यः कल्पः, सायङ्कालव्याप्तिरनुकल्प इत्येवं परम् । तथा च कालद्वयं भविष्यत्पुराणे दर्शितम्— मुहूर्तोनदिनं नक्तं प्रवदन्ति मनीषिणः । नक्षत्रदर्शनान्नक्तमहं मन्ये गणाधिप इति । अस्य च कालद्वयस्य अधिकारिभेदेन व्यवस्थामाह देवलः — नक्षत्रदर्शनान्नक्तं गृहस्थस्य बुधैः स्मृतम् । यतेर्दिनाष्टमे भागे तस्य रात्रौ निषिध्यते इति ।

*கூர்மபுராணத்திலும்:- எந்தத் தினத்தில் ப்ரதோஷ காலத்தில் வ்யாப்தி யுள்ளதும், பகலில் மூன்று முஹூர்த்தம் வ்யாப்தி யுள்ளதுமாய் (திதி) இருக்கின்றதோ அன்று அத்யயன நிஷேதத்திற்கு விதித்திருப்பதுபோல்.*

நக்தவ்ரதத்தைச் செய்யவேண்டும். இந்த வசனம், ப்ரதோஷ காலத்தில் வ்யாப்தியிருப்பதென்பது முக்ய பக்ஷம்; ஸாயங்காலத்தில் வ்யாப்தி உள்ளதென்பது அனுகல்பம் என்பதைப் பற்றியது. அவ்விதமே இரண்டு காலங்கள் சொல்லப்பட்டுள்ளன, பவிஷ்யத் புராணத்தில்:- ஒரு முஹூர்த்தம் குறைந்துள்ள தினத்தை நக்தம் என்கின்றனர் அறிந்தவர்கள். நக்ஷத்ர தர்சனத்திற்குப் பிறகு இருப்பதை நான் நக்தம் என்கிறேன் ஓ கணாதிப! இவ்விதம் சொல்லப்பட்ட இரண்டு காலத்திற்கும் அதிகாரி பேதத்தால் வ்யவஸ்தையைச் சொல்லுகிறார், தேவலர்:- நக்ஷத்ரம் தெரிந்த பிறகு நக்தமென்பது க்ருஹஸ்தனுக்கு என்று வித்வான்களால் சொல்லப்பட்டுள்ளது. ஸன்யாஸிக்குப் பகலின் எட்டாவது பாகத்தில் நக்தம் என்பதுஆகும். ஸந்யாஸிக்கு இரவில் போஜனம் நிஷேதிக்கப்படுகிறது, என்று.

स्मृत्यन्तरेऽपि — नक्तं निशायां कुर्वीत गृहस्थो विधिसंयुतः। यतिश्च विधवा चैव कुर्यात्तत् सदिवाकरम्। दिवानक्तं तु तत्प्रोक्त-मन्तिमे घटिकाद्वयम्। निशानक्तं तु विज्ञेयं प्रवदन्ति मनीषिणः। नक्षत्रदर्शनान्नक्तं यामार्धे प्रथमे सदा इति।

மற்றோர் ஸ்ம்ருதியிலும்:- இரவில் உள்ள திதியில் க்ருஹஸ்தன் விதிப்படி நக்த வ்ரதத்தைச் செய்யவேண்டும். ஸந்யாஸியும் விதவையும் ஸூரியன் இருக்கும்பொழுதே அந்த வ்ரதத்தைச் செய்யவேண்டும். பகலின் முடிவில் உள்ள இரண்டு நாழிகை திவாநக்தம் என்று சொல்லப்பட்டுள்ளது. நக்ஷத்ரம் தெரிந்தது முதல் இரவின் முதல் யாமத்தின் பாதியில் முதலில் உள்ள இரண்டு நாழிகை நிசாநக்தம் என்று சொல்லப்பட்டுள்ளது, என்கின்றனர் வித்வான்கள்.

रात्रिनक्तभोजने कालमाह व्यासः — त्रिमुहूर्तः प्रदोषस्स्यात् भानावस्तं गते सति। नक्तं तत्र तु कर्तव्यमिति शास्त्रविनिश्चयः इति।

नक्तं त्रिमुहूर्तात्मकप्रदोषव्यापिन्यां तिथौ कार्यम्। यदाह वत्सः — प्रदोषव्यापिनी ग्राह्या सदा नक्तव्रते तिथिः। एकादशीं विना सर्वा शुक्ले कृष्णे तथा स्मृता इति। अयमपि विषयष्षोढा भिद्यते। पूर्वेद्युरेव प्रदोषव्याप्तिः, परेद्युरेव तद्व्याप्तिः, उभयत्र तद्व्याप्तिः, उभयत्र तदभावः, उभयत्र साम्येन तदेकदेशव्याप्तिः, उभयत्र वैषम्येण तदेकदेशव्याप्तिरिति। तत्र प्रथमद्वितीययोः प्रदोषव्याप्तिर्नियामिका। उभयत्र तद्व्याप्तौ परतिथिरेव।

ராத்ரி நக்தபோஜன விஷயத்தில் காலத்தைச் சொல்லுகிறார், வ்யாஸர்:- ஸூர்யன் அஸ்தமித்த பிறகு மூன்று முஹூர்த்தங்களுள்ள காலம் (ஆறு நாழிகை) ப்ரதோஷம் எனப்படும். அக்காலத்தில் நக்த வ்ரதத்தைச் செய்யவேண்டும் என்பது சாஸ்த்ரத்தின் ஸித்தாந்தம். நக்த வ்ரதத்தை மூன்று முஹூர்த்தங்கள் அளவுள்ள ப்ரதோஷத்தில் வ்யாப்தியுள்ள திதியில் செய்யவேண்டும். அதைச் சொல்லுகிறார்,வத்ஸர் எப்பொழுதும் நக்த வ்ரத்தில் ப்ரதோஷ காலத்தில் வ்யாப்தியுள்ள திதி க்ரஹிக்கத் தகுந்தது, சுக்லபக்ஷம், க்ருஷ்ணபக்ஷம் இரண்டிலும்.எல்லா ஏகாதசியைத் தவிர்த்து, என்று. இந்த விஷயமும் ஆறு விதமாகப் பிரிகிறது:- முதல் நாளில் மட்டில் ப்ரதோஷ காலத்தில் வ்யாப்தி, மறு நாளில் மட்டில் ப்ரதோஷ காலத்தில் வ்யாப்தி, இரண்டு நாட்களிலும் ப்ரதோஷ காலத்தில் வ்யாப்தி, இரண்டு நாட்களிலும் ப்ரதோஷ வ்யாப்தியில்லாமை, இரண்டு நாட்களிலும் ஸமமாக ப்ரதோஷ காலத்தில் ஏகதேச வ்யாப்தி, இரண்டு நாட்களிலும் ஸமமில்லாமல் ப்ரதோஷ காலத்தில் ஏகதேச வ்யாப்தி என்று. அவைகளுள் முதல் இரண்டு பக்ஷங்களில் ப்ரதோஷ காலத்தில் வ்யாப்தியென்பது நிர்ணயத்திற்குக் காரணம். இரண்டு நாட்களும் வ்யாப்தி உள்ள பக்ஷத்தில் பிந்திய திதியே க்ராஹ்யம்.

तदाह जाबालिः — सदैव तिथ्योरुभयोः प्रदोषव्यापिनी तिथिः। तत्रोत्तरत्र नक्तं स्यादुभयत्रापि सा तिथिः इति। उभयत्रापि - दिवा रात्रावपि सा तिथिर्विद्यत इत्यर्थः। उभयत्रप्रदोषव्याप्त्यभावेऽपि परैव। तदाह जाबालिः — अतथात्वे परत्र स्यादर्वागस्तं गते हि सा इति। प्रदोषे तदभावेऽपि अस्तमयादर्वाक् यतस्सा विद्यते ततः सा ग्राह्येत्यर्थः।

*அதைச் சொல்லுகிறார், ஜாபாலி:- எப்பொழுதுமே இரண்டு திதிகளில் ப்ரதோஷ காலத்தில் வ்யாப்தியுள்ள திதியே க்ரஹிக்கத்தகுந்தது. அவைகளுள் மறு திதியில் நக்த வ்ரதத்தை யனுஷ்டிக்கவேண்டும் ஏனெனில் பின் திதியானது பகலிலும் இரவிலும் உள்ளது இரண்டிலும் பகலிலும் இரவிலும் அந்தத் திதி இருக்கின்றது என்பது பொருள். இரண்டு நாட்களிலும் ப்ரதோஷ காலத்தில் வ்யாப்யில்லாத பக்ஷத்திலும் மறு திதியே க்ராஹ்யம். அதைச் சொல்லுகிறார். ஜாபாலி:- இரண்டு நாட்களிலும் ப்ரதோஷ காலத்தில் வ்யாப்தியில்லாத பக்ஷத்தில் பின் திதியே க்ராஹ்யமாகும். ஸூர்யாஸ்தமயத்திற்கு முன் அந்தத் திதி இருக்கிறதல்லவா. ப்ரதோஷ காலத்தில் அத்திதி இல்லாவிடினும், அஸ்தமயத்திற்கு முன் அத்திதி இருக்கிற காரணத்தால். ஆகையால் அத்திதி க்ராஹ்யமாகும் என்பது பொருள்.*

ईदृशे विषये गृहस्थोऽपि यतिवद्दिवानक्तमाचरेत्। तदुक्तं स्कान्दे— प्रदोषव्यापिनी न स्याद्दिवानक्तं विधीयते। आत्मनो द्विगुणच्छायामतिक्रामति भास्करे। तन्नक्तं नक्तमित्याहुर्न नक्तं निशि भोजनम्। एवं ज्ञात्वा ततो विद्वान् सायाह्ने तु भुजिक्रियाम्। कुर्यान्नक्तव्रती नक्तफलं भवति निश्चितम् इति।

*இவ்விதமான விஷயத்தில் க்ருஹஸ்தனும் ஸந்யாஸி போல் பகலிலேயே நக்த வ்ரதத்தை*

யனுஷ்டிக்கவேண்டும். அது சொல்லப்பட்டுள்ளது, **ஸ்காந்தத்தில்:-** திதியானது ப்ரதோஷ காலத்தில் வ்யாப்தியுள்ளதா யில்லாவிடில் பகலிலேயே நக்த வ்ரதம் விதிக்கப்படுகிறது. தன்னுடைய இரண்டு பாகமுள்ள நிழலை ஸூர்யன் தாண்டிய பிறகு(தன்னுடைய நிழல் தன் தேஹ அளவின் இரண்டு மடங்கு ஆன பிறகு) உள்ள காலத்தை நக்தம் என்கின்றனர். இரவில் புஜிப்பது நக்தமல்ல. ஆகையால், அறிந்தவன் இவ்விதம் தெரிந்து கொண்டு ஸாயங்காலத்தில் போஜனத்தைச் செய்ய வேண்டும். இவ்விதம் செய்தால் நக்த வ்ரதத்தின் புண்யம் உண்டாகின்றது, நிச்சயமாக.

प्रदोषव्यापिन्यां तिथौ भानुवारसंक्रान्त्यादिना गृहस्थस्यापि यदा रात्रिभोजननिषेधः, तदा दिवैव नक्तं कुर्यात् । तथा च भविष्यत्पुराणे — ये त्वादित्यदिने ब्रह्मन् नक्तं कुर्वन्ति मानवाः । दिनान्ते तेऽपि कुर्वीरन् निषेधाद्रात्रिभोजने इति । अस्मिंश्च दिवाभोजने उत्तमोऽन्तिममुहूर्तः । मध्यम उपान्त्यः । ततः प्राचीनो जघन्यः । एवं च सति अन्तिमाष्टमभागत्रिमुहूर्तवचनान्युपपद्यन्ते ।

ப்ரதோஷ காலத்தில் வ்யாப்தியுள்ள திதியில் ஞாயிற்றுக் கிழமை, ஸங்க்ரமணம் முதலியதால் க்ருஹஸ்தனுக்கும் எப்பொழுது இரவு போஜனத்திற்கு நிஷேதம் வருகிறதோ அப்பொழுது பகலிலேயே நக்த வ்ரதத்தை அவன் செய்யவேண்டும். அவ்விதமே, **பவிஷ்யத் புராணத்தில்:-** ஓ ப்ராம்ஹணனே! எந்த மனிதர்கள் ஞாயிற்றுக்கிழமையில் நக்த வ்ரதத்தைச் செய்கின்றனரோ, அவர்களும் பகலின் முடிவில் நக்த வ்ரதத்தைச் செய்யவேண்டும். இரவில் போஜனம் நிஷேதிக்கப்பட்டிருப்பதால். இந்தப் பகல் போஜனத்தில் கடைசி இரண்டு நாழிகை உத்தமமாகும். அதற்கு முன் உள்ள இரண்டு நாழிகை மத்யமமாகும். அதற்கு முந்திய இரண்டு நாழிகை அதமமாகும் இவ்விதமிருப்பதால்

அந்திம(கடைசி)பாகம், எட்டாவது பாகம், ஆறு நாழிகைகள் இவைகளில் நக்த வ்ரதத்தை விதிக்கும் வசனங்கள் பொருத்தமுள்ளவைகளாகின்றன.

रात्रिभोजनेऽपि घटिकात्रयमुत्तमः कालः । घटिकाषट्कं मध्यमः कालः । प्रदोषोऽस्तमयादूर्ध्वं घटिकात्रयमिष्यते इति, त्रिमुहूर्तः प्रदोषस्स्याद्रवावस्तं गते सति इति च स्मृतेः । निशीथपर्यन्तो जघन्यः कालः । नक्तं प्रकुर्वीत, रात्रौ कुर्वीत इति सामान्येनाभिधानात् । असौरनक्तेषु सामान्येन वैषम्येण वा दिनद्वये प्रदोषैकदेशव्याप्तौ परेद्युरेव नक्तं कार्यम् । सायङ्कालस्य गौणस्य तिथिव्याप्तत्वात् ।

இரவு போஜன விஷயத்திலும் முதல் மூன்று நாழிகைள் உத்தமகாலம். ஆறு நாழிகைகள் மத்யம காலம். "அஸ்தமயத்திற்குப் பிறகு மூன்று நாழிகைள் ப்ரதோஷம் எனப்படுகிறது" என்றும், "ஸூர்யன் அஸ்தமித்த பிறகு மூன்று முஹூர்த்தங்கள் ப்ரதோஷம் எனப்படும்" என்றும் ஸ்ம்ருதியிருப்பதால். நடுநிசி வரையிலுள்ளது கடைசி காலம். இரவில் செய்யவும் என்று ஸாதாரணமாகச் சொல்லியுள்ளது. அஸௌர நக்த வ்ரதங்களில் (இரவிலேயே புஜிக்கும் வ்ரதங்களில்) ஸமமாகவோ, பேதமாகவோ இரண்டு நாட்களிலும் ப்ரதோஷகாலத்தின் ஏகதேசத்தில் வ்யாப்தியிருந்தால், மறு நாளிலேயே நக்தவ்ரதத்தைச் செய்யவேண்டும், கௌணமான ஸாயங்காலத்திற்கு திதி வ்யாப்தியிருப்பதால்.

सौरनक्तेषु सायङ्कालैकदेशव्याप्तौ पूर्वतिथिर्ग्राह्या । प्रदोषकालस्य तत्तिथिव्याप्तत्वात् । अर्कद्विपर्वरात्रौ च चतुर्दश्यष्टमी दिवा इत्यनेन दिवा चतुर्दश्यष्टमीयोगे सति भोजने प्रायश्चित्त विधानाद्दिवा तत्सम्बन्धसमये भोजननिषेधोऽवगम्यते । निषेधस्तु निवृत्त्यात्मा कालमात्रमपेक्षते इति स्मृतेः । तत्सम्बन्धाभावसमये तु

भोजनं न निषिध्यते। अत एव रात्रौ पर्वसंयोगे भोजने निषिद्धे तद्विगमे सति कचित् भोजनमभ्यनुज्ञायते मनुना, चन्द्रसूर्यग्रहे नाद्यादद्यात् स्नात्वा विमुक्तयोः इति।

*ஸௌர நக்த வ்ரதங்களில், (ஸூர்யனிருக்கும்போதே புஜிக்கும் வ்ரதங்களில்) ஸாயங்காலத்தில் ஏகதேசத்தில் வ்யாப்தியிருக்கும் பக்ஷத்தில், முதல் திதியே க்ரஹிக்கத்தகுந்தது. ப்ரதோஷகாலத்தில் அந்தத் திதியின் வ்யாப்தியிருப்பதால் ''ஞாயிற்றுக்கிழமை, அமா, பூர்ணிமா இவைகளின் இரவிலும், சதுர்த்தசீ, அஷ்டமீ இத் திதிகளின் பகலிலும்'' என்கிற இந்த வசனத்தால் பகலில் சதுர்த்தசீ, அஷ்டமீ இவை சேர்ந்தால் பகலில் போஜனம் செய்தால் ப்ராயச்சித்தம் விதிக்கப்பட்டிருப்பதால், பகலில் அந்தத் திதிகள் சேர்ந்திருக்கும் ஸமயத்தில் போஜன நிஷேதம் அறியப்படுகிறது. ''நிவ்ருத்தியை ஸ்வரூபமாக வுடைய நிஷேதமானது காலத்தை மட்டில் அபேக்ஷிக்கிறது'' என்று ஸ்ம்ருதியிருப்பதால். அந்தத் திதி ஸம்பந்தப்படாத காலத்தில் போஜனம் நிஷேதிக்கப் படுவதில்லை. ஆகையால் தான் இரவில் பூர்ணிமை சேர்ந்தால் போஜனம் நிஷேதிக்கப்பட்டிருக்கும் பொழுது, பூர்ணிமை சென்ற பிறகு ஒரு காலத்தில் போஜனம் ஒப்புக்கொள்ளப்படுகிறது, மனு:- ''சந்த்ரன் ஸூர்யன் இவர்களின் க்ரஹணத்தில் போஜனம் செய்யக்கூடாது. அவர்களின் மோக்ஷத்திற்குப் பிறகு ஸ்நானம் செய்து புஜிக்கவேண்டும்'' என்ற வசனத்தால்.*

व्यासोऽपि — नाद्यात् सूर्यग्रहात् पूर्वमह्नि सायं शशिग्रहात्। ग्रहकाले च नाश्नीयात् स्नात्वाऽश्नीयाच्च मुक्तयोः। मुक्ते शशिनि भुञ्जीत यदि न स्यान्महानिशा इति। वृद्धगौतमोऽपि — चन्द्रसूर्यग्रहे नाद्यात्तस्मिन्नहनि पूर्वतः। राहोर्विमुक्तिं विज्ञाय स्नात्वा कुर्वीत भोजनम् इति। चतुर्दश्यष्टमी दिवा इत्यस्य नक्तव्रतत्वाभावान्नक्त-

न्यायोऽप्यत्र नावतरति । तदेवं प्रतिपद्युपवासैकभक्तनक्तानि निर्णीतानि । तत्र शुक्लप्रतिपत्पूर्वविद्धैवोपोष्या । कृष्णप्रतिपदुत्तरविद्धा । एकभक्तनक्तयोस्तु सर्वासु तिथिषु मध्याह्नप्रदोषव्याप्त्या निर्णयः ।

வ்யாஸரும்:- ஸூர்ய க்ரஹணத்திற்கு முன் பகலில் புஜிக்கக்கூடாது. சந்த்ரக்ரஹணத்திற்கு முன் ஸாயங்காலத்தில் புஜிக்கக்கூடாது. க்ரஹண ஸமயத்திலும் புஜிக்கக்கூடாது. அவர்கள் முக்தர்களாகிய பிறகு ஸ்நானம் செய்து புஜிக்கவேண்டும். சந்த்ரன் முக்தனாகிய பிறகு அர்த்தராத்ரம் ஆகாத பக்ஷத்தில் புஜிக்கலாம். வ்ருத்த கௌதமரும்:- சந்த்ர ஸூர்யர்களின் க்ரஹணத்தில் அத்தினத்தில் க்ரஹணத்திற்கு முன் போஜனம் கூடாது. ராஹுமோக்ஷத்தைத் தெரிந்துகொண்டு ஸ்நானம் செய்து போஜனம் செய்யவேண்டும், என்று "சதுர்த்தசீ அஷ்டமீ திவா" என்ற இந்த வசனம் நக்த வ்ரதத்தைப் பற்றியதல்லாததால் நக்த வ்ரதத்திற்குச் சொல்லிய ந்யாயமும் இங்கு வருவதில்லை. ஆகையால் இவ்விதம் ப்ரதமையில் உபவாஸம், ஏகபக்தம், நக்தம் என்ற இவைகள் நிர்ணயிக்கப்பட்டன. அவைகளில் சுக்லபக்ஷ ப்ரதமை பூர்வ வித்தையாகியதே உபவாஸத்திற்கு யோக்யமானது. க்ருஷ்ணபக்ஷ ப்ரதமை மறு திதியினால் வித்தமானால் க்ரஹிக்கத்தகுந்தது. ஏகபக்த வ்ரதம், நக்த வ்ரதம் இவைகளுக்கானால் எல்லாத் திதிகளிலும் மத்யாஹ்னத்திலும், ப்ரதோஷ காலத்திலும் உள்ள வ்யாப்தியினால் நிர்ணயம்.

## दानव्रतादीनां कालः ।

दानव्रतादीनि उत्तरविद्धायां प्रतिपदि कर्तव्यानि । तेषां दैवत्वात् । तदाह वृद्धयाज्ञवल्क्यः — पौर्वाह्णिकास्तु तिथयो दैवकार्ये फलप्रदाः इति । अह्नः पूर्वो भागः पूर्वाह्णः । स च मुहूर्तत्रयात्मकः प्रातःकालः । कर्मकालव्याप्तिं च वृद्धयाज्ञवल्क्य आह— कर्मणो यस्य यः

कालस्तत्कालव्यापिनी तिथिः। तया कर्माणि कुर्वीत ह्रासवृद्धी न कारणम् इति। गार्ग्यश्च — यो यस्य विहितः कालस्तत्कालव्यापिनी तिथिः। तया कर्माणि कुर्वीत ह्रासवृद्धी न कारणम् इति।

**தானம், வ்ரதம் முதலியவைகளுக்குக் காலம்**

*தானம், வ்ரதம் முதலியவைகள் மறு திதியால் வித்தமான ப்ரதமையில் செய்யத்தக்கவை. அவை தேவர்களைச் சேர்ந்ததாகியதால். அதைச் சொல்லுகிறார். வ்ருத்த யாஜ்ஞவல்க்யர்:- பூர்வாஹ்ணத்தில் வ்யாப்தியுள்ள திதிகள் தேவகார்யங்களில் பலனைக் கொடுப்பவைகளாகும், என்று. பகலின் முதல் பாகம் பூர்வாஹ்ணம் எனப்படும். அது மூன்று முஹூர்த்தங்கள் (ஆறு நாழிகை) கொண்ட ப்ராதக் காலம். கர்ம காலத்தில் வ்யாப்தியைச் சொல்லுகிறார், வ்ருத்த யாஜ்ஞவல்க்யர்:- எந்தக் கர்மத்திற்கு எந்தக் காலம் விதிக்கப்பட்டுள்ளதோ அக்கர்மத்திற்கு அந்தக் காலத்தில் வ்யாப்தியுள்ள திதியே விதிக்கப்படுகிறது. அந்தத் திதியில் கர்மங்களைச் செய்யவேண்டும். திதி குறைவதும் வ்ருத்தியாவதும் காரணமல்ல, என்று. கார்க்யரும்:- எக்கர்மத்திற்கு எக்காலம் விதிக்கப்பட்டு உள்ளதோ அக்காலத்தில் அத்திதியும் வ்யாபித்திருக்கவேண்டும். அத்திதியில் கர்மங்களைச் செய்யவேண்டும். திதி குறைவும் வ்ருத்தியும் காரணமல்ல, என்று.*

एवं च उदयानन्तरं मुहूर्तत्रयव्यापिनी दानादौ तिथिर्ग्राह्या। यां तिथिं समनुप्राप्य उदयं याति भास्करः। सा तिथिः सकला ज्ञेया स्नानदानजपादिषु। व्रतोपवासस्नानादौ घटिकैका यदा भवेत्। उदये सा तिथिर्ग्राह्या श्राद्धादावस्तगामिनी इति देवलादिवचनं वैश्वानराधिकरणन्यायेन त्रिमुहूर्तव्याप्ति प्रशंसापरम्। अत्रापि षोढा भिद्यते। उदयकाले पूर्वेद्युरेव त्रिमुहूर्तव्यापिनी, परेद्युरेव तद्व्यापिनी, उभयत्रापि त्रिमुहूर्तव्यापिनी, नोभयत्र त्रिमुहूर्तव्यापिनी, साम्येन

वैषम्येण वा त्रिमुहूर्तैकदेश व्यापिनीति । तत्र प्रथमद्वितीययोर्नास्ति सन्देहः । तृतीयादिषु चतुर्षु पक्षेषु अस्तमयव्याप्तेः कर्मकालबाहुल्यस्य च लाभात् पूर्वेद्युरेवानुष्ठानमिति निर्णयः । पित्र्यकालस्तु श्राद्धकाण्डे निरूपितः । इति प्रतिपन्निर्णयः । अयमेव निर्णय उत्तरासु सर्वासु तिथिषु सामान्येन सञ्चारयितव्यः । विशेषस्तु तत्र तत्राभिधास्यते ।

இவ்விதமிருப்பதால் ஸூர்யோதயத்திற்குப்பிறகு மூன்று முஹூர்த்தம் வ்யாப்தியுள்ள திதியைத் தானம் முதலியதில் க்ரஹிக்க வேண்டும்.'' எந்தத் திதியையடைந்து ஸூர்யன் உதயமாகின்றானோ அந்தத் திதியே ஸ்நானம், தானம், ஜபம் முதலியவைகளில் ஸம்பூர்ண திதியாக அறியத் தகுந்தது. வ்ரதம், உபவாஸம், ஸ்நானம் முதலியவைகளில் ஒரு நாழிகையாவது உதயத்தில் எத்தினத்தில் இருக்கிறதோ அத்திதியே க்ராஹ்யமாகும். ச்ராத்தம் முதலியவைகளில் அஸ்தமனத்திலுள்ள திதி க்ராஹ்யமாகும்'' என்ற தேவலர் முதலியவரின் வசனம் வைச்வாநராதிகரண ந்யாயத்தால் மூன்று முஹூர்த்தங்கள் வ்யாப்தியுள்ள திதியை ப்ரசம்ஸிப்பதில் தாத்பர்யமுள்ளது. இத்திதியிலும் ஆறு விதம் பேதமுள்ளது. உதயகாலத்தில் முதல் நாளிலேயே மூன்று முஹூர்த்தங்கள் வியாப்தியுள்ளது, மறு நாளிலேயே மூன்று முஹூர்த்தங்கள் வ்யாப்தியுள்ளது, இரண்டு நாட்களிலும் மூன்று முஹூர்த்தங்கள் வ்யாப்தியுள்ளது, இரண்டு நாளிலும் மூன்று முஹூர்த்தம் வ்யாப்தியில்லாதது, இரண்டு நாட்களிலும் ஸமமாகவாவது ஸமமில்லாமலாவது மூன்று முஹூர்த்தங்களில் ஏகதேச வ்யாப்தியுள்ளது என்று. அவைகளுள் முதல் இரண்டு பக்ஷங்களில் அஸ்தமன ஸம்சயமில்லை. மூன்றாவது முதல் நான்கு பக்ஷங்களிலும் அஸ்தமய கால வ்யாப்தியும், கர்மகாலபாஹுள்யமும் கிடைப்பதால் முதல் நாளிலேயே அனுஷ்டானம் என்பது

ஸித்தாந்தம். ச்ராத்தகாலமோவெனில் ச்ராத்தகாண்டத்தில் சொல்லப்பட்டுள்ளது. இந்த ஸித்தாந்தமே மேலுள்ள எல்லாத் திதிகளிலும் ஸாதாரணமாகக் கொள்ளப்பட வேண்டும். விசேஷமோவெனில் ஆங்காங்கு சொல்லப்படும்.

द्वितीयानिर्णयः – तत्र द्वितीयायाः परविद्धाया उपोष्यत्वं भृगुराह — एकादश्यष्टमी षष्ठी द्वितीया च चतुर्दशी । त्रयोदशी त्वमावास्या उपोष्यास्स्युः परान्विताः इति । व्यासः — तृतीयया युता कार्या द्वितीया न तु पूर्वया इति । यदा तु पूर्वेद्युरुदयमारभ्य परेद्युरुदयस्योपरि त्रिमुहूर्ता वर्तते तदा पूर्वेद्युरेव सम्पूर्णतिथित्वादुपवासः । तदुक्तं कालनिर्णये — पूर्वेद्युरसती प्रातः परेद्युस्त्रिमुहूर्तगा । सा द्वितीया परोपोष्या पूर्वविद्धा ततोऽवरा इति ।

**த்விதீயையின் நிர்ணயம்** அவ்விஷயத்தில் த்ருதீயாவித்தையான த்விதீயைக்கு உபவாஸ யோக்யதையைச் சொல்லுகிறார், ப்ருகு:- ஏகாதசீ, அஷ்டமீ, ஷஷ்டீ, த்விதியா, சதுர்த்தசீ, த்ரயோதசீ, அமாவாஸ்யா இந்தத் திதிகள் அடுத்த திதியினால் கூடியதானல் உபவாஸத்துக்கு யோக்யங்களாகும், என்று. வ்யாஸர்: த்ருதீயையுடன் கூடிய த்விதீயையை உபவாஸத்தில் க்ரஹிக்கவேண்டும். ப்ரதமையுடன் கூடியதை க்ரஹிக்கக்கூடாது, என்று, எப்பொழுது முதல் நாளில் ஸூர்யோதயம் முதல் மறு நாளில் ஸூர்யோதயத்திற்குப் பிறகு மூன்று முஹூர்த்தங்கள் வரையில் உள்ளதோ, அப்பொழுது முதல் நாளிலேயே ஸம்பூர்ண திதியாயிருப்பதால் உபவாஸம். அது சொல்லப் பட்டுள்ளது, கால நிர்ணயத்தில்:- முதல் நாளில் காலையில் இல்லாமல் மறு நாளில் ஸூர்யோதயம் முதல் மூன்று முஹூர்த்தங்கள் வரையில் இருந்தால் அப்பொழுது தான் அந்தத் த்விதீயை க்ரஹிக்கத்தக்கது.

அவ்விதமில்லாவிடில் முதல் நாளிலுள்ள திதியை க்ரஹிக்கவும் என்று.

तृतीयानिर्णयः ।

तृतीया परविद्धैव ग्राह्या । रम्भाख्यव्रते तु पूर्वविद्धा ग्राह्या । तदुक्तं ब्रह्मकैवर्ते— रम्भाख्यां वर्जयित्वा तु तृतीयां द्विजसत्तम । अन्येषु सर्वकार्येषु गणयुक्ता प्रशस्यते इति । गणश्चतुर्थी । स्मृत्यन्तरेऽपि — द्वितीयया तु विद्धा चेत्तृतीया न कदाचन । कर्तव्या व्रतिभिस्तात धर्मकामार्थतत्परैः । विहायैकां च रम्भाख्यां तृतीयां पुण्यवर्धिनीम् इति ।

**த்ருதீயையின் நிர்ணயம்:-** *த்ருதீயை அடுத்த திதியுடன் கூடியதானால் க்ரஹிக்கத் தகுந்தது. ரம்பா வ்ரதம் என்ற வ்ரதத்தில் முன் திதியுடன் கூடியதே க்ராஹ்யமாகும். அது சொல்லப்பட்டுள்ளது,* **ப்ரம்ஹகைவர்த்தத்தில்:-** *ரம்பா வ்ரதம் என்ற வ்ரதத்தில் தவிர மற்ற வ்ரதத்தில் சதுர்த்தீவித்தமான த்ருதீயை க்ரஹிக்கவேண்டும். மூலத்தில் உள்ள கண: என்பதற்கு சதுர்த்தீ என்று பொருள்.* **மற்றொரு ஸ்ம்ருதியிலும்:-** *த்விதீயையுடன் கூடிய த்ருதீயை ஒரு பொழுதும் தர்ம காமார்த்தங்களை விரும்பும் வ்ரதமனுஷ்டிப்பவர்களால் க்ரஹிக்கத் தகுந்தல்ல. புண்யத்தை வ்ருத்தி செய்யும் ரம்பா த்ருதீயை என்ற த்ருதீயை ஒன்றைத் தவிர்த்து.*

चतुर्थीनिर्णयः — चतुर्थ्यपि परविद्धैव ग्राह्या । यदाह बृहद्वसिष्ठः — एकादशी तथा षष्ठी अमावास्या चतुर्थिका । उपोष्याः परसंयुक्ताः पराः पूर्वेण संयुताः इति । विनायकव्रतानुष्ठाने तु मध्याह्नव्यापिनी चतुर्थी ग्राह्या । तदाह बृहस्पतिः — चतुर्थी गणनाथस्य मातृविद्धा प्रशस्यते । मध्याह्न व्यापिनी चेत् स्यात् परतश्चेत्

परेऽहनि इति । मातृविद्धा - तृतीयाविद्धा । स्मृत्यन्तरेऽपि — मातृविद्धा प्रशस्ता स्याच्चतुर्थी गणनायके । मध्याह्ने परतश्चेत् स्यान्नागविद्धा प्रशस्यते इति । नागः - पञ्चमी । एकभक्तन्यायेन मध्याह्नव्याप्तेष्षोढा भेदे सति यदा परेद्युरेव मध्याह्नव्याप्तिस्तदा परा । इतरेषु पञ्चसु भेदेषु जयायोगस्य प्रशस्तत्वात् पूर्वेद्युरेव सा भवति ।

**சதுர்த்தியின் நிர்ணயம்:-** *சதுர்த்தியும் பஞ்சமியுடன் கூடியதே க்ரஹிக்கத் தகுந்தது. அதைச் சொல்லுகிறார்,* **ப்ருஹத் வஸிஷ்டர்:-** *ஏகாதசீ, ஷஷ்டி, அமாவாஸ்யா, சதுர்த்தீ இத்திதிகள் அடுத்த திதியுடன் கூடியிருந்தால் உபவாஸத்துக்கு அர்ஹங்களாகும். அடுத்த திதிகள் முன் திதிகளுடன் கூடியிருந்தால் உபவாஸத்துக்கு அர்ஹங்களாகும். விநாயக வ்ரத அனுஷ்டானத்திலோ வெனில் மத்யாஹ்ன காலத்தில் வ்யாப்தியுள்ள சதுர்த்தியே க்ரஹிக்கத் தகுந்தது. அதைச் சொல்லுகிறார்.* **ப்ருஹஸ்பதி:-** *விநாயக சதுர்த்தீ த்ருதீயையுடன் கூடியது ச்லாக்யமெனப் படுகிறது. மத்யாஹ்ன வ்யாபினியாயிருந்தால். மறு நாளில் மத்யாஹ்ன வ்யாபினியாயிருந்தால் அது ச்லாக்யம் எனப்படுகிறது. மூலத்திலுள்ள மாத்ரு சப்தத்திற்கு த்ருதீயை என்பது பொருள்.* **மற்றொரு ஸ்ம்ருதியிலும்:-** *விநாய வ்ரதத்தில் த்ருதீயையுடன் கூடிய சதுர்த்தீ ச்லாக்யமெனப்படுகிறது. மறு நாளில் மத்யாஹ்ன வ்யாபினியாயிருந்தால் பஞ்சமியுடன் கூடியது ப்ரசஸ்தமெனப்படுகிறது. மூலத்திலுள்ள நாக: என்பதற்கு பஞ்சமீ என்று பொருள். ஏகபக்த வ்ரத்தில் சொல்லிய ந்யாயத்தால் மத்யாஹ்ன வ்யாப்தியில் ஆறு விதமாகப் பேதம் செய்யும் பொழுது, எப்பொழுது மறுநாளிலேயே மத்யாஹ்ன வ்யாப்தி இருக்கின்றதோ அப்பொழுது மறுநாள் திதியே க்ராஹ்யமாகும். மற்ற ஐந்து பக்ஷங்களிலும் த்ருதீயையுடன் சேர்க்கை ப்ரசஸ்தமானதால் முதல் நாளிலேயே சதுர்த்தீ*

ப்ரசஸ்தமாகிறது.

पञ्चमीनिर्णयः — पञ्चमी पूर्वविद्धैव ग्राह्या । तदाह हारीतः । चतुर्थीसंयुता कार्या पञ्चमी परया न तु । दैवे कर्मणि पित्र्ये च शुक्ले पक्षे तथाऽसिते इति ।

**பஞ்சமீ நிர்ணயம்** பஞ்சமீ முன் திதியுடன் கூடியதே க்ரஹிக்கத்தகுந்தது. அதைச் சொல்லுகிறார். ஹாரீதர்:- பஞ்சமீ சதுர்த்தியுடன் கூடியதே க்ராஹ்யமாகும். ஷஷ்டியுடன் கூடியதல்ல. தைவ கர்மத்திலும் பித்ரு கர்மத்திலும் சுக்லபக்ஷத்திலும் க்ருஷ்ணபக்ஷத்திலும் இவ்விதமே (நிர்ணயம்)

षष्ठीनिर्णयः — षष्ठी परविद्धा ग्राह्या । तदुक्तं विष्णुधर्मोत्तरे — एकादश्यष्टमी षष्ठी पौर्णमासी चतुर्दशी । अमावास्या तृतीया च ता उपोष्याः परान्विताः इति । स्कन्दव्रते तु षष्ठ्याः पूर्वविद्धाया ग्राह्यत्वमाह वसिष्ठः — कृष्णाष्टमी स्कन्दषष्ठी शिवरात्रिश्चतुर्दशी । एताः पूर्वयुताः कार्यास्तिथ्यन्ते पारणं भवेत् इति । यदि कदाचित् तिथिक्षयवशादुत्तरविद्धा न लभ्यते, तदा स्कन्दव्रतवदन्यान्यपि व्रतानि पञ्चमीविद्धायां कर्तव्यानि । तदाह वसिष्ठः — एकादशी तृतीया च षष्ठी चैव त्रयोदशी । पूर्वविद्धा तु कर्तव्या यदि न स्यात् परेऽहनि इति ।

**ஷஷ்டீ நிர்ணயம்** ஷஷ்டீ அடுத்த திதியுடன் கூடியதே க்ராஹ்யமாகும். அது சொல்லப்பட்டுள்ளது. விஷ்ணு தர்மோத்தரத்தில்:- ஏகாதசீ, அஷ்டமீ, ஷஷ்டீ, பௌர்ணமாஸீ, சதுர்த்தசீ, அமாவாஸ்யா, த்ருதீயா, இத்திதிகள் அடுத்த திதியுடன் கூடியதாகில் உபவாஸத்துக்கு அர்ஹங்களாகும். ஸ்கந்த வ்ரதத்திலோ வெனில் பஞ்சமியுடன் கூடிய ஷஷ்டிக்கு க்ராஹ்யத் தன்மையைச் சொல்லுகிறார் வஸிஷ்டர் - கிருஷ்ணாஷ்டமி ஸ்கந்தஷஷ்டி, சிவராத்ரி சதுர்த்தசீ இத்திதிகள் முன் திதியுடன் கூடியவைகளானல் க்ராஹ்யங்களாகும்.

திதியின் முடிவில் பாரணம் செய்யவேண்டும். எப்பொழுதாவது ஒரு காலத்தில் திதிகள் குறைந்து வருவதால் மேல் திதியுடன் ஸம்பந்தமுள்ள திதி எப்பொழுது கிடைக்கவில்லையோ அப்பொழுது ஸ்கந்த வ்ரதம் போல் மற்ற ஷஷ்டீ வ்ரதங்களும் பஞ்சமியுடன் கூடிய திதியிலேயே செய்யப்படவேண்டும். அதைச் சொல்லுகிறார். வஸிஷ்டர்:- ஏகாதசீ, த்ருதீயா, ஷஷ்டீ, த்ரயோதசீ இவை முன் திதியுடன் கூடியவைகளே க்ரஹிக்கத்தகுந்தவை, (மறு நாளில் திதி இல்லாவிடில்).

सप्तमीनिर्णयः — सप्तमी पूर्वविद्धैव ग्राह्या । षष्ठ्या युता सप्तमी च कर्तव्या तत्र सर्वदा इति स्मृतेः । उत्तरविद्धाप्रतिषेधः स्कान्दपुराणे दर्शितः — षष्ठ्येकादश्यमावास्या पूर्वविद्धा तथाऽष्टमी । सप्तमी परविद्धा च नोपोष्यं तिथिपञ्चकम् इति । पूर्वविद्धायाः सप्तम्या अलाभे तु उत्तरविद्धा ग्राह्या । तदुक्तं कालनिर्णये — सप्तमी पूर्वविद्धैव व्रतेषु निखिलेष्वपि । अलाभे पूर्वविद्धायाः परविद्धाऽपि गृह्यताम् इति ।

ஸப்தமீ நிர்ணயம் ஸப்தமீ ஷஷ்டியுடன் கூடியதே க்ராஹ்யமாகும். "ஷஷ்டியுடன் கூடிய ஸப்தமியே எப்பொழுதும் க்ராஹ்யமாகும்" என்று ஸ்ம்ருதி யிருப்பதால். மேல் திதியின் ஸம்பந்தம் நிஷேதிக்கப் பட்டுள்ளது ஸ்காந்தபுராணத்தில்:- ஷஷ்டீ, ஏகாதசீ, அமாவாஸ்யா இம்மூன்றும் முன் திதியுடன் கூடியிருந்தாலும், அஷ்டமீ, ஸப்தமீ இவ்விரண்டும் அடுத்த திதியுடன் கூடியிருந்தாலும் இவ்வைந்து திதிகளும் உபவாஸத்துக்கு அர்ஹங்களல்ல. முன் திதி ஸம்பந்தமுள்ள ஸப்தமீ கிடைக்காவிடில், அடுத்த திதியுடன் கூடிய ஸப்தமீ க்ரஹ்யமாகும். அது சொல்லப்பட்டுள்ளது. கால நிர்ணயத்தில்:- எல்லா ஸப்தமீ வ்ரதங்களிலும் ஷஷ்டியுடன் கூடிய ஸப்தமியே க்ராஹ்யமாகும். அவ்விதம் கிடைக்காவிடில் அடுத்த திதியுடன் கூடியதையும் க்ரஹிக்கவேண்டும்

अष्टमीनिर्णयः — अथाष्टमी निर्णीयते । तत्र शुक्लाष्टमी परविद्धा ग्राह्या । तथा च निगमः — शुक्लपक्षेऽष्टमी चैव शुक्लपक्षे चतुर्दशी । पूर्वविद्धा न कर्तव्या कर्तव्या परसंयुता । उपवासादिकार्येषु ह्येष धर्मः सनातनः इति । स्कान्देऽपि — अष्टमी नवमीमिश्रा कर्तव्या भूतिमिच्छता । सप्तम्या चाष्टमी चैव न कर्तव्या शिखिध्वज इति । कृष्णपक्षे पूर्वविद्धायाः परिग्रहः परविद्धायाः प्रतिषेधश्च निगमे पठ्यते — कृष्णपक्षेऽष्टमी यत्र कृष्णपक्षे चतुर्दशी । पूर्वविद्धा तु कर्तव्या परविद्धा न कस्यचित् । उपवासादिकार्येषु ह्येष धर्मः सनातनः इति । व्रतविशेषे तु तत्र तत्रोक्तं द्रष्टव्यम् । तथा दूर्वाष्टमी संज्ञकव्रतविशेषविषये भविष्यत्पुराणे — श्रावणी दुर्गनवमी तथा दूर्वाष्टमी च या । पूर्वविद्धैव कर्तव्या शिवरात्रिर्बलेर्दिनम् इति ।

அஷ்டமீ நிர்ணயம் - இனி அஷ்டமீ நிர்ணயிக்கப்படுகிறது. அதில் சுக்லபக்ஷ அஷ்டமி, நவமியுடன் கூடியது க்ராஹ்யமாகும். அவ்விதம், நிகமத்தில்:- சுக்லபக்ஷ அஷ்டமீ, சுக்லபக்ஷ சதுர்த்தசீ இவைகள் முன் திதியுடன் கூடியதானால் க்ராஹ்யங்களல்ல. அடுத்த திதியுடன் கூடியவைகளே க்ராஹ்யங்களாகும். உபவாஸம் முதலிய காரியங்களில் இது ஸனாதன தர்மமாகும். ஸ்காந்தத்திலும்:- அஷ்டமீ நவமியுடன் கூடியதாகில் அதை ஸம்பத்தை விரும்புகிறவன் அனுஷ்டிக்கவேண்டும். ஓ ஸுப்ரஹ்மண்ய ! ஸப்தமியுடன் கூடிய அஷ்டமியை க்ரஹிக்கக்கூடாது. க்ருஷ்ண பக்ஷத்தில் ஸப்தமியுடன் கூடிய அஷ்டமியை க்ரஹிக்கவேண்டும் என்பதும், நவமியுடன் கூடியதைத் தள்ள வேண்டுமென்பதும் சொல்லப்பட்டுள்ளன. நிகமத்தில்:- க்ருஷ்ணபக்ஷ அஷ்டமீ, க்ருஷ்ணபக்ஷ சதுர்த்தசீ இவைகள் முன் திதியுடன் கூடியிருந்தால் க்ரஹ்யங்களாகும். அடுத்த திதியுடன்

கூடியதாகில் க்ராஹ்யங்களல்ல; உபவாஸம் முதலிய கார்யங்களில். இது ஸநாதன தர்மமாகும். மற்ற வ்ரதங்களில் ஆங்காங்கு சொல்லியதைப் பார்த்துக் கொள்ளவேண்டும். அவ்விதமே தூர்வாஷ்டமீ என்ற ஓர் வ்ரதத்தின் விஷயத்தில், பவிஷ்யத் புராணத்தில்:- "ச்ராவண பூர்ணிமா, துர்க்கா நவமீ, தூர்வாஷ்டமீ இவைகள் முன் திதியுடன் கூடியவைகளே க்ராஹ்யங்களாகும். சிவராத்ரி, பலிதினம் இவைகளும் அப்படியே" என்று.

कृष्णजन्माष्टमीव्रतम् — कृष्णजन्माष्टमीव्रताज्जयन्तीव्रतं भिन्नम्। जन्माष्टमीव्रते तिथिरेव निमित्तम् । जयन्तीव्रते तु रोहिणीयोगः । तथा च स्मर्यते — श्रावणे बहुले पक्षे कृष्णजन्माष्टमीव्रतम्। न करोति नरो यस्तु भवति क्रूरराक्षसः ॥ श्रावणस्य च मासस्य कृष्णाष्टम्यां नराधिप । रोहिणी यदि लभ्येत जयन्ती नाम सा तिथिः इति। वसिष्ठसंहितायाम् — श्रावणे वा नभस्ये वा रोहिणी सहिताऽष्टमी । यदा कृष्णा नरैर्लब्धा सा जयन्तीति कीर्तिता । श्रावणे न भवेद्योगो नभस्ये तु भवेद्ध्रुवम्। तयोरभावे योगस्य तस्मिन् वर्षे न संभवः इति ।

க்ருஷ்ண ஜன்மாஷ்டமீ வ்ரதம் - க்ருஷ்ண ஜன்மாஷ்டமீ வ்ரதத்தைவிட ஜயந்தீ வ்ரதம் என்பது தனியாகும். ஜன்மாஷ்டமீ வ்ரதத்தில் திதியே நிமித்தமாகும். ஜயந்தீ வ்ரத்திலோவெனில் ரோஹிணீ நக்ஷத்ரத்தின் ஸம்பந்தம் நிமித்தமாகும். அவ்விதம் ஸ்ம்ருதியிலுள்ளது. "ச்ராவண மாஸத்தில் க்ருஷ்ண பக்ஷத்தில் க்ருஷ்ண ஜன்மாஷ்டமீ வ்ரதத்தை எந்த மனிதன் செய்யவில்லையோ அவன் கொடிய ராக்ஷஸனாக ஆகிறான். ச்ராவண மாஸத்தின் க்ருஷ்ணபக்ஷ அஷ்டமியில் ரோஹிணீ நக்ஷத்திரம் சேருமாகில் அந்தத் தினம் ஜயந்தீ எனப்படுகிறது" வஸிஷ்ட ஸம்ஹிதையில்:- ச்ராவண

மாஸத்திலோ, ப்ரௌஷ்டபத மாஸத்திலோ க்ருஷ்ணாஷ்டமீ ரோஹிணீ நக்ஷத்ரத்துடன் கூடியதாய் மனிதர்களால் அடையப்பட்டால் அது ஜயந்தீ எனப் சொல்லப்பட்டுள்ளது. ச்ராவண மாஸத்தில் (அஷ்டமியும் ரோஹிணியும்) சேராவிடில் ப்ரௌஷ்டபத மாஸத்தில் அவச்யம் சேர்க்கையுண்டாகும். அவ்விரண்டும் மாஸங்களிலும் சேர்க்கையில்லாவிடில் அந்த வர்ஷத்தில் பிறகு உண்டாகாது.

अत्र श्रावण इति मुख्यकल्पो नभस्य इत्यनुकल्पः । एतदेवाभिप्रेत्य विष्णुरहस्येऽपि — अष्टमी कृष्णपक्षस्य रोहिणी ऋक्षसंयुता । भवेत् प्रौष्ठपदे मासि जयन्ती नाम सा स्मृता इति । हरिवंशे — अभिजिन्नाम नक्षत्रं जयन्ती नाम शर्वरी । मुहूर्तो विजयो नाम यत्र जातो जनार्दनः इति । अत्र श्रावण नभस्य प्रौष्ठपदशब्दाः सिंहश्रावणादिपराः । तथा च ज्योतिषार्णवे — श्रावण्यां प्रौष्ठपद्यां वा यदा सिंहगतो रविः । जयन्त्याराधनं कुर्यान्न तु कर्कटकन्ययोः इति ।

இவ்விடத்தில் ச்ராவண மாஸத்தில் என்பது முதல் பக்ஷம். ப்ரௌஷ்டபத மாஸத்தில் என்பது இரண்டாவது பக்ஷம். இந்த அபிப்ராயத்தைக்கொண்டே, விஷ்ணு ரஹஸ்யத்திலும்;- ''ப்ரௌஷ்டபத மாஸத்தில் க்ருஷ்ணபக்ஷ அஷ்டமீ ரோஹிணீயுடன் கூடியதானல் அது ஜயந்தீ என்ற பெயருள்ளதாகும்'' என்றுள்ளது. ஹரி வம்சத்தில்:- அபிஜித் என்ற நக்ஷத்ரம்,ஜயந்தீ என்ற இரவு, விஜயம் என்ற முஹூர்த்தம் இவைகளில் ஜனார்த்தனன் பிறந்தார். இவ்விடத்தில் ச்ராவண, நபஸ்ய, ப்ரௌஷ்டபத என்ற சப்தங்கள் ஸிம்ஹ ச்ராவணம் முதலியவைகளைக் குறிக்கின்றவையாகும். அவ்விதமே, ஜ்யோதிஷார்ணவத்தில் :- ச்ராவண மாஸத்திலோ, ப்ரௌஷ்டபத மாஸத்திலோ ஸூர்யன் ஸிம்ஹ ராசியிலிருக்கும்போது ஜயந்தீ வ்ரதத்தைச் செய்யவேண்டும். ஸூர்யன் கடக

*ராசியிலாவது கன்யா ராசியிலாவது இருக்கும்பொழுது செய்யக்கூடாது.*

वाराहेऽपि — सिंहराशिगते सूर्ये गगने जलदाकुले । मासि प्रौष्ठपदेऽष्टम्यामर्धरात्रे विधूदये । बुधवारे वृषे लग्ने रोहिण्याश्चरमांशके । शुभे हर्षणयोगे च कौलवेन युते तथा । वसुदेवेन देवक्यामहं जातोऽस्मि पद्मज इति ।

வாராஹத்திலும்:- *''ஸூர்யன் ஸிம்ஹ ராசியிலிருக்கும் பொழுது ஆகாயம் மேகங்களால் வ்யாபிக்கப்பட்டிருக்கும் பொழுது, ப்ரௌஷ்டபத மாஸத்தில், அஷ்டமியில், அர்த்தராத்ரியில், சந்த்ரோதயத்தில், புதவாரத்தில், வ்ருஷப லக்னத்தில், ரோஹிணீயின் கடைசி பாதத்தில் ஹர்ஷண யோகத்தில், கௌலவ கரணத்தில் வஸுதேவனால் தேவகியினிடத்தில் நான் உண்டாயினேன் ஓ பத்மஜனே'' என்று.*

यस्मिन् वर्षे श्रावणे वा नभस्ये वा जयन्ती न संभवति, तस्मिन् वर्षे श्रावणमास एव कृष्णाष्टमी व्रतमनुष्ठेयम् । तस्य स्वरूप मुपवासमात्रम् । 'केवलेनोपवासेन तस्मिन् जन्मदिने मम सप्तजन्मकृतात् पापान्मुच्यते नात्र संशयः इति स्मृतेः । यदि शिष्टास्तत्रापि जागरणदानादिक मनुतिष्ठन्ति, अनुतिष्ठन्तु नाम । अविरुद्धैः पुण्यविशेषैर्व्रतस्य उपोद्बलनसम्भवात् । शास्त्रेण तु प्राप्तमुपवासमात्रम् । जयन्तीव्रतस्य तु दानादिसहित उपवासः स्वरूपम् ।

*எந்த வர்ஷத்தில் ச்ராவண மாஸத்திலோ, ப்ரௌஷ்டபத மாஸத்திலோ ஜயந்தீ ஸம்பவிக்க வில்லையோ, அவ்வர்ஷத்தில் ச்ராவண மாஸத்திலேயே க்ருஷ்ணாஷ்டமீ வ்ரதத்தை யனுஷ்டிக்கவேண்டும். அதற்கு ஸ்வரூபம் உபவாஸம் மட்டில் ''அந்த எனது ஜன்ம*

தினத்தில் உபவாஸம் ஒன்றினாலேயே ஏழு ஜன்மங்களில் செய்த பாபங்களினாலும் விடுபடுவான். இதில் ஸம்சயம் இல்லை'' என்று ஸ்ம்ருதியிருப்பதால். சிஷ்டர்கள் ஜன்மாஷ்டமியிலும் தூங்காமை, தானம் முதலியதை அனுஷ்டிக்கின்றார்களாகில் அனுஷ்டிக்கட்டுமே! நிஷேதிக்கப்படாத புண்ய விசேஷங்களால் வ்ரதத்திற்குப் பலம் ஏற்படுமாகையால், சாஸ்த்ரத்தினால் கிடைத்தது உபவாஸம் மட்டில். ஜயந்தீ வ்ரதத்திற்கோவெனில், தானம் முதலியதுடன் கூடிய உபவாஸம் ஸ்வரூபமாகும். அவ்விதமே,

तथा च भविष्योत्तरे — मासि भाद्रपदेऽष्टम्यां निशीथे कृष्णपक्षके । शशाङ्के वृषराशिस्थे ऋक्षे रोहिणिसंज्ञके । योगेऽस्मिन् वसुदेवाद्धि देवकी मामजीजनत् । तस्मान्मां पूजयेत्तत्र शुचिस्सम्यगुपोषितः । ब्राह्मणान् भोजयेद्भक्त्या ततो दद्याच्च दक्षिणाम् । हिरण्यं मेदिनीं गावो वासांसि कुसुमानि च । यद्यदिष्टतमं तत्तत् कृष्णो मे प्रीयतामिति इति । जयन्तीं प्रकृत्य नारदीयसंहितायां स्मर्यते - उपोषणं जन्मदिने कुर्याज्जागरणं च यः । अर्धरात्रयुताष्टम्यां सोऽश्वमेधफलं लभेत् इति ।

பவிஷ்யோத்தரத்தில்:- ''பாத்ரபத மாஸத்தில் அஷ்டமியில் அர்த்தராத்ரியில், க்ருஷ்ணபக்ஷத்தில், சந்த்ரன் வ்ருஷபராசியில் இருக்கும்பொழுது, ரோஹிணீ நக்ஷத்ரத்தில், இவை கூடிய தினத்தில் தேவகீ என்பவள் வஸுதேவனிடமிருந்து என்னைப் பெற்றாள். ஆகையால் அத்தினத்தில் சுத்தனாய் உபவாஸமுள்ளவனாய் என்னை நன்றாய் பூஜிக்கவேண்டும். ப்ராம்ஹணர்களைப் பக்தியுடன் புஜிப்பிக்கவேண்டும். பிறகு அவர்களுக்குத் தக்ஷிணையைக் கொடுக்கவேண்டும். பொன், பூமி, பசுக்கள், வஸ்த்ரங்கள் புஷ்பங்கள் இவைகளையும் எதெது அதிக இஷ்டமானதோ அதனையும் க்ருஷ்ணனின் ப்ரீதியை

விரும்பிக் கொடுக்கவேண்டும்'' என்று ஜயந்தியைத் துவக்கிச் சொல்லப்படுகிறது, நாரதீய ஸம்ஹிதையில்:- ''நடு நிசியில் அஷ்டமீ உள்ள தினத்தில் க்ருஷ்ண ஜன்ம தினத்தில் உபவாஸத்தையும் ஜாகரணத்தையும் (தூங்காமை ) எவன் செய்வானோ அவன் அச்வமேத பலனையடைவான்'' என்று.

शुद्धं नित्यं जन्माष्टमीव्रतम्। करणे फलविशेषस्मरणात्। अकरणे प्रत्यवायस्मरणाच्च । नित्यं काम्यं च जयन्तीव्रतम् । अकरणे प्रत्यवायस्मरणात् । फलविशेषस्मरणाच्च । तथा हि, जन्माष्टम्यां अकरणे प्रत्यवायः स्मर्यते कृष्णजन्मदिने प्राप्ते यो भुङ्क्ते तु द्विजोत्तमः। त्रैलोक्यसंभवं पापं तेन भुक्तं द्विजोत्तम इति।

சுத்தமாகிய ஜன்மாஷ்டமீ வ்ரதம் நித்யமாகும். செய்வதில் பல பலன்களைச் சொல்லியிருப்பதாலும். செய்யாவிடில் பாபம் சொல்லியிருப்பதாலும். ஜயந்தீ வ்ரதம் நித்யமும் காம்யமும் ஆகும், செய்யாவிடில் பாபம் சொல்லியிருப்பதாலும், பல பலன்களைச் சொல்லி யிருப்பதாலும், அவ்விதமே, ஜன்மாஷ்டமியைச் செய்யாவிடில் பாபம் சொல்லப்படுகிறது, ''க்ருஷ்ண னுடைய ஜன்ம தினம் ப்ராப்தமாயிருக்கும் பொழுது எந்த த்விஜன் புஜிக்கின்றானோ அவன் மூன்றுலகத்திலுமுள்ள பாபத்தையும் அடைந்தவனாகிறான். ஓ ப்ராம்ஹணோத்தம!'' என்று.

स्कान्दपुराणेऽपि — ये न कुर्वन्ति जानन्तः कृष्णजन्माष्टमीव्रतम्। ते भवन्ति नराः पापा व्याला व्याघ्राश्च कानने इति। तथा जयन्तीव्रतस्याप्यकरणे स्कान्दे प्रत्यवायः स्मर्यते — शूद्रान्नेन तु यत् पापं शवहस्तस्थभोजने। तत् पापं लभते कुन्ति जयन्त्यां भोजने कृते। ब्रह्मघ्नस्य सुरापस्य गोवधे स्त्रीवधेऽपि वा। न लोको यदुशार्दूल जयन्तीविमुखस्य च। न करोति यदा विष्णोर्जयन्तीसम्भवं

व्रतम् । यमस्य वशमापन्नस्सहते नारकीं व्यथाम् । जयन्तीवासरे प्राप्ते करोत्युदरपूरणम् । संपीड्यतेऽतिमात्रं तु यमदूतैः कलेबरम् इति ।

ஸ்காந்த புராணத்திலும்:- எவர்கள் அறிந்தும் ஜன்மாஷ்டமீ வ்ரதத்தை அனுஷ்டிக்கவில்லையோ அந்தப் பாபிகளான மனிதர்கள் காட்டில் பாம்புகளாயும் புலிகளாயும் ஆகின்றனர். அவ்விதம் ஜயந்தீவ்ரத்தைச் செய்யாவிடில் பாபம் சொல்லப்படுகிறது, ஸ்காந்தத்தில்:- ஓ குந்தி! ஜயந்தியில் போஜனம் செய்தால் சூத்ரான்ன போஜனத்தால் எந்தப் பாபமோ, சவத்தின் கையில் உள்ளதைப் புஜித்தால் எந்தப் பாபமோ அந்தப் பாபத்தை அடைகிறான். ப்ரம்ஹஹத்யை செய்தவனுக்கும், ஸுராபானம் செய்தவனுக்கும், கோவதம் செய்தவனுக்கும், ஸ்த்ரீ வதம் செய்தவனுக்கும், எந்தப் பாபமோ அந்தப் பாபத்தை யடைகிறான். ஓ! யதுபுங்கவா!ஜயந்தியை யனுஷ்டிக்காதவனுக்கு நல்ல லோகமில்லை.எப்பொழுது விஷ்ணுவின் ஜயந்தீ வ்ரதத்தை எவன் அனுஷ்டிக்கவில்லையோ அவன் யமனின் அதீனமாகியவனாய் நரக துக்கத்தை அனுபவிக்கிறான். ஜயந்தீ தினம் ப்ராப்தமாயிருக்கும் பொழுது எவன் வயிற்றை நிரப்புகிறானோ, அவனது சரீரம் யமதூதர்களால் மிகவும் பீடிக்கப்படுகிறது.

जयन्तीव्रतकरणे फलविशेषोऽभिहितो भविष्योत्तरे — प्रतिवर्षं विधानेन मद्भक्तो धर्मनन्दन । नरो वा यदि वा नारी यथोक्तं फलमाप्नुयात् । पुत्रसन्तानमारोग्यं सौभाग्यमतुलं भवेत् । सदा धर्मरतिर्भूत्वा मृते वैकुण्ठमाप्नुयात् । तत्र दिव्येन मानेन वर्षलक्षं युधिष्ठिर । भोगान्नानाविधान्भुक्त्वा पुण्यशेषादिभागतः । सर्वकामसमृद्धे तु कुले महति जायते इति । पाद्मेऽपि — प्रेतयोनिगतानां तु प्रेतत्वं नाशितं नरैः । यैः कृता श्रावणे मासि अष्टमी रोहिणीयुता । किं पुनर्बुधवारेण सोमेनापि विशेषतः इति ।

ஜயந்தி வ்ரதத்தைச் செய்யும் விஷயத்தில் பலன் சொல்லப்பட்டுள்ளது, **பவிஷ்யோத்தரத்தில்:-** ஓ தர்மபுத்ர! வர்ஷந்தோறும் விதிப்படி என்னிடம் பக்தியுடையவன் புருஷனாயினும், ஸ்த்ரீயாயினும் (வ்ரதத்தையனுஷ்டித்தால்) சொல்லப்பட்டுள்ள பலனையடையலாம். புத்ரர்கள், ஆரோக்யம், அதிகமாகிய ஸௌபாக்யம் இவைகள் உண்டாகும். எப்பொழுதும் தர்மத்தில் ச்ரத்தையுள்ளவனாக இருந்து இறந்த பிறகு வைகுண்டத்தையடைவான். அவ்விடத்தில் தேவர்களின் கணக்கினால் லக்ஷம் வர்ஷம் பலவிதமான போகங்களை யனுபவித்து, புண்யத்தின் மீதியால் இவ்வுலகத்திற்கு வந்து, ஸகல காமங்களும் நிறைந்துள்ள பெரிய குலத்தில் பிறப்பான். ஓ யுதிஷ்டிர! **பாத்மத்திலும்:-** ச்ராவண மாஸத்தில் ரோஹிணீயுடன் கூடிய அஷ்டமீ வ்ரதத்தை எவர்கள் செய்தார்களோ அவர்கள் ப்ரேதர்களா யிருப்பவர்களின் ப்ரேதத் தன்மையைப் போக்குகின்றனர். புதவாரத்துடனாவது, ஸோமவாரத்துடனாவது சேர்ந்த அஷ்டமியில் வ்ரத்தையனுஷ்டித்தால் அதைப்பற்றிச் சொல்வதேன்.

ननु जन्माष्टमीव्रतेऽपि फलं स्मर्यते — सप्तजन्मकृतात् पापान्मुच्यते नात्र संशयः इति। अतस्तदपि नित्यं काम्यमिति चेत् मैवम्। उपात्तदुरितक्षयमात्रेण काम्यत्वे सन्ध्यावन्दनादेरपि काम्यत्वप्रसङ्गात्। सत्यपि पापक्षये फलान्तरास्मरणात्। अतः केवलं नित्यं जन्माष्टमीव्रतम्। नित्यं काम्यं च जयन्तीव्रतम्।

ஜன்மாஷ்டமீவ்ரதத்திலும் பலன் சொல்லப் படுகின்றதே, ''ஏழு ஜன்மங்களில் செய்த பாபத்தினின்றும் விடுபடுகிறான். இவ்விஷயத்தில் ஸம்சயமில்லை'' என்று. ஆகையால் அதுவும் நித்யமும் காம்யமுமாயாகலாம் எனில், இவ்விதமல்ல. அடையப்பட்ட பாபங்களை அகற்றுவதாலேயே காம்யத்வம் வருமாகில், ஸந்த்யா

வந்தனம் முதலியதற்கும் காம்யத் தன்மை வரக் கூடும். பாப க்ஷயம் இருந்தாலும் வேறு பலனைச் சொல்லாததால். ஆகையால், ஜன்மாஷ்டமீ வ்ரதம் என்பது நித்யம் மட்டிலே. ஜயந்தீ வ்ரதமென்பது நித்யமும் காம்யமும்.

ननु एवं व्रतभेदे सति यदा दिनद्वये अष्टमी वर्तते, रोहिणी तूत्तरदिन एव, तदा पूर्वदिने जन्माष्टम्युपवासः, परेद्युर्जयन्त्युपवास इति नैरन्तर्येणोपवासद्वयं प्रसज्येतेति चेन्न । रोहिणीयोगसंभवे जन्माष्टम्या अपि तत्रैव कर्तव्यत्वात् । सर्वतिथिष्वलभ्ययोगस्य केवलतिथेरुत्कृष्टत्वेन केवलायास्तिथेस्तत्रोपेक्षणीयत्वात् । यदा त्वेकस्मिन्नेव दिने अष्टमी वर्तते, रोहिण्या च युज्यते, तदा जन्माष्टमीजयन्त्योः सहप्रयोगस्या-वश्यम्भावित्वेन जयन्तीव्रत एव जन्माष्टमीव्रतमन्तर्भवतीति न पृथगुपवासप्रसङ्गः ।

இவ்விதம் வ்ரதங்களுக்குப் பேதம் இருக்கும்பொழுது எப்பொழுது இரண்டு தினங்களிலும் அஷ்டமீ யிருக்கின்றதோ, ரோஹிணீயோ மறு தினத்திலேயே இருக்கிறதோ அப்பொழுது முதல் நாளில் ஜன்மாஷ்டமியைப் பற்றிய உபவாஸம், மறு நாளில் ஜயந்தியைப் பற்றிய உபவாஸம் என்று இடைவிடாது இரண்டு உபவாஸங்கள் வரக்கூடுமே எனில், அது இல்லை. அஷ்டமிக்கு ரோஹிணீ ஸம்பந்தம் நேர்ந்தால் ஜன்மாஷ்டமியையும் அதிலேயே செய்யவேண்டிய தாகையால். எல்லாத் திதிகளிலும் கிடைக்கக்கூடாத (நக்ஷத்ரம் முதலியதின்) யோகம் நேர்ந்தால் அது (யோகமில்லாத) திதியைவிட யோகமுள்ள திதி சிறந்ததாகையால் யோகமில்லாத திதியை உபேக்ஷிக்கவேண்டுமாகையால் எப்பொழுது ஒரு தினத்தில் மட்டில் அஷ்டமீ இருக்கின்றதோ, ரோஹிணீயுடன் கூடுகிறதோ அப்பொழுது ஜன்மாஷ்டமீ வ்ரதம், ஜயந்தீ வ்ரதம் இரண்டையும் சேர்த்து

அனுஷ்டிக்கவேண்டியது ஆவச்யகமாகையால், ஜயந்தீ வ்ரதத்திலேயே ஜன்மாஷ்டமீ வ்ரதமும் உள்ளடங்குகிறது என்பதால், தனியே உபவாஸம் என்பது ப்ரஸக்தமாகாது.

तदुक्तं कालनिर्णये – यस्मिन् वर्षे जयन्त्याख्यो योगो जन्माष्टमी तदा । अन्तर्भूता जयन्त्यां स्यादृक्षयोगः प्रशस्यते इति । ग्राह्यतिथिर्निरूप्यते — जन्माष्टम्या जयन्त्याश्चार्धरात्र-प्रधानत्वात्तद्योगोऽतिप्रशस्तः । तदुक्तं वसिष्ठसंहितायाम् — अष्टमी रोहिणीयुक्ता निश्यर्धे यदि दृश्यते । मुख्यकाल इति ख्यातस्तत्र जातो हरिः स्वयम् इति ।

**கால நிர்ணயத்தில்:-** எந்த வர்ஷத்தில் ஜயந்தீ என்ற யோகம் வருகிறதோ அப்பொழுது ஜன்மாஷ்டமியும் ஜயந்தியில் உள்ளடங்கியதாகும். ஏனெனில், நக்ஷத்ர யோகமானது புகழப்படுகிறது என்று. க்ரஹிக்கத் தகுந்த திதியானது சொல்லப்படுகிறது, ஜந்மாஷ்டமிக்கும் ஜயந்திக்கும் அர்த்தராத்ரம் ப்ரதானமானதால் அர்த்தராத்ரத்தில் யோகமானது மிகச் சிறந்தது. அது சொல்லப்பட்டுள்ளது, **வஸிஷ்ட ஸம்ஹிதையில் :-** ரோஹிணியுடன் கூடிய அஷ்டமி அர்த்தராத்ரத்தில் காணப்பட்டால், அது முக்ய காலம் எனப்படுகிறது. அக்காலத்தில் ஸ்ரீஹரி தானகவே உண்டானார், என்று.

विष्णुरहस्येऽपि — रोहिण्यामर्धरात्रे तु यदा कृष्णाष्टमी भवेत् । तस्यामभ्यर्चनं शौरेर्हन्ति पापं त्रिजन्मजम् इति । एवं च सत्यर्धरात्रसद्भाव एवात्र कर्मकालव्याप्तिः । तत्र योगीश्वरः— रोहिणीसहिता कृष्णा मासे च श्रावणेऽष्टमी । अर्धरात्रादधश्चोर्ध्वं कलयाऽपि यदा भवेत् । जयन्ती नाम सा प्रोक्ता सर्वपापप्रणाशिनी इति ।

**விஷ்ணுரஹஸ்யத்திலும்:-** ரோஹிணீ நக்ஷத்ரத்தில் அர்த்தராத்ரத்தில் க்ருஷ்ணாஷ்டமீ சேர்ந்தால் அந்த

அஷ்டமியில் விஷ்ணுவின் பூஜை மூன்று ஜனமங்களில் செய்த பாபத்தை அகற்றுகின்றது, என்று. இவ்விதமிருக்க, இந்த வ்ரதத்தில் கர்மகால வ்யாப்தி என்பது அர்த்தராத்ரத்தில் இருப்பதே. அதில், யோகீச்வரர்:- ச்ராவணமாஸத்தில், க்ருஷ்ணாஷ்டமீ, ரோஹிணீயுடன் கூடியதாய் அர்த்தராத்ரத்திற்கு முன்பும் பின்பும் கலையளவாவது இருந்தால் அது ஜயந்தீ என்று சொல்லப்பட்டு உள்ளது. அது எல்லாப் பாபங்களையும் போக்கக்கூடியது என்று.

पक्षान्तरमाह स एव — अर्धरात्रा दधश्चोर्ध्वमेकार्धघटिकान्विता । रोहिणी चाष्टमी ग्राह्या उपवासव्रतादिषु इति । एकघटिकान्विता वा, अर्धघटिकान्विता वा । तत्रायमर्थः संपद्यते । पूर्वभागावसाने एका घटिका, उत्तरभागादावेका, मिळित्वा निशीथशब्दवाच्यः मुहूर्तः । तावत्परिमाणः मुख्यः कल्पः । तदसम्भवे उभयत्रार्धघटिका । तस्या अप्यसम्भवे कलेति । एवं च अर्धरात्रे कलामात्रमष्टमीसद्भावेऽपि जयन्तीयोगस्य प्रतिपादनात् अह्नि चेत् सप्तमीविद्धा तस्यां नाराधयेर्धरिम् इति वचनं निर्मूलम् । सोऽयमर्द्धरात्रयोगो मुख्यः कल्पः । कृत्स्नाहोरात्रयोगोऽत्यन्तमुख्यः । यदाकदाचिन्मुहूर्तयोगः स्वल्पयोगश्चानुकल्पः ।

மற்றொரு பக்ஷத்தைச் சொல்லுகிறார், யோகீச்வரரே:- அர்த்தராத்ரத்திற்கு முன்பும் பின்பும் ஒரு நாழிகை அல்லது அரை நாழிகையுடன் ரோஹிணியும் அஷ்டமியும் இருந்தால் அது உபவாஸம், வ்ரதம் முதலியவைகளில் க்ராஹ்யமாகும். அவ்வசனத்தில் இவ்விதம் அர்த்தம் ஏற்படுகிறது. இரவின் பூர்வ பாகத்தின் முடிவில் ஒரு நாழிகை, பின் பாகத்தின் ஆரம்பத்தில் ஒரு நாழிகை. இவ்விரண்டும் சேர்ந்த ஒரு முஹூர்த்தம் நிசீதம் என்ற சப்தத்தால் சொல்லப்படுகிறது. அவ்வளவு அளவு முக்ய கல்பம். அவ்விதம் ஸம்பவிக்காவிடில், இரண்டு

பாகத்திலும் அரை நாழிகை வ்யாப்தி. அதுவும் ஸம்பவிக்காவிடில் ஒரு கலை. இவ்விதம், அர்த்தராத்ரத்தில் ஒரு கலையளவாவது அஷ்டமீ இருந்தாலும் ஜயந்தீ யோகம் என்று சொல்லியிருப்பதால் "பகலில் ஸப்தமியுடன் கூடியிருந்தால் அந்த அஷ்டமியில் ஹரியைப் பூஜிக்கக்கூடாது" என்ற வசனம் ஆதாரமற்றதாகிறது. இவ்விதம் சொல்லிய இந்த அர்த்தராத்ர யோகம் முக்யபக்ஷமாகும். பகல் இரவு முழுவதும் சேர்ந்திருப்பது மிகவும் முக்ய பக்ஷம், எப்பொழுதாவது ஒரு முஹூர்த்த யோகமும் அதைவிட குறைந்த யோகமும் இரண்டாவது பக்ஷம்.

तथा वसिष्ठसंहितायाम् — अहोरात्रं तयोर्योगो ह्यसंपूर्णो भवेद्यदि। मुहूर्तमप्यहोरात्रे योगश्चेत्तामुपोषयेत्। वासरे वा निशायां वा यत्र स्वल्पाऽपि रोहिणी। विशेषेण नभोमासे सैवोपोष्या मनीषिभिः इति।

**வஸிஷ்ட ஸம்ஹிதையில்:-** பகல் இரவு முழுவதிலும் திதி நக்ஷத்ரங்கள் ஸம்பூர்ணங்களாயில்லா விடில் பகல் இரவுக்குள் ஒரு முஹூர்த்தம் மட்டிலாவது யோகம் இருந்தால் அந்தத் திதியில் உபவாஸம் இருக்கவேண்டும். பகலிலோ இரவிலோ ரோஹிணீ நக்ஷத்ரம் ஸ்வல்பமாகவாவது இருந்தால் விசேஷமாய் ச்ராவண மாஸத்தில் அந்த அஷ்டமியிலேயே அறிந்தவர்கள் உபவாஸம் இருக்கவேண்டும்.

यो जयन्तीव्रते योगनिर्णयस्स एव जन्माष्टमी व्रतेऽपि द्रष्टव्यः। दिवा वा यदि वा रात्रौ नास्ति चेद्रोहिणी कला। रात्रियुक्तां प्रकुर्वीत विशेणेन्दुसंयुताम्। अष्टमी शिवरात्रिश्च ह्यर्धरात्रादधो यदि। दृश्यते घटिका या सा पूर्वविद्धा प्रकीर्तिता इति स्मृतेः।

ஜயந்தீ வ்ரதத்தில் யோக நிர்ணயம் எது சொல்லப்பட்டதோ அதுவே ஜன்மாஷ்டமீ வ்ரதத்திலும்

அறியத் தகுந்தது. "பகலிலோ இரவிலோ ரோஹிணீ கலாமாத்ரமாவது இல்லாவிடில், அப்பொழுது இரவில் வ்யாப்தியுள்ளதும் சந்த்ரோதய வ்யாப்தியுள்ளதுமாகிய அஷ்டமியில் உபவாஸம் இருக்கவேண்டும். க்ருஷ்ணாஷ்டமியும் சிவராத்ரியும் அர்த்தராத்ரத்திற்குக் கீழேயிருந்தால், ஒரு நாழிகை எதில் காணப்படுகிறதோ அந்த முன் திதியுடன் கூடிய பின் திதியே அப்பொழுது ப்ரசஸ்தமாகிறது" என்று ஸ்ம்ருதியிருப்பதால்.

तत्र जन्माष्टमी द्विविधा । शुद्धा सप्तमीविद्धा चेति । सूर्योदयमारभ्य प्रवर्तमानाऽष्टमी शुद्धा । निशीथादर्वाक् सप्तम्या कियत्याऽपि युक्ता विद्धा । शुद्धाऽपि पुनर्निशीथव्याप्त्यव्याप्तिभ्यां द्विविधा । तत्र निशीथव्यापिनी मुख्या, विशेषेणेन्दुसंयुताम् इति वचनात् । निशीथव्याप्तिरहितापि रात्रियुक्तां प्रकुर्वीत इति वचनेन ग्रहीतव्या भवति ।

அதில் ஜன்மாஷ்டமீ இரண்டுவிதமாகியது. சுத்தா என்றும், ஸப்தமீ வித்தா என்றும். ஸூர்யோதயம் முதல் ப்ரவ்ருத்தித்துள்ள அஷ்டமீ சுத்தா எனப்படும் அர்த்தராத்ரத்திற்கு முன்பு ஸப்தமியுடன் கூடியது வித்தா எனப்படும். சுத்தா என்பதும் மறுபடி அர்த்தராத்ர வ்யாப்தி, அந்த வ்யாப்தி இல்லாமை இவைகளால் இரண்டுவிதம். அவைகளுள் அர்த்தராத்ர வ்யாப்தியுள்ளது முக்யமாகும், "சந்த்ரனுடன் கூடிய" என்ற வாக்யத்தால். அர்த்தராத்ர வ்யாப்தி இல்லாததும் "ராத்ரியுடன் கூடியதை க்ரஹிக்கவும்" என்ற வசனத்தால் க்ரஹிக்கத் தகுந்தாக ஆகிறது.

ननु पूर्वेद्युर्निशीथादूर्ध्वमारभ्य परेद्युर्निशीथादर्वाक् या समाप्यते तस्यामुभयत्र रात्रिसंबन्धसत्वात् कुत्रोपवास इति चेत्, परेद्युरेवोपवासः कार्यः । प्रातः सङ्कल्पकालमारभ्य प्रवर्तमानत्वात् । सप्तमीविद्धाऽपि त्रिविधा । पूर्वेद्युरेव निशीथव्यापिनी, परेद्युरेव

निशीथव्यापिनी, उभयत्रापि निशीथव्यापिनी चेति । तत्र प्रथमद्वितीययोः पक्षयोर्निशीथव्याप्तेः प्रयोजकत्वेन या निशीथव्यापिनी, सा विशेषेणेन्दुसंयुताम् इति वचनेन ग्रहीतव्या भवति । तृतीये तु पक्षे परेद्युरुपवासः । प्रातः सङ्कल्पकालमारभ्य तिथिव्याप्तिसम्भवात् ।

முதல் நாளில் அர்த்தராத்ரத்திற்கு மேல் முதற்கொண்டு மறுநாள் அர்த்தராத்ரத்திற்கு முன்பே எந்தத் திதி முடிவடைகின்றதோ அந்தத்திதியில் இரண்டு நாட்களிலும் இரவு ஸம்பந்தம் இருப்பதால் எந்தத் தினத்தில் உபவாஸம் என்றால், மறு நாளிலேயே உபவாஸம் செய்யப்படவேண்டும், காலையில் ஸங்கல்ப காலம் முதல் ப்ரவ்ருத்தித்திருப்பதால். ஸப்தமீ வித்தையான அஷ்டமியும் மூன்று விதமாகும். முதல் நாளில்மட்டில் அர்த்தராத்ர வ்யாப்தியுள்ளது, மறுநாளில் மட்டில் அர்த்தராத்ர வ்யாப்தியுள்ளது, இரண்டும் நாட்களிலும் அர்த்தராத்ர வ்யாப்தியுள்ளது என்று. அவைகளுள், முதல் இரண்டு பக்ஷங்களில் அர்த்தராத்ர வ்யாப்தி ப்ரயோஜகமானதால் எது அர்த்தராத்ர வ்யாப்தியுள்ளதோ அதுவே "சந்த்ரனுடன் கூடியதை க்ரஹிக்கவேண்டும்" என்ற வசனத்தால் க்ரஹிக்கத் தகுந்தது. மூன்றாவது பக்ஷத்திலோவெனில், மறு நாளில் உபவாஸம், காலையில் ஸங்கல்பகாலம் முதற்கொண்டு திதியின் வ்யாப்தி ஸம்பவிப்பதால்.

रोहिणीसहिताऽष्टमी चतुर्विधा । शुद्धा, विद्धा, शुद्धाधिका, विद्धाधिका चेति । तत्र शुद्धायां सम्पूर्णयोगो निशीथयोगो यत्किञ्चिन्मुहूर्तयोग इति त्रैविध्यं भवति । एवं विद्धायामपि त्रैविध्यम् । एतेषु षट्सु पक्षेषु दिनान्तरे योगाभावादुपवासे सन्देहो नास्ति । किन्तु योगतारतम्यात् प्राशस्त्यतारतम्यं भवति । यत्किञ्चिन्मुहूर्तयोगः प्रशस्तः । निशीथयोगः प्रशस्ततरः । सम्पूर्णयोगः प्रशस्ततमः ।

ரோஹிணியுடன் கூடிய அஷ்டமீ நான்கு விதம்:- சுத்தா, வித்தா, சுத்தாதிகா, வித்தாதிகா, என்று. அவைகளுள் சுத்தா என்பதில் ஸம்பூர்ணயோகம், அர்த்தராத்ர யோகம், ஸ்வல்ப முஹூர்த்த யோகம் என்று மூன்றுவிதமாகிறது. இப்படியே வித்தா என்பதிலும் மூன்றுவிதம் ஆகிறது. இந்த ஆறு பக்ஷங்களிலும் மறுநாளில் ரோஹிணீ யோகம் இல்லாததால் உபவாஸத்தில் ஸந்தேஹம் இல்லை. ஆனால் யோகத்தின் தாரதம்யத்தால் சிறந்த தன்மையிலும் தாரதம்யம் ஏற்படுகிறது. ஏதாவது ஸ்வல்ப முஹூர்த்தத்தின் யோகம் என்பது ச்லாக்யமாகும். அர்த்தராத்ர ஸம்பந்தம் என்பது அதைவிடச் சிறந்தது. முழுவதும் ஸம்பந்தம் என்பது மிக ச்லாக்யமானது.

शुद्धाधिका तु सूर्योदयमारभ्य प्रवृत्ता परेद्युः सूर्योदयमतिक्रम्यैषा वर्तते । सा च त्रिविधा । पूर्वेद्युरेव रोहिणीयुक्ता, परेद्युरेव रोहिणीयुक्ता । दिनद्वयेऽपि रोहिणीयुक्ता चेति । तत्राद्ययोर्नास्ति सन्देहः । रोहिणीयोगस्य नियामकत्वात् । तृतीये तु रोहिणीयोगस्योभयत्र समानत्वेऽपि गुणाधिक्यात् पूर्वैवोपोष्या । तथा हि, सा रोहिणी योगभेदात् त्रिधा भिद्यते, अष्टमीवत् सूर्योदयमारभ्य प्रवृत्ता रोहिणी कदाचित् परेद्युरपि कियती वर्तते । कदाचित् पूर्वेद्युर्निशीथमारभ्य रोहिणी प्रवर्तते । कदाचिन्निशीथादूर्ध्वमारभ्य प्रवर्तते । तत्र प्रथमद्वितीययोर्निशीथयोगस्य सत्त्वात् पूर्वेद्युरेवोपवासः । तृतीयपक्षे दिनद्वयेऽपि निशीथे जयन्तीयोगो नास्ति । पूर्वेद्युर्निशीथे केवलाष्टमी, परेद्युः केवलरोहिणी । तत्र निशीथयोगाभावेऽपि रात्रियोगस्य सत्त्वादष्टम्याः प्राधान्याच्च पूर्वेद्युरुपवासः । तदेवं शुद्धाधिका पूर्वैवोपोष्या ।

சுத்தாதிகா என்பதோவெனில், ஸூர்யோதயம் முதல் ப்ரவ்ருத்தித்து மறுநாள் ஸூர்யோதயத்தையும்

தாண்டி எது இருக்கிறதோ அது. அதுவும் மூன்று விதம். முதல் நாளில் மட்டில் ரோஹிணியுடன் கூடியது, மறுநாளில் மட்டில் ரோஹிணியுடன் கூடியது, இரண்டு நாட்களிலும் ரோஹிணியுடன் கூடியது என்று அவைகளுள் முதல் இரண்டு பக்ஷங்களிலும் ஸந்தேஹமில்லை. ரோஹிணீ ஸம்பந்தமே காரணமாகையால். மூன்ருவது பக்ஷத்திலோவெனில், ரோஹிணீ ஸம்பந்தம் இரண்டு நாட்களிலும் ஸமானமாக இருந்தாலும், குணம் அதிகமாயிருப்பதால் முதல் திதியே உபவாஸத்திற்கு அர்ஹமாகும். அவ்விதமே, அந்த ரோஹிணீயானது ஸம்பந்த பேதத்தால் மூன்று விதமாகிறது. அஷ்டமியைப்போல் ஸூர்யோதயம் முதல் ஆரம்பித்துள்ள ரோஹிணீ எப்பொழுதாவது மறுநாளிலும் இருக்கிறது, எப்பொழுதாவது முதல்நாள் அர்த்தராத்ரம் முதல் ஆரம்பித்து ரோஹிணீ ப்ரவ்ருத்திக்கிறது. எப்பொழுதாவது அர்த்தராத்ரத்திற்குமேல் ஆரம்பித்து ப்ரவ்ருத்திக்கிறது என்று. அவைகளுள் முதல் இரண்டு பக்ஷங்களிலும் அர்த்தராத்ர ஸம்பந்தம் இருப்பதால் முதல் நாளிலேயே உபவாஸம். மூன்ருவது பக்ஷத்தில் இரண்டு நாட்களிலும் அர்த்தராத்ரத்தில் ரோஹிணீ ஸம்பந்தம் இல்லை. முதல் நாள் அர்த்தராத்ரத்தில் அஷ்டமீ மட்டில். மறு நாளில் ரோஹிணீ மட்டில். அவைகளுள் அர்த்தராத்ர ஸம்பந்தம் இல்லாவிடினும் ராத்ரிஸம்பந்தம் இருப்பதாலும் அஷ்டமீ ப்ரதான மாகியதாலும் முதல் நாளில் உபவாஸம். ஆகையால் இவ்விதமிருக்க சுத்தாதிகா என்பது முந்தியதே உபவாஸத்திற்கு அர்ஹமாகிறது.

निशीथादर्वाक् सप्तम्या युक्ता परेद्युरपि विद्यमाना विद्धाधिका। सा च त्रिविधा - पूर्वेद्युरेव रोहिणीयुक्ता विद्धाधिका, परेद्युरेव रोहिणीयुक्ता, उभयत्र रोहिणीयुक्ता विद्धाधिका इति । तत्र प्रथमद्वितीययोस्तु रोहिणीयोगो नियामकः ।

*வித்தாதிகா - என்பது அர்த்தராத்ரத்திற்கு முன் ஸப்தமியுடன் கூடியதும், மறு நாளிலும் இருப்பது. அதுவும் மூன்றுவிதம், முதல் நாளில் மட்டில் ரோஹிணியுடன் கூடியது, மறு நாளில் மட்டில் ரோஹிணியுடன் கூடியது, இரண்டு நாட்களிலும் ரோஹிணியுடன் கூடியது என்று. முதல் இரண்டு பக்ஷங்களிலும் ரோஹிணீ ஸம்பந்தம் நிச்சய காரணம்.*

या तूभयत्र रोहिणीयुक्ता विद्धाधिका, साऽपि निशीथे जयन्तीयोगमपेक्ष्य चतुर्धा भिद्यते। पूर्वेद्युरेव निशीथयोगवती, परेद्युरेव निशीथयोगवती, उभयत्रापि तादृशी, उभयत्रापि निशीथयोगरहिता चेति। तत्र प्रथमद्वितीययोर्निशीथयोगो नियामकः। तृतीयचतुर्थयोः परदिन एवोपवासः। परेद्युः सङ्कल्पकाले तिथिनक्षत्रयोगस्य सत्त्वात्। जयन्तीभेदेषूपवासदिने यदि सोमवारो बुधवारो वा भवति तदा फलाधिक्यं भवति।

*இரண்டு நாட்களிலும் ரோஹிணியுடன் கூடிய வித்தாதிகா எதுவோ அதுவும் அர்த்தராத்ரத்தில் ரோஹிணீ ஸம்பந்தத்தை அபேக்ஷித்து நான்கு விதமாகிறது. முதல் நாளில் மட்டில் அர்த்தராத்ர ஸம்பந்தமுள்ளது, மறு நாளில் மட்டில் அர்த்தராத்ர ஸம்பந்தமுள்ளது, இரண்டு நாட்களிலும் அர்த்த ராத்ர ஸம்பந்தமுள்ளது, இரண்டு நாட்களிலும் அர்த்தராத்ர ஸம்பந்தம் இல்லாதது என்று. அவைகளுள் முதல் இரண்டு பக்ஷங்களிலும் அர்த்தராத்ர ஸம்பந்தம் நிர்ணய காரணம். மூன்ருவது நான்காவது பக்ஷங்களில் மறு நாளிலேயே உபவாஸம், மறு நாளில் ஸங்கல்ப காலத்தில் திதி நக்ஷத்ரம் இவைகளின் ஸம்பந்தம் இருப்பதால்.*

तदुक्तं ब्रह्मपुराणे— प्रेतयोनिगतानां तु प्रेतत्वं नाशितं नरैः। यैः कृता श्रावणे मासि अष्टमी रोहिणीयुता। किं पुनर्बुधवारेण सोमेनापि

विशेषतः । किं पुनर्नवमीयुक्ता कुलकोट्यास्तु मुक्तिदा इति । दिनद्वयेऽप्यर्धरात्रसम्बन्धाभावे स्कान्देऽपि — उदये चाऽष्टमी किञ्चिन्नवमी सकला यदि । भवेत्तु बुधसंयुक्ता प्राजापत्यर्क्षसंयुता । अपि वर्षशतेनापि लभ्यते वाऽथवा न वा इति ।

ஜயந்தீ பேதங்களில் உபவாஸ தினத்தில் எப்பொழுதாவது திங்கள் அல்லது புதன் கிழமை ஸம்பந்தம் ஏற்படுகிறதோ அப்பொழுது புண்யத்தின் அதிகத் தன்மை ஏற்படுகிறது. அது சொல்லப் பட்டுள்ளது,ப்ரஹ்ம புராணத்தில்:- எவர்கள் ச்ராவண மாஸத்தில் ரோஹிணியுடன் கூடிய அஷ்டமியை அனுஷ்டித்தார்களோ அவர்கள் ப்ரேதத் தன்மையை அடைந்த முன்னோர்களின் அத்தன்மையை அகற்றியவர்களாகிறார்கள். புதவாரத்துடனாவது அல்லது ஸோமவாரத்துடனாவது கூடிய அஷ்டமியை அனுஷ்டித்தவர்களின் விஷயத்தில் சொல்வதேன்? நவமியுடன் கூடியதைச் செய்தவரைப் பற்றிச் சொல்வதேன்? அது கோடி குலங்களுக்கு முக்தியைக் கொடுப்பதாகும், என்று. இரண்டு நாட்களிலும் அர்த்தராத்ர ஸம்பந்தம் இல்லாவிடில் சொல்லப் பட்டுள்ளது, ஸ்காந்தத்திலும்:- ஸூர்யோதயத்தில் அஷ்டமீ ஸ்வல்பமும், பிறகு முழுவதும், நவமியும், புதவாரத்துடன் கூடியிருந்தால் ரோஹிணீ நக்ஷத்ரத்துடன் கூடியிருந்தால் இந்த யோகம் நூறுவர்ஷங்களுக்குள் ஒரு முறை கிடைத்தாலும் கிடைக்கலாம், கிடைக்காமலுமிருக்கலாம். என்று

## पारणनिर्णयः

यथोक्तरीत्या विहिततिथावुपवासं कृत्वा, परेद्युः पूर्वाह्णे पारणं कृत्वा उपवासं समापयेत् । उपवासेषु सर्वेषु पूर्वाह्णे पारणं भवेत् । पारणान्तं व्रतं ज्ञेयं व्रतान्ते द्विजभोजनम् । असमाप्ते व्रते पूर्वे नैव कुर्याद्व्रतान्तरम् इति स्मृतेः ।

பாரணத்தின் நிர்ணயம்

முன் சொன்ன ப்ரகாரமாய் விதிக்கப்பட்ட திதியில் உபவாஸத்தைச் செய்து, மறு நாள் முற்பகலில் பாரணத்தைச் செய்து, உபவாஸத்தை முடிக்கவேண்டும். " உபவாஸங்கள் எல்லாவற்றிலும் முற்பகலில் பாரணம் விதிக்கப்படுகிறது. வ்ரதம் என்பது பாரணத்தை முடிவில் உள்ளதாக அறியத் தகுந்தது. வ்ரதத்தின் முடிவில் ப்ராம்ஹணர்களைப் புஜிப்பிக்கவேண்டும். முந்திய வ்ரதம் முடியாமல் இருக்கும்பொழுது மற்றொரு வ்ரதத்தைச் செய்யக்கூடாது", என்று ஸ்ம்ருதியிருப்பதால்,

एवं सामान्यतः पूर्वाह्ने पारणप्राप्तौ क्वचिदपवादः स्मर्यते - अष्टम्यामथ रोहिण्यां न कुर्यात् पारणं क्वचित्। तिथिरष्टगुणं हन्ति नक्षत्रं तु चतुर्गुणम्। तस्मात् प्रयत्नतः कुर्यात्तिथिभान्ते च पारणम् इति।

இவ்விதம் பொதுவாக முற்பகலில் பாரணம் என்பது கிடைத்திருக்கும்பொழுது, சிலவிடத்தில் மறுப்பு சொல்லப்படுகிறது. " அஷ்டமியிலும் ரோஹிணியிலும் பாரணத்தை ஒரு பொழுதும் செய்யக்கூடாது. திதியானது எட்டு மடங்கு பலனைப் கெடுத்துவிடும். நக்ஷத்ரமோவெனில் நாலு மடங்கு பலனைப் போக்கிவிடும். ஆகையால் முயற்சியுடன் திதியினுடைய முடிவிலும் நக்ஷத்ரத்தின் முடிவிலும் பாரணையைச் செய்யவேண்டும், என்று.

नारदीये — तिथिनक्षत्रसंयोगे उपवासो यदा भवेत्। पारणं तु न कर्तव्यं यावन्नैकस्य संक्षयः। सांयोगिके व्रते प्राप्ते यत्रैकोऽपि वियुज्यते। तत्रैव पारणं कुर्यादेवं वेदविदो विदुः इति । ब्रह्मकैवर्ते — सर्वेष्वोपवासेषु दिवा पारणमिष्यते । अन्यथा पुण्यहानिः स्याद्दते धारणपारणम् इति । स्मृत्यन्तरे — तिथ्यृक्षयोर्यदा छेदो नक्षन्त्रान्तमथापि वा। अर्धरात्रेऽथवा कुर्यात् पारणं च परेऽहनि इति।

நாரதீயத்தில்:- திதி நக்ஷத்ரம் இரண்டும் சேர்ந்த இடத்தில் உபவாஸம் எப்பொழுது ஏற்படுகிறதோ அப்பொழுது ஏதாவது ஒன்று முடிவதற்குள் பாரணையைச் செய்யக்கூடாது. இரண்டு சேர்ந்துள்ள வ்ரதம் அனுஷ்டிக்கப்படும்பொழுது அவைகளுள் ஒன்று எப்பொழுது முடிகிறதோ அப்பொழுதே பாரணத்தைச் செய்யவேண்டும். இவ்விதம் வேதமறிந்தவர்கள் சொல்லுகின்றனர், என்று ப்ரம்ஹகைவர்த்தத்தில்:- உபவாஸங்கள் எல்லாவற்றிலும் பகலிலேயே பாரணம் விதிக்கப்படுகிறது. பாரணத்தை விதிப்படி செய்யாவிடில் புண்யத்தின் குறைவு ஏற்படும். அசக்தர்கள் தேஹதாரணத்துக்காகச் செய்யும் பாரணத்தைத் தவிர்த்து, என்று. ஓர் ஸ்ம்ருதியில்:- எப்பொழுதாவது திதி நக்ஷத்ரம் இவைகளுக்கு முடிவு, அல்லது நக்ஷத்ரத்தின் முடிவு அர்த்தராத்ரத்தில் ஏற்பட்டால், அப்பொழுது மறு நாளில் பாரணையைச் செய்யவும்.

उपवासदिनादपरेऽहनि दिवसे यद्युभयान्तस्तदा पारणमिति मुख्यः कल्पः । नक्षत्रान्तमित्यनेन एकतरान्तत्वमभिहितम् । सोऽयमनुकल्पः । यदि रात्रौ निशीथादर्वागुभयान्त एकतरान्तो वा भवति, तदा दिवसे मुख्यानुकल्पयोरुभयोरप्यसंभवाद्रात्रौ पारणस्य निषिद्धत्वाच्च तत्राप्युपवासप्रसक्तौ पारणस्य प्रतिप्रसवः क्रियते, अर्धरात्रेऽपि वा कुर्यात् इति । अशक्तस्य तिथिनक्षत्रयो-रुभयोरनुवर्तमानयोरपि प्रातर्देवं संपूज्य क्रियमाणं पारणं नैव दुष्यति, जयन्त्यां पूर्वविद्धाया मुपवासं समाचरेत्। तिथ्यन्ते वोत्सवान्ते वा व्रती कुर्वीत पारणम् इति वचनात्।

உபவாஸத்திற்கு மறு நாளில் திதி நக்ஷத்ரங்கள் இரண்டுக்கும் முடிவானுல் அப்பொழுது பாரணம் என்பது முதல் பக்ஷம். நக்ஷத்ரத்தின் முடிவு என்பதனுல், ஏதாவது ஒன்றுக்கு முடிவு என்பது சொல்லியதாகிறது. இவ்விதம்

சொல்லியது இரண்டாவது பக்ஷம். இரவில் அர்த்தராத்ரத்திற்கு முன் திதி நக்ஷத்ரம் இரண்டிற்கும் முடிவு, அல்லது ஒன்றிற்கு முடிவு ஏற்படுமாகில், அப்பொழுது பகலில் முக்யபக்ஷம் இரண்டாவது பக்ஷம் என்ற இரண்டும் ஸம்பவிக்காததாலும், இரவில் பாரணம் நிஷேதிக்கப்பட்டிருப்பதாலும், மறு இரவிலும் உபவாஸம் ப்ராப்தமாயிருக்கும் பொழுது பாரணத்திற்கு ப்ரதி ப்ரஸவம்(மறு விதி) சொல்லப்படுகிறது, "மறு நாள் அர்த்தராத்ரத்திலாவது செய்யவும்" என்று. சக்தியற்றவனுக்கு திதி நக்ஷத்ரங்கள் இரண்டும் சேர்ந்திருந்தாலும் ப்ராதக் காலத்தில் தேவதையைப் பூஜித்துச் செய்யப்படும் பாரணம் தோஷமுள்ளதாகாது. "முன் நக்ஷத்ரத்துடன் கூடிய ஜயந்தியில் உபவாஸத்தை அனுஷ்டிக்கவேண்டும். திதியின் முடிவிலாவது, உத்ஸவத்தின் முடிவிலாவது வ்ரதத்தை அனுஷ்டிப்பவன் பாரணத்தைச் செய்யவேண்டும்" என்ற வசனம் இருப்பதால்.

## नवमीनिर्णयः

अथ नवमी निर्णीयते । सा च दुर्गासरस्वतीव्रतादौ पूर्वविद्धैव ग्राह्या । अष्टम्या नवमी युक्ता कर्तव्या फलकाङ्क्षिभिः । न कुर्यात् नवमीं तात दशम्या तु कदाचन इति स्मरणात् ॥ (महानवम्यां तु- आश्वयुक् शुक्लनवमी तथा नक्तं चतुर्दशी । जयायुक्ता न कर्तव्या पूर्णायुक्ता प्रशस्यते ॥ जया - अष्टमी । पूर्णा - दशमी ।)

### நவமீ நிர்ணயம்:-

இனி நவமீ நிர்ணயிக்கப்படுகிறது. அது துர்க்கா ஸரஸ்வதீ வ்ரதம் முதலியதில் முன் திதியுடன் கூடியதே க்ரஹிக்கத் தகுந்தது. "பலனை விரும்புகிறவர்கள் அஷ்டமியுடன் கூடிய நவமியை அனுஷ்டிக்கவேண்டும். தசமியுடன் கூடிய நவமியை ஒரு நாளும்

அனுஷ்டிக்கக்கூடாது., என்று ஸ்ம்ருதி இருப்பதால். ("ஆச்வயுஜ மாஸத்தில் சுக்லபக்ஷ நவமியும் நக்த சதுர்த்தசியும் ஜயாதிதியுடன் கூடியதாகில் க்ரஹிக்கத்தக்க தல்ல. பூர்ணாதிதியுடன் கூடியதாகில் க்ரஹிக்கத்தக்கது" ஜயா- அஷ்டமீ. பூர்ணா-தசமீ.)

### श्रीरामनवमीनिर्णयः ।

श्रीरामनवमीव्रतमुक्तमगस्त्यसंहितायाम् — श्रीरामनवमी प्रोक्ता कोटिसूर्यग्रहाधिका । तस्मिन् दिने महापुण्ये राममुद्दिश्य भक्तितः । यत् किञ्चित् क्रियते कर्म तद्भवक्षयकारणम् । उपोषणं जागरणं पितॄनुद्दिश्य तर्पणम् । तस्मिन् दिने तु कर्तव्यं ब्रह्मावाप्तिमभीप्सुभिः इति ।

### ஸ்ரீ ராம நவமீ நிர்ணம்

அகஸ்த்ய ஸம்ஹிதையில் ஸ்ரீ ராம நவமீ வ்ரதம் சொல்லப்பட்டுள்ளது. ஸ்ரீ ராம நவமீ என்பது கோடி ஸூர்யக்ரஹணத்திற்கு அதிகமாகியதாய்ச் சொல்லப்பட்டுள்ளது. மஹா புண்யமாகிய அந்தத் தினத்தில் ஸ்ரீ ராமனைக் குறித்துப் பக்தியுடன் எந்தெந்தக் கார்யம் செய்யப்படுகிறதோ அது ஸம்ஸாரத்தை (ஜனன மரணத் தொடரை) அழிப்பதற்குக் காரணமாகும். உபவாஸம், நித்ரையின்மை, பித்ருக்களை உத்தேசித்துத் தர்ப்பணம் செய்வது, இவைகளை அத்தினத்தில் ப்ரம்ஹ ப்ராப்தியை விரும்பியவர்கள் செய்யவேண்டும்.

तत्रोपवासो जयन्तीवत् नित्यकाम्यरूपः । द्वैरूप्यं च तस्य द्विविधप्रमाणबलादवसीयते । उपवास विधिवाक्येषु नित्यशब्द-सदाशब्दादीनां नित्यत्वसाधकानां श्रवणान्नित्यत्वसिद्धिः । तानि च साधकानि सङ्ग्रहकारेण संगृहीतानि, नित्यं सदा यावदायुर्न कदाचिदतिक्रमेत् । इत्युक्त्वाऽतिक्रमे दोषश्रुतेरत्यागचोदनात् । फलाश्रुतेर्वीप्सया च तन्नित्यमिति कीर्तितम् इति ।

அதில் உபவாஸம் க்ருஷ்ண ஜயந்தியில்போல் நித்ய காம்யருபமாயுள்ளது. அது இரண்டுவிதம் என்பதும் இருவிதமான சாஸ்த்ர பலத்தால் நிச்சயிக்கப்படுகிறது. உபவாஸத்தை விதிக்கும் வசனங்களில் உள்ள நித்யத்வத்தை ஸாதிப்பதான நித்ய ஸதா என்ற சப்தம் முதலியவைகள் கேட்கப்படுவதால் நித்யத்வம் ஸித்திக்கின்றது. அந்த ஸாதக பதங்களும் ஸங்க்ரஹகாரரால் சேர்க்கப்பட்டுள்ளன- "நித்யம், ஸதா, ஆயுளுள்ள வரையில், ஒரு பொழுதும் செய்யாமலிருக்கக்கூடாது என்று சொல்லியும், செய்யாமல் இருந்தால் தோஷச்ரவணமும், விடக்கூடாது என்று விதியும், பலனைச் சொல்லாமல் இருப்பதும், இருமுறை சொல்வதும் இவையெல்லாம் எதைச் சொல்லுகிறதோ அது நித்யமெனப்படுகிறது" என்று.

अत्र नित्यादिपदान्यभिधीयन्ते । अकरणे प्रत्यवायश्च स्मर्यते अगस्त्यसंहितायाम् — नित्यमेव तु कर्तव्यं श्रीरामनवमीव्रतम् । चैत्रे मासि नवम्यां तु शुक्लायां रघुनन्दनः । प्रादुरासीत् पुरा ब्रह्मन् परं ब्रह्मैव केवलम् । तस्मिन् दिने तु कर्तव्य मुपवासव्रतं सदा । प्राप्ते श्रीरामनवमीदिने मर्त्यो विमूढधीः । उपोषणं न कुरुते कुम्भीपाकेषु पच्यते इति ।

இவ்விடத்தில் நித்யம் முதலிய பதங்கள் சொல்லப் படுகின்றன. செய்யாவிடில் பாபமும் சொல்லப்படுகிறது, அகஸ்த்ய ஸம்ஹிதையில்- ஸ்ரீ ராம நவமீ வ்ரதத்தை நித்யம் (எப்பொழுதும்) செய்யவேண்டும். சைத்ர மாஸத்தில் சுக்லபக்ஷ நவமியில் பரப்ரம்ஹமே ஸ்ரீ ராமனாக முன்பு அவதரித்தது. ஆகையால் அத்தினத்தில் உபவாஸ வ்ரதத்தை எப்பொழுதும் அனுஷ்டிக்கவேண்டும். ஸ்ரீ ராம நவமீ தினம் ப்ராப்தமாக இருக்கும்பொழுது மூட புத்தியாகிய மனிதன் உபவாஸம் செய்யாவிடில் கும்பீபாக நரகங்களில் பாகத்தை அடைகிறான்.

स्मृत्यन्तरेऽपि — यस्तु रामनवम्यां तु भुङ्क्ते मोहाद्विमूढधीः। कुम्भीपाकेषु घोरेषु पच्यते नात्र संशयः इति । काम्यत्वं च फलश्रवणादवसीयते । तथा च तत्रैव— कुर्याद्रामनवम्यां य उपोषणमतन्द्रितः । न मातुर्गर्भमाप्नोति स वै रामो भवेत् स्वयम् । तसमात् सर्वात्मना सर्वे कृत्वैव नवमीव्रतम् । मुच्यन्ते सर्वपापेभ्यो यान्ति ब्रह्म सनातनम् इति ।

**மற்றொரு ஸ்ம்ருதியிலும்:-** *புத்தியற்ற எவன் ஸ்ரீ ராம நவமியில் அறியாமையால் போஜனம் செய்கிறானோ, அவன் கோரமான கும்பீபாக நரகங்களில் பாகத்தை யடைகிறான். இவ்விஷயத்தில் ஸம்சயம் இல்லை, என்றுகாம்யத் தன்மையும் பலன் கேட்கப்படுவதால் நிச்சயிக்கப்படுகிறது. அவ்விதமே,* **அதே ஸ்ம்ருதியில்:-** *எந்த மனிதன் சோம்பலில்லாமல் ஸ்ரீ ராம நவமியில் உபவாஸத்தை அனுஷ்டிக்கின்றானோ அவன் தாயின் வயிற்றை அடையமாட்டான். அவன் தானே ஸ்ரீ ராமனாக ஆவான். ஆகையால் எல்லோரும் எவ்விதத்தாலும் ஸ்ரீ ராம நவமீ வ்ரதத்தைச் செய்தால் ஸர்வ பாபங்களினின்றும் விடுபடுகின்றனர். சாச்வதமான ப்ரம்ஹத்தை அடைகின்றனர், என்று*

अन्ये त्वाहुः — व्रतमिदं केवलं नित्यम्, न तु काम्यमपि, पशुपुत्रस्वर्गादिफलस्याश्रवणात् । सन्ध्यामुपासते ये तु सततं संशितव्रताः । विधूतपापास्ते यान्ति ब्रह्मलोकं सनातनम् इति फलश्रवणेऽपि सन्ध्योपासनस्य यथा नित्यत्वम्, तथा पापक्षयद्वारा मोक्षार्थस्यास्य नित्यत्वम् इति । अत्र मध्याह्नव्यापिनी तिथिर्ग्राह्या । झषं पूषणि सम्प्राप्ते लग्ने कर्कटकाह्वये । आविरासीत् स्वकलया कौसल्यायां परः पुमान् । चैत्रशुद्धा तु नवमी पुनर्वसु युता यदि । सैव मध्याह्नयोगेन महापुण्यतमा भवेत् इति स्मृतेः ।

மற்றவரோவெனில் இவ்விதம் சொல்லுகின்றனர். இந்த வ்ரதம் நித்யம் ஒன்றேயாகும். காம்யம் அன்று. பசு, புத்ரன், ஸ்வர்க்கம் முதலிய பலன்கள் கேட்கப்படாததால். "எவர்கள் தீவ்ரமான நியமமுடையவர்களாய் எப்பொழுதும் ஸந்த்யா வந்தனத்தைச் செய்கின்றனரோ அவர்கள் பாபங்களைத் தொலைத்துச் சாச்வதமான ப்ரம்ஹலோகத்தை அடைகின்றனர்" என்று பலன் கேட்கப்பட்டாலும், ஸந்த்யோபாஸனம் எப்படி நித்யமோ அவ்விதம் பாபக்ஷயமூலமாய் மோக்ஷத்திற்காக ஆகின்ற இதற்கும் நித்யத்தன்மை உள்ளது என்று. இதில் மத்யாஹ்னத்தில் வ்யாப்தியுள்ள திதி க்ரஹிக்கத் தகுந்தது. "ஸூர்யன் மீன ராசியை அடைந்திருக்கும்பொழுது கடகம் என்னும் லக்னத்தில், தன்னுடைய அம்சத்தால் கௌஸல்யையினிடத்தில் பரமபுருஷன் ஆவிர்ப்பவித்தார். சைத்ர மாதத்திய சுக்லபக்ஷ நவமீ புனர்வஸூ நக்ஷத்ரத்துடன் கூடியதாகில் அதுவே மத்யாஹ்ன கால ஸம்பந்தத்தால் மிகவும் புண்யத்தைக் கொடுப்பதாய் ஆகும்" என்று ஸ்ம்ருதி உள்ளது.

यस्मिन् वर्षे पुनर्वसुयोगो नास्ति, तस्मिन् वर्षे केवलनवम्युपोष्या, केवलाऽपि सदोपोष्या नवमीशब्दसङ्ग्रहात् इति वचनात् । सा च द्विविधा । शुद्धा विद्धा चेति । सूर्योदयमारभ्य प्रवर्तमाना शुद्धा । त्रिहूर्तया तदधिकया वा अष्टम्या युक्ता विद्धा । तत्र शुद्धा त्रिविधा । शुद्धाधिका, शुद्धसमा, शुद्धन्यूना चेति । अत्र नास्ति संशयः, दिनान्तरे मध्याह्नव्याप्त्यभावात् । सा च पुनः प्रत्येकं द्विविधा । पुनर्वसुनक्षत्रयुक्ता तद्रहिता चेति । तत्र पुनर्वसुयुक्ता शुद्धाधिका त्रिविधा । पूर्वेद्युरेव नक्षत्रयुक्ता, परेद्युरेव तद्युक्ता, उभयत्र तद्युक्ता चेति । तत्र प्रथमद्वितीययोर्नक्षत्रयोगो नियामकः, पुनर्वस्वृक्षसंयोगः स्वल्पोऽपि यदि दृश्यते । चैत्रशुक्लनवम्यां तु सा तिथिस्सर्वकामदा इति स्मृतेः । तृतीये तु मध्याह्ने पुनर्वसुयुक्तदिनं ग्राह्यम् ।

எந்த வர்ஷத்தில் புனர்வஸு நக்ஷத்ர ஸம்பந்தம் இல்லையோ அந்த வர்ஷத்தில் தனித்த நவமி உபவாஸத்திற்கு அர்ஹமாகும். "புனர்வஸு ஸம்பந்தமில்லாத நவமியும் உபவாஸத்திற்கு அருஹமாகும்; நவமீ சப்தம் கேட்கப்படுவதால் என்ற வசனத்தால். அந்த நவமீ இரண்டு விதமாகும், சுத்தா, வித்தா என்று. ஸூர்யோதயம் முதற்கொண்டு ப்ரவ்ருத்தித்துள்ளது, சுத்தா. மூன்று முஹூர்த்தங்கள் அல்லது அதைவிட அதிக காலம் உள்ள அஷ்டமியுடன் கூடியது வித்தா எனப்படும். அவைகளுள் சுத்தா மூன்று விதமுள்ளது. சுத்தாதிகா, சுத்தஸமா, சுத்த ந்யூநா என்று. இம்மூன்றிலும் ஸம்சயமில்லை. மறுநாளில் மத்யாஹ்னத்தில் வ்யாப்தியில்லாததால். அதுவும் மறுபடி ஒவ்வொன்றும் இரண்டு விதமாக உள்ளது, புனர்வஸு நக்ஷத்ரத்துடன் கூடியது, அத்துடன் கூடாதது என்று. அவைகளுள் புநர்வஸு நக்ஷத்ரத்துடன் கூடிய சுத்தாதிகா என்பது மூன்று விதம், முதல் நாளிலேயே நக்ஷத்ரத்துடன் கூடியது, மறுநாளில் மட்டில் அத்துடன் கூடியது, இரண்டு நாட்களிலும் அத்துடன் கூடியது என்று. அவைகளுள் முதல் இரண்டு பக்ஷங்களுக்கும் நக்ஷத்ரத்தின் ஸம்பந்தம் நிச்சயிப்பதற்குக் காரணம்". புனர்வஸு நக்ஷத்ரத்தின் ஸம்பந்தம் சைத்ரசுக்ல நவமியில் ஸ்வல்பமாவது காணப்பட்டால் அத்திதி எல்லாக் காமங்களையும் கொடுக்கக்கூடியது" என்று ஸ்ம்ருதி இருப்பதால். மூன்றுவது பக்ஷத்திலோவெனில் மத்யாஹ்ந காலத்தில் புனர்வஸு நக்ஷத்ரத்துடன் கூடிய தினத்தை க்ரஹிக்கவேண்டும்.

तथाऽगस्त्यः — चैत्रशुद्धा तु नवमी पुनर्वसुयुता यदि । सैव मध्याह्नयोगेन महापुण्यतमा भवेत् इति । एवं विद्धायामपि कृष्णाष्टम्यादिवत् पक्षभेदो निर्णयश्च द्रष्टव्यः । विद्धानिषेधस्तु वैष्णवविषयः, नवमी चाष्टमीविद्धा त्याज्या विष्णुपरायणैः । तदन्येषां तु सर्वेषां व्रतं तत्रैव निश्चितम् इति स्मृतेः ।

அகஸ்த்யர்:-சைத்ர மாஸத்திய சுக்லபக்ஷ நவமீ புனர்வஸு⁻வுடன் மத்யாஹ்ன காலத்தில் சேர்ந்திருந்தால் மிகவும் புண்யத்தைக் கொடுப்பதாக ஆகும்; என்று. இவ்விதம் வித்தையான நவமியிலும் க்ருஷ்ணாஷ்டமியில் போல பக்ஷங்களின் பேதமும் நிர்ணயமும் அறியத்தக்கன. வித்தையான நவமியின் நிஷேதம் வைஷ்ணவர்களைப் பற்றியது. "அஷ்டமியுடன் கூடிய நவமி வைஷ்ண வர்களால் வர்ஜிக்கத் தகுந்தது. வைஷ்ணவர்களைத் தவிர்த்த மற்றவர்கள் எல்லோருக்கும் வித்தமான நவமியிலேயே வ்ரதம் என்பது நிச்சயம்'' என்ற ஸ்ம்ருதியிருப்பதால்.

## दशावतारकालाः

दशावतारकालास्सङ्ग्रहकारेण संगृहीताः । चैत्रे मास्यसिते पक्षे त्रयोदश्यां तिथौ विभुः । उदभून्मत्स्यरूपेण रक्षार्थमवनेर्हरिः । ज्येष्ठमासे तथा कृष्णद्वादश्यां भगवानजः । मन्दरं पृष्ठतः कृत्वा कूर्मरूपी हरिर्दधौ । चैत्रकृष्णे तु पञ्चम्यां जज्ञे नारायणः स्वयम् । भुवं वराहरूपेण शृङ्गाभ्यामुदधेर्जलात् । वैशाखे शुक्लपक्षे तु चदुर्दश्यामिनेऽस्तगे । उद्बभूवासुरद्वेषी नृसिंहो भक्तवत्सलः । मासि भाद्रपदे शुक्लद्वादश्यां वामनो विभुः । अदित्यां काश्यपाज्जज्ञे नियन्तुं बलिमोजसा । मार्गशीर्षे द्वितीयायां कृष्णपक्षे तु भार्गवः । दुष्टक्षत्रियविद्वेषी रामोऽभूत्तापसाग्रणीः । चैत्रशुक्लनवम्यां तु मध्याह्ने रघुनन्दनः । दशाननवधाकांक्षी जज्ञे रामः स्वयं हरिः । वैशाखे शुक्लपक्षे तु तृतीयायां हलायुधः । सङ्कर्षणो बलो जज्ञे रामः कृष्णाग्रजो हरिः । मासि तु श्रावणेऽष्टम्यां निशीथे कृष्णपक्षके । प्राजापत्यर्क्षसंयुक्ते कृष्णं देवक्यजीजनत् । मासि भाद्रपदे शुक्लद्वितीयायां जनार्दनः । म्लेच्छाक्रान्ते कलावन्ते कल्किरूपो भविष्यति । अवतारदिने पुण्ये हरिमुद्दिश्य भक्तितः । उपवासादि यत् किञ्चित्तदानन्त्याय कल्पते इति ।

## தசாவதாரங்களின் காலங்கள்

தசாவதார காலங்கள் சொல்லப்பட்டுள்ளன, ஸங்க்ரஹகாரரால்:- சைத்ர மாஸத்தில் க்ருஷ்ணபக்ஷத்தில் த்ரயோதசி திதியில் விஷ்ணுவானவர் பூமியை ரக்ஷிப்பதற்காக மத்ஸ்ய ரூபமாக ஆவிர்ப்பவித்தார். ஜ்யேஷ்ட மாஸத்தில் க்ருஷ்ணபக்ஷத்தில் த்வாதசியில் விஷ்ணு கூர்ம (ஆமை) ரூபம் தரித்து ஸமுத்ரத்தில் மந்தர மலையை முதுகில் தாங்கி நின்றார். சைத்ரமாஸ க்ருஷ்ணபக்ஷ பஞ்சமியில் நாராயணன் வராஹரூபியாய் ஆவிர்ப்பவித்தார். பூமியை ஜலத்தினின்றும் கொம்புகளால் வெளியேற்றினார். வைசாக சுக்லபக்ஷ சதுர்த்தசியில் ஸூர்யாஸ்தமய காலத்தில் பக்தர்களிடம் அன்புடையவனும், அஸுரர்களை த்வேஷிப்பவனும் ஆகிய நாராயணன் ந்ருஸிஹ்மனாய் ஆவிர்ப்பவித்தார். பாத்ரபத மாஸத்தில் சுக்லபக்ஷ த்வாதசியில் மஹாவிஷ்ணு பலி சக்ரவர்த்தியைப் பராக்ரமத்தால் அடக்குவதற்காக, கச்யப ப்ரஜாபதியினிடமிருந்து அதிதிதேவியினிடம் வாமன ரூபியாக அவதரித்தார். மார்க்கசீர்ஷ மாஸத்தில் க்ருஷ்ணபக்ஷ த்விதீயையில் மஹாவிஷ்ணு துஷ்டர்களான க்ஷத்ரியர்களுக்கு சத்ருவாயும் முனிவர்களுக்குள் சிறந்தவருமாகிய பரசுராமனாக அவதரித்தார். சைத்ர சுக்லபக்ஷ நவமியில் மத்யாஹ்ன காலத்தில் மஹாவிஷ்ணு பத்துத் தலையுள்ள ராவணனைக் கொல்ல விரும்பியவராய் ரகுகுலத்தில் ராமனாகத் தாமே பிறந்தார். வைசாக சுக்ல பக்ஷத்ருதீயையில் மஹாவிஷ்ணு கலப்பையை ஆயுதமாயுடையவராகிய பலராமனாய் க்ருஷ்ணனுக்குத் தமையனாய் ஆவிர்ப்பவித்தார். ச்ராவண மாஸத்தில் க்ருஷ்ணபக்ஷ அஷ்டமியில் ரோஹிணீ நக்ஷத்ரத்துடன் கூடிய அர்த்தராத்ரத்தில் தேவகியானவள் க்ருஷ்ணனைப் பெற்றாள். பாத்ரபத மாஸத்தில் சுக்ல பக்ஷத்விதீயையில் மஹாவிஷ்ணு ம்லேச்சர்களால் ஆக்ரமிக்கப்பட்ட கலியுகத்தின் முடிவில் கல்கி ரூபியாய்

அவதரிக்கப்போகிருர். புண்யமான அவதார தினத்தில் விஷ்ணுவைக் குறித்துப் பக்தியுடன் உபவாஸம் முதலிய எது செய்யப்படுமோ அது அல்பமாயினும் அனந்தமாக ஆகும்.

## दशमीनिर्णयः

अथ दशमी निर्णीयते । तस्याश्च न तिथ्यन्तरवत् हेयोपादेयविभागोऽस्ति । तथा चाङ्गिराः — संपूर्णा दशमी कार्या परया पूर्वयाऽथ वा । युक्ता न दूषिता यस्मात्तिथिस्सा सर्वतोमुखी इति । यथा संपूर्णा तिथिर्दोषरहिता तथा पूर्वविद्धा, परविद्धा चेत्यर्थः । अत्र व्यवस्थामाह शङ्खः— शुक्लपक्षे तिथिर्ग्राह्या यस्यामभ्युदितो रविः । कृष्णपक्षे तिथिर्ग्राह्या यस्यामस्तमितो रविः इति । नवमी दशमी चैव नोपोष्या परसंयुता इति वचनं कृष्णपक्षविषयतया योजनीयम् ।

### தசமீ நிர்ணயம்.

இனி தசமீ நிர்ணயிக்கப்படுகிறது. அதற்கு மற்றத் திதிகளுக்குப்போல் விடக்கூடியது, க்ரஹிக்கக்கூடியது என்ற பிரிவு இல்லை. அவ்விதமே, அங்கிரஸ்:- தசமீ முன் திதியுடன் கூடியிருந்தாலும் பின் திதியுடன் கூடியிருந்தாலும் ஸம்பூர்ணமாயுள்ளது க்ரஹிக்கத் தகுந்தது. அத்திதி ஸர்வதோ முகியானதால் தூஷிதமன்று என்று. ஸம்பூர்ண திதியானது எப்படி தோஷமில்லாததோ அப்படியே முன் திதியுடன் கூடியிருந்தாலும் பின் திதியுடன் கூடியிருந்தாலும் அது தோஷமுள்ளதன்று, என்பது பொருள். இவ்விஷயத்தில் வ்யவஸ்தையைச் சொல்லுகிருர், சங்கர்:- சுக்ல பக்ஷத்தில் எந்தத் திதியில் ஸூர்யன் உதயமாகின்ருனே அத்திதியை க்ரஹிக்க வேண்டும். க்ருஷ்ண பக்ஷத்தில் எந்தத் திதியில் ஸூர்யன் அஸ்தமிக்கின்ருனே அந்தத்திதி க்ராஹ்யமாகும். ''நவமியும் தசமியுமு மறு திதியுடன் கூடியிருந்தால்

உபவாஸத்திற்கு யோக்யமல்ல'' என்ற வசனம் க்ருஷ்ண பக்ஷத் திதியைப் பற்றியதாய்க் சேர்க்கவேண்டும்.

### एकादशीनिर्णयः।

अथैकादशी निर्णीयते । तत्रोपवासो नित्यकाम्यरूपः । उपवासविधिषु नित्यत्वसाधकानां नित्यादिपदानां श्रवणात् सायुज्यादिफलश्रवणाच्च । नित्यशब्द उदाहृतो गारुडपुराणे— उपोष्यैकादशी नित्यं पक्षयोरुभयोरपि इति।

### ஏகாதசீ நிர்ணயம்

*இனி ஏகாதசீ நிச்சயிக்கப்படுகிறது. அதில் உபவாஸம் நித்ய காம்யரூபமாய் உள்ளது. உபவாஸத்தை விதிக்கும் வசனங்களில் நித்சயத்தன்மையை ஸாதிக்கும் நித்யம் முதலிய பதங்கள் கேட்கப்படுவதாலும், மோக்ஷம் முதலிய பலன்கள் கேட்கப்படுவதாலும். நித்ய சப்தம் சொல்லப்பட்டுள்ளது, காருட புராணத்தில்:- ஏகாதசீ இரண்டு பக்ஷங்களிலும் 'நித்யம்' (எப்பொழுதும்) உபவாஸத்திற்கு யோக்யமாகியது.*

सदाशब्द उक्तस्सनत्कुमारसंहितायाम् — एकादशी सदोपोष्या पक्षयोः शुक्लकृष्णयोः इति। एवमन्यान्यपि वचनानि - उपोष्यैकादशी राजन् यावदायुः सुवृत्तिभिः । न करोति हि यो मूढ एकादश्यामुपोषणम्। स नरो नरकं याति रौरवं तमसावृतम्। समादाय विधानेन द्वादशीव्रतमुत्तमम्। तस्य भङ्गं नरः कृत्वा रौरवं नरकं व्रजेत्। मातृहा पितृहा चैव भ्रातृहा गुरुहा तथा । एकादश्यां तु यो भुङ्क्ते पक्षयोरुभयोरपि इत्यादि नित्यत्व साधकानि द्रष्टव्यानि।

*'ஸதா' என்ற சப்தம் சொல்லப்பட்டுள்ளது, ஸநத் குமார ஸம்ஹிதையில்:- சுக்ல க்ருஷ்ண பக்ஷங்கள் இரண்டிலும் ஏகாதசீ ஸதா (எப்பொழுதும்) உபவாஸத்திற்கு யோக்யமாகியது. இவ்விதம் மற்ற*

வசனங்களும்:- '' ஓ அரசனே! நல்ல சீலமுள்ளவர்கள் ஆயுளுள்ள வரையில் ஏகாதசியில் உபவாஸத்தை அனுஷ்டிக்கவேண்டும். எந்த மூடன் ஏகாதசி உபவாஸத்தை அனுஷ்டிக்கவில்லையோ அம்மனிதன் இருள் சூழ்ந்த ரௌரவம் எனும் நரகத்தை அடைவான். விதிப்படி சிறந்ததான த்வாதசீ வ்ரதத்தை ஆரம்பித்து, அந்த வ்ரதத்திற்குப் பங்கம் செய்தால் ரௌரவ நரகத்தை அடைவான். இரண்டு பக்ஷங்களிலும் ஏகாதசியில் எவன் புஜிக்கின்ருனோ அவன் மாத்ருஹத்தி செய்தவன், பித்ருஹத்தி செய்தவன், ப்ராத்ருஹத்தி செய்தவன், குருஹத்தி செய்தவன் ஆவான்''. இவை முதலியவாகிய நித்யத் தன்மையை ஸாதிக்கக்கூடிய வசனங்கள் அறியத்தகுந்தவை.

काम्यत्वसाधकं फलं च श्रूयते विष्णुरहस्ये — यदीच्छेद्विष्णुसायुज्यं सुखं संपदमात्मनः । एकादश्यां न भुञ्जीत पक्षयोरुभयोरपि इति । स्कान्देऽपि — यदीच्छेद्विपुलान् भोगान्मुक्तिं चात्यन्तदुर्लभाम् । एकादश्यामुपवसेत् पक्षयोरुभयोरपि इति । नारदोऽपि — एकादशीसमं किञ्चित् पापत्राणं न विद्यते । स्वर्गमोक्षप्रदा ह्येषा राज्यपुत्रप्रदायिनी । सुकलत्रप्रदा ह्येषा शरीरारोग्यदायिनी इति ।

காம்யத்தன்மையை ஸாதிக்கக்கூடிய பலனும் கேட்கப்படுகிறது, விஷ்ணு ரஹஸ்யத்தில்:- மனிதன் விஷ்ணு ஸாயுஜ்யம், ஸுகம், ஸம்பத் இவைகளைத் தனக்கு விரும்பினல் இரண்டு பக்ஷங்களிலும் ஏகாதசியில் புஜிக்கக்கூடாது. ஸ்காந்தத்திலும்:- அதிகமான போகங்கள், கிடைப்பதற்கு மிகவும் அரியதாகிய மோக்ஷம் இவைகளை விரும்புவாளுகில் இரண்டு பக்ஷங்களிலும் ஏகாதசியில் உபவாஸம் இருக்கவேண்டும். நாரதரும்:- ஏகாதசிக்கு ஸமமாகிய ஆபத்தினின்றும் காக்கும் வஸ்து ஒன்றும் இல்லை. இது ஸ்வர்க்கம் மோக்ஷம் இவைகளைக்

கொடுப்பதும், ராஜ்யம் புத்ரர்கள் இவைகளைக் கொடுப்பதும், நல்ல பார்யையைக் கொடுப்பதும், சரீரத்திற்கு ஆரோக்யத்தைக் கொடுப்பதும் ஆகியது அல்லவா.

कूर्मपुराणेऽपि — यदीच्छेद्विष्णुसायुज्यं श्रियं सन्ततिमात्मनः । एकादश्यां न भुञ्जीत पक्षयोरुभयोरपि इति । तदेवं नित्यादिशब्दश्रवणान्नित्यत्वम्, फलश्रवणात् काम्यत्वं च सिद्धम् । उक्तं च कालादर्शे — सर्वस्मृतिपुराणेतिहासादिषु विनिश्चितम् । एकादशीव्रतं तच्च नित्यं काम्यमिति द्विधा इति ।

**கூர்ம புராணத்திலும்:-** மனிதன் தனக்கு விஷ்ணுவின் ஸாயுஜ்யம், ஸம்பத், ஸந்ததி இவைகளை விரும்பினால், இரண்டு பக்ஷங்களிலும் ஏகாதசியில் புஜிக்கக்கூடாது. ஆகையால், இவ்விதம் நித்யம் முதலிய சப்தங்கள் கேட்கப்படுவதால் நித்யத்தன்மையையும் பயன்கள் கேட்கப்படுவதால் காம்யத்தன்மையும் ஸித்தித்துள்ளன. **காலாதர்சத்தில்:-** ஸ்ம்ருதி, புராணம், இதிஹாஸம் எல்லாவற்றிலும் ஏகாதசீ வ்ரதம் நிச்சயிக்கப்பட்டுள்ளது. அது நித்யம் காம்யம் என்று இருவிதமுள்ளது.

सर्वासु स्मृतिषु, सर्वेषु पुराणेषु, इतिहासेषु भारतादिषु च एकादशीव्रतं विनिश्चितम् - विशेषेण प्रमितम् । अनेन निर्मूलत्वभ्रान्त्या ये मूढास्सन्दिहते निरस्तास्ते वेदितव्याः । स्मृतयस्तावदुदाह्रियन्ते । विष्णुस्मृतौ — एकादश्यां न भुञ्जीत कदाचिदपि मानवः इति । कात्यायनः — एकादश्यामुपवसेत् पक्षयोरुभयोरपि इति । कण्वः — एकादश्यामुपवसेन्न कदाचिदतिक्रमेत् इति ।

எல்லா ஸ்ம்ருதிகளிலும், எல்லாப் புராணங்களிலும், இதிஹாஸங்களிலும், பாரதம் முதலியவைகளிலும் ஏகாதசீ வ்ரதம் மதிக்கப்பட்டுள்ளது, விசேஷமாக

விதிக்கப்பட்டுள்ளது. ஆகையால் ஏகாதசீ வ்ரதத்திற்கு மூலம் இல்லை என்ற ப்ரமத்தால் எந்த மூடர்கள் ஸந்தேகப்படுகின்றனரோ அவர்கள் தள்ளப்பட்டவர்களாய் அறியத்தகுந்தவர்கள். ஸ்ம்ருதி வசனங்கள் உதாஹரிக்கப்படுகின்றன. விஷ்ணு ஸ்ம்ருதியில்:- மனிதன் ஒரு பொழுது ஏகாதசியில் புஜிக்கக்கூடாது. காத்யாயனர்- இரண்டு பக்ஷங்களிலும் ஏகாதசியில் உபவாஸம் செய்யவேண்டும்.கண்வர்:- ஏகாதசியில் உபவாஸம் இருக்கவேண்டும். ஒருகாலும் உபவாஸத்தை அதிக்ரமிக்கக்கூடாது.

सनत्कुमारः — निष्कृतिर्मद्यपस्योक्ता धर्मशास्त्रे मनीषिभिः । एकादश्यन्नकामस्य निष्कृतिः क्वापि नोदिता इति । नारदोऽपि — एकादशीसमं किञ्चित् पापत्राणं न विद्यते इति । प्रचेताः — एकादशी विवृद्धा चेच्छुक्ले कृष्णे तथैव च । उत्तरां तु यतिः कुर्यात् पूर्वामुपवसेद्गृही इति । बृहद्वसिष्ठः — द्वादशी घटिकाऽल्पा वा यदि न स्यात्परेऽहनि । दशमी मिश्रिता कार्या महापातकनाशिनी इति ।

ஸனத்குமாரர்:- மத்யபானம் செய்வனுக்கு ப்ராயச்சித்தத்தை அறிந்தவர்கள் தர்ம சாஸ்த்ரத்தில் சொல்லியுள்ளனர். ஏகாதசியில் அன்னத்தை விரும்பியவனுக்கு ப்ராயச்சித்தம் ஓரிடத்திலும் சொல்லப்படவில்லை. நாரதரும்:- ஏகாதசிக்குச்சமமாகிய, பாபத்தினின்றும் காக்கக் கூடியது ஒன்றும் இல்லை. ப்ரசேதஸ்-சுக்ல க்ருஷ்ண பக்ஷங்களில் ஏகாதசீ வ்ருத்தியுள்ளதானுல் ஸந்யாஸீ மறு நாளில் உபவாஸம் இருக்கவேண்டும். க்ருஹஸ்தன் முதல் நாளில் உபவாஸம் இருக்கவேண்டும். ப்ருஹத் வஸிஷ்டர்:- த்வாதசீ மறு நாளில் ஒரு நாழிகையாவது அதற்குக் குறைந்தாவது இல்லாவிடில், தசமியுடன் கூடிய ஏகாதசியை அனுஷ்டிக்கவும். அது மஹா பாதகங்களைப் போக்குவதாகும்.

हारीतोऽपि — त्रयोदश्यां यदा न स्याद्द्वादशीघटिकाद्वयम्। दशम्यैकादशी विद्धा सैवोपोष्या कदाचन इति । ऋश्यशृङ्गः — एकादशी न लभ्येत सकला द्वादशी भवेत्। उपोष्या दशमीविद्धा ऋषिरुद्दालकोऽब्रवीत् इति । काम्योपवासमधिकृत्याङ्गिराः — सायमाद्यन्तयोरह्नोः सायं प्रातश्च मध्यमे । उपवासफलप्रेप्सुर्जह्याद्भुक्तिचतुष्टयम् इति। पुलस्त्यः — एकादश्यां न भुञ्जीत नारी दृष्टे रजस्यपि इति।

ஹாரீதரும்:- *எப்பொழுதாவது த்ரயோதசீ தினத்தில் இரண்டு நாழிகையாவது த்வாதசீ இல்லாவிடில் அப்பொழுது தசமியுடன் கூடிய ஏகாதசீ உபவாஸத்திற்கு அர்ஹமாகும்.* ருச்ய ச்ருங்கர்:- *த்வாதசீ தினத்தில் ஏகாதசி இல்லாவிடில் முழுவதும் த்வாதசியாகவே உள்ளதாகில், அப்பொழுது தசமியுடன் கூடிய ஏகாதசியில் உபவாஸம் செய்யவேண்டும், என்று உத்தாலக ருஷி சொல்லியுள்ளார். காம்ய உபவாஸத்தைத் துவக்கி* அங்கிரஸ்:- *உபவாஸத்தின் பலனை அடைய விரும்பியவன் உபவாஸ தினத்தின் முதல் நாள் மறுநாள் இரவிலும், உபவாஸ தினத்தின் பகலிலும் இரவிலும் ஆக நான்கு வேளைகளிலும் போஜனத்தைச் செய்யக்கூடாது.* தேவலரும்:- *தசமியில் ஒரு வேளை புஜிப்பவனும், மாம்ஸம் ஸ்த்ரீ ஸங்கம் இவைகளை வர்ஜித்தவனும், இரண்டு பக்ஷங்களிலும், ஏகாதசியில் உபவாஸம் இருக்கவேண்டும்.* புலஸ்த்யர்:- *ஏகாதசியில் ஸ்த்ரீ ரஜஸ்வலையாயிருக்கும் பொழுதும் போஜனம் செய்யக்கூடாது.*

गोभिलः — न शङ्खेन पिबेत्तोयं नाश्नीयात्कूर्मसूकरौ । एकादश्यां न भुञ्जीत पक्षयोरुभयोरपि इति। एवमादीनि स्मृतिवचनानि द्रष्टव्यानि । पुराणवचनान्युदाह्रियन्ते । नारदीये वसिष्ठः — एकादशीसमुत्थाने वह्निना पातकेन्धनम्। भस्मतां याति राजेन्द्र अपि

जन्मशतोद्भवम् । नेदृशं पावनं किञ्चिन्नराणां भूप विद्यते । यादृशं पद्मनाभस्य दिनं पातकहानिदम् । न गङ्गा न गया भूप न काशी न च पुष्करम् । न चापि कौरवं क्षेत्रं न देवा न च देविका । यमुना चन्द्रभागा च तुल्या नृप हरेर्दिनात् । अनायासेन राजेन्द्र प्राप्यते वैष्णवं पदम् । प्रसङ्गादथ वा दम्भोल्लाभाद्वाऽथ नराधिप । एकादश्यामनश्नन् यस्सर्व दुःखाद्विमुच्यते इति ।

கோபிலர்:- *சங்கத்தால் ஜலத்தைப் பருகக்கூடாது. ஆமை, பன்றி இவைகளைப் புஜிக்கக்கூடாது. இரண்டு பக்ஷங்களிலும் ஏகாதசியில் போஜனம் செய்யக்கூடாது. இவை முதலிய ஸ்ம்ருதி வசனங்கள் அறியத் தகுந்தவைகள். புராணங்களில் உள்ள வசனங்கள் இனி சொல்லப்படுகின்றன.* நாரதீய புராணத்தில் வஸிஷ்டர் :- *ஓ அரசனே! ஏகாதசியில் உண்டாகிய அக்னியினுல் பாபமாகிய விறகு பல ஜன்மங்களில் உண்டாகியதாயினும் சாம்பல் தன்மையை அடைகிறது. பாபங்களை விலக்குவதாகிய ஹரிதினம் (ஏகாதசீ) எவ்விதமோ இதைப் போன்ற சுத்திகரம் மனிதர்களுக்கு வேறு இல்லை. கங்கை, கயை, காசீ, புஷ்கரம், குருக்ஷேத்ரம், ரேவா (நர்மதை), தேவிகை, யமுனை, சந்த்ரபாகா இவைகளும் ஹரிதினத்துக்கு (ஏகாதசிக்கு) ஸமமாகா. ச்ரமமில்லாமலே வைகுண்டம் அடையப்படுகிறது. ப்ரஸங்கத்தாலே (வேறு கார்யவசத்தாலோ), டம்பத்தாலோ, லோபத்தாலோ எவன் ஏகாதசியில் புஜிக்காமல் இருக்கின்ருனே அவன் எல்லா துக்கங்களினின்றும் விடுபடுகிருன்.*

कूर्मपुराणेऽपि — वदन्तीह पुराणानि भूयोभूयो वरानने । न भोक्तव्यं न भोक्तव्यं सम्प्राप्ते हरिवासरे इति । विष्णुरहस्येऽपि — परमापदमापन्नो हर्षे वा समुपस्थिते । सूतके मृतके चैव न त्यजेद्द्वादशीव्रतम् इति । एवमादीन्युपवासपराणि वचनानि बहूनि सन्ति । तानि विस्तरयान्न लिख्यन्ते ।

உபவாஸம். த்வாதசியுடன் கூடிய ச்ரவண நக்ஷத்ரம் இரண்டு நாளிலும் உதயம் முதல் மூன்று முஹூர்த்தம் வ்யாப்தி யுள்ளதாயிருந்தால், முதல் நாளில் உபவாஸம், அன்று நக்ஷத்ரம் பூர்ணமாயுள்ளது. ச்ரவணத்வாதசியில் உபவாஸம் இருந்தால் த்ரயோதசியி லேயே பாரணம். 'த்ரயோதசியில் பாரணம்' என்று சொல்லியுள்ளது.

एकादश्युपवासे तु हरिवासरवर्जितद्वादश्यां पारणं कार्यम् । चतुर्मुहूर्तं द्वादश्यामाद्यमेकादशीतिथौ । अन्ते चतुर्मुहूर्तं यत्तत् कालं हरिवासरम्। महादोषकरं चान्नं सम्प्राप्ते हरिवासरे । न कार्यं पारणं तत्र विष्णुप्रीणनतत्परैः इति स्मृतेः ।

ஏகாதசீ உபவாஸத்திலோவெனில் ஹரிவாஸரம் இல்லாத த்வாதசியில் பாரணத்தைச் செய்யவேண்டும். ''த்வாதசியில் முதலில் உள்ள நான்கு முஹூர்த்தமும் (எட்டு நாழிகை) ஏகாதசீ திதியின் கடைசியில் நான்கு முஹூர்த்தமும் என்றுள்ள காலம் எதுவோ அது 'ஹரிவாஸரம்' என்று பெயருள்ளது. ஹரிவாஸரம் வந்துள்ள பொழுது புஜிக்கப்படும் அன்னம் மஹாபாபத்தைக் கொடுக்கக்கூடியது. விஷ்ணுபக்தர்கள் அக்காலத்தில் பாரணத்தைச் செய்யக்கூடாது'' என்று ஸ்ம்ருதி இருப்பதால்.

यदा त्रयोदश्यां द्वादश्याः कलाद्वयं कलात्रयं वा सम्भवति, तदा द्वादशीकाल एव पारणं कुर्यात्। तदुक्तं नारदीये — एकादश्याः कला ह्येका द्वादश्यास्तु कलाद्वयम् । द्वादश द्वादशीर्हन्ति त्रयोदश्यां तु पारणम् इति । स्मृत्यन्तरेऽपि— कलाद्वयं त्रयं वाऽपि द्वादशीं न त्वतिक्रमेत्। पारणे मरणे नृणां तिथिस्तात्कालिकी स्मृता इति।

எப்பொழுது த்ரயோதசீ தினத்தில் த்வாதசியானது இரண்டு கலையோ அல்லது மூன்று கலையோ இருக்கின்றதோ, அப்பொழுது த்வாதசீ இருக்கும் காலத்திலேயே பாரணையைச் செய்யவேண்டும். அது

சொல்லடப்பட்டுள்ளது. நாரதீயத்தில்:- ஏகாதசீ முதல் நாளில் ஒரு கலையுள்ளது. மறுநாளில் த்வாதசீ இரண்டு கலை உள்ளது. அப்பொழுது, த்ரயோதசியில் பாரணம் செய்வதால், அது பன்னிரண்டு த்வாதசிகளின் பலனைக்கெடுக்கும், என்று. மற்றொரு ஸ்ம்ருதியிலும்:- த்வாதசீ ஸூர்யோதயத்தில் இரண்டு கலையிருந்தாலும், மூன்று கலையிருந்தாலும் த்வாதசியைத் தாண்டக்கூடாது. பாரணத்திலும், மரணத்திலும் மனிதர்கள் அக்காலத்தில் உள்ள திதியை க்ரஹிக்கவேண்டும். என்று விதிக்கப்பட்டுள்ளது.

## द्वादश्यां माध्याह्निककालः

द्वादशीकाले यदा पारणं तदा ततः प्रागेव सर्वाः क्रियाः कर्तव्याः । तदुक्तं नारदीये — अल्पायामपि विप्रेन्द्र द्वादश्यामरुणोदये । स्नानार्चनक्रियाः कार्या दानहोमादिसंयुताः इति । गारुडपुराणेऽपि — यदा त्वल्पा द्वादशी स्यादपकर्षो भुजेर्भवेत् । प्रातर्माध्याह्निकस्यापि तत्र स्यादपकर्षणम् इति । स्कान्देऽपि — यदा भवेदतीवाल्पा द्वादशी पारणादिने । उषःकाले द्वयं कुर्यात् प्रातर्माध्याह्निकं च तत् इति ।

### த்வாதசியில் மாத்யாஹ்னிகத்தின் காலம்

த்வாதசீ உள்ள காலத்தில் எப்பொழுது பாரணம் செய்ய வேண்டுமோ அப்பொழுது அதற்கு முன்பே எல்லாக் கார்யங்களையும் செய்யவேண்டும். அது சொல்லப்பட்டுள்ளது, இவ்வாறு,நாரதீயத்தில்:- ஓ ப்ராம்ஹணா! த்வாதசீ அல்பமாயிருந்தால் அருணோதயத்தில் தானம் ஹோமம் முதலியவைகளுடன் கூடிய ஸ்நானம் தேவபூஜை இக்கிரியைகளைச் செய்யவேண்டும், என்று. காருட புராணத்திலும்:- எப்பொழுது த்வாதசீ ஸ்வல்பமாயிருக்குமோ அப்பொழுது போஜன விஹித காலத்திற்கு முந்தியே காலையில் போஜனத்தைச் செய்யவேண்டும். மாத்யாஹ்னிகத்தையும் முந்தியே

செய்யவேண்டும், என்று. ஸ்காந்தத்திலும்:- எப்பொழுது பாரணை தினத்தில் த்வாதசீ மிகவும் அல்பமாக உள்ளதோ, அப்பொழுது விடியற்காலத்திலேயே ப்ராதக் காலத்திலும், மத்யாஹ்ன காலத்திலும் செய்ய வேண்டியவைகளைச் செய்யவேண்டும். என்று.

उदितहोमिनोऽग्निहोत्रिणोऽग्निहोत्रहोमानन्तरं पारणं कार्यम्। विप्रतिषेधे श्रुतिलक्षणं बलीयः इति स्मरणात् । न च वाच्यम्, आहिताग्निरनड्वांश्च ब्रह्मचारी च ते त्रयः। अश्नन्त एव सिध्यन्ति नैषां सिद्धिरनश्नताम् इत्यापस्तम्बवचनात् आहिताग्नेरुपवास एव नास्ति इति । ब्रह्मचार्याहिताग्निश्च त्यजेन्नैकादशीव्रतम् इति स्मृतेरापस्तम्बवचनस्य एकादशीव्यतिरिक्त कालविषयत्वावगमात्। कालयोर्भोजनम् इति वचनप्राप्तं यत्कालद्वयभोजनम् तत्र नियमाभावप्रतिपादनपरत्वाच्च।

உதித்த ஹோமியான (உதயமான பிறகு அக்னி ஹோத்ரம் செய்பவனான) அக்நிஹோத்ரிக்கு அக்நிஹோத்ரஹோமத்திற்குப் பிறகு பாரணம் செய்யப்படவேண்டும். ''ச்ரௌதஸ்மார்த்தங்களுக்குப் பரஸ்பரம் விரோதமாகில் ச்ரௌதம் பலமுள்ளதாகும்'' என்று வசனமிருப்பதால். ''ஆஹிதாக்னி, எருது, ப்ரம்ஹசாரீ என்ற இம்மூவரும் போஜனம் செய்பவர்களே கார்யத்தைச் செய்து முடிப்பவர். போஜனம் இல்லாமல் உபவாஸம் இருந்தால் இவர்களுக்குக் கார்யஸித்தி ஆவதில்லை'' என்று ஆபஸ்தம்பர் வசனம் இருப்பதால், ஆஹிதாக்னிக்கு உபவாஸ ப்ரஸக்தியே இல்லை என்று சொல்லக்கூடாது. ''ப்ரம்ஹசாரியாயினும், ஆஹிதாக்னியாயினும் ஏகாதசீவ்ரதத்தை விடக்கூடாது'' என்று ஸ்ம்ருதியிருப்பதால், ஆபஸ்தம்பரின் வசனம் ஏகாதசியைத் தவிர்த்த காலத்தைப்பற்றியது, என்று தாத்பர்யமாவதாலும், ''இரண்டு காலங்களிலும் போஜனம்'' என்று வசனத்தால் கிடைத்துள்ள இரண்டு

காலங்களிலும் போஜனம் எதுவோ அதில் நியமம் இல்லை, என்பதைச் சொல்வதில் தாத்பர்யம் உள்ளதாகையாலும்.

द्वादशीकाले पारणासंभवे अद्भिः पारणं कुर्यात् । तदाह कात्यायनः — सन्ध्यादिकं भवेन्नित्यं पारणं तु निमित्ततः । अद्भिस्तु पारयित्वाऽथ नैत्यकान्ते भुजिर्भवेत् इति । देवलोऽपि — सङ्कटे विषमे प्राप्ते द्वादश्यां पारणं कथम् । अद्भिस्तु पारणं कुर्यात् पुनर्भुक्तं न दोषकृत् इति । अशितानशिता यस्मादापो विद्वद्भिरीरिताः । अम्भसा केवलेनैव करिष्ये व्रतपारणम् । इति सङ्कल्प्य गायत्र्या(ऽभिमन्त्र्य) त्रिवारं चुलकोदकम् । प्रणवेन पिबेत्तोयं जलपारणमुच्यते । आपः पवित्रममलं पावनास्सर्वकर्मसु । व्रतलोपभयादेतत्पारणार्थं पिबाम्यहम् इति ।

த்வாதசீ உள்ள காலத்தில் பாரணம் செய்ய முடியாவிடில் ஜலத்தினுல் பாரணத்தைச் செய்யவேண்டும். அதைச் சொல்லுகிருர், காத்யாயனர்:- ஸந்த்யாவந்தனம் முதலியது நித்யமாகும். பாரணம் என்பது நைமித்திகமாகும். ஆகையால் ஜலத்தால் பாரணையைச் செய்துவிட்டுப் பிறகு நித்யகர்மங்கள் ஆன பிறகு போஜனம் செய்யப்பட வேண்டும், என்று. தேவலரும்:- 'கஷ்டமான ஸங்கடம் நேர்ந்தபொழுது த்வாதசியில் எப்படிப் பாரணம் செய்வது, எனில், ஜலத்தால் பாரணத்தைச் செய்யவேண்டும். பிறக போஜனம் செய்தால் அது தோஷத்தைச் செய்வதாக ஆகாது' என்று. ஜலமானது புஜிக்கப்பட்டதாகவும், புஜிக்கப்படாததாகவும் ஆகும், என்று அறிந்தவர்களால் சொல்லப்பட்டிருப்பதால், ஜலத்தினுல் மட்டும் வ்ரதத்தின் பாரணையைச் செய்யப்போகிறேன். என்று சொல்லி, காயத்ரியினுல் ஜலத்தை (அபிமந்த்ரித்து) மூன்று தடவை கையில் உள்ள ஜலத்தைப் பருகவேண்டும், ப்ரணவத்துடன். இது ஜலபாரணம் என்று சொல்லப்படுகிறது. ஜலமானது மிகவும் சுத்தமானது. எக்கர்மங்களிலும் சுத்திகரமாகியது.

*வ்ரத லோபத்தினின்றும் பயத்திஞல் இந்த ஜலத்தைப் பாரணைக்காக நான் பருகுகிறேன் (என்ற பானம் பண்ணவேண்டும்)*

## एकादश्युपवासे अधिकारिणः

एकादश्युपवासे अधिकारिणं दर्शयति कात्यायनः — अष्टवर्षाधिको मर्त्योऽसम्पूर्णाशीतिवत्सरः । एकादश्यामुपवसेत् पक्षयोरुभयोरपि इति । नारदः — अष्टाब्दादधिको मर्त्यो ह्यपूर्णाशीतिहायनः । भुङ्क्ते यो मानवो मोहादेकादश्यां स पापकृत् इति ।

### ஏகாதசீ உபவாஸத்திற்கு யோக்யர்கள்:-

*ஏகாதசீ உபவாஸத்திற்கு அதிகாரியைச் சொல்கிருர்,* காத்யாயனர்:- *எட்டு வயதிற்கு மேற்பட்டவனும் எண்பது வர்ஷம் பூர்ணமாகாதவனுமாகிய மனிதன் இரண்டு பக்ஷங்களிலும் ஏகாதசியில் உபவாஸம் இருக்கவேண்டும்.* நாரதர்:- *எட்டு வயதிற்கு மேற்பட்டவனும் எண்பது வர்ஷம் முடியாதவனுமாகிய எந்த மனிதன் ஏகாதசியில் அறியாமையால் புஜிக்கின்ருஞே அவன் பாபத்தைச் செய்தவஞவான்.*

पतिमत्या उपवासनिषेधः — पतिमत्यास्तूपवासं निषेधति विष्णुः — पत्यौ जीवति या नारी उपोष्य व्रतमाचरेत् । आयुष्यं हरते भर्तुर्नरकं चैव गच्छति इति । मनुरपि — नास्ति स्त्रीणां पृथग्यज्ञो न व्रतं नाप्युपोषणम् इति । पत्युरनुमत्या पत्नी व्रतादिष्वधिकारिणी भवति । तदाह कात्यायनः — भार्या भर्तुर्मतेनैव व्रतादीनाचरेत् इति । मार्कण्डेयः — नारी खल्वननुज्ञाता भर्त्रा पित्रा सुतेन वा । निष्फलं तु भवेत्तस्या यत्करोति व्रतादिकम् इति ।

### ஸுமங்கலிக்கு உபவாஸ நிஷேதம்

*பதியுள்ள ஸ்த்ரீக்கு உபவாஸத்தை நிஷேதிக்கின்ருர்,* விஷ்ணு - *எந்த ஸ்த்ரீ பர்த்தா ஜீவித்திருக்கும் பொழுது*

உபவாஸம் இருந்து வ்ரத்தை அனுஷ்டிக்கின்றுளோ, அவள் பர்த்தாவின் ஆயுஸ்ஸை அபஹரிக்கின்றுள். நரகத்தையும் அடைகின்றுள். மனுவும்:- ஸ்த்ரீகளுக்குத் தனியாக யாகம், வ்ரதம், உபவாஸம் இவைகள் இல்லை என்று. பர்த்தாவின் அனுமதியிருந்தால் பத்னீ வ்ரதம் முதலியவைகளில் யோக்யதை உள்ளவாகிறுள். அதைச் சொல்கிறுர், காத்யாயனர்:- பார்யை பர்த்தாவின் அனுமதியிஞலேயே வ்ரதம் முதலியவைகளை அனுஷ்டிக்கவேண்டும். மார்க்கண்டேயர்:- ஸ்த்ரீயானவள் பர்த்தா, பிதா, பிள்ளை இவர்களுள் யாராலாவது அனுமதிக்கப்படாமல் வ்ரதம் முதலிய எதைச் செய்கிறுளோ, அது பயனற்றதாக ஆகும்.

उपवासासमर्थविषयः — उपवासासमर्थस्त्वेकभक्ता दीनि कुर्यात् । तथा च कात्यायनः — उपवासे त्वशक्तानाम-शीतेरूर्ध्वजीविनाम् । एकभक्तादिकं कार्यमाह बोधायनो मुनिः इति । मार्कण्डेयः — एकभक्तेन नक्तेन तथैवायाचितेन च । मुन्यन्नेन च दानेन न निर्द्वादशिको भवेत् इति । स्मृत्यन्तरेऽपिएकभक्तेन नक्तेन बालवृद्धातुरः क्षिपेत् । पयो मूलं फलं वाऽपि न निर्द्वादशिको भवेत् इति । भविष्यत्पुराणेऽपि — एकादश्यामुपवसेन्नक्तं वाऽपि समाचरेत् । अथ वा मुख्यविप्रेभ्यो दानं दद्यात् स्वशक्तितः इति ।

**உபவாஸம் செய்யச் சக்தியில்லாதவனைப்பற்றி.**

உபவாஸத்தில் சக்தியில்லாதவன் ஏகபக்தம் (ஒருவேளை உணவு) முதலியதில் ஏதாவது ஒன்றை அனுஷ்டிக்கவேண்டும். அவ்விதமே, காத்யாயனர்:- எண்பது வர்ஷத்துக்குமேல் ஜீவித்துள்ள வரும் உபவாஸத்தில் சக்தியில்லாதவருமாகியவருக்கு ஏகபக்தம் முதலியது அனுஷ்டிக்கத் தகுந்தது, என்கிறுர் போதாயனமஹர்ஷி. மார்க்கண்டேயர்:- ஏகபக்தம், நக்தபோஜனம், (இரவில் மட்டும் உணவு) யாசிக்கப்படாமல் கிடைத்ததைப் புஜிப்பது, முனி அன்னம், தானம் இவைகளால் உபவாஸத்தைப் பூர்த்தி

செய்யவேண்டும். இஃதன்றி ஏகாதசிவ்ரத்தை விடக்கூடாது, என்று. மற்றொரு ஸ்ம்ருதியிலும்:- ஏகபக்தம், நக்தபோஜனம், இவைகளால் சிறுவன், வ்ருத்தன், வ்யாதியுள்ளவன் இவர்கள் வ்ரதத்தை அனுஷ்டிக்க வேண்டும். பால், கிழங்கு, பழம் இவைகளையாவது உபயோகிக்கலாம். ஏகாதசீ வ்ரதம் செய்யாமல் இருக்கக்கூடாது. பவிஷ்யத் புராணத்திலும்:- ஏகாதசியில் உபவாஸம் இருக்க வேண்டும். அல்லது, நக்த வ்ரதத்தைச் செய்யவேண்டும். அல்லது, யோக்யதையுள்ள ப்ராம்ஹணர்களுக்குத் தானத்தையாவது தனது சக்திக்கியன்றபடி கொடுக்கவேண்டும், என்று

एकभक्तादावप्यशक्तः प्रतिनिधिना कारयेत् । तथा च विष्णुरहस्ये — असामर्थ्ये शरीरस्य व्रते च समुपस्थिते । कारयेद्धर्मपत्नीं वा पुत्रं वा विनयान्वितम् इति । पैठीनसिः — भार्या पत्युर्व्रतं कुर्याद्भार्यायाश्च पतिर्व्रतम् । असामर्थ्ये परस्ताभ्यां व्रतभङ्गो न जायते इति । स्कान्देऽपि — पुत्रं वा विनयोपेतं पत्नीं वा भ्रातरं तथा । एषामभाव एवान्यं ब्राह्मणं विनियोजयेत् । भगिनी मथवा शिष्यं ब्राह्मणं दक्षिणादिभिः इति ।

ஏகபக்தம் முதலியதிலும் சக்தியில்லாதவன் மாற்று விதத்தில் செய்விக்கவேண்டும். அவ்விதமே, விஷ்ணுரஹஸ்யத்தில்:- சரீரம் உபவாஸத்திற்குச் சக்தியில்லாம லிருக்கும் பொழுது ஏகாதசிவ்ரதம் ப்ராப்தமானால் தனது பத்னியையாவது, வணக்கமுள்ள புத்ரனையாவது அனுஷ்டிக்கச் செய்யவேண்டும். என்று. பைடீநஸி:- பார்யை, பர்த்தா செய்யவேண்டிய வ்ரதத்தைச் செய்யலாம். பர்த்தா, பத்னி செய்யவேண்டிய வ்ரதத்தைச் செய்யலாம். இருவருக்கும் சக்தியில்லாவிடில் மற்றொருவன் இவர்களின் வ்ரதத்தை அனுஷ்டிக்கலாம். இவ்விதம் செய்வதால் வ்ரதத்திற்கு லோபம் இல்லை, என்று. ஸ்காந்தத்திலும்:- வணக்கமுள்ள புத்ரனையாவது

பார்யையையாவது, ப்ராதாவையாவது, அனுஷ்டிக்கும்படி செய்யவேண்டும். இவர்களுள் ஒருவரும் இல்லாவிடிலேயே வேரொரு ப்ராம்ஹணன், பகினீ, அல்லது சிஷ்யன் இவர்களை அனுஷ்டிக்கும்படி செய்யவேண்டும். இவர்கள் ஒருவரும் இல்லாவிடில் யாராவது ஒரு ப்ராம்ஹணனைத் தக்ஷிணை முதலியவைகளைக் கொடுத்து அனுஷ்டிக்கச் செய்யவேண்டும். என்று.

कात्यायनः — पितृमातृष्वसृभ्रातृगुर्वर्थे च विशेषतः । उपवासं प्रकुर्वाणः पुण्यं क्रतुशतं लभेत् । दक्षिणा वात्र दातव्या शुश्रूषा विहिता च सा । नारी च पतिमुद्दिश्य एकादश्यामुपोषिता । पुण्यं क्रतुशतं प्राहुः मुनयः पारदर्शनाः । उपवासफलं तस्याः पतिः प्राप्नोत्यसंशयम् ।

காத்யாயனர்:- பிதா, மாதா, பத்னீ, ப்ராதா, குரு இவர்களுக்காக உபவாஸம் செய்பவன் நூறுயாகங்கள் செய்த பலனை அடைவான். இவர்கள் விஷயத்தில் தக்ஷிணைகொடுக்கவேண்டியதில்லை. அவர்கள் செய்வது சுச்ரூஷை என விதிக்கப்பட்டுள்ளது. பார்யையும் பர்த்தாவைக்குறித்து ஏகாதசீ உபவாஸமிருந்தால் 100 யாகத்தின் பலன் உண்டு என்று சாஸ்திரங்கள் முழுவதும் அறிந்த முனிவர்கள் சொல்கின்றனர். அவளிடமிருந்து உபவாஸ பலனை பர்த்தா அடைகிறுன். ஸம்சயமில்லை.

स्मृत्यन्तरेपि — पितृमातृपतिभ्रातृश्वश्रूगुर्वादि भूभुजाम् । अदृष्टार्थमुपोषित्वा स्वयं च फलभाग्भवेत् । मातामहादीनुद्दिश्य एकादश्यामुपोषणे । कर्ता दशगुणं पुण्यं प्राप्नोत्यत्र न संशयः । यमुद्दिश्य कृतं सोऽपि संपूर्णफलमाप्नुयात् इति । प्रतिनिधौ कश्चिद्विशेषः स्मर्यते । काम्ये प्रतिनिधिर्नास्ति नित्ये नैमित्तिके च सः । काम्येऽप्युपक्रमादूर्ध्वं केचित्प्रतिकृतिं विदुः इति । उपवासाकरणे प्रायश्चित्तं स्मर्यते — ''अर्के पर्वद्वये रात्रौ चतुर्दश्यष्टमी दिवा । एकादश्यामहोरात्रं भुक्त्वा चान्द्रायणं चरेदिति ।

மற்றொரு ஸ்ம்ருதியிலும்:- பிதா, மாதா, பதி, ப்ராதா, மாமியார், குரு முதலியவர். அரசன் இவர்களுகாகப் புண்யத்திற்கு உபவாஸமிருந்தால் தானும் பலனடைந்தவனாகிறான். மாதாமஹர் முதலியவரை உத்தேசித்து ஏகாதசியில் உபவாஸம் செய்தால். கர்த்தா (உபவாஸம் செய்தவன்) பத்து மடங்கு புண்யத்தை அடைவான். இவ்விஷயத்தில் ஸந்தேஹமில்லை. எவனைக் குறித்து உபவாஸம் செய்யப்பட்டதோ அவனும் பூர்ணமான பலனை அடைவான். பிரதிநிதி வைப்பதில் ஒரு விசேஷம் சொல்லப்படுகிறது. காம்யமான உபவாஸத்தில் பிரதிநிதி என்பது இல்லை. பிரதிநிதி என்பது நித்யத்திலும் நைமித்திகத்திலும் தான் உண்டு. காம்யத்திலும் ஆரம்பித்த பிறகு பிரதிநிதியைச் சிலர் அனுமதிக்கின்றனர் என. உபவாஸம் செய்யாவிடில் பிராயச்சித்தம் சொல்லப்படுகிறது. பானுவாரம், 2 பர்வங்கள் இவைகளின் ராத்திரியிலும் சதுர்தசீ, அஷ்டமீ இவைகளின் பகலிலும் ஏகாதசியின் பகல் இரவு இரண்டு காலங்களிலும் போஜனம் செய்தால் சாந்திராயண விரதத்தை அனுஷ்டிக்க வேண்டும் என்று.

## सूतकादौ उपवासविचारः

सूतकादौ उपवासमात्रं कार्यम्। तदाह पुलस्त्यः — सूतके च नरः स्नात्वा प्रणम्य मनसा हरिम्। एकादश्यां न भुञ्जीत व्रतमेतं न लुप्यते। मृतकोऽपि न भुञ्जीत ह्येकादश्यां सदा नरः। एकादश्यां न भुञ्जीत नारी दृष्टे रजस्यपि इति। काम्येऽपि दानार्चनारहित मुपवासमात्रं कार्यम्। तदुक्तं कूर्मपुराणे - काम्योपवासे प्रक्रान्ते त्वन्तरा मृतसूतके। तत्र काम्यव्रतं कुर्याद्दानार्चनविवर्जितम्। सूतकान्ते नरः स्नात्वा पूजयित्वा जनार्दनम्। दानं दत्वा विधानेन व्रतस्य फलमश्नुते। सम्प्रवृत्तेऽपि रजसि न त्याज्यं द्वादशीव्रतम्। पञ्चमेऽहनि शुद्धा स्याद्दैवे पित्र्ये च कर्मणि इति।

ஆசௌசம் முதலியதில் உபவாஸம் பற்றியது

ஆசௌசம் முதலியதில் உபவாஸத்தை மட்டில் செய்யவேண்டும். அதைச் சொல்கிறார்:- புலஸ்தியர்:- ஆசௌசத்திலும் மனிதன் ஏகாதசியில் ஸ்நானம் செய்து, ஹரியை மனத்தால் நமஸ்கரித்து, புஜிக்கக்கூடாது. இதனால் விரதத்திற்கு லோபம் இல்லை. மரணா சௌசத்திலும் ஏகாதசியில் மனிதன் புஜிக்கக்கூடாது. ஏகாதசியில் ஸ்திரீயானவள் ரஜக் காலத்திலும் போஜனம் செய்யக்கூடாதென. காம்ய உபவாஸத்திலும் தானம் பூஜை இவைகளில்லாமல் உபவாஸத்தை மட்டில் அனுஷ்டிக்க வேண்டும். அது சொல்லப்பட்டுள்ளது. கூர்மபுராணத்தில்:- காம்ய உபவாஸத்தை ஆரம்பித்து அனுஷ்டித்து வரும்பொழுது நடுவில் ஜனன ஆசௌசம் மரண ஆசௌசம் ஸம்பவித்தால் அப்பொழுதும் காம்ய உபவாஸத்தைத் தானம் பூஜை இவைகள் இல்லாமல் அனுஷ்டிக்க வேண்டும். ஆசௌசத்தின் முடிவில் மனிதன் ஸ்நானம் செய்து, விஷ்ணுவைப் பூஜித்து, விதிப்படி தானம் செய்து வ்ரதத்தினுடைய பலனை அடைகிறான். ரஜக்காலத்திலும் ஏகாதசீ வ்ரதத்தை விடக்கூடாது. அவள் ஐந்தாவது நாளில் தேவகார்யம் பித்ருகார்யம் இவைகள் விஷயத்தில் சுத்தையாவாள், என்று.

एकादश्यां नित्यनैमित्तिकश्राद्धे उपवासभेदः ।

एकादश्यां सांवत्सरिक श्राद्धे संप्राप्ते श्राद्धं कृत्वा पितृसेवितशेषं समाघ्रायोपोषणं कुर्यात् । तदाह कात्यायनः — उपवासो यदा नित्यः श्राद्धं नैमित्तिकं भवेत् । उपवासं ततः कुर्यादाघ्राय पितृसेवितम् इति । ननु भुञ्जीतैव कृते श्राद्धे पुत्री नोपवसेद्गृही इति । तथा श्राद्धं कृत्वा तु यो विप्रो न भुङ्क्ते तु कदाचन । देवा हव्यं न गृह्णन्ति कव्यानि पितरस्तथा इत्यादिवचनविरोधस्स्यात् । मैवम्, आघ्राणेनापि भोजनकार्यसिद्धेः । तस्य भोजनकार्यविधानात् । अनुकल्पं कुर्वन्नशक्तस्तु भुञ्जीत,

अनुकल्पं यदा कुर्वन्नशक्तः पक्षयोर्द्वयोः । एकादश्यां तु भुञ्जीत श्राद्धं कृत्वा दिवैव च इति स्मृतेः । कृष्णैकादश्यां गृहस्थस्य ओदनव्यतिरिक्तपितृशेष-भोजनेऽप्यदोषः, तस्य शुक्लैकादश्यामेव नित्योपवास-विधानात्। कृष्णैकादश्यामुपवासनिषेधेन भक्ष्यविधानाच्च ।

**ஏகாதசியில் நித்ய நைமித்திகங்களான ச்ராத்தங்கள் ப்ராப்தங்களானுல் உபவாஸத்தைப்பற்றி.**

ஏகாதசியில் ப்ரத்யாப்திக ச்ராத்தம் ப்ராப்தமானுல், ச்ராத்தத்தைச் செய்து பித்ருசேஷத்தை முகர்ந்து, பிறகு உபவாஸத்தை அனுஷடிக்கவேண்டும். அதைச் சொல்லுகிருர், காத்யாயனர்:- எப்பொழுது உபவாஸம் நித்யமாயும், ச்ராத்தம் நைமித்திகமாயும் சேருகிறதோ, அப்பொழுது பித்ருசேஷத்தை முகர்ந்து, பிறகு உபவாஸத்தை அனுஷடிக்கவேண்டும், என்று. ''ச்ராத்தம் செய்த பிறகு ச்ராத்த கர்த்தா போஜனம் செய்யவேண்டும். புத்ரவானுன க்ருஹஸ்தன் உபவாஸம் இருக்கக்கூடாது'' என்றும், அப்படியே, ''எந்த ப்ராம்ஹணன் ச்ராத்தத்தைச் செய்து விட்டு எப்பொழுதாவது போஜனம் செய்வதில்லையோ, அவனது ஹவிஸ்ஸுகளைத் தேவர்களும் கவ்யங்களை பித்ருக்களும் க்ரஹிப்பதில்லை. என்பதுமாகிய வசனங்களின் விரோதம் ஏற்படுமே எனில், இவ்விதம் சொல்லக்கூடாது. முகர்ந்து பார்ப்பதினுலும் போஜன கார்யம் ஸித்திப்பதால், ஆக்ராணம் போஜன கார்யத்தைச் செய்வதால். அனுகல்பத்தை அனுஷ்டிக்கவும் அசக்தனுனெனில் போஜனம் செய்யலாம். ''எப்பொழுது இரண்டு பக்ஷங்களிலும் ஏகாதசியில் சக்தியற்றவன் அனுகல்பத்தைச் செய்கின்றுனே, அப்பொழுது ஏகாதசியில் ச்ராத்தம் செய்துவிட்டுப் பகலில் மட்டில் போஜனம் செய்யலாம்'' என்று ஸ்ம்ருதி உள்ளது. க்ருஷ்ணபக்ஷ ஏகாதசியில் க்ருஹஸ்தனுக்கு அன்னத்தைத் தவிர்த்து, பித்ரு சேஷத்தைப் புஜிப்பதிலும் தோஷம் இல்லை. க்ருஹஸ்தனுக்கு சுக்லபக்ஷ ஏகாதசியிலேயே

*நித்ய உபவாஸம் விதிக்கப்பட்டிருப்பதாலும், க்ருஷ்ண ஏகாதசியில் உபவாஸத்தை நிஷேதித்துப் பக்ஷ்யத்தைப் புஜிக்கும்படி விதியுள்ளது.*

ब्राह्माण्डपुराणे तु — कर्ता नोपवसेच्छ्राद्धे पित्र्येऽप्येकादशीव्रते । तयोरप्यधिकं ब्रूयुः पितृशेषं महर्षयः इति कर्तृग्रहणात् ज्ञातीनामाघ्राणमेव । कर्तृभ्योऽन्यैर्न भोक्तव्यं श्राद्धे प्राप्ते हरेर्दिने । पितृशेषं तमाघ्राय उपवासफलाप्तये इति । भोक्तुरपि दोषो नास्तीत्युक्तं तत्रैव । पात्राभावे द्विजः श्राद्धे भुञ्जीयाद्धरिवासरे । नोपवासव्रतघ्नं तं नोचेत्तच्छ्राद्धहा भवेत् । परदिने तु कर्तव्या पारणा द्वादशीदिने । उपवासफलं सम्यक् प्राप्नोति व्रतभाङ्नरः । एकादश्यां न भुञ्जीत कदाचिदपि मानवः । स्वयं प्रार्थ्य न भुङ्क्ते चेत् प्रार्थितोऽन्यैर्न दोषभाक् इति ।

*ப்ரம்ஹாண்ட புராணத்திலோவெனில்:- ச்ராத்தகர்த்தா ச்ராத்த தினத்தில் ஏகாதசீ வ்ரதம் சேர்ந்தால் உபவாஸம் இருக்கக்கூடாது. அவ்விரண்டுக்குள் பித்ருசேஷ போஜனத்தைச் சிறந்ததாக மஹர்ஷிகள் சொல்லுகிறார்கள்'' என்ற வசனத்தில் ச்ராத்தகர்த்தா என்று இருப்பதால் ஜ்ஞாதிகளுக்கு ஆக்ராணம் மட்டிலே. ''ச்ராத்த கர்த்தாவைத் தவிர்த்த மற்றவர்கள் ஏகாதசீ தினத்தில் பித்ருசேஷத்தைப் புஜிக்கக்கூடாது. உபவாஸ பலன் கிடைப்பதற்காகப் பித்ருசேஷத்தை ஆக்ராணம் மட்டில் செய்து உபவாஸம் இருக்கவேண்டும்' என்று ச்ராத்தத்தில் புஜிக்கும் ப்ராம்ஹணனுக்கும் தோஷம் இல்லை என்று சொல்லப்பட்டுள்ளது, அதிலேயே:-'' யோக்யனான ப்ராம்ஹணன் கிடைக்காவிடில் ப்ராம்ஹணன் ஏகாதசியிலும் ச்ராத்தத்தில் புஜிக்கலாம். புஜிப்பது உபவாஸ வ்ரதத்தைக் கெடுப்பதாக ஆகாது. புஜிக்காவிடில் அந்தச் ச்ராத்தத்தைக் கெடுத்தவனாவான். மறுநாளில் த்வாதசியில் பாரணத்தைச் செய்யவேண்டும். அவ்விதம்*

செய்வதால் அவன் உபவாஸ பலனை நன்றாக அடைகிறான். மனிதன் ஏகாதசீயில் தானாக வேண்டி ச்ராத்தத்தில் புஜிக்கக்கூடாது. பிறரால் ப்ரார்த்திக்கப்பட்டு அவன் புஜித்தால் அவன் தோஷத்தை அடையான்'' என்று.

## काम्यैकादशीव्रतानुष्ठानक्रमः ।

अयमिह काम्यव्रतानुष्ठानक्रमः । प्रथमं दशम्यामेकभुक्तं कृत्वा दन्तधावनं कुर्यात् । दशम्यामेकभुक्भूत्वा खादयेद्दन्तधावनम् इति स्मरणात् । दशम्यां रात्रौ नियम उक्तो ब्रह्मकैवर्ते — प्राप्ते हरिदिने सम्यक् विधाय नियमं निशि । दशम्यामुपवासस्य प्रकुर्याद्वैष्णवं व्रतम् इति । नारदीये — अक्षारलवणास्सर्वे भविष्यान्ननिषेविणः । अवनीतल्पशयनाः प्रियासङ्गविवर्जिताः इति । ततः प्रातरुत्थाय एकादश्यां बाह्यान्तर शुद्धिं विदध्यात् । तत्प्रकारस्तु काल निर्णयेऽभिहितः । – शरीरमन्तः करणोपघातं वाचश्च विष्णुर्भगवान-शेषम् । शमं नयत्वस्तु ममेह शर्म पापादनन्ते हृदि संनिविष्टे ॥ अन्तः शुद्धिं बहिः शुद्धिं शुद्धो धर्ममयोऽच्युतः । स करोतु ममैतस्मिन् शुचिरेवास्मि सर्वदा । बाह्योपघातादनघो बोद्धा च भगवानजः । शमन्नयत्वनन्तात्मा विष्णुश्चेतसि संस्थितः इति ।

### காம்ய ஏகாதசியை அனுஷ்டிக்கும் க்ரமம்:

காம்ய வ்ரதத்தை அனுஷ்டிக்கும் க்ரமம் இதுவாகும். முதலில் தசமி இரவில் ஏகபுக்தம் செய்து, மறுநாள் விடியற்காலத்தில் தந்ததாவனம் செய்யவேண்டும். ''தசமியில் ஏகபுக்தத்தை அனுஷ்டித்து, காலையில் தந்ததாவனம் செய்ய வேண்டும்'' என்று ஸ்ம்ருதி உள்ளது. தசமி இரவில் செய்யவேண்டிய நியமம் சொல்லப்பட்டுள்ளது, ப்ரம்ஹகைவர்த்தத்தில்:- ஏகாதசீ ப்ராப்தமாயிருக்கும் பொழுது தசமி இரவில் உபவாஸ நியமத்தைச் செய்து கொண்டு ஏகாதசியில் உபவாஸம்

இருக்கவேண்டும். நாரதீயத்தில்: ''எல்லோரும் உப்பு, உறைப்பு இல்லாமல், ஹவிஸ்ஸைப் புஜிப்பவர்களாய், பூமியில் படுப்பவர்களாய், ஸ்த்ரீ ஸங்கம் இல்லாதவர்களாய் இருக்கவேண்டும்'' என்று. பிறகு விடியற்காலையில் எழுந்து, ஏகாதசியில் பாஹ்யசுத்தி, ஆந்தர சுத்தி இவைகளைச் செய்யவேண்டும். அதன் ப்ரகாரம் சொல்லப்பட்டுள்ளது. காலநிர்ணயத்தில்:- சரீரம், அந்தக்கரணம், வாக்கு, இவைகளின் அசுத்தி முழுவதையும் பகவானுன விஷ்ணு போக்கவேண்டும். எனக்கு இப்பொழுது ஸௌக்யம் உண்டாகவேண்டும். பாபத்தினின்றும் எனக்கு ஸுகம் உண்டாகவேண்டும். அனந்தனுகிய விஷ்ணு என் மனதில் நிலைத்துள்ளபோது, சரீரத்துக்குள் சுத்தியையும், வெளியில் சுத்தியையும் சுத்தனும் தர்மஸ்வரூபியாயுமுள்ள அந்த அச்யுதன் எனக்கு இக்கார்யத்தில் செய்யவேண்டும். நான் எப்பொழுதும் சுத்தனுகவே இருக்கின்றேன். பாபமற்றவனுய், அறிபவனுய், அனந்த ஸ்வரூபனுய் பிறப்பற்றவனுய் உள்ள பகவான் என் மனஸில் இருப்பவராய் வெளியில் உள்ள அசுத்தியைப்போக்கிப் பாபக்ஷயத்தை உண்டுபண்ணவேண்டும்'' என்று.

अनन्तरं व्रतसङ्कल्पं कुर्यात् । तत्र मन्त्रमाह विष्णुः — एकादश्यां निराहारः स्थित्वाऽहमपरेऽहनि । भोक्ष्यामि पुण्डरीकाक्ष शरणं मे भवाच्युत ॥ इत्युच्चार्य ततो विद्वान् पुष्पाञ्जलिमथार्पयेत् इति । अनन्तरकृत्यमाह कात्यायनः — गृहीत्वौदुम्बरं पात्रं वारिपूर्णमुदङ्मुखः । अष्टाक्षरेण मन्त्रेण त्रिर्जप्तेनाभिमन्त्रितम् ॥ उपवास फलप्रेप्सुः पिबेत्पात्रगतं जलम् इति । औदुम्बरं ताम्रपात्रम् ।

பிறகு வ்ரதத்திற்கு ஸங்கல்பத்தைச் செய்யவேண்டும். அதில் மந்த்ரத்தைச் சொல்லுகிறுர், விஷ்ணு:- நான் ஏகாதசியில் ஆஹாரம் இல்லாதவனு யிருந்து மறுநாளில் பாரணை செய்யப்போகிறேன். ஹே

புண்டரீகாக்ஷா! அச்யுதா! என்னை நீர் காப்பாற்றவேண்டும். இவ்விதம் சொல்லி பிறகு அறிந்தவன் புஷ்பாஞ்ஜலியை ஸமர்ப்பிக்கவேண்டும் என்று. பிறகு செய்யவேண்டியதைச் சொல்லுகிறார், **காத்யாயனர்:-** ஜலம் நிறைந்த தாம்ர பாத்ரத்தை எடுத்துக்கொண்டு வடக்கு நோக்கியவனாய் அஷ்டாக்ஷர மந்த்ரத்தை மூன்று முறை உச்சரித்து அபிமந்த்ரிக்கப்பட்ட பாத்ரத்தில் உள்ள ஜலத்தை உபவாஸ பலனை விரும்பியவனாகப் பருகவேண்டும், என்று. (ஔதும்பரம்=தாம்ரபாத்ரம்)

ब्रह्मपुराणे — संपूज्य विधिवद्विष्णुं श्रद्धया सुसमाहितः । गन्धैः पुष्पैस्तथा धूपैर्दीपैर्नैवेद्यकैः परैः । एवं संपूज्य विधिवद्रात्रौ कृत्वा तु जागरम् । याति विष्णोः परं स्थानं नरो नास्त्यत्र संशयः इति ।

**ப்ரம்ஹ புராணத்தில்:-** விஷ்ணுவை விதிப்படி ச்ரத்தையுடன் கவனமுடையவனாய் சந்தனம், புஷ்பங்கள், தூபங்கள், தீபங்கள், சிறந்த நைவேத்யங்கள் இவைகளால் பூஜித்து, விதிப்படி இரவில் ஜாகரணம் செய்தால், மனிதன் விஷ்ணுவின் சிறந்த ஸ்தானத்தை அடைகிறான். இதில் ஸம்சயம் இல்லை, என்று.

द्वादश्यां कर्तव्यमाह कात्यायनः — प्रातः स्नात्वा हरिं पूज्य उपवासं समापयेत् । अज्ञानतिमिरान्धस्य व्रतेनानेन केशव ।। प्रसीद सुमुखो नाथ ज्ञानदृष्टिप्रदो भव । मन्त्रं जपित्वा हरये निवेद्योपोषणं व्रती । द्वादश्यां पारणं कुर्याद्वर्जयित्वा ह्युपोदकीम् इति । बृहस्पतिः — सायमाद्यन्तयोरह्नोस्सायं प्रातश्च मध्यमे । उपवासफल-प्रेप्सुर्जह्या-द्भुक्तिचतुष्टयम् इति ।

த்வாதசியில் செய்யவேண்டியதைச் சொல்லுகிறார், **காத்யாயனர்:-** த்வாதசியில் காலையில் ஸ்நானம் செய்து,

விஷ்ணுவைப் பூஜித்து, உபவாஸத்தை முடிக்கவேண்டும். ஹே கேசவா! அஜ்ஞானம் எனும் இருளினால் ஜ்ஞானம் இல்லாதவனாகிய என் விஷயத்தில் இந்த வ்ரதத்தால் அனுக்ரஹம் செய்வீராக. ஹே நாதா! ஜ்ஞானமாகிய கண்ணைக் கொடுக்கவேண்டும். வ்ரதம் அனுஷ்டித்தவன் இந்த மந்த்ரத்தைச் சொல்லி உபவாஸத்தை ஹரிக்கு ஸமர்ப்பித்து த்வாதசியில் பாரணையைச் செய்ய வேண்டும், உபோதகி (கொத்துவளைக் கீரை)யை நீக்கவேண்டும். என்று. ப்ருஹஸ்பதி:- உபவாஸத்தின் பலனை அடைய விரும்பியவன் உபவாஸதினத்தின் முதல் நாளிலும் மறு நாளிலும் இரவில் போஜனத்தையும், உபவாஸ தினத்தில் இரண்டு வேளைகளிலும் போஜனத்தைத் தள்ளவேண்டும். இவ்விதம் நான்கு வேளைகளிலும் போஜனம் கூடாது, என்று

## नित्योपवासः

नित्योपवासप्रकारमाह कात्यायनः — नित्योपवासी यो मर्त्यस्सायंप्रातर्भुजिक्रियाम्। वर्जयेन्मतिमान् विप्रस्संप्राप्ते हरिवासरे। विशेषनियमाशक्तोऽहोरात्रं भुक्तिवर्जितः। शक्तिमांस्तु पुनः कुर्यात् नियमं सविशेषणम् इति। कालादर्शेऽपि — जह्याद्भुक्तिद्वयं नित्ये काम्ये भुक्तिचतुष्टयम् इति।

### நித்ய உபவாஸம்

நித்யோபவாஸம் அனுஷ்டிக்கவேண்டிய ப்ரகாரத்தைச் சொல்லுகிறார், காத்யாயனர்:- நித்யோபவாஸம் உள்ளவனாகிய புத்தியுள்ள விப்ரன் எவனோ அவன் ஏகாதசியில் காலையிலும் மாலையிலும் போஜனம் செய்யக்கூடாது. விசேஷமான நியமங்களை அனுஷ்டிப்பதற்குச் சக்தியற்றவன் காலையிலும் இரவிலும் போஜனம் செய்யாமல் இருக்கவேண்டும். சக்தியுள்ளவனோ எனில் உபவாஸத்தை விசேஷமாக

நியமங்களுடன் அனுஷ்டிக்கவேண்டும் என்று. காலாதர்சத்திலும்:- நித்யோபவாஸத்தில் இரண்டு வேளை போஜனத்தை வர்ஜிக்கவேண்டும். காம்யோபவாஸத்தில் நான்கு வேளை போஜனத்தை வர்ஜிக்கவேண்டும். என்று

## उपवासवर्ज्यानि

उपवासे वर्ज्यान्याह विष्णुः — असकृज्जलपानं च दिवास्वापं च मैथुनम् । ताम्बूलचर्वणं मांसं वर्जयेद्व्रतवासरे इति । वसिष्ठः — उपवासे तथा श्राद्धे न खादेद्दन्तधावनम् । दन्तानां काष्ठसंयोगो हन्ति सप्त कुलानि च इति । दन्तधावने प्रायश्चित्तमुक्तं विष्णुरहस्ये — श्राद्धोपवासदिवसे खादित्वा दन्तधावनम् । गायत्र्याः शतसंपूतमम्बु प्राश्य विशुद्ध्यति इति । हारीतः — पतितपाषण्डनास्तिकसंभाषण-मनृताश्लीलादिक-मुपवासे वर्जयेत् इति ।

### உபவாஸத்தில் தள்ளத் தகுந்தவை

உபவாஸத்தில் தள்ளத் தகுந்தவைகளைச் சொல்லுகிறார், விஷ்ணு:- அடிக்கடி ஜலத்தைப் பருகுவது, பகலில் தூங்குவது, ஸ்த்ரீ ஸங்கமம், தாம்பூலம், மாம்ஸம் இவைகளை வ்ரததினத்தில் வர்ஜிக்கவேண்டும், என. வஸிஷ்டர்:- உபவாஸ தினத்திலும், ச்ராத்த தினத்திலும் பற்குச்சியை உபயோகிக்கக்கூடாது. பற்களுடன் குச்சியைச் சேர்ப்பது ஏழு தலைமுறையைக் கொல்வதாகும், என.

தந்ததாவனம் செய்தால் ப்ராயச்சித்தம் சொல்லப்பட்டுள்ளது, விஷ்ணு ரஹஸ்யத்தில்:- ச்ராத்ததினத்திலும் உபவாஸதினத்திலும் பற்குச்சியை உபயோகித்தால் காயத்ரியை நூறுதடவை ஜபித்து அதனுல் சுத்தமான ஜலத்தைப் பருகினுல் சுத்தனுவான், என. ஹாரீதர்:- உபவாஸதினத்தில், பதிதன், பாஷண்டன், நாஸ்திகன் இவர்களுடன் பேசுவது, பொய் சொல்வது,

கெட்டவார்த்தை பேசுவது முதலியதை வர்ஜிக்கவேண்டும், என.

विष्णुधर्मे — असंभाष्यांस्तु संभाष्य तुलस्यतसिकादलम् । द्वादश्यामच्युतफलमागस्त्यं पत्रमेव वा । आमलक्याः फलं वाऽपि पारणे प्राश्य शुद्ध्यति इति । बृहस्पतिः — दिवानिद्रां परान्नं च पुनर्भोजनमैथुने । क्षौद्रं कांस्यामिषं तैलं द्वादश्यामष्ट वर्जयेत् । कृत्वा चैवोपवासं तु योऽश्नाति द्वादशीदिने । नैवेद्यं तुलसीमिश्रं हत्याकोटिविनाशनम् । द्वादश्यामाद्यपादस्तु कीर्तितो हरिवासरः । महादोषकरं चान्नं सम्प्राप्ते हरिवासरे । न कार्यं पारणं तत्र विष्णुप्रीणनतत्परैः इति । स्मृत्यन्तरे — चतुर्मुहूर्तं द्वादश्यामाद्यमेकादशीतिथौ । अन्ते चतुर्मुहूर्तं यत्तत्कालो हरिवासरः इति । इत्येकादशीनिर्णयः ।

விஷ்ணு தர்மத்தில்:- பேசக்கூடாதவர்களுடன் பேசினால் துளஸீதளம், அதஸிகாதளம், சுண்டைக்காய், ஆத்திக்கீரை, நெல்லிக்கனி இவைகளை த்வாதசியன்று பாரணத்தில் உபயோகித்தால் சுத்தனாகிறான், என. **ப்ருஹஸ்பதி**:- பகலில் தூக்கம், பரான்னம், இரண்டாவது வேளை போஜனம், ஸ்த்ரீ ஸங்கம், தேன், வெண்கலப் பாத்திரத்தில் போஜனம், மாம்ஸம், எள் எண்ணெய் இந்த எட்டையும் த்வாதசியில் வர்ஜிக்கவேண்டும். ஏகாதசியில் உபவாஸம் செய்து, மறுநாள் த்வாதசியில் துளஸீ தளத்துடன் கூடிய நைவேத்யான்னத்தை எவன் புஜிக்கின்றானோ அவன் கோடி ப்ரம்ஹஹத்தி பாபத்தைப் போக்குவான். த்வாசியின் முதல் பாதம் ஹரிவாஸரம் எனப்பட்டுள்ளது. அக்காலத்தில் அன்னத்தைப் புஜிப்பது மஹாபாபத்தைக் கொடுக்கக்கூடியது. விஷ்ணுவுக்கு ப்ரீதியைச் செய்வதில் ஆவலுடையவர் ஹரிவாஸரத்தில் பாரணம் செய்யக்கூடாது என. **மற்றொரு ஸ்ம்ருதியிலும்**:- த்வாதசியின் ஆதியில் நான்கு முஹூர்த்தமும்

(எட்டுநாழிகை) ஏகாதசியின் முடிவில் நான்கு முஹூர்த்தமும் ஹரிவாஸரம் என்ற பெயர் உள்ளது.

## ५२. द्वादशीनिर्णयः

अथ द्वादशी निर्णीयते । सा च पूर्वविद्धा गृहीतव्या । तदुक्तं स्कान्दे — द्वादशी च प्रकर्तव्या एकादश्या युता विभो । सदा कार्या च विद्वद्भिर्विष्णुभक्तैश्च मानवैः इति । उत्तरविद्धां प्रतिषेधति बृहद्वसिष्ठः — द्वितीया पञ्चमी चैव दशमी च त्रयोदशी । चतुर्दशी चोपवासे हन्युः पूर्वोत्तरे तिथी इति । द्वादश्यां च काम्योपवासो मार्कण्डेयेन दर्शितः — द्वादश्यामुपवासेन सिद्धार्था भूप सर्वशः । चक्रवर्तित्वमतुलं सम्प्राप्ता अतुलां श्रियम् इति ।

### த்வாதசீ நிர்ணயம்

இனி த்வாதசீ நிர்ணயிக்கப்படுகிறது. அது முன் திதியுடன் கூடியது க்ரஹிக்கத் தகுந்தது. அது சொல்லப்பட்டுள்ளது. ஸ்காந்தத்தில்:- வித்வான்களும் விஷ்ணுபக்தர்களுமான மனிதர்கள் ஏகாதசீ வித்தமான த்வாதசியை க்ரஹிக்கவேண்டும் என்று. த்ரயோதசீ வித்தமான த்வாதசியை நிஷேதிக்கின்றார், ப்ருஹத் வஸிஷ்டர்:- த்விதீயை, பஞ்சமி, தசமி, த்ரயோதசீ, சதுர்தசீ என்று இந்தத் திதிகள் உபவாஸ விஷயத்தில் முன் பின் திதிகளைத் தோஷமுள்ளவைகளாகச் செய்யும், என்று. த்வாதசியிலும் காம்யோபவாஸம் சொல்லப்பட்டுள்ளது, மார்க்கண்டேயரால்:- ஓ அரசனே! த்வாதசியில் உபவாஸம் இருப்பவர்கள் ஸகல காமங்களும் ஸித்தித்துப் பெருத்த சக்ரவர்த்தித் தன்மையையும் நிறைந்த செல்வத்தையும் அடைவார்கள், என்று

## त्रयोदशीनिर्णयः

अथ त्रयोदशी निर्णीयते । सा च शुक्लकृष्णपक्षभेदेन व्यवतिष्ठते । तत्र शुक्लत्रयोदशी पूर्वविद्धा ग्राह्या । तदुक्तं ब्रह्मकैवर्ते— त्रयोदशी

प्रकर्तव्या द्वादशीसहिता मुने। भूतविद्धा न कर्तव्या दर्शः पूर्णा कदाचन इति। निगमे — षष्ठ्यष्टमी अमावास्या कृष्णपक्षे त्रयोदशी। एताः परयुताः पूज्याः पराः पूर्वयुतास्तथा इति। अत्र कृष्णपक्ष इति विशेषणात्पूर्वविद्धावचनस्य शुक्लपक्षविषयत्वं परिशिष्यते।

### த்ரயோதசீ நிர்ணயம்:-

இனி த்ரயோதசி நிர்ணயிக்கப்படுகிறது. அது சுக்ல க்ருஷ்ண பக்ஷங்களின் பேதத்தால் வ்யவஸ்தையை அடைகிறது. அவைகளுள் சுக்ல பக்ஷ த்ரயோதசியானது முன் திதியுடன் கூடியது க்ரஹிக்கத் தகுந்தது. அது சொல்லப்பட்டுள்ளது, ப்ரம்ஹ கைவர்த்தத்தில்:- ஓ முனே! த்வாதசியுடன் கூடிய த்ரயோதசியை க்ரஹிக்கவேண்டும். தர்சம், பூர்ணிமை இவையும் சதுர்தசி வித்தமாகில் ஒரு பொழுதும் க்ரஹிக்கத் தகுந்ததல்ல, என்று. நிகமத்தில்:- ஷஷ்டீ, அஷ்டமீ, அமாவாஸ்யை, கிருஷ்ண பக்ஷ த்ரயோதசீ இவைகள் மறு திதியுடன் கூடியதாகில் க்ராஹ்யங்களாகும். மேல் திதிகள் முன் திதியுடன் கூடியதாகில் க்ராஹ்யங்களாகும். இவ்விடத்தில் க்ருஷ்ணபக்ஷ என்ற விசேஷித்திருப்பதால் பூர்வவித்தா என்ற வசனத்திற்கு சுக்ல பக்ஷத்தைப் பற்றியது என்றாகிறது.

### चतुर्दशीनिर्णयः

अथ चतुर्दशी निर्णीयते। नृसिंहचतुर्दशी रात्रिव्यापिनी ग्राह्या नृसिंहस्य सायङ्काले आविर्भावात्। मधुश्रवणमासस्य शुक्ला या च चतुर्दशी। सा रात्रिव्यापिनी ग्राह्या परा पूर्वाह्णगामिनी इति वचनात्। परा अनन्तचतुर्दशी। उदयादि त्रिमुहूर्तमेव पूर्वाह्णः। तत्र शुक्लपक्षचतुर्दशी परविद्धा ग्राह्या। तथा व्यासः — शुक्ला चतुर्दशी ग्राह्या परविद्धा सदा व्रते इति। नारदीयेऽपि — तृतीयैकादशी षष्ठी शुक्लपक्षे चतुर्दशी। पूर्वविद्धा न कर्तव्या कर्तव्या परसंयुता इति।

## சதுர்தசீ நிர்ணயம்

இனி சதுர்தசீ நிர்ணயிக்கப்படுகிறது. ந்ருஸிம்ம சதுர்தசீ இரவில் வ்யாப்தியுள்ளது க்ராஹ்யமாகும். ந்ருஸிம்ஹன் ஸாயங்காலத்தில் ஆவிர்ப்பவித்ததால். ''வைசாகமாதம், ச்ரவணமாதம் இவைகளில் உள்ள சுக்லபக்ஷ சதுர்தசீ ராத்ரீ வ்யாப்தியுள்ளதாய் க்ரஹிக்கத்தகுந்தது. மற்றொரு சதுர்தசீ (அநந்தசதுர்தசீ) பூர்வாஹ்ண வ்யாப்தியுள்ளது க்ராஹ்யமாகின்றது'' என்ற வசனத்தால்.பரா= அநந்த சதுர்தசி, உதயம் முதல் மூன்று முஹுர்த்தம் (ஆறு நாழிகை) உள்ளதே பூர்வாஹ்ணம். அதில் சுக்லபக்ஷ சதுர்தசியானது பின் திதியுடன் க்ராஹ்யமாகும். அவ்விதமே வ்யாஸர்:- சுக்லபக்ஷ சதுர்தசீ பின் திதியுடன் கூடியது வ்ரதத்தில் எப்பொழுதும் க்ராஹ்யமாகும் என்று. நாரதீயத்திலும்:- த்ருதீயா, ஏகாதசீ, ஷஷ்டி, சுக்லபக்ஷ சதுர்தசீ இவைகள் முன் திதியுடன் கூடியதாகில் க்ராஹ்யங்கள் அல்ல. பின் திதியுடன் கூடியதாகில் க்ராஹ்யங்களாகும், என்று.

## अनन्तव्रतम्

यत्तु भाद्रपदशुक्लचतुर्दश्यामनन्तव्रतमुक्तं भविष्योत्तरपुराणे — तत्र दैवे ह्यौदयिकी ग्राह्या इति वचनेन युग्मशास्त्रादिभिश्चोदयव्यापिनी ग्राह्या । तत्र तिथ्यन्तरवत् त्रिमुहूर्तव्याप्तिर्मुख्यः कल्पः । द्विमुहूर्तव्याप्तिरनुकल्पः । यत्तु मध्याह्ने भोज्यवेलायां समुत्तीर्य सरित्तटे । ददर्श शीला सा स्त्रीणां समूहं रक्तवाससाम् । चतुर्दश्यामर्चयन्तं भक्त्या देवं जनार्दनम् इति, तत्तु अर्थवादत्वान्न स्वातन्त्र्येण कस्यचिदर्थस्य प्रापकम् । न चात्र मध्याह्नः कर्माङ्गकालो विहितः । सति प्रमाणान्तरे तस्योपोद्बलकमर्थवादवाक्यं भवति । न चात्र प्रमाणान्तरमस्तीति कालनिर्णये निरूपितम् । कृष्णचतुर्दशी तु पूर्वविद्धैव ग्राह्या । तथा चापस्तम्बः - कृष्णपक्षेऽष्टमी चैव कृष्णपक्षे चतुर्दशी । पूर्वविद्धा तु कर्तव्या परविद्धा न कस्यचित् इति ।

## அனந்த வ்ரதம்

**பவிஷ்யோத்தர புராணத்தில்:-** பாத்ரபத சுக்லபக்ஷ சதுர்தசியில் எந்த அனந்த வ்ரதம் சொல்லப்பட்டுள்ளதோ, அதில், ''தேவ கார்யத்தில் உதய வ்யாப்தியுள்ளதை க்ரஹிக்கவேண்டும்'' என்ற வசனத்தாலும், யுக்ம சாஸ்த்ரம் முதலியவைகளாலும் உதய வ்யாப்தியுள்ளது க்ரஹிக்கத்தகுந்தது. அதில் மற்ற திதியில் போல் மூன்று முஹூர்த்த வ்யாப்தி இருப்பது முக்யபக்ஷம். இரண்டு முஹூர்த்தம் வ்யாப்தி இருப்பது கௌணபக்ஷம். ஆனால், ''மத்யாஹ்ன காலத்தில், போஜன ஸமயத்தில், நதியின் கரையில் இறங்கி வந்து அந்த சீலா என்பவள் சிவப்பு வஸ்த்ரம் தரித்த ஸ்திரீகளின் கூட்டத்தைச் சதுர்தசியில் ஜனார்த்தன தேவனைப் பக்தியுடன் பூஜிப்பதாயுள்ளதைக் கண்டாள்'' என்று வசனம் உள்ளதே எனில், அந்த வசனம் அர்த்த வாதமானதால் ஸ்வதந்த்ரத் தன்மையுடன் ஒரு விஷயத்தை நிர்ணயித்துச் சொல்வதாகாது. இவ்விஷயத்தில் மத்யாஹ்ன காலம் கர்ம காலமாக விதிக்கப்படவில்லை. வேறு ப்ரமாணம் இருந்தால் அதற்குப் பலத்தைக் கொடுப்பதாக அர்த்தவாத வாக்யம் ஆகக்கூடும். இவ்விஷயத்தில் வேறு ப்ரமாணம் இல்லை. என்று கால நிர்ணயத்தில் சொல்லப்பட்டுள்ளது. க்ருஷ்ணபக்ஷ சதுர்தசியோவெனில் முன் திதியுடன் கூடியதே க்ராஹ்யமாகும். அவ்விதமே ஆபஸ்தம்பர்:- க்ருஷ்ணபக்ஷ அஷ்டமீ, க்ருஷ்ணபக்ஷ சதுர்தசீ இவைகளை முன் திதியுடன் கூடியதாகவே க்ரஹிக்கவேண்டும். பின் திதியுடன் கூடியதாய் ஒன்றுக்கும் க்ரஹிக்கக்கூடாது, என்று.

## शिवरात्रिव्रतनिर्णयः

अथ शिवरात्रिव्रतं निर्णीयते । शिवस्य रात्रिः शिवरात्रिरिति तत्पुरुषसमासेन योगेन प्रवर्तमानः शब्दो रूढ्या माघकृष्णचतुर्दशीरूपे

कालविशेषे नियम्यते । शिवप्रिया रात्रिर्यस्मिन् व्रत इति बहुव्रीहिसमासेन योगेन प्रवृत्तश्शब्दो रूढ्या व्रतविशेषे नियम्यते। यथा पङ्कजशब्दः पङ्काज्जायत इति योगं स्वीकृत्य भेकादिष्वतिप्रसक्तौ रूढिस्वीकारेण निवार्यते, तद्वदत्रापि यौगिकत्वे सति शिवव्रतोपेतेषु त्रयोदश्यादितिथ्यन्तरेषु शिवरात्रित्वं प्रसक्तं रूढिपरिग्रहेण निवार्यते। अतः कालविशेषे व्रतविशेषे च योगरूढ एवायं शिवरात्रिशब्दः ।

**சிவராத்ரி வ்ரத நிர்ணயம்**

*இனி சிவராத்ரி வ்ரதம் நிர்ணயிக்கப்படுகிறது. சிவனுடைய ராத்ரி சிவராத்ரி என்று தத்புருஷ ஸமாஸத்தால், யோகத்தால் ப்ரவர்த்தித்துள்ள இந்தச் சப்தம் ரூடியினால் மாக மாஸத்திய க்ருஷ்ணபக்ஷ சதுர்தசீ ரூபமான கால பேதத்தில் நியமிக்கப்படுகிறது. சிவனுக்கு ப்ரியமான ராத்ரியானது எந்த வ்ரதத்தில் உள்ளதோ என்று பஹுவ்ரீஹி ஸமாஸத்தால் யோகத்தால் ப்ரவ்ருத்தித்துள்ள சப்தம் ரூடியினால் வ்ரதவிசேஷத்தில் நியமிக்கப்படுகிறது. எப்படி பங்கஜ என்ற சப்தம் சேற்றினின்றும் உண்டாகிறது என்ற யோகத்தை ஸ்வீகரித்ததால், தவளை முதலியதிலும் அதிப்ரஸக்தமாகி, ரூடியை ஸ்வீகரிப்பதால் தடுக்கப்படுகிறதோ, அது போல் இங்கும் யௌகிகத் தன்மை வரும் பொழுது சிவ வ்ரதத்துடன் கூடிய த்ரயோதசீ முதலிய மற்றத் திதிகளிலும் சிவராத்ரித் தன்மை வரக்கூடியதாகியது. அது ரூடியை க்ரஹிப்பதால் தடுக்கப்படுகிறது. ஆகையால் காலவிசேஷத்திலும் வ்ரத விசேஷத்திலும் யோக ரூடமாகியதே சிவராத்ரி என்ற சப்தம்.*

तथा च स्कान्दपुराणे — माघस्य कृष्णपक्षे या तिथिश्चैव चतुर्दशी । तस्या रात्रिः समाख्याता शिवरात्रिः शिवप्रिया । तस्यां सर्वेषु लिङ्गेषु तदा सङ्क्रमते हरः । यानि कान्यत्र लिङ्गानि चराणि स्थावराणि च । तेषु सङ्क्रमते देवि तस्यां रात्रौ यतो हरः ।

शिवरात्रिस्ततः प्रोक्ता तेन सा हरवल्लभा इति । कामिकेऽपि — माघमास्यसिते पक्षे विद्यते या चतुर्दशी । तद्रात्रिः शिवरात्रिः स्यात् सर्वपुण्यशुभावहा इति ।

ஸ்காந்த புராணத்தில்:- '*மாக மாஸத்தின் க்ருஷ்ண பக்ஷத்தில் சதுர்தசீதிதி எதுவோ அந்தத் திதியின் ராத்ரி சிவனுக்கு ப்ரியமாகிய சிவராத்ரி எனப்பட்டுள்ளது. அந்த ராத்ரியில் எல்லாலிங்கங்களிலும் எப்பொழுதும் ஈச்வரன் சேருகிறார். இவ்வுலகில் சரங்களாயும், ஸ்தாவரங்களாயும் எந்தெந்த லிங்கங்களுள்ளனவோ அவைகளில் ஈச்வரன் ஸங்க்ரமிப்பதால் அந்த ராத்ரி சிவனுக்கு ப்ரியமாகிய சிவராத்ரி எனப்பட்டுள்ளது. ஓ தேவி! என்று.* காமிகத்திலும்:- *மாக மாஸத்தில் க்ருஷ்ண பக்ஷத்தில் எந்தச் சதுர்தசியோ அந்த ராத்ரி எல்லாப் புண்யங்களையும் சுபங்களையும் கொடுக்கக்கூடிய சிவராத்ரி எனப்படுகிறது, என்று.*

ईशानसंहितायाम् — शिवरात्रिव्रतं नाम सर्वपापहरं नृणाम् । आचण्डालं मनुष्याणां भुक्तिमुक्तिप्रदायकम् इति । अनेनास्य सर्वाधिकारित्वमुक्तम् । तच्च शिवरात्रिव्रतं एकादशीवत् नित्यं काम्यं चेत्युभयविधम् । तत्र नित्यत्वमकरणे प्रत्यवायवीप्सा नित्यशब्दैरवगन्तव्यम् । ते च स्कन्दपुराणे पठ्यन्ते । परात्परतरं नास्ति शिवरात्रिः परात्परा । न पूजयति भक्त्येशं रुद्रं त्रिभुवनेश्वरम् । जन्तुर्जन्मसहस्रेण भ्रमते नात्र संशयः । वर्षे वर्षे महादेवि नरो नारी पतिव्रता । शिवरात्रौ महादेवं कामं भक्त्या प्रपूजयेत् । माघकृष्णचतुर्दश्यां यः शिवं संशितव्रतः । मुमुक्षुः पूजयेन्नित्यं स लभेदीप्सितं फलम् इति ।

ஈசான ஸம்ஹிதையில்:- *சிவராத்ரி வ்ரதம் என்பது மனிதர்களின் ஸகல பாபங்களையும் அகற்றக் கூடியதாகும். மனுஷ்யர்களுள் சண்டாளர்கள் வரையில் எல்லோருக்கும் புக்தி முக்திகளைக்*

கொடுக்கக்கூடியதாகும், என்று. இதனுல் இந்த வ்ரதத்திற்கு எல்லோருக்கும் அதிகாரம் உண்டு என்பது சொல்லப்பட்டது. அந்த சிவராத்ரிவ்ரதமும் ஏகாதசீ வ்ரதம் போல் நித்யம் என்றும், காம்யம் என்றும் இரண்டு விதம் ஆகியது. அதில் நித்யத்தன்மை என்பது- செய்யாவிடில் பாபம், இருமுறை சொல்வது, நித்யம் என்ற சப்தம் என்ற இவைகளாலும் அறியத் தகுந்தது. அவைகள் ஸ்காந்த புராணத்தில் சொல்லப்படுகின்றன. சிறந்ததைவிடச் சிறந்தது இல்லை. ஆனுல் சிவராத்ரி என்பது சிறந்ததைவிடச் சிறந்தது. மூன்றுலகத்திற்கும் ஈச்வரனுகிய ருத்ரன் என்ற பரமேச்வரனைப் பக்தியுடன் பூஜிக்காவிடில் அந்த மனிதன் ஆயிரம் ஜன்மங்களை அடைந்து இவ்வுலகில் சுற்றுவான்; இதில் ஸம்சயமில்லை. ஓ மஹாதேவீ! ப்ரதிவர்ஷமும் மனிதனும் பதிவ்ரதையான ஸ்த்ரீயும் சிவராத்ரியில் மஹாதேவனைப் பக்தியுடன் நன்ருகப் பூஜிக்கவேண்டும். எவன் நல்ல நியமமுடையவனுய்மாக மாஸ க்ருஷ்ணபக்ஷ சதுர்தசியில் எப்பொழுதும் சிவனை முக்தியை விரும்பிவனுய்ப் பூஜிக்கின்ருனே அவன் இஷ்டமான பலனை அடைவான்

काम्यत्वं च फलश्रवणादवगन्तव्यम् । तच्च स्कान्दपुराणे पठ्यते— शिवं च पूजयित्वा यो जागर्ति च चतुर्दशीम् । मातुः पयोधररसं न पिबेत् स कदाचन । सर्वान् भुक्त्वा महाभोगान् स मृतो न प्रजायते इति । काम्यव्रतस्येशानसंहितायां वर्षसङ्ख्या पठ्यते — एवमेतद्व्रतं कुर्यात् प्रतिसंवत्सरं व्रती । द्वादशाब्दिकमेतत् स्याच्चतुर्विंशाब्दिकं तु वा । सर्वान् कामानवाप्नोति प्रेत्य चेह च मानवः इति । उपवासो जागरणं पूजा चेति त्रयं समप्राधान्येन व्रतस्वरूपम् । तदुक्तं नागरखण्डे— उपवासप्रभावेण बलादपि च जागरात् । शिवरात्रौ तथा तत्र लिङ्गस्यापि प्रपूजनात् । अक्षयान् लभते भोगान् शिवसायुज्यमाप्नुयात् इति ।

காம்யத் தன்மையும் பலனைச்சொல்லும் வாக்யங்களால் அறியத் தகுந்தது. அதுவும் சொல்லப்படுகிறது, ஸ்காந்த புராணத்தில்:- எவன் சதுர்தசியில் சிவனைப் பூஜித்து நித்ரையில்லாமல் இருக்கின்றானோ, அவன் ஒரு பொழுதும் தாயின் முலைப்பாலைப் பருகமாட்டான், அவன் எல்லாப் போகங்களையும் அனுபவித்து இறந்து மறுபடியும் பிறக்கமாட்டான் என்று. காம்ய வ்ரதத்திற்கு வர்ஷக்கணக்கு சொல்லப்படுகிறது, ஈசான ஸம்ஹிதையில் :- வ்ரதத்தை அனுஷ்டிப்பவன் ஒவ்வொரு வர்ஷத்திலும் இவ்விதமே இந்த வ்ரதத்தை அனுஷ்டிக்கவேண்டும். இந்த வ்ரதம் பன்னிரண்டு வர்ஷம் அனுஷ்டிக்க கூடியதாக ஆகும். அல்லது இருபத்துநான்கு வர்ஷம் அனுஷ்டிக்ககூடியதாகும். அனுஷ்டிக்கும் மனிதன் இவ்வுலகத்திலும் இறந்த பிறகும் எல்லாக் காமங்களையும் அடைவான், என்று. உபவாஸம், ஜாகரணம், பூஜை இம்மூன்றும் ஸமப் ப்ரதானமாயிருந்து வ்ரதத்தின் ஸ்வரூபம் ஆகும். அது சொல்லப்பட்டுள்ளது, நாகரகண்டத்தில்:- உபவாஸத்தின் ப்ரபாவத்தாலும், ஜாகரண பலத்தாலும், சிவராத்ரியில் லிங்கத்தைப் பூஜிப்பதாலும் முடிவற்ற போகங்களை அடைவான். சிவனின் ஸாயுஜ்யத்தையும் அடைவான், என்று.

यत्तु स्कान्दपुराणे द्वयमेकैकं वा पठ्यते — अथवा शिवरात्रिं च पूजाजागरणैर्नयेत्। अखण्डितव्रतो यो हि शिवरात्रि मुपोषयेत्। सर्वान् कामानवाप्नोति रुद्रेण सह मोदते। कश्चित् पुण्यविशेषेण व्रतहीनोऽपि यः पुमान्। जागरं कुरुते तत्र स रुद्रसमतां व्रजेत्। यः पूजयति भक्त्येशमनेकफलतां व्रजेत् इति। तत् अथवेत्यनुकल्पोपक्रमादशक्त विषयम्।

ஆனால், ஸ்காந்த புராணத்தில் இரண்டும் ஒவ்வொன்றும் சொல்லப்படுகிறதே '' அல்லது

சிவராத்ரியை பூஜையாலும் நித்ரையின்மையாலும் போக்கவேண்டும். எவன் வ்ரதத்தை வீணாக்காமல் சிவராத்ரியில் உபவாஸம் இருப்பானே அவன் ஸகல காமங்களையும் அடைவான்; சிவனுடன் கூடி ஆனந்திப்பான். எந்த மனிதன் புண்ய ப்ரபாவத்தால் நியமம் இல்லாவிடினும் ஜாகரணத்தை மட்டில் செய்வானே அவன் ருத்ரனுக்கு ஸமத் தன்மையை அடைவான். எவன் பக்தியுடன் ஈச்வரனைப் பூஜிப்பானோ அவன் அநேக பலன்களை அடைவான்'' என்ற வசனங்களால் எனில், அது அதவா (அல்லது) என்ற கௌணபக்ஷத்தை ஆரம்பித்திருப்பதால் சக்தியற்றவனைப்பற்றியது.

प्रदोषनिशीथवेधावत्र ग्राह्यौ। प्रदोषवेधो वायुपुराणे दर्शितः— त्रयोदश्यस्तगे सूर्ये चतसृष्वेव नाडिषु। पूर्वविद्धा तु या तत्र शिवरात्रिव्रतं चरेत् इति। कामिकेऽपि — आदित्यास्तमये काले त्वस्ति चेद्या चतुर्दशी। तद्रात्रिः शिवरात्रिः स्यात् सा भवेदुत्तमोत्तमा इति। स्मृत्यन्तरेऽपि — प्रदोषव्यापिनी ग्राह्या शिवरात्रिश्चतुर्दशी। रात्रौ जागरणं यस्मात्तस्मात्तां समुपोषयेत् इति। निशीथवेधो नारदीयसंहितायां दर्शितः— अर्धरात्रियुता यत्र माघकृष्णचतुर्दशी। शिवरात्रिव्रतं तत्र सोऽश्वमेधफलं लभेत् इति।

சிவராத்ரியில் ப்ரதோஷ காலத்திலும், அர்த்தராத்ரத்திலும் ஸம்பந்தங்கள் க்ராஹ்யங்களாகும். ப்ரதோஷகால ஸம்பந்தம் சொல்லப்பட்டுள்ளது வாயு புராணத்தில்:- ஸூர்யன் த்ரயோதசியில் அஸ்மித்த பிறகு நான்கு நாழிகைளில் த்ரயோதசியுடன் சதுர்தசி ஸம்பந்தப் பட்டிருந்தால் அதில் சிவராத்ரி வ்ரதத்தை அனுஷ்டிக்கவேண்டும் என்று. காமிகத்திலும்:- ஸூர்யாஸ்தமய காலத்தில் சதுர்தசீ இருக்குமாகில் அந்த ராத்ரி சிவராத்ரி என்றாகும். அது மிகச் சிறந்ததாகும் என்று. மற்றொரு ஸ்ம்ருதியிலும்:- சிவராத்ரி சதுர்த்தசியானது

வ்யாப்தியுள்ளதானுல் க்ராஹ்யமாகும். ஜாகரணம் என்பது ராத்ரியில் ஆகையால் அதில் உபவாஸம் இருக்கவேண்டும், என்று. அர்த்த ராத்ர ஸம்பந்தம் சொல்லப்பட்டுள்ளது நாரதீய ஸம்ஹிதையில்:- மாகமாஸ க்ருஷ்ண பக்ஷ சதுர்தசீ எப்பொழுது அர்த்த ராத்ரியுடன் கூடியிருக்கிறதோ அப்பொழுது சிவராத்ரி வ்ரதத்தை அனுஷ்டிக்கவேண்டும். அனுஷ்டிப்பவன் அச்வமேத பலனை அடைவான், என்று

ईशानसंहितायां — पूर्वेद्युरपरेद्युर्वा महानिशि चतुर्दशी। व्याप्ता सा दृश्यते यस्यां तस्यां कुर्याद्व्रतं नरः । मम प्रियकरी ह्येषा माघकृष्णचतुर्दशी। महानिश्यन्विता यत्र तत्र कुर्यादिदं व्रतम् इति। एवं च सति पूर्वेद्युरेव वा परेद्युरेव वा यत्र प्रदोषनिशीथोभयव्याप्तिस्तत्र व्रतमाचरणीयम् । तथा च स्कान्दपुराणे — त्रयोदशी यदा देवि दिनमुक्तिप्रमाणतः । जागरे शिवरात्रिस्स्यात् निशि पूर्णा चतुर्दशी । निशाद्वये चतुर्दश्यां पूर्वाऽत्याज्या शुभान्विता इति । दिनमुक्तिः - अस्तमयः । दिनद्वयेऽप्युभयव्याप्तिस्तु न सम्भाव्यते यामद्वयवृद्ध्य-भावात् । दिनव्येऽप्युभयव्याप्त्यभावोऽपि न सम्भवति यामद्वयक्ष-यस्याप्यभावात् । एकैकस्मिन् दिने यद्येकैकव्याप्तिस्तत्र पूर्वेद्युर्निशीथव्याप्तिः परेद्युः प्रदोषव्याप्तिरित्यत्र एकैकव्याप्तेः दिनद्वये समानत्वेऽपि जयायोगस्य प्रशस्तत्वाद्दर्शयोगस्य निन्दितत्वाच्च पूर्वेद्युरेवोपवासः।

ஈசான ஸம்ஹிதையில்:- முதல் நாளிலோ, மறுநாளிலோ எந்தத் தினத்தில் அர்த்தராத்ரத்தில் வ்யாப்தி உள்ளதாய் சதுர்தசீ காணப்படுகிறதோ, அதில் மனிதன் சிவராத்ரி வ்ரதத்தை அனுஷ்டிக்கவேண்டும். இந்த மாகமாஸ க்ருஷ்ணபக்ஷ சதுர்தசீ எனக்கு ப்ரீதியைச் செய்வதாய் உள்ளதல்லவா! அது எந்தத் தினத்தில் அர்த்த ராத்ரத்தில் சேர்ந்துள்ளதோ அந்தத் தினத்தில் இந்த வ்ரதத்தை அனுஷ்டிக்கவேண்டும், என்று இவ்விதமிருக்க,

முதல் நாளிலோ, மறுநாளிலோ எந்தத் தினத்தில் ப்ரதோஷகாலம் அர்த்த ராத்ரம் இரண்டிலும் வ்யாப்தியுள்ளதோ அந்தத் தினத்தில் வ்ரதத்தை அனுஷ்டிக்கவேண்டும். அவ்விதமே, ஸ்காந்த புராணத்தில்:- ஓ தேவி! எப்பொழுது த்ரயோதசீ ஸூர்யாஸ்தமயம் வரையில் உள்ளதோ, நிசியில் சதுர்தசீ பூர்ணமாயுள்ளதோ அப்பொழுது ஜாகரணத்தில் சிவராத்ரி க்ராஹ்யமாகும். இரண்டு ராத்ரிகளிலும் சதுர்தசீ இருந்தால் முன்ராத்ரியை க்ரஹிக்கவேண்டும், என்று. தினமுக்தி-அஸ்தமயம். இண்டு நாளிலும், இரண்டிலும், (ப்ரதோஷத்திலும், அர்த்த ராத்ரத்திலும்) வ்யாப்தி என்பது ஸம்பவிக்காது, இரண்டு யாமம் (பதினைந்து நாழிகை) வ்ருத்தி என்பது கிடையாதாகையால். இரண்டு நாளிலும் இரண்டிலும் வ்யாப்தி இல்லை என்பதும் ஸம்பவிக்காது. இரண்டு யாமம் (பதினைந்து நாழிகை) க்ஷயம் என்பது கிடையாதாகையால், ஒவ்வொரு தினத்திலும் ஒவ்வொன்றில் வ்யாப்தி இருந்தால், அப்பொழுது முதல் நாளில் அர்த்த ராத்ர வ்யாப்தி, மறுநாளில் ப்ரதோஷ வ்யாப்தி என்று இவைகளுள் ஒவ்வொரு நாளிலும் ஒவ்வொன்றின் வ்யாப்தி என்பது இரண்டு தினங்களில் ஸமானமாயினும், ஜயா (த்ரயோதசீ) யோகம் ப்ரசஸ்தமானதாலும், அமாவஸ்யா யோகம் நிந்திதமாயிருப்பதாலும் முதல் நாளிலேயே உபவாஸம்.

त्रयोदशीयोगप्राशस्त्यं दर्शयोगनिन्दा च स्कान्दपुराणे पठ्यते— कृष्णाष्टमी स्कन्दषष्ठी शिवरात्रिश्चतुर्दशी। एताः पूर्वयुताः कार्यास्तिथ्यन्ते पारणं भवेत्। महतामपि पापानां दृष्टा वै निष्कृतिः पुरा। न दृष्टा कुर्वतां पुंसां दर्शयुक्तां तिथिं पराम् इति।

த்ரயோதசியின் ஸம்பந்தம் ப்ரசஸ்தம் என்பதும், அமாவாஸ்யா யோகம் நிந்திதம் என்பதும் சொல்லப்படுகிறது. ஸ்காந்த புராணத்தில்:-

*கிருஷ்ணாஷ்டமீ, ஸ்கந்தஷஷ்டீ, சிவராத்ரியாகிய சதுர்தசீ இவைகள் முன் திதியுடன் கூடியவையாகில் க்ராஹ்யங்களாகும். திதியின் முடிவில் பாரணம் விதிக்கப்படுகிறது. மஹாபாபங்களுக்கும் ப்ராயச்சித்தம் முற்காலத்தில் காணப்பட்டுள்ளது. அமாவாஸ்யையுடன் கூடிய சதுர்தசியை க்ரஹிப்பவர்களுக்கு ப்ராயச்சித்தம் காணப்படவில்லை, என்று.*

यदा पूर्वेद्युर्निशीथादूर्ध्वं प्रवृत्ता चतुर्दशी परेद्युः क्षयवशान्निशीथादर्वागेव समाप्ता तदा पूर्वेद्युः प्रदोषनिशीथव्याप्त्यो-रुभयोरप्यसंभवात् परेद्युः प्रदोषव्याप्तेरेकस्याः सम्भवाच्च परविद्धैव ग्राह्या। एतदेवाभिप्रेत्य स्मर्यते —— माघासिते भूतदिनं कदाचिदुपैति योगं यदि पञ्चदश्या। जयाप्रयुक्तान्न तु जातु कुर्याच्छिवस्य रात्रिं प्रियकृच्छिवस्य इति।

*எப்பொழுது முதல் நாளில் அர்த்த ராத்ரத்திற்குப் பிறகு சதுர்தசீ ஆரம்பித்து, மறுநாளில் க்ஷய வசத்தால் அர்த்த ராத்ரத்திற்கு முன்பே முடிந்துள்ளதோ அப்பொழுது முதல்நாளில் ப்ரதோஷ கால வ்யாப்தி, அர்த்த ராத்ர வ்யாப்தி என்ற இரண்டும் இல்லாததால், மறுநாளில் ப்ரதோஷகால வ்யாப்தி என்ற ஒன்று இருப்பதால் மறுதிதியுடன் ஸம்பந்தப்பட்டதையே க்ரஹிக்க வேண்டும். இந்த அபிப்ராயத்திலேயே சொல்லப்படுகிறது. ஓர் ஸ்ம்ருதியில்:- எப்பொழுதாவது மாக மாஸம் க்ருஷ்ணபக்ஷம் சதுர்தசீ திதி அமாவாஸ்யையுடன் ஸம்பந்தத்தை அடைந்தால், அப்பொழுது த்ரயோதசியுடன் கூடிய சிவராத்ரியைச் சிவ பக்தன் அனுஷ்டிக்கக்கூடாது, என்று.*

यदा पूर्वेद्युः प्रदोषादूर्ध्वं प्रवृत्ता चतुर्दशी परेद्युः क्षयवशात् प्रदोषादर्वागेव समाप्ता तदा परेद्युर्व्याप्तिद्वयाभावात् पूर्वेद्युर्निशीथ व्याप्तेः सद्भावात् जयायोगाच्च पूर्वेद्युरेवोपवासः। अत्रायं विवेकः -

दिनद्वयेऽपि निशीथव्याप्तौ तदव्याप्तौ च प्रदोषव्याप्तिर्नियामिका। तथा दिनद्वयेऽपि प्रदोषव्याप्तौ तदव्याप्तौ च निशीथव्याप्तिर्नियामिका। एकैकस्मिन् दिने एकैकव्याप्तौ जयायोगो नियामकः इति।

*எப்பொழுது முதல் நாளில் ப்ரதோஷ காலத்திற்குப் பிறகு ப்ரவ்ருத்தித்துள்ள சதுர்தசீ மறுநாளில் குறைவினுல் ப்ரதோஷகாலத்திற்கு முன்பே முடிந்துவிட்டதோ, அப்பொழுது மறுநாளில் ப்ரதோஷ கால வ்யாப்தி அர்த்தராத்ர வ்யாப்தி என்ற இரண்டும் ஸம்பவிக்காததால், முதல் நாளில் அர்த்த ராத்ர வ்யாப்தி ஸம்பவிப்பதாலும், த்ரயோதசீ திதி ஸம்பந்தம் இருப்பதாலும், முதல் நாளிலேயே உபவாஸம். இவ்விஷயத்தில் இவ்விதம் விளக்கம்:- ''இரண்டு நாளிலும் அர்த்தராத்ர வ்யாப்தி இருந்தாலும், இரண்டு நாளிலும் அந்த வ்யாப்தி இல்லாவிடினும், ப்ரதோஷகால வ்யாப்தியே கிரஹிப்பதற்குக் காரணமாகும். அப்படியே இரண்டு நாளிலும் ப்ரதோஷ வ்யாப்தி இருந்தாலும், இரண்டு நாளிலும் இல்லாவிடினும் அர்த்த ராத்ர வ்யாப்தியானது க்ரஹிப்பதற்குக் காரணமாகும். ஒவ்வொரு தினத்திலும் ஒவ்வொன்றின் வ்யாப்தி மட்டில் இருந்தால் த்ரயோதசீ ஸம்பந்தமானது க்ரஹிப்பதற்குக் காரணமாகும்'' என்று.*

वारविशेषेण योगविशेषेण च युक्ता त्रिस्पृशी च शिवरात्रिः प्रशस्ता। तथा च स्कान्दपुराणे — माघकृष्णचतुर्दश्यां रविवारो यदा भवेत्। भौमो वाऽथ भवेद्देवि कर्तव्यं व्रतमुत्तमम्। शिवयोगस्य योगो वै तद्भवेदुत्तमोत्तमम्। त्रयोदशीकलाप्येका मध्ये चैव चतुर्दशी॥ अन्ते चैव सिनीवाली त्रिस्पृश्यां शिवमर्चयेत् इति। ननु यदा पूर्वविद्धायामुपवासः, तदा परेद्युः किं तिथ्यन्ते पारणम्। उत तिथिमध्ये। शास्त्रं तु पक्षद्वयेऽपि समानम्। तत्र तिथ्यन्ते पारणवचनानि पूर्वमुदाहृतानि।

கிழமையின் பேதத்தாலும், யோகத்தின் பேதத்தாலும் கூடியதும் மூன்று திதிகளின் ஸம்பந்தமுடையதுமாகிய சிவராத்ரி சிறந்ததாகும். அவ்விதமே, ஸ்காந்த புராணத்தில்:- மாகமாஸ கிருஷ்ணபக்ஷ சதுர்தசியில் பானுவாரம் சேர்ந்தாலும் அல்லது பௌமவாரம் (செவ்வாய்) சேர்ந்தாலும் அதில் சிறந்த சிவராத்ரி வ்ரதத்தைச் செய்ய வேண்டும். ஓ தேவீ! சிவம் என்ற யோகம் சேர்ந்தால் அந்த சிவராத்ரி வ்ரதம் மிகச் சிறந்ததாகும். ஸூர்யோதயத்தில் த்ரயோதசீ ஒரு கலையாவது இருந்து, பிறகு நடுவில் சதுர்த்தசி ப்ரவ்ருத்தித்து, முடிவில் அமாவாஸ்யை சேர்ந்தால், அந்த மூன்று திதிகள் ஸம்பந்தமுள்ள தினத்தில் (சிவராத்ரியில்) சிவனைப் பூஜிக்கவேண்டும் என்று. ஓய்! எப்பொழுது முன் திதியுடன் கூடிய சதுர்த்தசியில் உபவாஸமோ, அப்பொழுது மறுநாளில் திதியின் முடிவில் பாரணமா ? அல்லது திதியின் நடுவில் பாரணமா? சாஸ்த்ரமோவெனில் இரண்டு பக்ஷத்திலும் ஸமானமாய் உள்ளது. அதில் திதியின் முடிவில் பாரணம் செய்யவேண்டியதைப் பற்றிய வசனங்கள் முன்பு சொல்லப்பட்டுள்ளன.

तिथिमध्ये पारणवचनं तु स्कान्दपुराणे पठ्यते — उपोषणं चतुर्दश्यां चतुर्दश्यां तु पारणम्। कृतैस्सुकृत लक्षैश्च लभ्यते वाऽथ वा न वा। ब्रह्माण्डोदरमध्ये तु यानि तीर्थानि सन्ति वै। संस्थितानि भवन्तीह भूतायां पारणे कृते। तिथीनामेव सर्वासामुपवासव्रतादिषु। तिथ्यन्ते पारणं कुर्याद्विना शिवचतुर्दशीम् इति। बाढमस्ति तद्द्विविधं शास्त्रम्। तस्य च द्विविधस्य शास्त्रस्य प्रतिपत्प्रकरणोक्तन्यायेन व्यवस्था द्रष्टव्या। यदा यामत्रयादर्वागेव चतुर्दशी समाप्यते तदा तिथ्यन्ते पारणम्। यदा च चतुर्दशी यामत्रयमतिक्रामति तदा चतुर्दशीमध्ये पूर्वाह्णे पारणं कुर्यात्।

திதியின் நடுவில் பாரணத்தை விதிக்கும் வசனமானது சொல்லப்படுகிறது, ஸ்காந்த புராணத்தில்:- சதுர்தசியில் உபவாஸமும், சதுர்த்தசியில் பாரணமும் லக்ஷம் புண்யம் செய்திருந்தாலும் கிடைக்கலாம், அல்லது கிடைக்காமலுமிருக்கலாம். ப்ரம்ஹாண்டத்தின் நடுவில் எந்தத் தீர்த்தங்கள் இருக்கின்றனவோ அவைகள் எல்லாம் சதுர்த்தசியில் பாரணம் செய்தால் அதிலேயே இருக்கின்றன. எல்லாத் திதிகளுக்கும் உபவாஸம் வ்ரதம் முதலியவைகளில் திதியின் முடிவில் பாரணம் விதிக்கப்படுகிறது, சிவசதுர்த்தசியைத் தவிர்த்து" என்று. ஆம், அவ்விதம், இரண்டு விதமான சாஸ்த்ரம் இருக்கிறது. அந்த இரண்டுவிதமான சாஸ்த்ரத்திற்கும் ப்ரதமா நிர்ணய ப்ரகரணத்தில் சொல்லிய ந்யாயப்படி வ்யவஸ்தையை அறியவும். எப்பொழுது மூன்று யாமத்திற்கு முன்பே சதுர்த்தசீ முடிகிறதோ, அப்பொழுது திதியின் முடிவில் பாரணம். எப்பொழுது, சதுர்த்தசீ மூன்று யாமத்திற்கு மேலுள்ளதோ, அப்பொழுது சதுர்த்தசீயின் நடுவில் முற்பகலில் பாரணத்தைச் செய்யவேண்டும்.

## पञ्चदशीनिर्णयः

अथ पञ्चदशी निर्णीयते। सा च व्रतादौ परविद्धैव ग्राह्या। तथा च ब्रह्मकैवर्ते— भूतविद्धा न कर्तव्या अमावास्या च पूर्णिमा। वर्जयित्वा मुनिश्रेष्ठ सावित्रीव्रतमुत्तमम् इति । स्कान्देऽपि — भूतविद्धा सिनीवाली न तु तत्र व्रतं चरेत्। वर्जयित्वा तु सावित्रीव्रतं तु शिखिवाहन इति।

### பஞ்சதசீ நிர்ணயம்

இனி பஞ்சதசீ தீர்மானிக்கப்படுகிறது. அது வ்ரதம் முதலியதில் பின் திதியுடன் கூடியதே க்ராஹ்யமாகும். அவ்விதமே. ப்ரம்ஹகைவர்த்தத்தில்:- ஓ முனிச்ரேஷ்ட! அமாவாஸ்யை பூர்ணிமா இவை இரண்டும் சதுர்தசியுடன்

கூடியதாகில் க்ராஹ்யமல்ல, சிறந்த ஸாவித்ரியின் வ்ரதத்தைத்தவிர்த்து, என்று. **ஸ்காந்தத்திலும்:-** ஓ ஸுப்ரஹ்மண்ய ! அமையானது சதுர்த்தசியுடன் கூடியிருந்தால் அதில் வ்ரதத்தை அனுஷ்டிக்கக்கூடாது, ஸாவித்ரீ வ்ரதத்தைத் தவிர்த்து, என்று.

**सावित्र्या राजकन्यया चीर्णं व्रतं सावित्री व्रतम् । तच्च भविष्योत्तरे दर्शितम्— कथयामि कुलस्त्रीणां महिम्नो वर्धनं परम् । यथा चीर्णं व्रतं पूर्वं सावित्र्या राजकन्यया इति । तच्च पौर्णमास्याममावास्यायां च विहितम् । तस्मिन् व्रते पूर्वविद्धा ग्राह्या । एतदेवाभिप्रेत्य नारदीयपुराणे— दर्शं च पूर्णमासं च पितुः सांवत्सरं दिनम् । पूर्वविद्धामकुर्वाणो नरकं प्रतिपद्यते इति । दर्शादिश्राद्धकालः श्राद्धकाण्डे निरूपितः ।**

ஸாவித்ரீ என்ற ராஜகுமாரியால் அனுஷ்டிக்கப்பட்ட வ்ரதம் ஸாவித்ரீ வ்ரதம். அதுவும் சொல்லப்பட்டுள்ளது. **பவிஷ்யோத்தரத்தில்:-** குலஸ்த்ரீகளுக்குப் பெருமையை வ்ருத்தி செய்யக்கூடியதும் சிறந்ததுமான வ்ரதத்தை முற்காலத்தில் ராஜகுமாரியான் ஸாவித்ரீ என்பவளால் எவ்விதம் அனுஷ்டிக்கப்பட்டதோ அவ்விதம் சொல்கிறேன் என்று அந்த வ்ரதம் பூர்ணிமையிலும் அமையிலும் விதிக்கப்பட்டுள்ளது. அந்த வ்ரதத்தில் முன் திதியுடன் கூடிய திதி க்ராஹ்யமாகும். இந்த அபிப்ராயத்தைக் கொண்டே சொல்லப்பட்டுள்ளது **நாரதீய புராணத்தில்:-** அமை, பூர்ணிமை, பிதாவின் ப்ரத்யாப்திகதிதி இவைகளை முன் திதியுடன் கூடியதாய் க்ரஹிக்காதவன் நரகத்தையடைவான், என்று. அமை முதலிய ச்ராத்தத்தின் காலம் ச்ராத்த காண்டத்தில் சொல்லப்பட்டுள்ளது.

## इष्टिकालनिर्णयः

इष्टिकालस्तु निर्णीयते । अत्र गोभिलः — पक्षान्ता उपवस्तव्याः पक्षादयो हि यष्टव्याः इति । अत्रोपवास-शब्देनाग्न्युपस्तरणं विवक्षितम् । तस्मिन् क्रियमाणे यजमानसमीपे देवतानां निवासात् । तथा च श्रुतिः— उपास्मिन् श्वो यक्ष्यमाणे देवता वसन्ति य एवं विद्वानग्निमुपस्तृणाति इति । उपवासशब्दाभिधेयाग्न्युप-स्तरणान्तस्य पर्वदिनकर्तव्यस्यान्वाधानादेश्चतुरंशवति पर्वणि आद्यास्त्रयोंऽशाः कालः । पर्वणश्चतुर्थोऽशः प्रतिपद आद्यास्त्रयोंऽशाश्च यागस्य कालः ।

### இஷ்டி கால நிர்ணயம்

*இஷ்டி காலம் தீர்மானிக்கப்படுகிறது. இவ்விஷயத்தில்,* **கோபிலர்:-** *பக்ஷங்களின் முடிவில் உள்ள திதிகள் உபவாஸத்திற்கு அர்ஹங்கள். பக்ஷங்களின் முதல் திதிகள் யாகத்திற்கு அர்ஹங்கள், என்று இதில் உபவாஸ என்ற சப்தத்தால் அக்னியின் உபஸ்தரணம் (தர்ப்பங்களைப் பரப்புதல்) சொல்வதற்கு இஷ்டமாகியது. அதைச் செய்வதால் யஜமானனின் ஸமீபத்தில் தேவதைகள் வஸிக்கின்றூர்கள். அவ்விதமே சொல்லுகிறது. ச்ருதி* **(வேதம்):-** *''உபாஸ்மின்...ஸ்த்ருணாதி'', என்று எந்த ஆஹிதாக்னி இவ்விதம் அறிந்து அக்னியினிடத்தில் தர்ப்பங்களைப் பரப்புகின்றுனே, நாளைய தினம் யாகம் செய்யப்போகின்ற அவனது ஸமீபத்தில் தேவதைகள் வஸிக்கின்றனர், என்று. உபவாஸ சப்தத்தால் செய்யக்கூடிய அக்னி உபஸ்தரணத்தை முடிவாயுடைய பர்வதினத்தில் செய்யவேண்டிய அந்வாதானம் முதலியதற்கு, நான்கு பாகங்களாயுள்ள பர்வத்தில் முன்புள்ள மூன்று பாகங்கள் காலம் ஆகிறது. பர்வத்தின் நான்காவது பாகமும் ப்ரதமையின் முதல் மூன்று பாகங்களும் யாகத்திற்குக் காலம்.*

तदाह लोकाक्षिः - त्रीनंशानौपसक्थस्य यागस्य चतुरो विदुः। द्वावंशावुत्सृजेदन्त्यौ यागे च व्रतकर्मणि इति। यागकालं यज्ञपार्श्वोऽप्याह — पञ्चदश्याः परः पादः पक्षादेः प्रथमास्त्रयः। कालः पार्वणयागे स्यादथान्ते तु न विद्यते इति। वृद्धशातातपोऽपि — पर्वणो यश्चतुर्थांश आद्याः प्रतिपदस्त्रयः। यागकालः स विज्ञेयः प्रातरुक्तो मनीषिभिः इति। अत्र प्रातरिति विशेषणात् सूर्योदयस्योपरि मुहूर्तत्रयं यागस्य मुख्यः काल इति कालनिर्णये।

*அதைச் சொல்லுகிறார், லோகாக்ஷி:- அந்வாதானத்திற்கு மூன்று பாகங்களையும் யாகத்திற்கு நான்கு பாகங்களையும் காலம் என்கின்றனர். யாகத்திலும் அந்வாதானத்திலும் கடைசி பாகங்களைத் தள்ளவேண்டும், என்று. யாக காலத்தைச் சொல்லுகிறார். யஜ்ஞபார்ச்வரும்:- பஞ்சதசியின் (அமை பூர்ணிமை) கடைசி பாதமும், ப்ரதமையின் முதல் மூன்று பாகங்களும் இஷ்டிக்கும் காலமாகும். அதற்குமேல் காலம் இல்லை. வ்ருத்தசாதாதபரும்:- பர்வத்தின் நான்காவது பாகம் எதுவோ மறுநாள் காலையில் ப்ரதமையின் முதல் மூன்று பாகங்கள் எவையோ அது யாககாலம் என்று அறியத்தகுந்தது, என்று வித்வான்களால் சொல்லப்பட்டுள்ளது. இவ்விடத்தில் ப்ராத: என்ற விசேஷணத்தால், ஸுர்யோதயத்திற்கு மேல் மூன்று முஹுர்த்தம் யாகத்திற்கு முக்யகாலம் என்று கால நிர்ணயத்தில் சொல்லப்பட்டுள்ளது.*

प्रतिपदश्चतुर्थांशं निषेधति कात्यायनः — न यष्टव्यं चतुर्थेऽशे यागैः प्रतिपदः क्वचित्। रक्षांसि तद्विलुम्पन्ति श्रुतिरेषा सनातनी इति। यदा पर्वप्रतिपदावुदयमारभ्य सम्पूर्णतिथी भवतस्तदा न कोऽपि सन्देहः। यदा तु खण्डतिथी तदा निर्णयमाह गोभिलः — आवर्तने यदा सन्धिः पर्वप्रतिपदोर्भवेत्। तदहर्याग इष्येत परतश्चेत् परेऽहनि।

पर्वप्रतिपदोः सन्धिरर्वागावर्तनाद्यदि । तस्मिन्नहनि यष्टव्यं पूर्वेद्युस्तदुपक्रमः । आवर्तनात्परस्सन्धिर्यदि तस्मिन्नुपक्रमः । परेद्युरिष्टिरित्येष पर्वद्वयविनिश्चयः इति ।

*ப்ரதமையின் நான்காவது பாகத்தை நிஷேதிக்கின்ருர், காத்யாயனர்:- ப்ரதமையின் நான்காவது பாகத்தில் ஒரு பொழுதும் யாகம் செய்யக்கூடாது. அதை ராக்ஷஸர்கள் அழிக்கின்ருர்கள் என்று ஸநாதனமான வேதம் சொல்லுகிறது. எப்பொழுது பர்வமும் ப்ரதமையும் உதயம் முதல் ஸம்பூர்ண திதிகளாய் இருக்கின்றனவோ, அப்பொழுது ஸந்தேஹம் ஒன்றும் இல்லை. எப்பொழுது அவை துண்ட திதிகளாக இருக்கின்றனவோ அப்பொழுது நிர்ணயத்தைச் சொல்லுகிருர் கோபிலர்:- பர்வம் ப்ரதமை இவைகளின் சேர்க்கை எப்பொழுது ஆவர்த்தன காலத்தில் ஏற்படுமோ, அந்தத் தினத்தில் யாகத்தைச் செய்யவேண்டும். ஆவர்த்தனத்திற்குப் பிறகு சேர்க்கை ஏற்பட்டால் மறுநாளில் யாகத்தைச் செய்யவேண்டும். பர்வம் ப்ரதமை இவைகளின் சேர்க்கை ஆவர்த்தன காலத்திற்கு முன்பு ஏற்பட்டால் அன்றைய தினத்தில் யாகத்தைச் செய்யவேண்டும். அதற்கு முதல் அந்வாதானத்தைச் செய்யவேண்டும். ஆவர்த்தனத்திற்குப் பிறகு சேர்க்கை ஏற்பட்டால் அந்தத் தினத்தில் அந்வாதானம் செய்யவேண்டும். மறுநாளில் இஷ்டியைச் செய்யவேண்டும் என்ற இது இரண்டு பர்வங்களிலும் நிர்ணயமாம்.*

लोकाक्षिरपि — पूर्वाह्णे वाऽथ मध्याह्ने यदि पर्व समाप्यते । उपोष्य तत्र पूर्वेद्युस्तदहर्याग इष्यते । अपराह्णेऽथवा रात्रौ यदि पर्व समाप्यते । उपोष्य तस्मिन्नहनि श्वोभूते याग इष्यते इति । अह्नो मध्यं मध्याह्न इति व्युत्पत्तेरावर्तनमत्र मध्याह्नशब्देनाभिधीयते ।

एवमपराह्णशब्दोऽप्यत्र यौगिकः। न तु पञ्चधा विभागमाश्रित्य प्रवृत्तः। अत एव गोभिलेनावर्तनशब्दः प्रयुक्तः।

லோகாக்ஷியும்;- பூர்வாஹ்ணத்திலோ அல்லது மத்யாஹ்னத்திலோ பர்வம் முடியுமாகில், அப்பொழுது முதல்நாளில் உபவாஸம் இருந்து, அன்றைய தினத்தில் யாகத்தைச் செய்யவேண்டும். அபராஹ்ணத்திலோ அல்லது ராத்ரியிலோ பர்வம் முடியுமாகில், அந்தத் தினத்தில் உபவாஸம் இருந்து மறுநாளில் யாகத்தைச் செய்யவேண்டும். பகலின் நடு மத்யாஹ்னம், என்ற வ்யுத்பத்தியால் இவ்விடத்தில் ஆவர்த்தனம் மத்யாஹ்ன சப்தத்தால் சொல்லப்படுகிறது. இவ்விதம் அபராஹ்ண சப்தமும் யௌகிகமாகும். ஐந்துவிதமாய்ச் செய்யப்படும் விபாகத்தைப்பற்றியதல்ல. ஆகையாற்றான் கோபிலர் ஆவர்த்தன சப்தத்தைச் சொல்லியுள்ளார்.

शातातपोऽपि — पूर्वाह्णे मध्यमे वाऽह्नि यदि पर्व समाप्यते। तदोपवासः पूर्वेद्युस्तदहर्याग इष्यते इति। अह्नः पूर्वो भागः पूर्वाह्णः। अह्नोऽपरो भागोऽपराह्णः। अतस्ताभ्यां शब्दाभ्यामावर्तनात् पूर्वोत्तरभागावधीयेते। कालादर्शेऽपि — पर्वप्रतिपदोस्सन्धिर्मध्याह्ने पूर्वतोऽपि वा। अन्वाधानं पूर्वदिने तद्दिने याग इष्यते। परतश्चेत् परेऽह्नीष्टिस्तद्दिनेऽन्वाहितिर्भवेत् इति।

சாதாதபரும்:- பூர்வாஹ்ணத்திலோ மத்யாஹ்னத்திலோ பர்வம் முடிவடையுமாகில், அப்பொழுது முதல்நாளில் உபவாஸமும், அன்றைய தினத்தில் யாகமும் விதிக்கப்படுகிறது. பகலின் பூர்வபாகம் பூர்வாஹ்ணம், பகலின் பின் பாகம் அபராஹ்ணம், ஆகையால் அந்த பூர்வாஹ்ண அபராஹ்ண சப்தங்களால் ஆவர்த்தனத்திற்கு முன் பாகமும் பின் பாகமும் சொல்லப்படுகின்றன. காலாதர்சத்திலும்:- பர்வம், ப்ரதமை இவைகளின் சேர்க்கை

மத்யாஹ்னத்திலோ அதற்கு முன்போ இருந்தால், அந்வாதானத்தை முன் தினத்திலும், அந்தத் தினத்தில் யாகத்தையும் அனுஷ்டிக்கவேண்டும். சேர்க்கை பிறகு இருந்தால் மறு நாளில் இஷ்டியும், அந்தத் தினத்தில் அந்வாதானமும் செய்யவேண்டும்.

वाजसनेयिनां पौर्णमास्यां विशेष उक्तस्तत्रैव — आवर्तनादधस्सन्धिर्यद्यन्वाधाय तद्दिने । परेद्युरिष्टिरित्याहुर्विप्रा वाजसनेयिनः इति । यदि मध्याह्नात् पूर्वं सन्धिः स्यात्तदा सन्धिदिने अन्वाधाय परेद्युरिष्टिः कार्येति वाजसनेयिमतानुवर्तिन आहुरित्यर्थः । तदाह भाष्यार्थसङ्ग्रहकारः — मध्यन्दिनात्स्यादहनीह यस्मिन् प्राक् पर्वणस्सन्धिरियं तृतीया । सा खर्विका वाजसनेयिमत्या तस्यामुपोष्याथ परेद्युरिष्टिः इति ।

வாஜஸநேயி (சுக்லயஜுர்வேதி)களுக்கு பூர்ணிமையில் விசேஷம் சொல்லப்பட்டுள்ளது. அவ்விடத்திலேயே (காலாதர்சத்திலேயே), "ஆவர்த்தனத்திற்கு முன்பு சேர்க்கை ஏற்பட்டால், அந்தத் தினத்தில் அந்வாதானம் செய்து மறுநாளில் இஷ்டியைச் செய்யவும், என்கின்றனர் வாஜஸநேயி ப்ராம்ஹணர்கள்" என்று. மத்யாஹ்னத்திற்கு முன் சேர்க்கை ஏற்பட்டால், அப்பொழுது சேர்க்கை ஏற்பட்ட தினத்தில் அந்வாதானம் செய்து, மறுநாளில் இஷ்டியைச் செய்யவேண்டும், என்று வாஜஸநேயி மதத்தை அனுஸரித்தவர்கள் சொல்லுகின்றனர், என்று பொருள். அதைச் சொல்லுகிறார். பாஷ்யார்த்த ஸங்க்ரஹகாரர்:- எந்தத் தினத்தில் மத்யாஹ்னத்திற்கு முன்பு பர்வத்திற்கும் ப்ரதமைக்கும் சேர்க்கை ஏற்படுகிறதோ, இது வாஜஸநேயிகளின் மதப்படி மூன்றுவதான கர்விகா எனப்படும். அன்றைய தினத்தில் உபவாஸம் இருந்து, மறு நாளில் இஷ்டியைச் செய்யவேண்டும்.

आवर्तनादूर्ध्वमस्तमयादर्वाग्यदा सन्धिर्भवति तदा सन्धिमती तिथिः प्रथमा। रात्रौ सन्धिश्चेत्सा तिथिर्द्वितीया। ते उभे अपेक्ष्य पूर्वाह्णे सन्धिमती तिथिस्तृतीया। तत्र पर्वकालस्याल्पत्वात् खर्विकेत्युच्यते। एवं च सति वाजसनेयिनां न क्वापि सन्धिदिनात्पूर्वेद्युरन्वाधानादिकमस्ति।

ஆவர்த்தனத்திற்கப் பிறகு, அஸ்தமயத்திற்கு முன் எப்பொழுது சேர்க்கை ஏற்படுகிறதோ அப்பொழுது ஸந்தியுடன் கூடிய அந்தத் திதியானது 'ப்ரதமா' எனப்படும். ராத்ரியில் சேர்க்கை ஏற்பட்டால் அந்தத் திதி 'த்விதீயா' எனப்படும். அவ்விரண்டையும் அபேக்ஷித்து பூர்வாஹ்ணத்தில் சேர்க்கையுடைய திதியானது 'த்ருதீயா' எனப்படுகிறது. அதில் பர்வ காலம் அல்பமாய் இருப்பதால் அது கர்விகா என்று சொல்லப்படுகிறது. இவ்விதமிருக்கும்பொழுது, வாஜஸநேயிகளுக்கு ஸந்தி தினத்திற்கு முந்தியதினத்தில் அந்வாதானம் முதலியது என்பது எப்பொழுதும் இல்லை.

वाजसनेयिव्यतिरिक्तानामावर्तने ततः पूर्वं वा यदा सन्धिर्भवति, तदा सन्धिदिने पर्वचतुर्थांशे इष्टिर्भवति। तत्र विशेषमाह गर्गः — प्रतिपद्यप्रविष्टायां यदि चेष्टिस्समाप्यते । पुनः प्रणीय कृत्स्नेष्टिः कर्तव्या यागवित्तमैः इति । पर्वणश्चतुर्थोऽशः प्रतिपदस्त्रयोंऽशाश्च यागकालत्वेन विहिताः । तत्र पर्वचतुर्थांशस्य विषय उदाहृतः। प्रतिपदंशानां तु विषय उदाह्रियते। उषःकाले सन्धौ प्रतिपदः प्रथमांशो यागकालः । निशीथे सन्धौ द्वितीयांशः । रात्रिप्रारम्भे सन्धौ तृतीयांशः।

வாஜஸநேயிகளைத் தவிர்த்த மற்றவர்களுக்கு, ஆவர்த்தன காலத்திலோ, அதற்கு முன்போ, எப்பொழுது ஸந்தி ஏற்படுகிறதோ அப்பொழுது ஸந்தியுள்ள தினத்தில்

பர்வத்தின் நான்காவது பாகத்தில் இஷ்டி ஏற்படுகிறது. அதில் விசேஷத்தைச் சொல்லுகிறார். கர்க்கர்:- ப்ரதமை வருவதற்குள் இஷ்டியை முடித்துவிட்டால், மறுபடியும் ப்ரணயனம் செய்து இஷ்டி முழுவதும் யாகத்தை நன்கு அறிந்தவர்களால் செய்யப்படவேண்டும். பர்வத்தின் நான்காவது பாகமும், ப்ரதமையின் மூன்று பாகங்களும் யாக காலமாக விதிக்கப்பட்டுள்ளன. அதில் பர்வத்தின் நான்காவது பாகத்திற்கு விஷயம் சொல்லப்பட்டுள்ளது. ப்ரதமையின் பாகங்களுக்கு விஷயம் சொல்லப்படுகிறது. உஷ:காலத்தில் (விடியற்காலை) ப்ரதமையின் சேர்க்கையானல் ப்ரதமையின் முதல் பாகம் யாக காலம், அர்த்தராத்ரத்தில் ஸந்தியானல் ப்ரதமையின் இரண்டாவது அம்சம் யாக காலம், ராத்ரியின் ஆரம்பத்தில் ஸந்தியானல் ப்ரதமையின் மூன்ருவது பாகம் யாக காலம்.

ननु अनेन न्यायेनापराह्णे सन्धौ प्रतिपच्चतुर्थांशस्य च यागकालत्वं प्राप्नोति । तच्च प्रतिषिद्धम्, न यष्टव्यं चतुर्थेऽश इति स्मृतेः । अतस्तादृशे विषये याग एव लुप्येतेति चेन्मैवम् । वृद्धशातातपेन प्रतिप्रसवाभिधानात् । सन्धिर्यद्यपराह्णे स्याद्यागं प्रातः परेऽहनि । कुर्वाणः प्रतिपद्भागे चतुर्थेऽपि न दुष्यति इति ।

இந்த ந்யாயத்தால் அபராஹ்ணத்தில் ஸந்தியானல் ப்ரதமையின் நான்காவது பாகத்திற்கு யாக காலத்தன்மை ப்ராப்தமாகிறது. அது நிஷேதிக்கப்படுகிறது, "ப்ரதமையின் நான்காவது பாகத்தில் யாகம் செய்யக்கூடாது" என்று ஸ்ம்ருதி யிருப்பதால். ஆகையால் அவ்விதம் விஷயத்தில் யாகமே லோபத்தை அடையக்கூடும்? எனில், இவ்விதம் சொல்லக்கூடாது. வ்ருத்தசாதாதபர் ப்ரதிப்ரஸவத்தைச் (மறுப்பு) சொல்லியிருப்பதால்:- அபராஹ்ணத்தில் பர்வ ப்ரதமை ஸந்தி ஏற்பட்டால், யாகத்தை மறுநாளில் காலையில் ப்ரதமையின் நான்காவது பாகத்தில் செய்தாலும் தோஷத்தை அடையான்" என்று,

कालादर्शेऽपि — चतुर्थः पर्वणो योंऽशो येंऽशाः प्रतिपदस्त्रयः। आद्यास्तस्याश्चतुर्थोऽपि यागकाल उदाहृतः इति । तस्याः - प्रतिपदश्चतुर्थोऽप्यंशो यागकाल इत्यर्थः । एवं तर्हि चतुर्थांशे याग प्रतिषेधो निर्विषयस्स्यादिति चेन्मैवम् । सद्यस्कालविषये चरितार्थत्वात्। तं विषयं दर्शयति कात्यायनः — सन्धिश्चेत्सङ्गवादूर्ध्वं प्राक्वेदावर्तनाद्रवेः । सा पौर्णमासी विज्ञेया सद्यस्कालविधौ तिथिः इति।

*காலாதர்சத்திலும்:- பர்வத்தின் நான்காவது பாகம் எதுவோ ப்ரதமையின் முதல் மூன்று பாகங்கள் எவையோ இவைகளும் ப்ரதமையின் நான்காவது பாகமும் யாக காலங்கள் என்று சொல்லப்பட்டுள்ளன. அந்த ப்ரதமையின் நான்காவது பாகமும் யாககாலம் என்பது பொருள். இவ்விதமாகில், அப்பொது ப்ரதமையின் நான்காவது பாகத்தில் யாகத்தின் நிஷேதம் விஷயமற்றதாகுமே? எனில் இவ்விதம் சொல்லக்கூடாது. ஸத்யஸ்கால விஷயத்தில் ப்ரயோஜனமுள்ளதாய் ஆவதால் (ஸத்யஸ்காலம்-யாக தினத்திலேயே அந்வாதானத்தையும் செய்வது) அந்த விஷயத்தைச் சொல்லுகிறார் காத்யாயனர்:- பர்வ ப்ரதமைகளின் ஸந்தி ஸங்கவ காலத்திற்குப்பின், ஆவர்த்தனத்திற்கு முன் ஏற்படுமாகில், அந்தப் பூர்ணிமா திதிஸத்யஸ்கால விதியில் அர்ஹமாகும்.*

भाष्यार्थसङ्ग्रहकारोऽपि — अन्वाहितिश्चास्तरणोपवासः पूर्वेद्युरेते खलु पौर्णमास्याम्। आवर्तनात् प्राग्यदि पर्वसन्धिस्सद्यस्तदा वा क्रियते समस्तम् इति। कालादर्शेऽपि — पूर्णिमाप्रतिपत्सन्धिर्यदि सङ्गवमन्तरा । आवर्तनं च स्यात्तर्हि सद्यस्कालविधिर्भवेत् इति । आपस्तम्बोऽपि — पौर्णमास्यां त्वन्वाधान परिस्तरणोपवासास्सद्यो वा सद्यस्कालायां सर्वं क्रियते इति । सङ्गवावर्तनयोर्मध्ये पौर्णमासी प्रदिपदोस्सन्धौ सति सन्धिदिनात् पूर्वेद्युर्वा अन्वाधानादिपरिस्तरणान्तं,

सन्धिदिने वा अन्वाधानादिकं सर्वं क्रियत इत्यर्थः । एवं सति प्रतिपच्चतुर्थांशप्रतिषेधवचनमत्र विषये सावकाशम् ।

**பாஷ்யார்த்த ஸங்க்ரஹகாரரும்:-** அந்வாதானம், ஆஸ்தரணம், உபவாஸம் இவைகளை முதல் நாளிலேயே செய்யவேண்டும். பூர்ணிமையில் ஆவர்த்தனத்திற்கு முன் பர்வப்ரதமை ஸந்தியானால் ஸத்யஸ்கால விதியாய் எல்லாவற்றையும் அப்பொழுதே செய்யலாம். **காலாதர்சத்திலும்:-** பூர்ணிமை, ப்ரதமை இவைகளின் ஸந்தி ஸங்கவத்திற்கும் ஆவர்த்தனத்திற்கும் மத்யத்தில் இருந்தால் அப்பொழுது ஸத்யஸ்காலவிதி விஹிதமாகும். **ஆபஸ்தம்பரும்:-** பூர்ணிமையில் அந்வாதானம், பரிஸ்தரணம், உபவாஸம் இவைகள் செய்யப்படவேண்டும். அல்லது, ஸத்யஸ்கால இஷ்டியில் இஷ்டிதினத்தன்றே எல்லாவற்றையும் செய்யலாம். ஸங்கவ ஆவர்த்தன காலங்களுக்கு மத்யத்தில் பூர்ணிமை ப்ரதமை இவைகளின் ஸந்தி ஏற்பட்டால், அந்தத் தினத்திற்கு முதல் நாளில் அந்வாதானம் முதல் பரிஸ்தரணம் முடியச் செய்யவேண்டும். அல்லது, ஸந்திதினத்தில் அந்வாதானம் முதல் எல்லாவற்றையும் செய்யலாம் என்பது பொருள். இவ்விதமிருக்க ப்ரதமையின் நான்காவது பாகத்தை நிஷேதித்த வசனம் இந்த விஷயத்தில் இடமுள்ளதாய் ஆகிறது.

विकृतिरूपाया इष्टेस्तु कालमाह कात्यायनः — आवर्तनात् प्राग्यदि पर्वसन्धिः कृत्वा तु तस्मिन् प्रकृतिं विकृत्याः । तत्रैव यागः परतो यदि स्यात्तस्मिन् विकृत्याः प्रकृतेः परेद्युः इति । आवर्तने ततः पुरा वा पर्वसन्धौ तस्मिन् सन्धिदिने प्रथमं प्रकृतियागं कृत्वा पश्चाद्विकृतेस्सम्बन्धी यागः कर्तव्यः । यद्यावर्तनात् परतस्सन्धिः, तदा केवलविकृतियागस्सन्धिदिने कर्तव्यः । प्रकृतियागस्तु केवलसन्धिदिनात् परेद्युरनुष्ठेय इत्यर्थः ।

விக்ருதிரூபமான இஷ்டிக்குக் காலத்தைச் சொல்லுகிறார்:- (தர்சபூர்ணமாஸ இஷ்டிகள் ப்ரக்ருதிகள், மற்ற இஷ்டிகள் விக்ருதிகளாம்) காத்யாயனர்:- ஆவர்த்ததனத்திற்கு முன் பர்வ ப்ரதமை ஸந்தி ஏற்பட்டால் அன்ற ப்ரக்ருதி யாகத்தை முன்னால் செய்து, பிறகு விக்ருதியாகத்தையும் செய்யவேண்டும். ஆவர்த்தனத்திற்குப் பிறகு ஸந்தி ஏற்பட்டால், அப்பொழுது அந்தத்தினத்தில் விக்ருதி யாகத்தைச் செய்யவேண்டும். மறு நாளில் ப்ரக்குதி யாகத்தைச் செய்யவேண்டும். ஆவர்த்தனத்திலோ, அதற்கு முன்போ பர்வப்ரதமை ஸந்தி ஏற்பட்டால், அந்த ஸந்தி தினத்தில் முதலில் ப்ரக்ருதி யாகத்தைச் செய்து பிறகு விக்ருதியாகத்தைச் செய்யவேண்டும். ஆவர்த்தனத்திற்குப் பிறகு ஸந்தி ஏற்பட்டால், அப்பொழுது விக்ருதியாகத்தை மட்டில் ஸந்திதினத்தில் செய்யவேண்டும். ப்ரக்ருதி யாகத்தையோ வெனில் ஸந்திதினத்திற்கு மறுநாளில் செய்யவேண்டும் என்பது பொருள்.

आवर्तने ततः पूर्वकाले ततः परकाले वा सन्धिरित्येतेषु त्रिष्वपि पक्षेषु सन्धिदिन एव विकृतेरनुष्ठानम् । प्रकृतेस्तु पूर्वोक्तरीत्या सन्धिदिनात् परेद्युश्चानुष्ठानं व्यवतिष्ठते । तदेवं सम्पूर्णतिथौ इष्टिपशुसोमविकृतीनां केवल पर्वैव कालः । खण्डतिथौ तु पूर्वोक्तः कालः । तदेतदापस्तम्ब आह— यदीष्ट्या यदि पशुना यदि सोमेन यजेतामावास्यायां पौर्णमास्यां वा यजेत इति ।

ஆவர்த்தன காலத்தில், அதற்கு முற்காலத்தில், அதற்குப் பிற்காலத்தில் பர்வப்ரதமை ஸந்தி என்ற மூன்று பக்ஷங்களிலும், ஸந்தி தினத்திலேயே விக்ருதியாகத்தைச் செய்யவேண்டும். ப்ரக்ருதி யாகத்திற்கோவெனில் முன் சொல்லிய ப்ரகாரம் ஸந்திதினத்திலும் மறுநாளிலும் அனுஷ்டானம் என்று ஆகிறது. ஆகையால் இவ்விதம் பூர்ணதிதியில் இஷ்டி, பசு, ஸோமம் இவைகளின்

விக்ருதிகளுக்குக் கேவல பர்வமே காலம். துண்டு திதியிலோவெனில் முன் சொல்லியபடி காலம். இவ்விஷயத்தைச் சொல்லுகிருர் ஆபஸ்தம்பர்: 'இஷ்டியையாவது, பசுயாகத்தையாவது ஸோமயாகத்தையாவது செய்வதானுல் அமாவாஸ்யையிலாவது பூர்ணிமையிலாவது செய்யவேண்டும்'' என்று.

पर्वप्रतिपदोः सन्धिमुपजीव्यान्वाधानेष्टिकालौ व्यवस्थापितौ। अत्र तिथिक्षयवृद्ध्योः सन्धिविषयं कश्चिद्विशेषमाह कात्यायनः— परेऽह्नि घटिकान्यूनास्तथैवाभ्यधिकाश्च याः। तदर्धक्लृप्त्या पूर्वस्मिन् ह्रासवृद्धी प्रकल्पयेत् इति। लोकाक्षिपि — तिथेः परस्या घटिकास्तु यास्स्युर्न्यूनास्तथा वाऽभ्यधिकास्तु तासाम्। अर्धं वियोज्यं च तथा प्रयोज्यं ह्रासे च वृद्धौ प्रथमे दिने स्यात् इति।

பர்வம், ப்ரதமை இவைகளின் ஸந்தியை அவலம்பித்து அந்வாதானகாலம், இஷ்டிகாலம் இவைகள் நிர்ணயிக்கப்பட்டன. இவ்விஷ்யத்தில் திதியின் குறைவு, வ்ருத்தி இவைகளில் ஸந்தி விஷயமான ஒரு பேதத்தைச் சொல்லுகிருர் காத்யாயனர்:- மறு திதியில் எவ்வளவு நாழிகைகள் குறைந்துள்ளனவோ, அல்லது எவ்வளவு நாழிகைகள் அதிகமாயுள்ளனவோ, அந்த நாழிகைக்ளைப் பாதி செய்து, முதல் நாளில் முதல் திதியின் நாழிகைகளுடன் சேர்க்கவேண்டும். குறைவானுல் குறைந்த நாழிகைகளை, வ்ருத்தியானுல் வ்ருத்தியுள்ள நாழிகைகளை. லோகாக்ஷியும்:- மறு திதியின் நாழிகைகள் எவ்வளவு குறைவாகவோ, அதிகமாகவோ உள்ளனவோ அவைகளின் பாதியை முதல் திதியில் குறைவு பக்ஷத்தில் குறைக்கவேண்டும். வ்ருத்தி பக்ஷத்தில் சேர்க்கவேண்டும்.

कालादर्शेऽपि — पर्वणि क्षयगे वृद्धौ परस्याह्नः क्षयोर्जिती। अर्धक्लृप्त्या यथान्यायं दिने पूर्वत्र योजयेत् इति। पर्वणि - पूर्णिमायाममायां च, क्षयगे - क्षयगामिनि सति, वृद्धौ - वृद्धिगामिनि

सति, परस्याह्नः - प्रतिपदः, क्षयोर्जिती - ह्रासवृद्धी, - अर्धक्लृप्त्या अर्धकल्पनेन, यथान्यायं - यथासङ्ख्यं क्रमेण पूर्वत्र दिने योजयेदित्यर्थः। पूर्वेद्युः पूर्णिमा अमावास्या वा पञ्चदश घटिका परेद्युः प्रतिपदपि तावती तदा यथास्थितामेवोपजीव्य सन्धिर्विज्ञेयः। यदा तु प्रतिपदि षड्घटिकाः क्षीयन्ते तदा घटिकात्रयक्षयः पर्वणि योजनीयः। तस्मिन् योजने द्वादशघटिकाऽमावास्या भवति। अनेन न्यायेन षड्घटिकावृद्धौ घटिकात्रये योजिते अष्टादशघटिकाऽमावास्या भवति। तथा सत्यावर्तनादूर्ध्वं सन्धिर्भवति। तदेवं सन्धिं विज्ञाय तदनुसारेणान्वाधानेष्टी अनुष्ठातव्ये।

காலாதர்சத்திலும்:- பர்வதிதியானது க்ஷயத்தை யடைந்தாலும், வ்ருத்தியை யடைந்தாலும் மறுதிதியின் க்ஷயம் வ்ருத்திகளைப் பாதியாய்ச் செய்து, ந்யாயப்படி பூர்வதிதியுடன் சேர்க்கவேண்டும். பர்வம் - அமாவாஸ்யையும், பூர்ணிமையும். க்ஷயகே - குறைவையடைந்திருந்தால். வ்ருத்தௌ-வ்ருத்தி அடைந்திந்தால். பரஸ்யாஹ்ன:-மறுதிதியாகிய ப்ரதமையில் க்ஷயோர்ஜிதீ-குறைவு வ்ருத்திகளை. அர்த்தக்லுப்த்யா - பாதியாகச் செய்து, யதாந்யாயம்- கணக்குப்படி முறையாய் முன் திதியில் சேர்க்கவேண்டும் என்பது பொருள். முதல் நாளில் பூர்ணிமையோ, அமாவாஸ்யையோ பதினைந்து நாழிகையுள்ளது. மறு நாளில் ப்ரதமையும் அவ்வளவே உள்ளது. அப்பொழுது உள்ளபடியே ஸந்தி அறியத் தகுந்தது. எப்பொழுது ப்ரதமையில் ஆறு நாழிகைகள் குறைகின்றனவோ, அப்பொழுது மூன்று நாழிகைகளின் குறைவைப் பர்வத்தில் சேர்க்கவேண்டும். அப்படிச் சேர்ப்பதில் அமாவாஸ்யை பன்னிரண்டு நாழிகை உள்ளது என்று ஆகிறது. இந்த ந்யாயத்தால் ப்ரதமை ஆறு நாழிகை வ்ருத்தியானல் மூன்று நாழிகை முன் திதியில் சேர்த்தால்

அமாவாஸ்யை பதினெட்டு நாழிகை உள்ளது என்ற ஆகிறது. அப்படி இருக்கும்பொழுது ஆவர்த்தனத்திற்குப் பிறகு ஸந்தி ஆகிறது. ஆகையால் இவ்விதம் ஸந்தியைத் தெரிந்துகொண்டு அதை அனுஸரித்து அந்வாதானம் இஷ்டி இவைகளை அனுஷ்டிக்கவேண்டும்.

**बोधायनकात्यायनमतानुसारिणा ममावास्यायां विशेषः ।**

बोधायनकात्यायनमतानुसारिणाममावास्यायां विशेषमाह कात्यायनः— सिनीवाल्यपराह्णे चेदृगापस्तम्बगामिनाम् । सायाह्ने द्वित्रनाडी चेत् सा बोधायनकण्वयोः इति ।

**போதாயன, காத்யாயன மதங்களை அனுஸரித்தவர்களுக்கு அமையில் பேதம்.** போதாயன காத்யாயன மதானுஸாரிகளுக்கு அமாவாஸ்யையில் பேதத்தைச் சொல்லுகிறார் **காத்யாயனர்:-** அமாவாஸ்யை அபராஹ்ணத்தில் இருந்தால் ருக்வேதிகள், ஆபஸ்தம்பீயர்கள் இவர்களுக்கு அன்று அமை. ஸாயாஹ்நத்தில் இரண்டு அல்லது மூன்று நாழிகை இருந்தால் அது போதாயன, கண்வஸூத்ர அனுஸாரிகளுக்கு அமை.

श्राद्धेऽप्येवमेव तिथिर्ग्राह्या । यतस्स एवाह— चतुर्दशीदिनान्ते तु चतुस्त्रिघटिका यदि । अमाभूते च कर्तव्यं श्राद्धं वाजसनेयिभिः इति । कालनिर्णये — अस्तमयादर्वाक् स्वल्पामावास्योपेतायामपि चतुर्दश्यां श्राद्धान्वाधाने कर्तव्ये इति । एतच्च तिथिसाम्ये द्रष्टव्यम् । तिथिक्षये तु अस्तमयात् परं चतुर्दश्यनुवृत्तावपि तस्मिन्नेव दिने श्राद्धान्वाधाने । तथा च बोधायनः — चतुर्दशी तु सम्पूर्णा द्वितीया क्षयकारिणी । चरुरिष्टिरमायां स्यात् भूते कव्यादिका क्रिया इति । चतुर्दशी सम्पूर्णा - अस्तमयपर्यन्तवर्तिनी अधिका वा, द्वितीया क्षयकारिणी - प्रतिपद्दिने सायाह्न वर्तिनी । अत्रामायां चरुः

स्थालीपाक इष्टिश्च स्यात्, भूते - चतुर्दश्याम्, कव्यादिका - श्राद्धान्वाधाने इत्यर्थः ।

ச்ராத்தத்திலும் இவ்விதமே திதியானது க்ரஹிக்கத்தகுந்தது. ஏனெனில் காத்யாயனரே சொல்கிறார்- சதுர்த்தசியின் ஸாயாஹ்னத்தில் அமையானது நான்கு அல்லது மூன்று நாழிகை இருந்தால் சதுர்தசியிலேயே வாஜஸநேயிகள் ச்ராத்தத்தைச் செய்யவேண்டும். கால நிர்ணயத்தில்:- அஸ்தமயத்திற்கு முன் ஸ்வல்பமான அமாவாஸ்யையுடன் கூடியிருந்தாலும் சதுர்தசியில் ச்ராத்தத்தையும் அந்வாதானத்தையும் செய்யவேண்டும். இது திதிகள் ஸமமாயுள்ள பக்ஷத்தில் என்றறியவும். திதிக்ஷயமாகும் விஷயத்திலோவெனில் அஸ்தமயத்திற்குப் பிறகு சதுர்த்தசி இருந்தாலும் அதே தினத்தில் ச்ராத்தம், அந்வாதானம் இவைகளைச் செய்யவேண்டும். அவ்விதமே, போதாயனர்:- சதுர்த்தசீ பூர்ணமாயுள்ளது. த்விதீயை க்ஷயத்தை அடைந்துள்ளது. ஸ்தாலீபாகத்தையும் இஷ்டியையும் அமாவாஸ்யையில் செய்யவும். சதுர்த்தசியில் ச்ராத்தம் முதலியதைச் செய்யவும். சதுர்த்தசீ ஸம்பூர்ணமாயுள்ளது-அஸ்தமயம் வரையில் உள்ளது. அல்லது அதிகமாயுள்ளது. த்விதீயை க்ஷயத்தை அடைந்துள்ளது-ப்ரதமா தினத்தில் (த்விதீயை) ஸாயாஹ்னத்தில் உள்ளது. இப்பொழுது அமாவாஸ்யையில் ஸ்தாலீபாகமும் இஷ்டியும் செய்யப்பட வேண்டும். பூதே=சதுர்த்தசியில், கவ்யாதிகா = ச்ராத்தம், அந்வாதானங்கள், என்பது பொருள்.

स एव — चतुर्दशी चतुर्यामे त्वमावास्या न दृश्यते । श्वोभूते प्रतिपद्यत्र भूते कव्यादिका क्रिया इति । अस्यार्थः - चतुर्दशीदिनचतुर्थयामे त्वमावास्या न दृश्यते । श्वोभूते अमावास्यायामस्तमयात् प्राक् प्रतिपद्दृश्यते, तदा भूते - चतुर्दश्यां कव्यादिका क्रियेत्यर्थः ।

**போதாயனரே:-** சதுர்த்தசி தினத்தின் நான்காவது யாமத்தில் அமாவாஸ்யை காணப்படுவதில்லை. மறுநாளில் ஸாயங்காலத்தில் ப்ரதமை காணப்படுகிறது. அப்பொழுது சதுர்த்தசியில் ச்ராத்தம் முதலியதைச் செய்யவேண்டும். இதன் பொருள்:- சதுர்த்தசீ தினத்தின் நான்காவது யாமத்தில் அமாவாஸ்யை காணப்பட வில்லை. மறு நாளில் அமாவாஸ்யை தினத்தில் அஸ்தமயத்திற்கு முன் ப்ரதமை காணப்படுகிறத. அப்பொழுது சதுர்த்தசியில் ச்ராத்தம் முதலியது செய்யப்படவேண்டும் என்பது பொருள்.

स्मृत्यन्तरेऽपि — अमायां तु दिवा युक्ता प्रतिपद्घटिकाऽपि वा। तत्रैवेष्टिसमाप्तिस्स्यात्तिथिवृद्धिर्भवेन्न चेत्। द्वितीयाऽस्तमये काले घटिकैकाऽपि दृश्यते। अत्र यागं न कुर्वन्ति विश्वे देवाः पराङ्मुखाः। द्वितीया तु दिवा युक्ता नाड्येका प्रतिपत्तिथौ। अमावास्या चतुर्थेऽशे यागस्तत्र समाप्यते इति। पूर्वेद्युरन्वाधानं अमावास्यायां यागसमाप्तिः इत्यर्थः।

**ஓர் ஸ்ம்ருதியிலும்:-** அமாவாஸ்யை தினத்தில் ஒரு நாழிகை அளவாவது ப்ரதமை இருந்தால், அன்றைய தினத்திலேயே இஷ்டியை முடிக்கவேண்டும்; திதிக்கு வ்ருத்தி ஏற்படாமலிருந்தால். ப்ரதமாதினத்தில் ஸாயங்காலத்தில் த்விதீயை ஒரு நாழிகையாவது காணப்பட்டால் அந்தத் தினத்தில் யாகம் செய்யக்கூடாது. செய்தால் எல்லாத்தேவர்களும் திரும்பிச் செல்கின்றனர். ப்ரதமை தினத்தில் ஒரு நாழிகையாவது த்விதீயை இருந்தால். அமாவாஸ்யா தினத்தின் நான்காவது பாகத்தில் இஷ்டியை முடிக்கவேண்டும். முதல் நாளில் அந்வாதானம் செய்யவேண்டும். அமாவாஸ்யையில் இஷ்டியின் ஸமாப்தி செய்யவேண்டும் என்பது பொருள்.

बोधायनः — यदा चतुर्दशी यामं तुरीयमनुपूरयेत् । अमावास्या क्षीयमाणा तदैव श्राद्धमाचरेत् इति । अस्यार्थः - चतुर्दश्यास्तुरीयं यामं यदाऽमावास्यानुपूरयेत् - स्पृशेत्। सा च पुनः क्षीयमाणा परेद्युश्चतुर्थयामे प्रतिपद्युक्ता तदैव - अमावास्यास्पृष्टचतुर्दशीदिने एव श्राद्धान्वाधाने कुर्यात् इत्यर्थः ।

போதாயனர்:- எப்பொழுது சதுர்த்தசியின் நான்காவது யாமத்தில் அமை சேர்ந்துள்ளதோ, அமாவாஸ்யை மறு நாளில் க்ஷயத்துடன் கூடியதோ அப்பொழுது அன்றே (முதல் நாளிலேயே) ச்ராத்தத்தைச் செய்யவேண்டும். இதன் பொருள்:- சதுர்த்தசியின் நான்காவது யாமத்தில் அமாவாஸ்யை சேர்ந்தால், அந்த அமையானது க்ஷயத்துடன் கூடியதாயிருந்தால் மறு நாளில் நான்காவது யாமத்தில் ப்ரதமையுடன் கூடியிருக்கிறதோ, ததைவ - அமாவாஸ்யையுடன் கூடிய சதுர்த்தசீ தினத்திலேயே, ச்ராத்தம், அந்வாதானம் இவைகளைச் செய்யவேண்டும். என்பது பொருள்.

बोधायनवृद्धशातातपौ — द्वितीया त्रिमुहूर्ता चेत् प्रतिपद्यापराह्णिकी । अन्वाधानं चतुर्दश्यां परतस्सोमदर्शनात् इति । प्रतिपद्दिने सोमदर्शनादमायामिष्टिरित्यर्थः । कालादर्शेऽपि — द्वितीया त्रिमुहूर्ता चेत् प्रतिपद्यापराह्णिकी । भूतेऽन्वाहितिरिष्टिस्तु श्वश्च चन्द्रस्य दर्शनात् इति । प्रतिपद्यस्तमयात् पूर्वं द्वितीया त्रिमुहूर्ता चेत्तदा भूते - चतुर्दश्यामन्वाधानम् । इष्टिस्तु श्वः - चतुर्दश्याः परेद्युर्भवेत् । तस्मात् श्वश्चन्द्रस्य दर्शनात् - चतुर्दश्युत्तरदिनादुत्तरदिने चन्द्रस्य दर्शनात्तत्रेष्टिर्न कर्तव्येत्यर्थः ।

போதாயனரும், வ்ருத்தசாதாபரும்:- ப்ரதமா தினத்தில த்விதீயை அபராஹ்ணத்தில் மூன்று முஹூர்த்தம் (ஆறு நாழிகை) உள்ளதாயிருந்தால்,

அப்பொழுது சதுர்த்தசியில் அந்வாதானத்தைச் செய்யவும். ப்ரதமா தினத்தில் சந்த்ர தர்சனம் ஆவதால். ப்ரதமா தினத்தில் சந்த்ரன் காணப்படுவதால் அமா தினத்தில் இஷ்டி செய்யப்படவேண்டும் என்பது பொருள். **காலாதர்சத்திலும்:-** ப்ரதமா தினத்தில் அபராஹ்ணத்தில் த்விதீயை மூன்று முஹூர்த்தம் இருந்தால். சதுர்த்தசியில் அந்வாதானம், இஷ்டி அதற்கு மறுநாளில், அதற்கு மறு நாளில் சந்த்ர தர்சனம் ஆவதால். ப்ரதமா தினத்தில் அஸ்தமயத்திற்கு முன் த்விதீயையானது மூன்று முஹூர்த்தம் இருந்தால், அப்பொழுது சதுர்த்தசியில் அந்வாதானம். இஷ்டியோவெனில், ச்வ:-சதுர்த்தசிக்கு மறு நாளில் செய்யப்படவேண்டும். சதுர்த்தசிக்கு மறுநாளுக்கு மறு நாளில் சந்த்ரன் காணப்படுவதால் அதில் இஷ்டி செய்யத்தகாதது. என்பது பொருள்.

त्रिमुहूर्तेति घटिकामात्रस्याप्युपलक्षणम्, अर्वागस्तमयाद्यत्र द्वितीया घटिका भवेत्। तत्र यागं न कुर्वीत तदा चन्द्रस्य दर्शनात् इति स्मृतेः। चन्द्रदर्शनराहित्यमेवाभिप्रेत्य बोधायनकारिकासु पठ्यते—
इष्टेरलं प्रतिपदोऽह्नि तदैव नाड्यस्सप्ताष्ट वा यत्र भवन्ति तस्मात्। क्षीणासु नाडीषु दिनस्य पूर्वः कल्पोऽथ वृद्धौ तु भवेद्द्वितीयः इति। अयमर्थः —अमावास्यातिथेः सम्बन्धिनीषु नाडीषु क्षीणासु सतीषु तस्मिन् दिने अस्तमयात् पूर्वं प्रतिपदस्सम्बन्धिन्यो नाड्यस्सप्ताष्ट वा यदि भवन्ति तदा तद्दिनमिष्टेरलं योग्यम्। सोऽयमेकः पक्षः। अमावास्याप्रतिपदौ यदा वर्धेते अस्तमयात्परं प्रतिपदनुवर्तते, तदा द्वितीयः कल्पो भवेत्। अमावास्यायामन्वाधाय सोमदर्शनरहिते प्रतिपद्दिने यागः कर्तव्यः इति। एवं च तिथिवृद्धिप्रक्रमे चतुर्दश्यामस्तऽमयात् पूर्वं अमावास्यायोगे अमावास्यायां चास्तमयात् पूर्वं प्रतिपद्योगे च प्रतिपद्दिनेऽस्तमयात् परं प्रतिपदनुवृत्तौ तिथिवृद्धिर्भवेन्न चेत् इति पूर्वोक्तवचनात् प्रतिपद्युक्तामावास्याया-मन्वाधानं, प्रतिपदि यागः कर्तव्यः।

மூன்று முஹூர்த்தம் என்ற சொல்லியது ஒரு நாழிகை என்பதையும் சொல்லும். ''எப்பொழுது அஸ்தமயத்திற்கு முன் த்விதீயை ஒரு நாழிகை இருக்குமோ அதில் யாகத்தைச் செய்யக்கூடாது. அந்தத் தினத்தில் சந்த்ரன் காணப்படுவதால்'' என்று ஸ்ம்ருதி உள்ளது. சந்த்ர தர்சனம் இல்லாமையை அபிப்பிராயத்திற் கொண்டே போதாயன காரிகையில் சொல்லப்படுகிறது:- ''இஷ்டேரலம் ....த்விதீய:'' என்று. இந்த ச்லோகத்தின் பொருள் இவ்விதம்:- அமாவாஸ்யா திதியைச் சேர்ந்த நாழிகைகள் குறைந்திருக்கும்பொழுது அந்தத் தினத்தில் அஸ்தமயத்திற்கு முன் ப்ரதமையைச் சேர்ந்த நாழிகைகள் ஏழு அல்லது எட்டு இருந்தால். அப்பொழுது அந்தத் தினம் இஷ்டிக்கு யோக்யமானதாகும். இது ஒரு பக்ஷம் . அமாவாஸ்யையும், ப்ரதமையும் எப்பொழுது வ்ருத்தியை அடைகின்றனவோ, அஸ்தமயத்திற்குப் பிறகு ப்ரதமை இருக்கிறதோ, அப்பொழுது இரண்டாவது பக்ஷம் ஆகிறது. அமாவாஸ்யாதினத்தில் அந்வாதானம் செய்து, சந்த்ர தர்சனம் இல்லாத ப்ரதமா தினத்தில் யாகத்தைச் செய்யவேண்டும் என்று. இவ்விதம் திதி வ்ருத்தியானால் சதுர்த்தசியில் அஸ்தமயத்திற்கு முன் அமாவாஸ்யை சேர்ந்தாலும், அமாவாஸ்யையில் அஸ்தமயத்திற்கு முன் ப்ரதமை சேர்ந்தாலும், ப்ரதமா தினத்தில் அஸ்தமயத்திற்கப் பிறகு ப்ரதமை இருந்தாலும், ''திதி வ்ருத்தி ஆகாமலிருந்தால்'' என்று முன் சொல்லிய வசனத்தால், ப்ரதமையுடன் கூடிய அமாவாஸ்யையில் அந்வாதானத்தையும் ப்ரதமையில் யாகத்தையும் செய்யவேண்டும்.

तिथिसाम्ये तिथिक्षये च चतुर्दश्यामन्वाधानं पर्वणि यागः । स्मृत्यन्तरेऽपि — आदित्येऽस्तमिते चन्द्रः प्रतीच्यामुदियाद्यदा । प्रतिपद्यतिपत्तिस्स्यात् पञ्चदश्यां यजेत्तदा । अमावास्यास्य पूर्वेद्युरदृष्टेन्दुः प्रशस्यते । दृष्टचन्द्रे न कर्तव्यो यागस्तत्र परेऽहनि ।

दृष्टचन्द्रदिने चेत् स्यात् देवा यान्ति पराङ्मुखाः इति । प्रतिपद्दिनेऽस्तमयात् पूर्वं घटिकामात्रं द्वितीयासद्भावे चन्द्रस्य दर्शनात् तत्र यागो न कर्तव्यः इत्यर्थः ।

*திதி ஸமமாயிருந்தாலும், திதி க்ஷயமாயிருந்தாலும் சதுர்த்தசியில் அந்வாதானம், பர்வத்தில் யாகம். ஓர் ஸ்ம்ருதியிலும்:- ஸூர்யன் அஸ்தமித்த பிறகு சந்த்ரன் மேற்குத் திக்கில் எப்பொழுது உதயமாகின்றனோ, அப்பொழுது ப்ரதமா தினத்தில் செய்யாமல் முதல் நாளில் யாகத்தைச் செய்ய வேண்டும். இந்த யாகத்திற்கு முதல் நாளில் சந்த்ர தர்சனம் இல்லாத அமாவாஸ்யையே ச்லாக்யம் எனப்படுகிறது. சந்த்ர தர்சனம் உள்ள மறுநாளில் யாகத்தைச் செய்யக் கூடாது. சந்த்ர தர்சனம் உள்ள தினத்தில் செய்தால் தேவர்கள் திரும்பிச் செல்கிறார்கள். ப்ரதமா தினத்தில் அஸ்தமயத்திற்கு முன் ஒரு நாழிகையளவு த்விதீயை இருந்தால் சந்த்ர தர்சனம் ஆவதால், அன்று யாகத்தைச் செய்யக் கூடாது, என்பது பொருள்.*

कात्यायनोऽपि — अन्वाधानं भूततिथ्यां तु कुर्यात् सायादौ चेत् सम्प्रविष्टा द्वितीया । तस्यां तिथ्यां दर्शनात् प्रत्यगिन्दोः पर्वण्युक्तो यागकालो नितान्तः इति । वृद्धवसिष्ठः — इन्दौ निरुप्ते हविषि पुरस्तादुदिते विधेः । यद्वैगुण्यं हुते तस्मिन् पश्चादपि हि तद्भवेत् इति । अयमर्थः — सम्पूर्णचतुर्दश्यामविचारेणामावास्याबुद्धिं कृत्वा हविर्निर्वापे कृते तस्मिन् दिने उषःकाले पूर्वस्यां दिशि चन्द्रमा उदेति, तदा दर्शकालस्याप्राप्तत्वात् कालापराधं निमित्तीकृत्य दर्शदेवता अपनीय दात्रादिगुणविशिष्टान्यग्न्यादि देवतान्तराणि उद्दिश्य यागो विहितः तैत्तिरीयब्राह्मणे - यस्य हविर्निरुप्तं पुरस्ताच्चन्द्रमा अभ्युदेति त्रेधा तण्डुलान् विभजेद्ये मध्यमाः स्युस्तानग्नये दात्रे पुरोडाश मष्टाकपालं कुर्यात् इत्यादिना । सोऽयं दृष्टान्तः । हविषि निरुप्ते सति तत ऊर्ध्वं पूर्वस्यां दिशि चन्द्रमस्युदिते यद्वैगुण्यं तदेव वैगुण्यं होमदिने

पश्चिमदिशि चन्द्रोदये भवतीति । एतेदव बोधायनमतमुपोद्बलयति श्रुतिः — यस्मिन्नहनि पुरस्तात् पश्चात् सोमो न दृश्यते तदहर्यजेत इति।

காத்யாயனரும் — ஸாயங்காலத்தின் ஆதியில் த்விதீயை வந்துவிட்டால், அந்வாதானத்தைச் சதுர்த்தசியில் செய்ய வேண்டும். அந்தத் திதியில் மேற்குத் திக்கில் சந்த்ரன் காணப்படுவதால் பர்வதினத்தில் யாகம் ஆவச்யகம் என்று சொல்லப்பட்டுள்ளது. வ்ருத்த வஸிஷ்டர் :- ஹவிஸ்ஸை நிர்வாபம் செய்தபிறகு கிழக்கில் சந்த்ரன் உதயமானுல், அந்த இஷ்டி கார்யத்திற்கு எந்தக் குறைவோ அது மேற்கில் உதயமானுலும் ஏற்படும். இதன் பொருள் :- ஸம்பூர்ணமான சதுர்த்தசியில் கவனமின்மையால் அமாவாஸ்யை என்று நினைத்து ஹவிஸ்ஸை நிர்வாபம் செய்த பிறகு, அன்றைய தினத்தில் உஷ:காலத்தில் கிழக்குத் திக்கில் சந்த்ரன் உதிக்கின்றுன். அப்பொழுது தர்ச இஷ்டிக்குக் காலம் வராததால் காலத் தவறுதலை நிமித்தமாக்கி, தர்ச தேவதைகளை விலக்கி தாத்ருத்வாதி குணவிசிஷ்ட அக்நி முதலிய இதர தேவதைகளை உத்தேசித்து யாகமானது விதிக்கப்பட்டுள்ளது தைத்திரீய ப்ராஹ்மணத்தில் :- "யஸ்ய ..... குர்யாத்" என்று. இதன் பொருள் :- எந்த ஆஹிதாக்நி ஹவிஸ்ஸை நிர்வாபம் செய்த பிறகு, கிழக்குத் திக்கில் சந்த்ரன் உதிக்கின்றுனே அவன் தண்டுலங்களை மூன்று விதமாய்ப் பிரிக்க வேண்டும். நடுத்தரமாயுள்ள தண்டுலங்களைத் தாதாவான அக்நிக்கு அஷ்டாகபால புரோடாசமாய்ச் செய்ய வேண்டும் என்று. இது த்ருஷ்டாந்தம். ஹவிஸ்ஸை நிர்வாபம் செய்த பிறகு, கிழக்கத் திக்கில் சந்த்ரன் உதித்திருக்கும் பொழுது எந்தக் குறைவோ, அந்தக் குறைவே ஹோம தினத்தில் மேற்குத் திக்கில் சந்திரோதயம் ஆனுலும் உண்டாகிறது. இந்தப் போதாயன மதத்தையே பலப்படுத்துகிறது ச்ருதி :- "எந்தத்

*தினத்தில் கிழக்கிலோ மேற்கிலோ சந்த்ரன் காணப்படவில்லையோ அந்தத் தினத்தில் யாகம் செய்ய வேண்டும்'' என்று.*

चन्द्रदर्शनोपेतायां शुक्लप्रतिपदि यागानुष्ठाने प्रायश्चित्तमाह कात्यायनः— यजनीयेऽह्नि सोमश्चेद्वारुण्यां दिशि दृश्यते । तत्र व्याहृतिभिर्हुत्वा दण्डं दद्याद्द्विजातय इति । यत्तु बोधायनवचनम्— मध्याह्नात्परतो यत्र चतुर्दश्यनुवर्तते । सिनीवाली तु सा ज्ञेया पितृकार्ये तु निष्फला इति, तत् बोधायनीयव्यतिरिक्तविषयम् । अन्यथा पूर्वोक्तवचननिचयविरोधः स्यात् । पूर्णमासे बोधायनमतावलम्बिनां विशेषादर्शनाद्वाजसनेयिनामेव विशेषदर्शनात् वाजसनेय व्यतिरिक्तानां सर्वेषां पूर्वोक्त एव प्रकारोऽवगन्तव्यः ।

*சந்த்ர தர்சனத்துடன் கூடிய சுக்லபக்ஷ ப்ரதமையில் யாகம் செய்தால் ப்ராயஸ்சித்தம் சொல்லுகிறுர். **காத்யாயனர் :-** யாகம் செய்யும் தினத்தில் சந்த்ரன் மேற்குத் திக்கில் காணப்படுவாஞுகில், அப்பொழுது வ்யாஹ்ருதிகளால் ஹோமம் செய்து ப்ராஹ்மணனுக்குத் தண்டத்தை (தக்ஷிணையை)க் கொடுக்க வேண்டும். ஆனுல் **போதாயனரின் வசனம் :-** ''எப்பொழுது மத்யாஹ்நத்திற்குப் பிறகு சதுர்தசீ அனுவர்த்தித்துள்ளதோ, அந்த அமாவாஸ்யை ஸிநீவாலீ என்ற பெயருள்ளது. பித்ரு கார்ய விஷயத்தில் அது பயனற்றதாகும்'' என்று உள்ளதே எனில், அது போதாயநீயர்களைத் தவிர்த்த மற்றவர்களைப் பற்றியது. அவ்விதமில்லாவிடில் முன் சொல்லிய பல வசனங்களுக்கு விரோதம் ஏற்படக் கூடும். பூர்ணமாஸ யாகத்தில் போதாயன மதத்தை அவலம்பித்தவர்களுக்கு விசேஷம் காணப்படாததால், வாஜஸநேயிகளுக்கு மட்டில் விசேஷம் காணப்படுவதால், வாஜஸநேயிகளைத் தவிர்த்த மற்ற எல்லோருக்கும் முன் சொல்லிய ப்ரகாரமே என்று அறியப்பட வேண்டும்.*

## नक्षत्रादि निर्णयः

अथ नक्षत्रादिनिर्णयः । तत्र मार्कण्डेयः - तन्नक्षत्रमहोरात्रं यस्मिन्नस्तमितो रविः । यस्मिन्नुदेति सविता तन्नक्षत्रं दिनं भवेत् इति । अयमर्थः — द्विविधो नक्षत्रसंबन्धी कालविशेषः । अहोरात्रो दिनश्च । अनुष्ठेयं कर्मापि द्विविधम् । अहोरात्रसाध्यं, दिनसाध्यं च । उपवासैकभक्तादिक महोरात्रसाध्यम् यद्यप्यल्पकालनिष्पाद्यं भोजनमेकभक्तनक्तयोः स्वरूपम्, तथाऽप्यहोरात्रे भोजनान्तरस्य एकभक्तादिनिघातितया भोजनान्तरपरित्यागसहितस्यैव भोजनस्य एकभक्तादिस्वरूपत्वात् अहोरात्र साध्यत्वमविरुद्धम् । दानव्रतश्राद्धानामहन्येव कर्तव्यतया दानादिकं दिनसाध्यम् तत्रोपवासादौ निशीथव्यापि अस्तमयव्यापि वा नक्षत्रं ग्राह्यम् । व्रतदानादौ तु सूर्योदयव्यापि नक्षत्रं ग्राह्यमिति ।

### நக்ஷத்ரம் முதலியதின் நிர்ணயம்

இனி நக்ஷத்ரம் முதலியவை நிர்ணயிக்கப்படுகிறது. மார்க்கண்டேயர் :- எந்த நக்ஷத்ரத்தில் ஸூர்யன் அஸ்தமித்துள்ளானோ அந்த நக்ஷத்ரம் அந்த நாள் முழுவதும் சேர்ந்தது, எந்த நக்ஷத்ரத்தில் ஸூர்யன் உதிக்கின்றானோ அது அந்தப் பகலுக்கு மட்டில் ஆகும். இதன் பொருள் :- நக்ஷத்ரத்தைச் சேர்ந்த காலபேதம் இரண்டு விதம் ஆகும். பகலும், இரவும் பகலும் என்று. அனுஷ்டிக்கக் கூடிய கர்மமும் இரண்டு ப்ரகாரமாயுள்ளது. பகல் இரவுகளால் முடிக்கக் கூடியதும், பகலினால் மட்டும் முடிக்கக் கூடியதும் என்று. உபாவஸம், ஏகபக்தம் முதலியது ஒரு தினத்தால் ஸாதிக்கக் கூடியது. போஜனம், ஏகபக்தம், நக்தம் இவைகளின் ஸ்வரூபம் ஸ்வல்ப காலத்தால் செய்யக் கூடிய போஜனம் தான். ஆயினும், பகலிலும், இரவிலும் வேறு போஜனம் ஏகபக்தாதிகளைக் கெடுக்குமாகையால், மறுபடி போஜனம் செய்யாமலிருப்பது என்பதுடன் கூடிய

போஜனமே ஏகபக்தாதிகளின் ஸ்வரூபமாகையால் ஒரு பகலிலும் இரவிலும் ஸாதிக்கக் கூடியதென்பது விரோதமாகாது. தானம், வ்ரதம், ச்ராத்தம் இவைகள் பகலிலேயே செய்யப்பட வேண்டியதாகையால் தானம் முதலியவைகள் பகலில் ஸாத்யமாகியது. அதில் உபவாஸம் முதலியதில் அர்த்த ராத்ரி வயாப்தியுள்ள அல்லது, அஸ்தமய வ்யாப்தியுள்ள நக்ஷத்ரம் க்ராஹ்யமாகும். வ்ரதம், தானம் முதலியவைகளிலோ வெனில் ஸூர்யோதய வ்யாபியான நக்ஷத்ரம் க்ராஹ்யமாகும்.

तदुक्तं स्कान्दपुराणे — तत्रैवोपवसेदृक्षे यन्निशीथे यदा भवेत्। उपोषितव्यं नक्षत्रं यस्मिन्वास्तमियाद्रविः। उपवासे यदृक्षं स्यात् तद्धि नक्तैकभक्तयोः इति। अस्तमययोगो मुख्यः। निशीथयोगोऽनुकल्पः। विष्णुधर्मोत्तरे— सा तिथिस्तच्च नक्षत्रं यस्मिन्नभ्युदितो रविः। तया कर्माणि कुर्वीत ह्रासवृद्धी न कारणम् इति। एतदुपवासव्यतिरिक्त-व्रतादिविषयम्।

அது சொல்லப்பட்டுள்ளது. ஸ்காந்த புராணத்தில் :- அர்த்தராத்ரத்தில் வ்யாப்தி உள்ளது என்றைக்கோ, அன்றைக்கே உபவாஸம் இருக்க வேண்டும். எந்த நக்ஷத்ரத்தில் ஸூர்யன் அஸ்தமிக்கின்றானோ, அந்த நக்ஷத்ரத்தில் உபாவஸம் இருக்க வேண்டும். உபாவாஸத்தில் எந்த நக்ஷத்ரம் விதிக்கப்பட்டுள்ளதோ அதுவே நக்தம். ஏகபக்தம் இவைகளிலும் விஹிதமாகும். அஸ்தமயத்தில் ஸம்பந்தம் முக்யமாகும்; அர்த்த ராத்ர ஸம்பந்தம் அநுகல்பமாகும். விஷ்ணுதர்மோத்தரத்தில் :- எதில் ஸூர்யன் உதயமாயுள்ளானோ. அந்தத் திதியும், அந்த நக்ஷத்ரமும் க்ராஹ்யமாகும். அவைகளில் கர்மங்களை அநுஷ்டிக்க வேண்டும். அவைகளின் குறைவு வ்ருத்தி என்பவை காரணமாகா. இந்த வசனம் உபவாஸத்தை தவிர்த்த வ்ரதங்கள் முதலியதைப் பற்றியது.

यद्यप्यत्र सूर्योदयकाले नक्षत्रसद्भावमात्रं प्रतीयते, न तु परिमाणविशेषः, तथाऽपि त्रिमुहूर्तपरिमाणस्य तिथिषु क्लृप्तत्वात् तन्न्यायेन उदये त्रिमुहूर्तस्थं नक्षत्रं व्रतदानयोः इति वचनेन च उदयादित्रिमुहूर्तव्यापि नक्षत्रं ग्राह्यम्। नक्षत्रश्राद्धे तु अपराह्णस्य पार्वण श्राद्धकालत्वेन तद्व्याप्तिराश्रयणीया। एवं विष्कम्भादियोगे उपवासादौ अस्तमयव्यापी ग्राह्यः। दानव्रतयोरुदयादि त्रिमुहूर्तव्यापी ग्राह्यः। श्राद्धे तु कर्मकालव्यापी ।

இந்த வசனத்தில் ஸூர்யோதய காலத்தில் நக்ஷத்ரம் இருப்பது என்பது மட்டில் தோன்றுகிறது. அளவின் பேதம் காணப்படவில்லைதான். ஆயினும், மூன்று முஹூர்த்தம் என்ற அளவு திதிகளில் விதிக்கப்பட்டிருப்பதால்; அந்த ந்யாயத்தாலும் "ஸூர்யோதயத்தில் மூன்று முஹூர்த்தமுள்ள நக்ஷத்ரத்தை வ்ரதம், தானம் இவைகளில் க்ரஹிக்க வேண்டும்" என்ற வசனத்தானும் உதயம் முதல் மூன்று முஹூர்த்தம் வ்யாப்தியுள்ள நக்ஷத்ரத்தை க்ரஹிக்க வேண்டும். நக்ஷத்ர ச்ராத்தத்திலோ வெனில், அபராஹ்ணம் பார்வண ச்ராத்த காலமாகியதால், அபராஹ்ண வ்யாப்தியானது க்ரஹிக்கத் தகுந்தது. இவ்விதம் விஷ்கம்பம் முதலிய யோகங்களில் செய்யும் உபவாஸம் முதலியதில் அஸ்தமய வ்யாபியான யோகத்தை க்ரஹிக்க வேண்டும். தானத்திலும், வ்ரதத்திலும் ஸூர்யோதயம் முதல் மூன்று முஹூர்த்தம் வ்யாப்தியுள்ளதை க்ரஹிக்க வேண்டும். ச்ராத்தத்திலோ வெனில் கர்மகால வ்யாபதி யுள்ளது க்ராஹ்யமாகும்.

एवं बवादिकरणानां तिथ्यर्धपरिमितत्वेन दिनद्वयव्यापित्व-सन्देहाभावात् उदयेऽस्तमये वा यस्मिन् दिने करणसद्भावस्तस्मिन्नेव दिने तत्कर्मानुष्ठेयम्। सङ्क्रान्ति ग्रहणादिकालो नैमित्तिकस्नानादि प्रकरणे निरूपितः।

**97.** இவ்விதம் பவம் முதலிய கரணங்கள் திதியின் பாதி பரிமாணம் உள்ளதாகையால், இரண்டு நாளிலும் வ்யாப்தி இருக்கும் என்ற ஸந்தேஹம் இல்லாததால் உதயத்திலோ, அஸ்தமயத்திலோ எந்தத் தினத்தில் கரணம் இருக்கின்றதோ அதே தினத்தில் அந்தக் கர்மத்தை அநுஷ்டிக்க வேண்டும். ஸங்க்ரமணம், க்ரஹணம் முதலியவைகளின் காலம் நைமித்திகஸ்நாநம் முதலியதன் ப்ரகரணத்தில் (ஆஹ்னிக காண்டத்தில்) சொல்லப் பட்டுள்ளது.

*स्मृतिमुक्ताफले कालनिरूपणं नाम पञ्चमः परिच्छेदः ।*

*तिथिनिर्णयकाण्डः समाप्तः ॥*

***ஸ்ம்ருதி முக்தாபலம் கால நிரூபணம் என்னும் ஐந்தாவது பரிச்சேதம்***

***திதி நிர்ணய காண்டம் முற்றிற்று.***

உ

वैद्यनाथदीक्षितविरचितं स्मृतिमुक्ताफलम् ।

ஸ்ம்ருதிமுக்தாபலம்

# प्रायश्चित्तकाण्डः

## ப்ராயச்சித்த காண்டம்

—★—

श्रीरामचरणाम्भोजलीनमानसषट्पदः ।
वैद्यनाथाध्वरी प्रायश्चित्तं संगृह्य भाषते ॥

### प्रायश्चित्तम् नाम

प्रायो नाम तपः, चित्तं - निश्चयः । अनुष्ठितेन द्वादशवार्षिकादिना अवश्यं पापं निवर्तत इति विश्वासयुक्तं व्रतानुष्ठानलक्षणं तपः प्रायश्चित्तम् । तदाहाङ्गिराः — प्रायो नाम तपः प्रोक्तं चित्तं निश्चय उच्यते । तपो निश्चयसंयुक्तं प्रायश्चित्तमिहोच्यते इति । तच्च विहिताकरणादिनिमित्तवन्तं प्रति चोदनान्नैमित्तिकम् । तथा च बृहस्पतिः — विहितस्या-ननुष्ठानान्निन्दितस्य च सेवनात् । प्रायश्चित्तं यत् क्रियते तन्नैमित्तिकमुच्यते इति । अत्र विज्ञानेश्वरः — प्रायश्चित्तशब्दः पापक्षयार्थे नैमित्तिके कर्मविशेषे रूढः इति । तदेवं प्रायश्चित्तशब्दो योगेन रूढ्या च पापनिवर्तनक्षमं धर्मविशेषमाचष्टे ।

*ஸ்ரீ ராமனின் திருவடித் தாமரைகளில் லயித்துள்ள மனமாகிய வண்டையுடைய வைத்யநாத தீக்ஷிதர் என்பவர் ப்ராயப்ஸ்சித்தத்தைச் சுருக்கிச் சொல்லுகிறார்.*

*(இனி ப்ராயஶ்சித்த காண்டம் ஆரம்பிக்கப்படுகிறது. இதற்கு முன் ஐந்து காண்டங்களால் சொல்லப்பட்ட விஷயங்கள் வர்ணாச்ரமிகளுக்கு ஆவச்யமே யாகும். முற்காண்டங்களில் சொல்லியபடி தர்மங்களை அனுஷ்டிப்பவர்க்கு ப்ரதிஷித்த கர்மங்கள் ஏற்பட்டால், அவைகளால் ஏற்படும் தோஷங்களைப் பரிஹரித்துக் கொள்ளாத வரையில் அவர்களது ச்ரேயஸ்ஸுகள் தடைப்படுமாகையால், அவைகளுக்குப் பரிஹாரம் செய்யவேண்டியதும் ஆவச்யகமாக உள்ளது. அவைகளைப் பரிஹரிக்கும் விதிகளை மஹர்ஷிகள் ஆங்காங்கு விவரித்துள்ளனர். அவைகளை ஒரேயிடத்தில் அறிந்து கொள்வதற்கு ஸுலபமான வழியாகும்படி ஸ்ரீ தீக்ஷிதர் அவர்கள் பற்பல ஸ்ம்ருதிகளிலிருந்தும் பலவித ப்ராயஶ்சித்தங்களை இந்த க்ரந்தம் மூலமாய் வெளியிடுகிறார்.)*

**ப்ராயஶ்சித்த சப்தத்தின் பொருள்.**

*ப்ராய:* என்பதற்குத் தபஸ் என்று பொருள். சித்தம் என்பதற்கு நிஶ்சயம் என்று பொருள். அனுஷ்டிக்கப்பட்ட, பன்னிரண்டு வர்ஷம் அனுஷ்டிக்கக் கூடிய கர்மம் முதலியவற்றால் நிச்சயமாய்ப் பாபம் ஒழிகின்றது, என்று நம்பிக்கையுடன் கூடியதும், வ்ரதானுஷ்டான ரூபமுமாகிய தபஸ் ப்ராயஶ்சித்தம் எனப்படுகிறது. அதைச் சொல்லுகிறார், **அங்கிரஸ்:**— '''ப்ராய:' என்பது தபஸ் எனப்படுகிறது. 'சித்தம்' என்பது நிச்சயம் எனப்படுகிறது. நிச்சயத்துடன் கூடிய தபஸ்ஸு 'ப்ராயஶ்சித்தம்' எனப்படுகிறது,'' என்று. அது, விதிக்கப்பட்ட தர்மத்தைச் செய்யாதது முதலிய காரணத்தையுடையவனைக் குறித்துச் சொல்லப்படுவதால் நைமித்திகம் ஆகும். அவ்விதமே, **ப்ருஹஸ்பதி:**— விதிக்கப்பட்டுள்ள கர்மத்தைச் செய்யாததாலும், நிஷேதிக்கப்பட்ட கர்மத்தை அனுஷ்டித்ததாலும் எந்த ப்ராயஶ்சித்தம்

செய்யப்படுகிறதோ அது நைமித்திகம் எனப்படுகிறது. இவ்விஷயத்தில், விஜ்ஞானேச்வரர்:— "ப்ராயஶ்சித்தம்' என்ற சப்தமானது பாபக்ஷயத்தை ப்ரயோஜன முடையதும், நைமித்திகமுமான கர்ம விசேஷத்தில் ரூடிமாயுள்ளது," என்று. ஆகையால், இவ்விதம் ப்ராயஶ்சித்தம் என்ற சப்தமானது யோகத்தினாலும் ரூடியாலும் பாபத்தைப் போக்குவதில் சக்தியுள்ள ஓர் தர்மத்தைச் சொல்லுகிறது.

## प्रायश्चित्ताधिकारि निरूपणम्।

तत्राधिकारिणं दर्शयति मनुः — अकुर्वन् विहितं कर्म निन्दितं च समाचरन् । प्रसक्तश्चेन्द्रियार्थेषु प्रायश्चित्तीयते नरः इति । याज्ञवल्क्योऽपि — विहितस्याननुष्ठानान्निन्दितस्य च सेवनात् । अनिग्रहाच्चेन्द्रियाणां नरः पतनमृच्छति । प्रत्यवायी भवति । तस्मात्तेनेह कर्तव्यं प्रायश्चित्तं विशुद्धये । एवमस्यान्तरात्मा च लोकश्चैव प्रसीदति इति । एवं प्रायश्चित्ते कृते अस्यान्तरात्मा शुद्धतया प्रसीदति । लोकश्च संव्यवहर्तुं प्रसीदतीत्यर्थः ।

### ப்ராயஶ்சித்தத்துக்கு அர்ஹன்.

அதில் அதிகாரியைச் சொல்லுகிறார், மனு:— விதிக்கப்பட்டுள்ள கர்மத்தைச் செய்யாதவனும், நிஷித்த கர்மத்தைச் செய்பவனும், இந்த்ரியங்களின் விஷயங்களில் (சப்த ஸ்பர்ச ரூப ரஸ கந்தங்களில்) ஆஸக்தியுள்ளவனுமாகிய மனிதன் ப்ராயஶ்சித்தத்துக்கு அர்ஹனாகிறான். யாஜ்ஞவல்க்யரும்:— "விதிக்கப்பட்டுள்ள கர்மத்தைச் செய்யாததாலும், நிஷேதிக்கப்பட்ட கர்மத்தை அனுஷ்டிப்பதாலும், இந்த்ரியங்களை அடக்காததாலும் மனிதன் பதிதனாகிறான். பாபமுடையவனாகிறான். ஆகையால் அவன் சுத்திக்காக ப்ராயஶ்சித்தத்தைச் செய்ய வேண்டும். இவ்விதம் செய்வதால் இவனது அந்தராத்மாவும், உலகமும் சுத்தமாகிறது," என்று.

இவ்விதம் ப்ராயஶ்சித்தம் செய்யப்பட்டால் இவனது அந்தராத்மா சுத்தனுவதால் தோஷமற்றதாகிறது. உலகமும் வ்யவஹாரத்திற்காகச் சுத்தமாகிறது (இவனை ஒப்புக்கொள்ளுகிறது), என்பது பொருள்.

प्रायश्चित्ताकरणे एकविंशति नरकाः ।

प्रायश्चित्ताकरणे दोषमाह स एव — प्रायश्चित्तमकुर्वाणाः पापेषु निरता नराः । अपश्चात्तापिनः कष्टान् नरकान् यान्ति दारुणान् । तामिस्रं लोहशङ्कुं च महानिरयशाल्मली । रौरवं कु(श्म)म्भलं पूतिमृत्तिकं कालसूत्रकम् । संघातं लोहितोदं च सविषं संप्रतापनम् । महानरककाकोलसञ्जीनवमहापथम् । अवीचिमन्धतामिस्रं कुम्भीपाकं तथैव च । असिपत्रवनं चैव तपनं चैकविंशकम् । महापातकजैर्घोरैरुपपातकजैस्तथा । अन्विता यान्त्यचरित प्रायश्चित्ता नराधमाः इति ।

**ப்ராயஶ்சித்தம் செய்யாவிடில் 21 நரகங்கள்.**

*ப்ராயஶ்சித்தம் செய்து கொள்ளாவிடில் தோஷத்தைச் சொல்லுகிறார், யாஜ்ஞவல்க்யரே:— ப்ராயஶ்சித்தத்தைச் செய்யாதவர்களும், பாபத்தில் ஈடுபட்டிருப்பவர்களும், பஶ்சாத்தாபம் இல்லாதவர்களுமாகிய மனிதர்கள் கஷ்டமானவும், பயங்கரங்களுமான நரகங்களை யடைகின்றனர். தாமிஸ்ரம், லோஹசங்கு, மஹாநிரயம், சால்மலீ, ரௌரவம், கும்பளம், பூதிம்ருத்திகம், காலஸூத்ரம், ஸங்காதம், லோஹிதோதம், ஸவிஷம், ஸம்ப்ரதாபனம், மஹாநரகம், காகோலம், ஸஞ்ஜீவநம், மஹாபதம், அவீசி, அந்ததாமிஸ்ரம், கும்பீபாகம், அஸிபத்ரவனம், தபனம் இந்த இருபத்தொரு நரகங்களை மஹாபாதகங்கள் உபபாதகங்கள் இவைகளுடன் கூடிய மனிதர்கள் ப்ராயஶ்சித்தம் அனுஷ்டிக்காதவர்களாகில் அடைகின்றனர்.*

एकविंशतिमित्येतत् प्रधाननरकापेक्षयोक्तम्। महापातकजैरिति च पापमात्रोपलक्षणम्। तथा च पापतारतम्यात् फलतारतम्यं दर्शितं विष्णुधर्मोत्तरे— अष्टाविंशतिकोट्यः स्युर्घोराणि नरकाणि वै। महापातकिनश्चात्र सर्वेषु नरकाब्धिषु। आचन्द्रतारकं यावत् पीड्यन्ते विविधैर्वधैः। अतिपातकिनश्चान्ये निरयार्णवकोटिषु। एकविंतिसंख्येषु पादोनब्रह्मकल्पकम्। चतुर्दशसु पच्यन्ते कल्पार्धं समपापिनः। उपपातकिनश्चापि तदर्धं यान्ति मानवाः। शेषैः पापैस्तदर्धं च कालक्लृप्तिरियं स्मृता इति।

இருபத்தொன்று என்று சொல்லியது முக்யமான நரகங்களைப் பற்றிச் சொல்லியது. மஹாபாதகங்கள் என்றதும் எல்லாப் பாபங்களையும் சொல்லும். அவ்விதம் இருப்பதால் பாபத்தின் தாரதம்யத்தை அனுஸரித்து, பலனின் தாரதம்யமும் சொல்லப்பட்டது, விஷ்ணுதர்மோத்தரத்தில்:— கொடிய நரகங்கள் இருபத்தெட்டுக் கோடிகளாகும். மஹாபாதகம் செய்தவர்கள் இந்த எல்லா நரக ஸமுத்ரங்களில் சந்த்ரனும், நக்ஷத்ரங்களும் உள்ள வரையில் பல தொந்தரைகளால் வருத்தப்படுகின்றனர். மற்ற அதிபாதகம செய்தவர்கள் இருபத்தொரு என்ற கணக்குள்ள ஸமுத்ரம் போன்ற கோடி நரகங்களில் முக்கால் ப்ரம்ஹ கல்பம் வரையில் வருத்தப்படுகின்றனர். ஸமபாதகம் செய்தவர்கள் பாதி கல்பம் வரையில் வருத்தப்படுகின்றனர். உபபாதகிகளும் கால் கல்பம் வரையில் நரகங்களை அடைகின்றனர். மற்றப் பாபங்களுடன் கூடியவர்கள் அரைக்கால் கல்பம் வரையில் வருத்தப்படுகின்றனர். இவ்விதம் காலத்தின் கணக்கு சொல்லப்பட்டது.

## रहस्यकृतपापफलम्।

रहस्यकृतपापफलमाह पराशरः —पातकेषु सहस्रं स्यान्महति द्विगुणं तथा। उपपातके तुरीयं स्यान्नरकं वर्षसंख्यया इति।

**ரஹஸ்யமாய்ச் செய்யப்பட்ட பாபத்தின் பலன்.**

*ரஹஸ்யத்தில் செய்யப்பட்ட பாபத்தின் பலனைச் சொல்லுகிறூர்,* **பராசரர்:—** *பாதகங்களில் ஆயிரம் வர்ஷம் நரக அனுபவம். மஹாபாதகங்களில் இரண்டு மடங்கு, உபபாதகங்களில் நாலில் ஒரு பங்கு வர்ஷங்கள்.*

नरकानुभवानन्तरं तिर्यगादिजननादि निरूपणम्।

एवं नरकदुःखमनुभूय कर्मशेषात् पुनरिह संसारे दुःखबहुलतिर्यगादियोनिषु जायन्ते ॥ तदाह याज्ञवल्क्यः — महापातकजान् घोरान्नरकान् प्राप्य दारुणान्। कर्मक्षयात् प्रजायन्ते महापातकिनस्त्विह ॥ मृगश्वसूकरोष्ट्राणां ब्रह्महा योनिमृच्छति । खरपुल्कसवेनानां सुरापो ब्राह्मणो व्रजेत्। कृमिकीटपतङ्गत्वं स्वर्णहारी समाप्नुयात्। तृणगुल्मलतात्वं च क्रमशो गुरुतल्पगः इति।

**நரகத்தை அனுபவித்த பிறகு பசு பக்ஷி முதலிய ஜன்மங்கள்.**

*இவ்விதம், நரக துக்கத்தை அனுபவித்து மீதியுள்ள கர்மத்தால் மறுபடி இந்த ஸம்ஸாரத்தில் துக்கம் அதிகமாயுள்ள பசு பக்ஷி முதலிய ஜாதிகளில் பிறக்கின்றனர். அதைச் சொல்லுகிறூர்,* **யாஜ்ஞவல்க்யர்:—** *''மஹாபாதகம் செய்தவர்கள் மஹாபாதகங்களால் உண்டாகிய பயங்கரமான நரகங்களை அடைந்து, பாபம் குறைந்த பிறகு இவ்வுலகில் பிறக்கின்றனர். ப்ரம்ஹத்தி செய்தவன் ம்ருகம், நாய், பன்றி, ஒட்டகை இவைகளின் பிறப்பை அடைகிறுன். ஸுராபானம் செய்த ப்ராம்ஹணன் கழுதை, சண்டாளன், வேனன் இவர்களின் பிறப்பை அடைகிறுன். ஸ்வர்ணத்தைத் திருடியவன் புழு, பூச்சி, விட்டில் இவைகளின் பிறப்பை அடைவான். குரு பத்னியைச் சேர்ந்தவன் புல், புதர், கொடி இவைகளின் பிறவியை முறையே அடைவான்'' என்று.*

एतच्चाकामकारविषयम् । कामकारे त्वन्यास्वपि दुःख बहुलयोनिषु संसरति । यथाह मनुः— बहून् वर्षगणान् घोरान् नरकान् प्राप्य तत्क्षयात् । संसारान् प्रतिपद्यन्ते महापातकिनस्त्विह । श्वसूकर खरोष्ट्राणां गोमायुमृग पक्षिणाम् । चण्डालपुल्कसानां च ब्रह्महा योनिमृच्छति । कृमिकीटपतङ्गानां विड्भुजां चैव पक्षिणाम् । हिंस्राणां चैव सत्वानां सुरापो ब्राह्मणोऽसकृत् । लूताहिसरटानां च तिरश्चां चाम्बुचारिणाम् । हिंस्राणां च पिशाचानां स्तेनो विप्रस्सहस्रशः । तृणगुल्मलतादीनां क्रव्यादां दंष्ट्रिणामपि । क्रूरकर्मकृतां चैव शतशो गुरुतल्पगः इति । लूता-ऊर्णनाभः, सरटः - कृकलासः ।

இவ்விதம் சொல்லியது, அஜ்ஞானத்தால் செய்ததைப் பற்றியது. ஞான பூர்வமாய்ச் செய்த விஷயத்திலோ வெனில் மற்ற அதிகதுக்கமுள்ள ஜாதிகளில் பிறப்பான். அவ்விதம் சொல்லுகிறுர், மனு:— மஹாபாதகிகள் அநேக வர்ஷங்கள் கோரமான நரகங்களை அடைந்து பாபம் க்ஷயித்த பிறகு இவ்வுலகில் பிறப்பை அடைகின்றனர். ப்ரம்ஹத்தி செய்தவன் நாய், பன்றி, கழுதை, ஒட்டகை, நரி, மான், பக்ஷி, சண்டாளன், புல்கஸன் இவர்களுடைய ஜன்மத்தை அடைகிறுன். மத்ய பானத்தை அடிக்கடி செய்த ப்ராம்ஹணன் புழு, பூச்சி, விட்டில், பன்றி, பக்ஷி, கொல்லும் ஸ்வபாவமுடைய ஜந்துக்கள் இவைகளின் பிறப்பை அடைகிறுன். ஸ்வர்ணத்தைத் திருடிய ப்ராம்ஹணன் சிலந்தி, பாம்பு, ஓணுன், ஜலத்தில் ஸஞ்சரிக்கும் மீன் முதலியவைகள், கொல்லும் ஸ்வபாவமுடைய பிசாசங்கள் இவைகளின் பிறப்பை அடைகிறுன். குரு பத்னியைச் சேர்ந்தவன் புல், புதர், கொடி முதலியவைகள், மாம்ஸத்தைப் புஜிக்கும் புலி முதலியவைகள், கொடிய கார்யம் செய்பவர்கள் இவர்களுடைய பிறப்பை பல தடவை அடைவான்.

एवं रौरवादिनरकेषु श्वसूकरादियोनिषु च दारुणं दुःखमनुभूयानन्तरं दुरितशेषेण जननसमय एव क्षयरोगादिलक्षणयुक्तो दुःखप्रचुरेषु मानुषशरीरेषु संसरति। तथा च याज्ञवल्क्यः — ब्रह्महा क्षयरोगी स्यात् सुरापश्श्यावदन्तकः । हेमहारी तु कुनखी दुश्चर्मा गुरुतल्पगः । यो येन संवसत्येषां स तल्लिङ्गोऽभिजायते इति । श्यावदन्तः - स्वभावतः कृष्णदशनः, दुश्चर्मा - कुष्ठी, एतेषां ब्रह्महादीनां मध्ये येन पतितेन सह यः पुरुषः संवसति, स तल्लिङ्गोऽभिजायत इत्यर्थः।

*இவ்விதம் ரௌரவம் முதலிய நரகங்களிலும், நாய், பன்றி முதலிய பிறப்புக்களிலும், கொடிய துக்கத்தை அனுபவித்து, பிறகு பாபத்தின் மீதியால் பிறக்கும் பொழுதே க்ஷயரோகம் முதலிய அடையாளங் கூடியவனுய் அதிக துக்கமுள்ள மனித சரீரங்களில் பிறக்கிருன். அவ்விதமே, யாஜ்ஞவல்க்யர்:— ப்ரம்ஹத்தி செய்தவன் க்ஷயரோகமுடையவனுய்ப் பிறப்பான். ஸுராபானம் செய்தவன் பிறப்பிலேயே கறுத்த பல்லுடையனுவான். ஸ்வர்ணத்தைத் திருடியவன் சொத்தை நகம் உடையவனுவான். குரு பத்னியைச் சேர்ந்தவன் குஷ்டரோகம் உடையவனுவான். இந்த நாலு பாதகிகளுள் எந்தப் பாதகியுடன் எவன் ஸம்ஸர்க்கத்தைச் செய்கிருனே, அவன் அவனுடைய அடையாளத்தை உடையவனுய்ப் பிறப்பான்.*

एवं महापातकव्यतिरिक्तेष्वन्येवपि पातकेषु अकृतप्रायश्चित्तानां नरकानुभवानन्तरं तिर्यगादिषु जननान्याह स एव— यथाकर्मफलं प्राप्य तिर्यक्त्वं कालपर्ययात्। जायन्ते लक्षणभ्रष्टा दरिद्राः पुरुषाधमाः इति । तथाऽन्यत्र — चरितव्यमतो नित्यं प्रायश्चित्तं विशुद्धये। निन्द्यैर्हि लक्षणैर्युक्ता जायन्तेऽनिष्कृतैनसः इति। मनुरपि — इह दुश्चरितैः केचित् केचित् पूर्वकृतैस्तथा। प्राप्नुवन्ति

दुरात्मानो नरा रूपविपर्ययम् इति । इह दुश्चरितैः - अस्मिन् जन्मन्यार्जितैरत्युत्कटैः पापैरिह तत्फलं पूर्वमनुभूय पश्चान्नरकादिकमनुभवन्ति । अत्युत्कटैः पुण्यपापैरिहैव फलमश्नुते । त्रिभिर्वर्षैस्त्रिभिर्मासैस्त्रिभिः पक्षैस्त्रिभिर्दिनैरिति स्मृतेः । पूर्वकृतैस्तु पापैर्नरकाद्यनुभवानन्तरं रूपविपर्ययं प्राप्नुवन्तीत्यर्थः ।

இவ்விதம், மஹாபாதகம் தவிர்த்த மற்ற பாபங்களிலும் ப்ராயஶ்சித்தம் செய்து கொள்ளாதவர்க்கு நரகங்களை அனுபவித்த பிறகு பசு பக்ஷி ஜாதிகளில் பிறப்பைச் சொல்லுகிறார், யாஜ்ஞவல்க்யரே:— அவரவர் கர்ம பலனுக்குத் தகுந்தபடி திர்யக்ஜாதிகளில் பிறந்து, சில காலத்திற்குப் பிறகு லக்ஷணங்களற்றவரும் தரித்ரருமான இழிந்த மனிதர்களாய்ப் பிறக்கின்றனர். அவ்விதம், மற்றோர் க்ரந்தத்தில்:— ஆகையால், சுத்திக்காக ப்ராயஶ்சித்தத்தை அவச்யம் செய்ய வேண்டும். ப்ராயஶ்சித்தம் செய்து கொள்ளாதவர்கள் பழிக்கக் கூடிய அடையாளங்களுடன் கூடியவராய்ப் பிறக்கின்றனர். மனுவும்:— "சிலர் இப்பிறப்பில் செய்த பாபங்களாலும், சிலர் முன் ஜன்மத்தில் செய்த பாபங்களாலும் குரூபத்தை அடைகின்றனர்," என்று. இப்பிறவியில் செய்யப்பட்டதும் மிகக் கொடியதுமாகிய பாபங்களால் இந்த ஜன்மத்தில் இந்தப் பாபத்தின் பலனை முன்பு அனுபவித்து, பிறகு நரகம் முதலியதையும் அனுபவிக்கின்றனர். "மிகக் கொடிய புண்ய பாபங்களால் இந்த ஜன்மத்திலேயே பலனை அனுபவிக்கிறான். மூன்று வர்ஷங்களால், மூன்று மாஸங்களால், மூன்று பக்ஷங்களால், மூன்று தினங்களால் (அனுபவிக்கிறான்)," என்று ஸ்ம்ருதி உள்ளது. முன் ஜன்மத்தில் செய்யப்பட்ட பாபங்களாலானால், நரகம் முதலியவைகளை அனுபவித்த பிறகு குரூபத்தை அடைகிறார்கள், என்பது பொருள்.

स एव — संयोगं पतितैर्गत्वा परस्यैव च योषितम् । ब्रह्मस्वमपहृत्यापि भवन्ति ब्रह्मराक्षसाः । पिशुनः पूतिनासत्वं सूचकः पूतिवक्त्रताम् । धान्यचोरोऽङ्गहीनत्वमातिरेक्यं तु मिश्रकः । अन्नहर्ताऽऽमयावित्वं मौक्यं वागपहारकः । एवं कर्मविशेषेण जायन्ते सद्भिर्गर्हिताः । जडमूकान्धबधिरा विकृताकृतयस्तथा । मणिमुक्ता-प्रवालानि हृत्वा लोभेन मानवाः । विविधानि च रत्नानि जायन्ते लोहकर्तृषु । धान्यं हृत्वा भवत्याखुः कांस्यं हंसो जलं प्लवः । मधु दंशः पयः काको रसं श्वा नकुलो घृतम् । मांसं गृध्रो वसां मद्गुस्तैलं तैलपकः खगः । चिरवाकस्तु लवणं बलाकाशकुनिर्दधि । कौशेयं तित्तिरिर्हृत्वा क्षौमं हृत्वा तु दर्दुरः । कार्पासं तान्तवं क्रौञ्चो गोधा गां वाग्गुदो गुडम् । चुचुन्दरी शुभान् गन्धान् पत्रशाकं तु बर्हिणः । श्वावित्कृतान्नं विविधमकृतान्नं तु शल्यकः । बको भवति हृत्वाऽग्निं गृहकारी ह्युपस्करम् । रक्तानि हृत्वा वासांसि जायते जीवजीवकः । वृको मृगेभं व्याघ्रोऽश्वं फलपुष्पं तु मर्कटः । स्त्रीमृक्षस्तोकको वारि यानान्युष्ट्रः पशूनजः । यद्वा तद्वा परद्रव्यमपहृत्य बलान्नरः । अवश्यं याति तिर्यक्त्वं जग्ध्वा चैवाहुतं हविः । यादृशेन हि भावेन यद्यत्कर्म निषेवते । तादृशेन शरीरेण तत्तत्फलमुपाश्नुते इति ।

9. மனுவே:— பதிதர்களுடன் ஸம்ஸர்க்கம் செய்தாலும், பரஸ்த்ரீகமனம் செய்தாலும், ப்ராம்ஹணதனத்தை அபஹரித்தாலும், ப்ரம்ஹ ராக்ஷஸர்களாய்ப் பிறக்கின்றனர். கோட் சொல்பவன் நாற்றமுடைய மூக்கை அடைவான். பிறனிடம் உள்ள தோஷத்தைச் சொல்லுகிறவன் நாற்றமுடைய வாயை அடைவான். தான்யத்தைத் திருடியவன் அங்கக் குறைவுடையவனுவான். கலப்பவன் அதிக அங்கம் உடையவனுவான். அன்னத்தை திருடியவன் வ்யாதியை

அடைவான். புஸ்தகத்தைத் திருடியவன் ஊமையாவான். வஸ்த்ரத்தை திருடியவன் குஷ்டத்தை அடைவான். குதிரையைத் திருடியவன் நொண்டியாவான். இவ்விதம் கர்மத்திற்குத் தகுந்தபடி ஸாதுக்களால் நிந்திக்கப்பட்டவர்களும், ஜடரும், ஊமையரும், குருடரும், செவிடரும், குரூபமுடையவர்களுமாய்ப் பிறக்கின்றனர். மணி, முத்து, பவழம் இவைகளை ஆசையால் திருடிய மனிதர்கள், பலவிதமான ரத்னங்களைத் திருடியவர்கள் உலோகம் வேலை செய்பவர்களுள் பிறப்பார்கள். தான்யத்தைத் திருடினால் எலியாயும், வெண்கலத்தைத் திருடியவன் ஹம்ஸமாயும், ஜலத்தைத் திருடியவன் நீர்க்கோழியாயும், தேனைத் திருடியவன் ஈயாயும், பாலைத் திருடியவன் காக்கையாயும், ரஸமுள்ள பதார்த்தத்தைத் திருடியவன் நாயாயும், நெய்யைத் திருடியவன் கீரியாயும், மாம்ஸம் திருடியவன் கழுகாயும், வஸையைத் (தசையின் ஊன் நீர்) திருடியவன் நீர்க்காக்கையாயும், தைலத்தைத் திருடியவன் தைலத்தைக் குடிக்கும் பக்ஷியாயும், உப்பைத் திருடியவன் சிரவாகமாயும், தயிரைத் திருடியவன் நாரையாயும், பட்டைத் திருடியவன் தித்திரியாயும், நார்மடியைத் திருடியவன் தவளையாயும், பருத்தி வஸ்த்ரத்தைத் திருடியவன் க்ரௌஞ்சமாகவும், பசுவைத் திருடியவன் உடும்பாயும், வெல்லத்தைத் திருடியவன் வௌவாலாயும், நல்ல வாஸனுத்ரவ்யங்களைத் திருடியவன் மூஞ்சூருகவும், இலை, கீரை இவைகளைத் திருடியவன் மயிலாயும், சோற்றைத் திருடியவன் முள்ளம்பன்றியாயும், உலக்கை முதலிய வஸ்துக்களைத் திருடியவன் முள்ளம்பன்றியாயும், நெருப்பைத் திருடியவன் கொக்காயும், சமையல் பதார்த்தங்களைத் திருடியவன் கரையானுயும், சிவப்பு வஸ்த்ரங்களைத் திருடியவன் சகோர பக்ஷியாயும், மான், யானை இவைகளைத் திருடியவன் செந்நாயாயும், குதிரையைத் திருடியவன் புலியாயும், பழம், புஷ்பம்

இவைகளைத் திருடியவன் குரங்காயும், ஸ்த்ரீயைத் திருடியவன் கரடியாயும், ஜலத்தைத் திருடியவன் வான்கோழியாயும், வாஹனங்களைத் திருடியவன் ஒட்டகமாயும், பசுக்களைத் திருடியவன் ஆடாயும் பிறப்பான். பிறனுடைய எந்த த்ரவ்யமாயினும் அதைப் பலாத்காரமாய் அபகரித்தவனும் ஹோமம் செய்யாத ஹவிஸ்ஸை புஜித்தவனும் அவச்யம் பசு பக்ஷி ஜன்மத்தை அடைவான். எந்தெந்த விதமான எண்ணத்துடன் எந்தெந்த விதமான தவற்றைச் செய்கின்றானோ அவ்விதமான சரீரத்துடனே அந்தந்தக் கர்மத்தின் பலனை அனுபவிக்கின்றான்.

याज्ञवल्क्योऽपि — अन्नहर्ताऽऽमयावी स्यान्मूको वागपहारकः । धान्यहर्ताऽतिरिक्ताङ्गः पिशुनः पूतिनासिकः ॥ तैलहृत्तैलपायी स्यात् पूतिवक्त्रस्तु सूचकः इति । आमयावी - अजीर्णाग्निः, वागपहारकः - पुस्तकापहारी अननुज्ञाताध्यायी च, तैलपायी - कीटविशेषः, सूचकः - सद्दोषसंकीर्तकः । स एव — हीनजातौ प्रजायेत रत्नानामपहारकः । पत्रशाकं शिखी हृत्वा गन्धान् चुचुन्दरी शुभान् । चुचुन्दरी - राजदुरिताख्यमूषिका । किञ्च, मूषको धान्यहारी स्याद्यानमुष्ट्रः फलं कपिः । जलं प्लवः पयः काको गृहकारी ह्युपस्करम् । मधुदंशः फलं गृध्रो गाञ्जोधाऽग्निं बकस्तथा । श्वित्री वस्त्रं श्वा रसं तु चीरी लवणहारकः इति । गृहकारी - कीटविशेषः, गृहोपस्करं - मुसलादि, चीरी - चीर्याख्य उच्चैःस्वरः कीटः ।

யாஜ்ஞவல்க்யரும்:— அன்னத்தைத் திருடியவன் அஜீர்ண வ்யாதியுள்ளவனாயும், புஸ்தகத்தைத் திருடியவனும், திருட்டுத் தனமாய் வித்தை கற்றுக் கொள்ளுகிறவனும் ஊமையாவான். தான்யத்தைத் திருடியவன் அதிக அங்கமுடையவனாவான். கோட் சொல்பவன் நாற்றமுடைய மூக்குடையவனாவான்.

தைலத்தைத் திருடியவன் கரப்பாவான். பிறனிடம் உள்ள தோஷத்தைச் சொல்பவன் நாற்றமுடைய வாயுடையவனுவான். யாஜ்ஞவல்க்யரே:— ரத்னங்களைத் திருடியவன் தாழ்ந்த ஜாதியில் பிறப்பான். இலை, கீரை இவைகளைத் திருடியவன் மூஞ்சூருய்ப் பிறப்பான். பின்னும், தான்யத்தைத் திருடியவன் எலியாயும், வாஹனத்தைத் திருடியவன் ஒட்டகையாயும், பழத்தைத் திருடியவன் குரங்காயும், ஜலத்தைத் திருடியவன் நீர்க்கோழியாயும், பாலைத் திருடியவன் காக்கையாயும், வீட்டுக்கு வேண்டிய பதார்த்தங்களை (உலக்கை முதலியன) திருடியவன் கரையானுயும், தேனைத் திருடியவன் தேனீயாயும், பழத்தைத் திருடியவன் கழுகாயும், பசுவைத் திருடியவன் உடும்பாயும், அக்னியைத் திருடியவன் கொக்காயும், வஸ்த்ரத்தைத் திருடியவன் குஷ்டரோகியாயும், ரஸ வஸ்துவைத் திருடியவன் நாயாயும், உப்பைத் திருடியவன் சுவர்க்கோழியாயும் பிறப்பான்.

अत्र शङ्खो विशेषमाह — ब्रह्महा कुष्ठी। तैजसहारी मण्डली। देवब्राह्मणाक्रोशकः खलतिः । गरदाग्निदावुन्मत्तौ । गुरुप्रतिहन्ताऽपस्मारी। गोघ्नश्चान्धः। धर्मपत्नीं मुक्त्वाऽन्यत्र प्रवृत्तः शब्दवेधी प्राणिविशेषः। कुण्डाशी दंशभक्षः। देवब्राह्मणस्वापहारी पाण्डुरोगी । न्यासापहारी काणः । स्त्रीवाक्योपजीवी षण्डः । कौमारदारत्यागी दुर्भगः । मृष्टैकाशी वातगुल्मी । अभक्ष्यभक्षको गण्डमाली। ब्राह्मणीगामी निर्बीजः। क्रूरकर्मा वामनः। वस्त्रापहारी पतङ्गः । शय्यापहारी क्षपणकः । शङ्खशुक्त्यपहारी कपाली । दीपापहारी कौशिकः । मित्रध्रुक् क्षयी । मातापित्रोराक्रोशकः कारण्डवः इति।

இவ்விஷயத்தில் விசேஷத்தைச் சொல்லுகிருர், சங்கர்:— ப்ரம்மஹத்தி செய்தவன் குஷ்டமுடைய

வனும், உலோகபாத்ரங்களைத் திருடியவன் மண்டல வ்யாதி உடையவனும், தேவர்களையும், ப்ராம்ஹணர் களையும் நிந்திப்பவன் சொட்டைத் தலையனும், விஷங்கொடுப்பவனும், நெருப்பு வைப்பவனும் பித்தர்களாயும், குருவை ஆக்ஷேபிப்பவன் அபஸ்மாரி யாயும், பசுவைக் கொன்றவன் குருடனும், தர்ம பத்னியைத் தள்ளி வேறு ஸ்த்ரீயைச் சேருகிறவன் சப்தவேதீ என்கிற ப்ராணியாயும், குண்டனின் அன்னத்தைப் புஜிப்பவன் ஈயைப் புஜிக்கும் ப்ராணியாயும், தேவப் ப்ராம்ஹணர்களின் தனத்தை அபஹரிப்பவன் பாண்டுரோகியாயும், அடைக்கலப் பொருளை அபஹரிப்பவன் ஒற்றைக் கண்ணனும், ஸ்த்ரீயின் வாக்யத்தை உபஜீவிப்பவன் நபும்ஸகனும், யுவதியான பத்னியை விட்டவன் துர்ப்பகனும், ம்ருஷ்டமான அன்னத்தை தான் மட்டில் புஜிப்பவன் வாத குல்ம ரோகம் உடையவனும், அபக்ஷ்யங்களைப் புஜிப்பவன் கண்டமாலை வ்யாதி உடையவனும், ப்ராம்ஹண ஸ்த்ரீயிடத்தில் ப்ரவேசிப்பவன் பீஜமில்லாதவனும், கொடிய கார்யத்தைச் செய்பவன் குள்ளனும், வஸ்த்ரத்தைத் திருடியவன் விட்டில் பூச்சியாயும், படுக்கையைத் திருடியவன் க்ஷபணகனும், சங்கு, கிளிஞ்சல்களை அபஹரிப்பவன் கபாலியாயும், தீபத்தைத் திருடியவன் கோட்டானும், மித்ரனுக்கு த்ரோகம் செய்பவன் க்ஷயரோகம் உடையவனும், மாதா பிதாக்களை நிந்திப்பவன் காரண்டவமாயும் பிறப்பான்.

वृद्धगौतमोऽपि कचिद्विशेषमाह — अनृतवाक् खलः । मुहुमुहुस्संचलनवाक् जलोदरः । दारत्यागी श्लीपदी । कूटसाक्ष्युच्छूनजङ्घचरणः । विवाहविघ्नकर्ता छिन्नोष्ठः । गोरपगुरणे छिन्नहस्तः । मातृघ्नोऽन्धः । स्नुषागामी वातवृषणः । चतुष्पथे विण्मूत्रविसर्जको मूत्रकृच्छ्री । कन्यादूषकष्षण्डः । ईर्ष्यालुर्मशकः ।

पित्रा विवदमानोऽपस्मारी । न्यासापहार्यनपत्यः । रत्नापहार्यत्यन्तदरिद्रः । विद्याविक्रयी पुरुषमृगः । वेदविक्रयी द्वीपी । बहुयाजको जलप्लवः । अयाज्ययाजको वराहः । अनिमन्त्रितभोजी वायसः । मृष्टैकभोजी वानरः । यतस्ततोऽश्नन् मार्जारः । कक्षवनदाहकः खद्योतः । दारकाचार्यो मुखविड्गन्धः । पर्युषितभोजी कृमिः । अदत्तादायी बलीवर्दः । मत्सरी भ्रमरः । अग्न्युत्सादी मण्डलकुष्ठी । शूद्राचार्यः श्वपाकः । गोहर्ता सर्पः । स्नेहापहारी क्षयी । अन्नापहार्यजीर्णी । ज्ञानापहारी मूकः । चण्डालीपुल्कसीगामी रजकः । प्रव्रजितागमने मरुपिशाचः । शूद्रागमने दीर्घकीटः । सवर्णागमने दरिद्रः । जलहारी मत्स्यः । क्षारहारी बलाकः । वार्धुषिकोऽङ्गहीनः । अविक्रेयविक्रयी गृध्रः । राजमहिषीगामी नपुंसकः । दुराक्रोशी गर्दभः । गोगामी मण्डूकः । अनध्यायाध्यायी सृगालः । परद्रव्यापहारी परप्रेष्यः । मत्स्यवेधो गर्दभः इति ।

வ்ருத்தகௌதமரும் சிலவிடத்தில் விசேஷத்தைச் சொல்லுகிறார்:— பொய் சொல்லுபவன் துஷ்டனாயும், அடிக்கடி சலித்துப் பேசுகிறவன் ஜலோதர ரோகமுடையவனாயும், பத்னியை விட்டவன் யானைக்கால் ரோக முடையவனாயும், பொய் ஸாக்ஷ்யம் சொல்பவன் வீங்கிய கால் முழங்கால்களை உடையவனாயும், விவாஹத்திற்கு விக்னம் செய்பவன் உதடு அறுந்தவனாயும், மாட்டை விரட்டுபவன் ஒடிந்த கைகளை உடையவனாயும், தாயைக் கொன்றவன் குருடனாயும், நாட்டுப் பெண்ணைச் சேர்ந்தவன் வாதமுள்ள வ்ருஷண ரோகம் உடையவனாயும், நாற்சந்தியில் மல மூத்ரவிஸர்ஜனம் செய்பவன் மூத்ர க்ருச்ர ரோகம் உடையவனாயும், கன்யகையைத் தூஷிப்பவன் நபும்ஸகனாயும், பொறாமையுடையவன் கொசுவாயும், தகப்பனுடன் வாதம் செய்பவன் அபஸ்மாரியாயும்,

அடைக்கல த்ரவ்யத்தை அபஹரித்தவன் குழந்தையில்லாதவனும், ரத்னங்களைத் திருடியவன் மஹாதரித்ரனும், வித்யையை விற்பவன் புருஷம்ருகமாயும், வேதத்தை விற்பவன் புலியாயும், பலருக்கு யாஜனம் செய்பவன் நீர்க்கோழியாயும், அயோக்யர்களுக்கு யாஜகனாகியவன் பன்றியாயும், வரிக்கப்படாமல் புஜிப்பவன் காக்கையாயும், ம்ருஷ்டான்னத்தைத் தான் மட்டில் புஜிப்பவன் குரங்காயும், எங்கெங்கும் புஜிப்பவன் பூனையாயும், புதர் காடு இவைகளுக்கு நெருப்பு வைப்பவன் மின்மினிப் பூச்சியாயும், புத்ரனிடம் வித்தையைக் கற்பவன் வாயில் துர்நாற்றமுடையவனும், பழையதைப் புஜிப்பவன் புழுவாயும், கொடுக்காததை எடுத்துக் கொள்பவன் எருதாயும், பொறாமையுள்ளவன் வண்டாயும், அக்னியை விட்டவன் மண்டல குஷ்டமுடையவனும், சூத்ரனைக் குருவாயுடையவன் சண்டாளனும், பசுவைத் திருடியவன் பாம்பாயும், பால் முதலியதைத் திருடியவன் க்ஷய ரோகமுடையவனும், அன்னத்தைத் திருடியவன் அஜீர்ண ரோகமுடையவனும், புஸ்தகத்தைத் திருடியவன் ஊமையாயும், சண்டாளீ புல்கஸீ ஸ்த்ரீகளைச் சேர்பவன் வண்ணானும், ஸந்யாஸினியான ஸ்த்ரீயைச் சேர்பவன் ஜலமில்லாத இடத்திலுள்ள பிசாசமாயும், சூத்ர ஸ்த்ரீயைச் சேர்பவன் நீண்ட புழுவாயும், ஸவர்ண ஸ்த்ரீயைச் சேர்பவன் தரித்ரனும், ஜலத்தைத் திருடியவன் மீனும், உறைப்புப் பதார்த்தத்தைத் திருடுபவன் நாரையாயும், வட்டியால் ஜீவிப்பவன் அங்கஹீனனும், விற்கக் கூடாத பதார்த்தங்களை விற்பவன் கழுகாயும், ராஜஸ்த்ரீயைச் சேர்பவன் நபும்ஸகனும், துஷ்டமாய் நிந்திப்பவன் கழுதையாயும், பசுவைச் சேர்பவன் தவளையாயும், அனத்யயன காலத்தில் அத்யயனம் செய்பவன் நரியாயும், பிறர் த்ரவ்யத்தை அபஹரிப்பவன் இதரனுக்கு அடிமையாயும், மீன்களைக் கொல்பவன் கழுதையாயும் பிறப்பான்.

स्त्रियोऽप्येतेषु निमित्तेषु पूर्वोक्तास्वेव जातिषु स्त्रीत्वमनुभवन्ति । यथाऽऽहमनुः — स्त्रियोऽप्येतेन कल्पेन हृत्वा दोषमवाप्नुयुः । एतेषामेव जन्तूनां भार्यात्वमुपयान्ति ताः इति । स एव — असकृद्गर्भवासेषु वासं जन्म च दारुणम् । बन्धनानि च कष्टानि परप्रेष्यत्वमेव च । बन्धुप्रियवियोगं च संसर्गं चाप्रियैर्जनैः । द्रव्यार्जनं च नाशं च मित्रामित्रस्य चार्जनम् । जरां चैवाप्रतीकारां व्याधिभिश्चोपपीडनम् । क्लेशांश्च विविधांस्तांस्तान् मृत्युमेव च दुर्जयम् । यादृशेन हि भावेन यद्यत् कर्म निषेवते । तादृशेन शरीरेण तत्तत्फलमुपाश्नुते इति । दुर्लक्षणमनुष्यजन्मानन्तरं प्राग्भवीयसुकृत-विशेषेण महाकुले भोगविद्याधनधान्यसंपन्नो जायते । तदाह याज्ञवल्क्यः — ततो निष्कल्मषीभूताः कुले महति भोगिनः । जायन्ते विद्ययोपेता धनधान्यसमन्विताः इति । निष्कल्मषीभूताः - नरकाद्युपभोगद्वारेण क्षीणपापा इत्यर्थः ।

*ஸ்த்ரீகளும் இந்தக் காரணங்களில், முன் சொல்லிய பிறவிகளிலேயே பெண்களாய்ப் பிறக்கின்றனர். அதைச் சொல்லுகிருர், மனு:— ஸ்த்ரீகளும் இந்தப்படி அபஹரித்தால் பாபத்தை அடைவார்கள். இதே ஜந்துக்களுக்கு அந்த ஸ்த்ரீகள் பார்யைகள் ஆகின்றனர். மனுவே:— அடிக்கடி கர்ப்ப வாஸங்களில் வாஸத்தையும், பயங்கரமான பிறப்பையும், கஷ்டமான பந்தங்களையும், பிறனுக்கு அடிமையாய் இருப்பதையும், பந்துக்கள் ப்ரியர்கள் இவர்களுடைய பிரிவையும், ப்ரியமில்லாத ஜனங்களுடன் சேருவதையும், பணத்தைத் தேடுவதையும், பணத்தின் நாசத்தையும், மித்ரர்களையும், சத்துருக்களையும் சேர்ப்பதையும், பரிகாரம் செய்ய முடியாத கிழத் தன்மையையும், வ்யாதிகளால் பீடையையும், பல விதமான அந்தந்தக் கஷ்டங்களையும், வெல்ல முடியாத மரணத்தையும் அடைவான். எவ்விதமான பாவத்துடன்*

எந்தெந்தக் கார்யத்தைச் செய்கின்றானோ அந்தந்த விதமான சரீரத்தினால் அந்தந்தப் பலனை அடைவான். துஷ்ட லக்ஷணமுள்ள மனுஷ்ய ஜன்மத்தை அடைந்த பிறகு, முன் ஜன்மத்தில் செய்த புண்ய விசேஷத்தால் பெரிய குலத்தில் போகம், வித்யை, தனம், தான்யம் இவைகளுடன் கூடியவனாய்ப் பிறக்கின்றான். அதைச் சொல்லுகிறார், **யாஜ்ஞவல்க்யர்:**— பிறகு நரகம் முதலியதை அனுபவித்ததால் பாபங்களற்றவராகிப் பெரிய குலத்தில் போகங்கள் உடையவராயும், வித்யை உடையவராயும், தனம் தான்யம் இவைகளுடன் கூடியவராயும் பிறக்கின்றனர்.

## नवविधपापानि।

प्रायश्चित्तनिमित्तभूतानि तानि च पापानि नवविधानि । महापातकान्यतिपातकानि समापातकान्युपपातकानि सङ्करीकरणानि मलिनीकरणानि अपात्रीकरणानि जातिभ्रंशकराणि प्रकीर्णकानीति। यथाऽऽह विष्णुः — पुरुषस्य कामक्रोधलोभाख्यं रिपुत्रयं सुघोरं भवति। तेनायमाक्रान्तो महापातकाति पातकसमपातकोपपातकेषु प्रवर्तते। सङ्कीर्णकरणेषु मलिनीकरणेष्वपात्रीकरणेषु जातिभ्रंशकरणेषु प्रकीर्णकेषु च इति।

### ஒன்பது வித பாபங்கள்.

*ப்ராயஶ்சித்தங்களுக்குக் காரணங்களாகிய அந்தப் பாபங்கள் ஒன்பது விதங்களாகும். அவைகள் — மஹாபாதகங்கள், அதிபாதகங்கள், ஸமபாதகங்கள், உபபாதகங்கள், ஸங்கரீகரணங்கள், மலிநீகரணங்கள், அபாத்ரீகரணங்கள், ஜாதிப்ரம்சகரங்கள், ப்ரகீர்ணங்கள் — என்பவை. அதைச் சொல்லுகிறார்,* **விஷ்ணு:**— *மனிதனுக்குக் காமம், க்ரோதம், லோபம் என்கிற மூன்று சத்ருக்கள் பயங்கரர்களாய் இருக்கின்றனர். அவர்களால் ஆக்ரமிக்கப்பட்ட மனிதன் மஹாபாதகம், அதிபாதகம்,*

ஸமபாதகம், உபபாதகம், ஸங்கீர்ணகரணம், மலிநீகரணம், அபாத்ரீகரணம், ஜாதிப்ரம்சகரணம் ப்ரகீர்ணகம் — என்ற இவைகளில் ப்ரவ்ருத்திக்கிறுன்.

ब्रह्महत्यादिमहापातकानि।

तत्र महापातकान्याह मनुः — ब्रह्महत्या सुरापानं स्तेयं गुर्वङ्गनागमः। महान्ति पातकान्याहुः संसर्गश्चापि तैस्सह इति। याज्ञवल्क्योऽपि — ब्रह्महा मद्यपः स्तेनस्तथैव गुरुतल्पगः। एते महापातकिनो यश्च तैः सह संवसेत् इति। यद्व्यापारसमनन्तरं वा कालान्तरे वा कारणान्तरनिरपेक्षः प्राणवियोगो भवति, स ब्राह्मणं हतवानिति ब्रह्महा। मद्यपः - निषिद्धसुरायाः पाता। स्तेनः - ब्राह्मणस्वर्णापहर्ता। गुरुतल्पगः - गुरुभार्यागामी। यश्च तैः - ब्रह्महादिभिः प्रत्येकं संवत्सरं सह वसति सोऽपि महापातकीत्यर्थः।

**ப்ரம்ஹஹத்யை முதலிய மஹாபாதகங்கள்.**

அவைகளுள் மஹாபாதகங்களைச் சொல்லுகிறுர், **மனு:**— ப்ரம்ஹஹத்யை, ஸுராபானம், ஸ்வர்ணஸ்தேயம், குருபத்னீகமனம், இவைகளை மஹாபாதகங்கள் என்கின்றனர். இந்த மஹாபாதகிகளுடன் ஸம்ஸர்க்கமும் (சேருவதும்) மஹாபாதகம் என்கின்றனர். **யாஜ்ஞவல்க்யர்:**— "ப்ராம்ஹணனைக் கொன்றவன், மத்ய பானம் செய்தவன், ஸ்வர்ணதேயீ, குருபத்னீகாமீ என்ற இவர்கள் மஹாபாதகிகளாவர். அவர்களுடன் எவன் ஸம்வாஸம் செய்கின்றுனே அவனும் மஹாபாதகியாவான்" என்று. எவனுடைய கார்யத்துக்குப் பிறகாவது, அடுத்த காலத்திலாவது, வேறு காரணமில்லாமல், ப்ராணவியோகம் ஏற்படுகிறதோ அவன் ப்ராம்ஹணனைக் கொன்றவன் என்பதால் ப்ரம்ஹஹா. மத்யப: = நிஷேதிக்கப்பட்ட ஸுரையைப் பானம் செய்பவன்.

*ஸ்தேந: = ப்ராம்ஹணனின் ஸ்வர்ணத்தை அபஹரிப்பவன். குருதல்பக: — குருவின் பார்யையுடன் சேர்ந்தவன். எவன் இவர்களுடன் ஒரு வருஷம் வரையில் கூட வஸிக்கின்றானோ அவனும் மஹாபாதகமுடையவன், என்பது பொருள்.*

## प्रयोजकादीनां फलतारतम्यम्

अनुग्राहकस्यापि हिंसाफलसंबन्धमाह मनुः - बहूनामेककार्याणां सर्वेषां शस्त्रधारिणाम्। यद्येको घातयेत्तत्र सर्वे ते घातुकाः स्मृताः इति। विष्णुः — आक्रुष्टस्ताडितो वाऽपि धनैर्वा विप्रयोजितः। यमुद्दिश्य त्यजेत् प्राणांस्तमाहुर्ब्रह्मघातुकम्। ज्ञातिमित्रकलत्रार्थं सुहृत् क्षेत्रार्थमेव च। यमुद्दिश्य त्यजेत् प्राणां स्तमाहुर्ब्रह्मघातुकम्। रागद्वेषात् प्रमादाद्वा स्वतः परत एव वा। घातयेत् ब्राह्मणं कश्चित् स भवेत् ब्रह्मघातुकः। भृतको यस्य तं हन्यात्सोऽपि च ब्रह्मघातुकः इति।

**ப்ரயோஜகன் முதலியவர்க்குப் பலனில் தாரதம்யம்.**

*தூண்டுபவனுக்கும், உதவி செய்பவனுக்கும் ஹிம்ஸையின் பலனில் ஸம்பந்தத்தைச் சொல்லுகிறார், மனு:— பலர் ஒரே கார்யத்தைக் குறித்தவர்களாய் ஆயுதத்தைத் தரித்தவர்களாய் வந்தால், அவர்களுள் ஒருவன் கொன்றாலும் எல்லோரும் கொன்றவர்கள் எனப்படுகின்றனர். விஷ்ணு:— திட்டப்பட்டாலும், அடிக்கப்பட்டாலும், பணங்களால் விடுவிக்கப்பட்டாலும் அவ்விதமாகியவன் எவனைக் குறித்து உயிரை விடுகின்றானோ அவனை ப்ரம்ஹஹத்யை செய்தவன் என்கின்றனர். பந்து, மித்ரன், பார்யை, ஸுஹ்ருத், பூமி இவைகளுக்காக எவனைக் காரணமாக்கி உயிரை விடுவானோ அவனை ப்ரம்ஹகாதுகன் என்கின்றனர். ராகத்தாலாவது, த்வேஷத்தாலாவது, கவனமின்மையா*

லாவது, தானுகவோ அல்லது பிறனுலோ யாராவது ஒரு ப்ராம்ஹணனை வதைக்கச் செய்தால் அவன் ப்ரம்ஹகாதகனுவான். எவனுடைய வேலைக்காரன் ப்ராம்மணனைக் கொலை செய்வானே அவனும் ப்ரம்ஹகாதகனுவான்.

हेमाद्रौ — धनार्थं क्षेत्रदारार्थं पश्वर्थं वा जनेश्वर । यमुद्दिश्य त्यजेत् प्राणां स्तमाहुर्ब्रह्मघातुकम् । नारी वा पुरुषो वाऽपि विधवा वा मनस्विनी । यमुद्दिश्य त्यजेत् प्राणांस्तमाहुर्ब्रह्मघातुकम् इति । स्मृत्यन्तरेऽपि — हन्ता मन्त्रोपदेष्टा च तथा संप्रतिपादकः । प्रोत्साहकः सहायश्च तथा मार्गानुदेशकः । आश्रयः शस्त्रदाता च भक्तदाता विकर्मिणाम् । उपेक्षकः शक्तिमांस्तु दोषवक्ताऽनुमोदकः । अकार्यकारिणां तेषां प्रायश्चित्तं प्रकल्पयेत् इति ।

ஹேமாத்ரியில்:— அரசனே ! தனத்துக்காகவோ, பூமிக்காகவோ, தாரத்துக்காகவோ, பசுக்காகவோ எவனைக் குறித்து உயிரை விடுவானே அவனை ப்ரம்ஹகாதுகன் என்கின்றனர். ஸ்த்ரீயோ, புருஷனே, நல்ல மனதுடைய விதவையோ எவனைக் குறித்து உயிரை விடுவார்களோ அவனை ப்ரம்ஹகாதுகன் என்கின்றனர். ஓர் ஸ்ம்ருதியிலும்:— கொல்லுகிறவன், அனுமதிக்கிறவன், உபாயம் சொல்லுகிறவன், பிடித்துக்கொடுப்பவன், உத்ஸாஹம் செய்கிறவன், ஸஹாயனுயிருப்பவன், வழி சொல்பவன், இருப்பிடமாய் இருப்பவன், ஆயுதம் கொடுப்பவன், கெடுதி செய்பவர்களுக்கு அன்னமளிப்பவன், சக்தியிருந்தும் அனுதரவாயிருப்பவன், தோஷத்தைச் சொல்பவன், அனுமோதிக்கிறவன் என்ற இந்த அகார்யம் செய்த இவர்களுக்கு ப்ராயஶ்சித்தத்தை விதிக்க வேண்டும்.

आपस्तम्बः — प्रयोजयिता मन्ता कर्तेति स्वर्गनरकफलेषु कर्मसु भागिनो यो भूय आरभते तस्मिन् फलविशेषः इति ।

प्रयोजकादीनां प्रत्यासत्तिव्यवधानापेक्षया व्यापारगत-गुरुलाघवापेक्षया च फलगुरुलाघवात् प्रायश्चित्तगुरुलाघवं बोद्धव्यम्। तथा च सुमन्तुः — तिरस्कृतो यदा विप्रो हत्वाऽऽत्मानं मृतो यदि। निर्गुणः सहसा क्रोधात् गृहक्षेत्रादिकारणात्। त्रैवार्षिकं व्रतं कुर्यात् प्रतिलोमां सरस्वतीम्। गच्छेद्वाऽपि विशुद्ध्यर्थं तत्पापस्येति निश्चितम्। क्रोधाद्वै म्रियते यस्तु निर्निमित्तं च भर्त्सितः। वत्सरत्रितयं कुर्यान्नरः कृच्छ्रं विशुद्धये। भर्त्सको यः स विद्वांश्चेद्वर्षेणैकेन शुद्ध्यति। केशश्मश्रुनखादीनामकृत्वा वपनं वने इति।

ஆபஸ்தம்பர்:— "ஏவுகிறவன், அனுமதிக்கிறவன், செய்கிறவன் என்ற இவர்கள் ஸ்வர்க்கத்தையும் நரகத்தையும் பலனுயுள்ள கார்யங்களில் பாகமுடையவர்கள். எவன் அதிகமாகச் செய்கின்றுனே அவனுக்கு அதிக பலன் உண்டு," என்று சொல்லி இருப்பதால், ஏவுகிறவன் முதலியவர்களுக்கு ஸாமீப்யத்தின் குறைவை அபேக்ஷித்தும், கார்யத்திலுள்ள அதிகம் குறைவை அபேக்ஷித்தும், ப்ராயஶ்சித்தத்திலும் அதிகம் குறைவு அறியத்தக்கது. அவ்விதமே, ஸுமந்து:— எப்பொழுது குணமில்லாத ப்ராம்ஹணன் வீடு, பூமி விஷயமாய் அவமதிக்கப்பட்டவனுய், கோபத்தால் சீக்கிரமாகத் தன்னைக் கொலை செய்து கொண்டு இறந்தானேயானுல், அப்பொழுது திரஸ்கரித்தவன் மூன்று வர்ஷத்தில் அனுஷ்டிக்கக் கூடிய வ்ரதத்தைச் செய்ய வேண்டும். அந்தப் பாபத்தைப் போக்குவதற்காக மேற்கே போகிற ஸரஸ்வதி நதியையாவது சுத்திக்காக அடைய வேண்டும். காரணமில்லாமல் க்ரோதத்தால் அவமதிக்கப்பட்டவனுய் மரித்தால், அவமதித்தவன் பாப சுத்திக்காக மூன்று வர்ஷ வ்ரதத்தை அனுஷ்டிக்க வேண்டும். அவமதித்தவன் வித்வானுகில், மயிர், மீசை, நகம் முதலியவைகளை வபனம் செய்து கொள்ளாமல் வனத்தில் ஒரு வர்ஷ வ்ரதத்தால் சுத்தனுவான்.

## उपकारार्थं प्रवृत्तौ दोषाभावः

परोपकारार्थप्रवृत्तौ दोषाभावमाह संवर्तः — औषधं स्नेहमाहारं ददद्गोब्राह्मणादिषु । दीयमाने विपत्तिः स्यान्न स पापेन लिप्यते ।। दाहच्छेद सिराभेदप्रयत्नैरुपकुर्वताम् । प्राणसन्त्राणसिद्ध्यर्थं प्रायश्चित्तं न विद्यते इति । एतच्च दानं निपुणभिषग्विषयम् । इतरस्य भिषजस्तु भिषङ्मिथ्याचरन् दाप्यः इति दोषस्मरणात् ।

### உபகாரத்திற்காக ப்ரவ்ருத்தித்த விஷயத்தில் தோஷமின்மை.

*பரோபகாரத்திற்காக ப்ரவ்ருத்தித்த விஷயத்தில் தோஷமில்லை என்கிறார், ஸம்வர்த்தர்:— "பசு, ப்ராம்ஹணன் முதலியவர்களுக்கு மருந்து, எண்ணெய் முதலியது, ஆஹாரம் இவைகளைக் கொடுப்பவன், அவைகளைக் கொடுக்கும் பொழுது வ்யாதிஸ்தனுக்கு மரணம் ஏற்பட்டால் பாபத்தை அடையமாட்டான். உயிரைக் காப்பாற்றுவதற்காகச் சூடு போடுவது, அறுப்பது, நரம்புகளை வெட்டுவது இவைகளின் ப்ரயத்னங்களால் உபகாரம் செய்பவர்களுக்கு ப்ராயஶ்சித்தம் இல்லை" என்று. இவ்விதம் சொன்னது சிறந்த வைத்யனைப் பற்றியது. மற்ற வைத்யனுக்கோவெனில், "பொய்யாய் வைத்யம் செய்பவனுக்கு அபராதம் விதிக்க வேண்டும்" என்று தோஷம் சொல்லி உள்ளது.*

यत्र तु मन्युनिमित्ताक्रोशनादिकमकुर्वतोऽपि नाम गृहीत्वोन्मादादिनाऽऽत्मानं व्यापादयति, तत्रापि न दोषः । अकारणात्तु यः कश्चित् द्विजः प्राणान् परित्यजेत् । तस्यैव तत्र दोषःस्यान्न तु यं परिकीर्तयेदिति स्मरणात् ।

*எந்த விஷயத்தில் க்ரோத நிமித்தமாகத் திட்டுவது முதலியதைச் செய்யாமல் இருந்தாலும் அவனுடைய*

பெயரைச் சொல்லி, பைத்யம் முதலியதால் தன்னைக் கொலை செய்து கொள்ளுகிறானோ அவ்விஷயத்திலும் தோஷமில்லை. "காரணம் இல்லாமல் எவன் ஒரு ப்ராம்ஹணன் ஒருவனை அபவாதம் சொல்லி இறந்தானோ, அவ்விஷயத்தில் இறந்தவனுக்கே தோஷம். அபவாதத்திற்கு ஆளாகியவனுக்குத் தோஷமில்லை", என்று ஸ்ம்ருதி உள்ளது.

तथा यत्राप्याक्रोशजनितमन्युरात्मानं खड्गादिना प्रहृत्य मरणादर्वागाक्रोशादिकर्त्राऽन्नधनधान्यादिना सन्तोषितो यदि जनसमक्षमुच्चैः श्रावयति, न तत्राक्रोशस्यापराध इति तत्रापि वचनान्न दोषः। यथाऽऽह विष्णुः — उद्दिश्य कुपितो भूत्वा तोषितः श्रावयेत् पुनः । तस्मिन् मृते न दोषोऽस्ति तस्य चोच्छ्रावणे कृते इति।

'எந்த விஷயத்திலும் திட்டுவது முதலியதால் உண்டாகிய கோபம் உடையவனாய், தன்னைக் கத்தி முதலியதால் வெட்டிக் கொண்டு, மரணத்திற்கு முன் திட்டியவனால் அன்னம், தனம், தான்யம் முதலியவைகளால் த்ருப்தி செய்யப்பட்டவனாய் ஜனங்களின் எதிரில் உரக்கச் சொல்லுகின்றானோ, அவ்விஷயத்தில் திட்டியவனுக்குக் குற்றமில்லை, என்று இருப்பதால் அந்த விஷயத்திலும் தோஷமில்லை. அதைச் சொல்லுகிறார், விஷ்ணு:— ஒருவனைக் குறித்துக் கோபமுள்ளவனாய் தன்னை வதைத்துக் கொண்டு மறுபடி அவனால் ஸந்தோஷப்படுத்தப்பட்டு, மறுபடி அவனைச் சொல்லி விட்டு இறந்தால் திட்டினவனை வெளியிட்டுச் சொல்லிவிட்டதால் அவனுக்குத் தோஷமில்லை.

## अतिपातकानि।

अतिपातकान्याह मनुः — हत्वा गर्भमविज्ञातमेतदेव व्रतं चरेत्। राजन्यवैश्यावीजानावात्रेयीमेव च स्त्रियम्। उक्त्वा चैवानृतं

साक्ष्ये प्रतिरुध्य गुरुं तता । अपहृत्य च निक्षेपं कृत्वा च स्त्रीसुहृद्वधं इति । ईजानौ - यागदीक्षामध्यवर्तिनौ, आत्रेयी - अत्रिगोत्रजा । निक्षेपं - ब्राह्मणसंबन्धिनम् । स्त्री-आहिताग्निपत्नी, पातिव्रत्यादि-गुणयुक्ता वा । अविज्ञातगर्भहननादीनामतिपातकत्वम्, अतिदिष्टं तु यत्पापमतिपातकमुच्यते । अतिदिष्टेषु सर्वत्र पादोनं तद्व्रतं चरेत् इति वचनादवगम्यते ।

### அதி பாதகங்கள்.

*அதிபாதகங்களைச் சொல்லுகிறார், மனு:— "அறியப்படாத ப்ராம்ஹண கர்ப்பத்தைக் கொன்றாலும், யாகம் செய்கின்ற க்ஷத்ரிய வைச்யர்களைக் கொன்றாலும், ஆத்ரேய கோத்ரமுள்ள ப்ராம்ஹண ஸ்த்ரீயைக் கொன்றாலும் இதே வ்ரதத்தை அனுஷ்டிக்க வேண்டும். ஸாக்ஷ்யத்தில் பொய் சொன்னாலும், குருவைத் தடுத்தாலும், ப்ராம்ஹணனுடைய அடைக்கலத்தை அபஹரித்தாலும், ஸ்த்ரீ ஸுஹ்ருத் இவர்களைக் கொன்றாலும் இதே வ்ரதத்தை யனுஷ்டிக்கவும்" என்று. ஸ்த்ரீ என்பது ஆஹிதாக்னி பத்னி, அல்லது பாதிவ்ரத்யம் முதலிய குணங்கள் உடையவள். அறியப்படாத கர்ப்பத்தைக் கொல்வது முதலியவைக்கு அதிபாதகத் தன்மை, "அதிதிஷ்டமான பாபம் எதுவோ அது அதிபாதகம் எனப்படுகிறது. அதிதிஷ்டமான பாபங்களில் முக்கால் மடங்கு ப்ரயாஸ்சித்தத்தை அனுஷ்டிக்க வேண்டும்", என்ற வசனத்தால் அறியப்படுகிறது.*

यमः — मातृस्वसा मातृसखी दुहिता च पितृष्वसा । मातुलानी स्वसा श्वश्रूर्गत्वा सद्यः पतेद्द्विजः इति । गौतमः — मातृपितृयोनिसम्बन्धागस्तेननास्तिकनिन्दितकर्माभ्यासि पतितात्याग्यपतितत्यागिनः पतिताः पातकसंयोजकाश्च इति । बोधायनोऽपि — अथ पतनीयानि । समुद्रयानं ब्रह्मस्वन्यासापहरणं

भूम्यनृतवदनं सर्वापण्यैर्व्यवहरणं शूद्रसेवनं शूद्राभिगमनं यश्च शूद्रायामभिजायते तदपत्यं च भवति इति।

**யமன்:—** *மாதாவின் கூடப் பிறந்தவள், மாதாவின் தோழி, பெண், அத்தை, அம்மாமி, கூடப்பிறந்தவள், மாமியார் இவர்களைச் சேர்ந்தால் ப்ராம்ஹணன் அப்பொழுதே பதிதனாவான்.* **கௌதமர்:—** *மாதா பிதாக்களைச் சேர்ந்த வம்சத்தில் நிஷேதிக்கப்பட்ட பெண்ணை விவாஹம் செய்து கொண்டவன், திருடுகிறவன், நாஸ்திகன், சாஸ்த்ரத்தில் நிந்திக்கப்பட்ட கார்யங்களை அடிக்கடி செய்கிறவன், பதிதனை த்யாகம் செய்யாமல் அவனுடன் கலப்பவன், பதிதனல்லாதவனை த்யாகம் செய்கிறவன் என்ற இவர்களும், பதிதனுகக் கூடிய பாப கர்மங்களில் தூண்டுகிறவர்களும் பதிதர்களாவர்.* **போதாயனரும்:—** *"இனி பதநீயங்கள் சொல்லப்படுகின்றன. கடல் யாத்ரை, ப்ராம்ஹணன் ஸ்வத்தை அபஹரிப்பது, அடைக்கலத்தை அபஹரிப்பது, பூமி விஷயமாய்ப் பொய் சொல்வது, விற்கக் கூடாத வஸ்துக்களை விற்பது, சூத்ரனை ஸேவிப்பது, சூத்ர ஸ்த்ரீயைச் சேருவது, சூத்ர ஸ்த்ரீயிடம் கர்ப்போத்பத்தி செய்வது, சூத்ர ஸ்த்ரீக்குப் பிள்ளையாயிருப்பது இவைகள் பதநீயங்கள்.*

आपस्तम्बोऽपि — धर्मार्थसन्निपातेऽर्थग्राहिण एतदेव इति। याज्ञवल्क्यः — चरेद्व्रतमहत्वाऽपि घातार्थं चेत्समाहितः इति। स एव — पितुःस्वसारं मातुश्च मातुलानीं स्नुषामपि। मातुः सपत्नीं भगिनीमाचार्यतनयां तथा। आचार्यपत्नीं स्वसुतां गच्छंस्तु गुरुतल्पगः इति। विष्णुः — मातृगमनं दुहितृगमनं स्नुषागमनमित्यतिपातकानि इति।

**ஆபஸ்தம்பரும்:—** *தர்மார்த்தங்கள் சேரும் கார்யத்தில் பணத்தைப் பெறுபவனுக்கு இதே*

ப்ராயஶ்சித்தம். யாஜ்ஞவல்க்யர்:— கொல்வதற்காக முயற்சி செய்தவன் கொலை செய்யாவிடினும் பாதி ப்ராயஶ்சித்தத்தைச் செய்ய வேண்டும். யாஜ்ஞவல்க்யரே :— அத்தை, மாதாவுடன் கூடப்பிறந்தவள், அம்மாமி, நாட்டுப்பெண், ஸபத்னீமாதா, கூடப்பிறந்தவள், ஆசார்யனின் பெண், ஆசார்யனின் பத்னீ, பெண் இவர்களைச் சேருகிறவன் குருதல்பகாமீ என்று சொல்லப்படுகிறான். விஷ்ணு:— மாதாவைச் சேருவது, பெண்ணைச் சேருவது, நாட்டுப் பெண்ணைச் சேருவது என்ற இவைகள் அதிபாதகங்களாம்.

नारदः — माता मातृष्वसा श्वश्रूर्मातुलानी पितृष्वसा । पितृव्यसखिशिष्यस्त्री भगिनी तत्सखी स्नुषा । दुहिताऽऽचार्यभार्या च सगोत्रा शरणागता । राज्ञी प्रव्रजिता साध्वी धात्री वर्णोत्तमा च या । आसामन्यतमां गच्छन् गुरुतल्पग उच्यते । आश्रितां विदुषः पत्नीमाहिताग्नेश्च योगिनः । एषां पत्नीं स्वपौत्रीं च गत्वा तल्पव्रतं चरेत् । चण्डाल्यां गर्भमाधाय गुरुतल्पव्रतं चरेत् इति । अत्र माता - मातृसपत्नी ॥

நாரதர்:— ஸபத்னீ மாதா, மாதாவுடன் பிறந்தவள், மாமியார், அம்மாமி, அத்தை, பிதாவின் கூடப்பிறந்தவனின் பத்னீ, மித்ரனின் பத்னீ, சிஷ்யனின் ஸ்த்ரீ, கூடப்பிறந்தவள், அவளின் தோழி, நாட்டுப் பெண், பெண், குருபத்னீ, ஸமான கோத்ரமுடையவள், சரணமடைந்தவள், ராஜபத்னீ, ஸந்யாஸினீ, பதிவ்ரதை, உபமாதா (செவிலித் தாய்), வர்ணத்தால் சிறந்தவள் என்ற இவர்களுள் ஒருத்தியைச் சேருபவன் குருதல்பகன் எனப்படுகிறான். தன்னை அண்டியவள், வித்வானுடைய பத்னீ, ஆஹிதாக்னியின் பத்னீ, யோகியின் பத்னீ, தனது பேத்தி, என்ற இவர்களைச் சேர்ந்தால் குருதாரமாக ப்ராயஶ்சித்தத்தை அனுஷ்டிக்க வேண்டும். சண்டாள

ஸ்த்ரீயினிடம் கர்ப்போத்பத்தி செய்தால் குரு பத்னீகமன வ்ரதத்தை அனுஷ்டிக்க வேண்டும்.

भविष्यत्पुराणेऽपि — अग्निहोत्रार्थकपिलां हत्वा ब्रह्महणो व्रतम्। दुस्थितं सुस्थितं वाऽपि शिवलिङ्गं न चालयेत्। अन्यथा तु कृते लिङ्गे अतिपातकमाप्नुयात्। उत्तमानां चामराणामन्यथाकरणे सति। विप्रस्यैव व्रतं कुर्याद्विप्रदेवौ समौ स्मृतौ। गर्भिण्युदक्याविज्ञाताः कन्यामार्तामनिच्छतीम्। गुरुतल्पं चरेद्गत्वा गामयोनिं सखिस्त्रियम् इति। याज्ञवल्क्यः — नीचाभिगमनं गर्भघातनं भर्तृनाशनम्। विशेषपतनीयानि स्त्रीणामेतान्यपि ध्रुवम् इति। व्याघ्रः — अतिदेशस्योपदेशन्यूनत्वात्तद्व्रतं न हि। अतिदिष्टेषु सर्वत्र पादोनं तद्व्रतं चरेत् इति। एवं महापातकातिदेशेऽन्यान्यप्यतिपातकानि द्रष्टव्यानि।

பவிஷ்யத் புராணத்தில்:— அக்னி ஹோத்ரத்திற்காகிய பசுவைக் கொன்றால் ப்ரம்ஹஹத்யை செய்தவனுடைய ப்ராயஸ்சித்தத்தை அனுஷ்டிக்க வேண்டும். பெயர்ந்திருந்தாலும், பெயராமலிருந்தாலும் சிவலிங்கத்தை அசைக்கக்கூடாது. லிங்கத்தை அசைத்தால் அதிபாதகத்தை யடைவான். உயர்ந்த தேவர்களின் பிம்பங்களை மாறுபடுத்தினால் ப்ரம்ஹஹத்யா ப்ராயஸ்சித்தத்தை அனுஷ்டிக்க வேண்டும். ப்ராம்ஹணனும் தேவதையும் ஸமமாகச் சொல்லப் பட்டிருக்கின்றனர். கர்ப்பிணீ, ரஜஸ்வலை, அறியப்படாதவள், கன்யகை, வ்யாதியுள்ளவள், இச்சையில்லாதவள், பசு, யோநிவ்யதிரிக்த ஸ்தலம், மித்ரனின் பத்னீ இவர்களைச் சேர்ந்தால் குருதல்ப ப்ராயஸ்சித்தத்தை அனுஷ்டிக்க வேண்டும். யாஜ்ஞவல்க்யர்:— நீச புருஷனைச் சேருவது, கர்ப்பத்தை அழிப்பது, பர்த்தாவைக் கொல்வது இவைகள் ஸ்த்ரீகளுக்குப் பதனீயங்களாகும். நிச்சயம். வ்யாக்ரர்:— அதிதேசம் உபதேசத்தை விடக் குறைந்ததானதால் அந்த

வ்ரதம் இல்லை. ஆகையால் அதிதிஷ்டமான எல்லாப் பாபங்களிலும் முக்கால் பாகம் ப்ராயஸ்சித்தத்தை அனுஷ்டிக்கவும். இவ்விதம் மஹாபாதகத்தை அதிதேசம் செய்ததில் மற்றும் சில அதிபாதகங்களும் அறியத் தகுந்தவை.

## ब्रह्महत्यासमपातकानि।

ब्रह्महत्यासमपातकान्याह मनुः — अनृतं च समुत्कर्षे राजगामि च पैशुनम्। गुरोश्चालीकनिर्बन्धस्समानि ब्रह्महत्यया इति। याज्ञवल्क्यः — गुरूणामध्यधिक्षेपो वेदनिन्दा सुहृद्वधः। ब्रह्महत्यासमं ज्ञेयमधीतस्य च नाशनम् इति। गुरूणामाधिक्ये-नाधिक्षेपोऽनृताभिशंसनम्। 'कौटसाक्ष्यं राजगामि पैशुनं गुरोरनृताभिशंसनं पातकसमानीति गौतमस्मरणात्। एतच्च लोकाविदितदोषाभिशंसनविषयम्, दोषं बुध्वा न पूर्वः परेभ्यः पतितस्य समाख्याने स्यादित्यापस्तम्बस्मरणात्। नास्तिक्याभिनिवेशेन वेदकुत्सनम्। सुहृत् - मित्रम्। तस्याब्राह्मणस्यापि वधः। अधीतस्य वेदस्यासच्छास्त्रविनोदेनाल-स्यादिना वा नाशनं - विस्मरणम्।

### ப்ரம்ஹஹத்யைக்கு ஸமமான பாதகங்கள்.

ப்ரம்ஹஹத்யைக்கு ஸமமான பாதகங்களைச் சொல்லுகிறார், மனு:— தன்னைச் சிறப்பிப்பதற்காகப் பொய் சொல்வது, அரசனிடத்தில் பிறனுக்கு ஹிம்ஸை உண்டாகும்படி கோட் சொல்வது, குருவினிடம் பொய்யாகத் தோஷம் சொல்வது, இவைகள் ப்ரம்ஹஹத்யைக்கு ஸமமான பாதகங்கள். யாஜ்ஞவல்க்யர்:— ''குருவை நிந்தித்தல், வேதத்தை நிந்தித்தல், மித்ரனை வதைத்தல், அத்யயனம் செய்த வேதத்தை மறத்தல் இவைகள் ப்ரஹஹத்யைக்கு ஸமம்

என்று அறியவும்'', என்று. குருக்களை அதிகமாக அதிக்ஷேபம் என்றது பொய்யாய், குருவினிடம் தோஷத்தைச் சொல்வதாம். 'பொய்ச்சாக்ஷ்யம், அரசனிடம் கோட்சொல்வது, குருவைப் பற்றி பொய்யாய், தோஷம் சொல்வது இவைகள் ஸமபாதகங்கள்'', என்று கௌதமர் சொல்லி இருப்பதால். இது ஜனங்களால் அறியப்படாத தோஷத்தைச் சொல்வதைப் பற்றியது. ''தோஷத்தை யறிந்தால் அதைப் பிறருக்குச் சொல்லும் விஷயத்தில் முதல்வனாய் ஆகக்கூடாது'' என்று ஆபஸ்தம்பர் சொல்லி இருப்பதால். வேதத்தை நிந்தித்தல் நாஸ்திக்யத்தில் பற்றுதலால் சொல்வது என்பது. ஸுஹ்ருத் என்றால் மித்ரன். அவன் அப்ராம்ஹணன் ஆனாலும் அவனின் வதம் ஸுஹ்ருத்வதமாம். அத்யயனம் செய்த வேதத்தை அஸத்தான சாஸ்த்ரங்களில் ருசியாலாவது, சோம்பல் முதலியதாலாவது மறப்பது நாசனமாம்.

पराशरः - भुञ्जानेषु तु विप्रेषु योऽग्रे पात्रं परित्यजेत्। स मूढः स च पापिष्ठो ब्रह्मघ्नः स खलूच्यते इति। विष्णुधर्मोत्तरे — यत्सु विद्याभिमानेन नीचो जयति सद्द्विजम्। उदासीनं सभामध्ये ब्रह्महा स प्रकीर्तितः। परदोषमविज्ञाय नृपकर्णे जपेत्तु यः। पापीयान् पिशुनः क्षुद्रस्स चैवं ब्रह्महा स्मृतः। देवद्विजागतां भूमिं पूर्वभुक्तां हरेत यः। प्रणष्टामपि कालेन तमाहुर्ब्रह्मघातुकम् इति। विष्णुः — यागस्थस्य क्षत्रियस्य वैश्यस्य रजस्वलायाश्चान्तर्वत्न्याश्चात्रिगोत्रजाया अविज्ञातगर्भस्य शरणागतस्य च घातनं ब्रह्महत्यासमम् इति। यागस्थक्षत्रियवधादीनामतिपातकत्वेन परिगणितानां समपातकत्वाभिधानमकामकृताभिप्रायम्। कामकारे तु तेषामतिपातकत्वम्।

பராசரர்:— ப்ராம்ஹணர்கள் புஜிக்கும் ஸமயத்தில் (பங்க்தியிலுள்ள) எவன் போஜன பாத்ரத்தை விடுகிறானோ அவன் மூடன். அவன் பாபிஷ்டன். அவன் ப்ரம்ஹக்நன் எனப்படுகிறான். விஷ்ணுதர்மோத்ரத்தில்:— நீசனாகிய

எவன் வித்யா கர்வத்தினால் ஸபையின் நடுவில் உதாஸீனனாய் இருக்கின்ற ஸாது ப்ராம்ஹணனை ஜயிக்கின்றானோ, அவன் ப்ரம்ஹக்நன் எனப்படுகிறான். பிறனின் தோஷத்தைத் தெரிந்து கொண்டு அரசனின் காதில் எவன் ஓதுகின்றானோ, பாபியும், கோட்சொல்பவனாயும், அல்பனாயும் உள்ள அவன் ப்ரம்ஹக்நன் எனப்படுகிறான். தேவர்களுக்கும், ப்ராம்ஹணர்களுக்கும் சொந்தமாகியதும் அவர்களால் அனுபவிக்கப்பட்டதாகியும் உள்ள பூமி கால வசத்தால் அழிந்திருந்தாலும் அதை எவன் அபஹரிப்பானோ அவனை ப்ரம்ஹகாதகன் என்கின்றனர். விஷ்ணு:— "யாகத்திலிருக்கும் க்ஷத்ரிய வைச்யர்களை வதைப்பதும், ரஜஸ்வலை, கர்ப்பிணீ, அத்ரி கோத்ரத்தில் பிறந்தவன், அறியப்படாத கர்ப்பம், சரணமடைந்தவள் இவர்களைக் கொல்வதும் ப்ரம்ஹஹத்யைக்கு ஸமம்", என்று. யாகத்திலுள்ள க்ஷத்ரியாதிகளின் வதம் முதலியதை அதிபாதகம் என்று சொல்லப்பட்டிருக்க அவைகளை ஸமபாதகமென்று சொல்லியது அபுத்தி பூர்வமாய்ச் செய்ததைப் பற்றியதாம். புத்தி பூர்வமாய்ச் செய்திருந்தால் அவைகள் அதிபாதகங்களாம்.

## सुरापानसमपातकानि।

सुरापानसमान्याह मनुः — ब्रह्मोज्झता वेदनिन्दा कौटसाक्ष्यं सुहृद्वधः । गर्हितानाद्ययोर्जग्धिः सुरपानसमानि षडिति ।। गर्हितं - लशुनादि । अनाद्यं - अमेध्यादि । याज्ञवल्क्यः — निषिद्धभक्षणं जैह्म्यमुत्कर्षे च वचोऽनृतम् । रजस्वलामुखास्वादः सुरापानसमानि तु इति । निषिद्धं - लशुनादि । तस्य मतिपूर्वं भक्षणम् । पलाण्डुं गृञ्जनं चैव मत्या जग्ध्वा पतेत् द्विजः इति स्मरणात् । जैह्म्यम् - कौटिल्यम् । अन्याभिसन्धानेनान्यवादित्व मन्यकर्तृकत्वं च । तच्च गुरुविषयमिति विज्ञानेश्वरः । तथा समुत्कर्षनिमित्तं राजकुलादावचतुर्वेद एव चतुर्वेदोऽहमित्यनृतभाषणम् ।

ஸுராபானத்திற்கு ஸமபாதகங்கள்.

ஸுராபானத்திற்கு ஸமமான பாபங்களைச் சொல்லுகிறார், மனு:— வேதத்தை மறத்தல், வேதத்தை நிந்தித்தல், பொய் ஸாக்ஷ்யம் சொல்லுதல், மித்ரனை வதைத்தல், பூண்டு முதலியது அமேத்யம் முதலியது இவைகளைப் புஜித்தல் இவ்வாறும் ஸுராபானத்திற்கு ஸமங்களாம். யாஜ்ஞவல்க்யர்:— "பூண்டு முதலிய நிஷித்தங்களை ஞானபூர்வமாய்ப் புஜித்தல், கபடத்தோடு பேசுதல், தன்னுடைய மேன்மைக்காகத் தன்னைப் பற்றிப் பொய்யாய், புகழ்ந்து கொள்ளுதல், ரஜஸ்வலாஸ்த்ரீயைச் சேருதல் இவை ஸுராபானத்துக்கு ஸமங்களாகும்" என்று. 'பலாண்டுவையும், க்ருஞ்சனத்தையும் புத்திபூர்வமாய் ப்ராம்ஹணன் புஜித்தால் பதிதனுவான்', என்று ஸ்ம்ருதியிருப்பதால். கபடத்தோடு பேசுவதென்பது ஒன்றை மனதில் நினைத்து மற்றொன்றைப் பேசுதலும், வேறு கார்யத்தைச் செய்வதும். அது குருவிஷயம் என்றார் விஜ்ஞானேச்வரர். அப்படியே தன்னைப் புகழ்ந்வது என்பது ராஜஸபை முதலியதில் நான்கு வேதம் அறியாதவனும் தான் நான்கு வேதம் அறிந்தவன் என்று சொல்லிக் கொள்வது.

स्मृत्यन्तरे — नालिकेरोदकं कांस्ये गोक्षीरं लवणान्वितम् । स्नानं रजकतीर्थेषु ताम्रे गव्यं सुरासमम् इति । अत्रिः — तोयं पाणिनखाग्रेषु ब्राह्मणो न पिबेत् कचित् । सुरापानेन तत्तुल्य मित्येवं मनुरब्रवीदिति । शातातपः — उद्धृत्य वामहस्तेन यत्तोयं पिबति द्विजः । सुरापानेन तत्तुल्यं मनुराह प्रजापतिः इति ।

ஓர் ஸ்ம்ருதியில்:— வெண்கலத்தில் இளநீரைக் குடிப்பது, உப்புடன் கூடிய பசுவின் பாலைக் குடிப்பது, வண்ணான் துறைகளில் ஸ்நானம் செய்வது, தாம்ரபாத்ரத்தில் பசுவின் பாலைக் குடிப்பது இவை ஸுராபான ஸமமாகும். அத்ரி:— நகங்களின் நுனியிலுள்ள

ஜலத்தை ப்ராம்ஹணன் ஒரு காலும் குடிக்கக் கூடாது. அது ஸுராபானத்துக்கு ஸமம் என்றார் மனு. சாதாதபர்:— ப்ராம்ஹணன் இடது கையால் எடுத்து எந்த ஜலத்தைக் குடிக்கின்றானோ அது ஸுராபானத்துக்கு ஸமமாகும், என்றார்கள் மனுவும், ப்ரஜாபதியும்.

## स्वर्णस्तेय समपातकानि ।

स्वर्णस्तेयसमान्याह मनुः — निक्षेपस्यापहरणं नराश्वरजतस्य च । भूमिवज्रमणीनां च रुक्मस्तेयसमं स्मृतम् इति । याज्ञवल्क्यः — अश्वरत्नमनुष्यस्त्रीभूधेनुहरणं तथा । निक्षेपस्य च सर्वं हि स्वर्णस्तेयसमं मतम् इति । विष्णुः — ब्राह्मणभूम्यपहरणं स्वर्णस्तेयसमम् इति । हेमाद्रौ — हृत्वा शतपलं ताम्रं स्वर्णस्तेयसमं विदुरिति ।

**பொன்னைத் திருடுவதற்கு ஸமமான பாதகங்கள்.** ஸ்வர்ணத்தைத் திருடுவதற்கு ஸமமானவைகளைச் சொல்லுகிறார், மனு:— அடைக்கலத்தை அபஹரிப்பது, மனிதன், குதிரை, வெள்ளி, பூமி, வஜ்ரம் (மணி இவைகளை அபஹரிப்பது இவை பொன்னைத் திருடியதற்கு ஸமபாபங்களாகும். யாஜ்ஞவல்க்யர்:— குதிரை, ரத்னம், மனிதன், ஸ்த்ரீ, பூமி, பசு, அடைக்கலம் இவைகளை அபஹரிப்பது இவைகள் ஸ்வர்ண ஸ்தேயத்துக்கு ஸமங்களாம். விஷ்ணு:— 'ப்ராம்ஹணனுடைய பூமியை அபஹரித்தல் ஸ்வர்ணஸ்தேய ஸமம்' என்று. ஹேமாத்ரியில்:— நூறுபலம் நிறையுள்ள தாம்ரத்தைத் திருடுவது ஸ்வர்ண ஸ்தேயத்துக்கு ஸமம் என்கின்றனர்.

## गुरुतल्पसमपातकानि

गुरुतल्पसमान्याह मनुः — रेतस्सेकः स्वयोनीषु कुमारीष्वन्त्यजासु च । सख्युः पुत्रस्य च स्त्रीषु गुरुतल्पसमं विदुः इति । स्वयोनीषु - भगिनीषु । याज्ञवल्क्यः —सखिभार्या कुमारीषु

स्वयोनिष्वन्त्यजातिषु। सगोत्रासु सुतस्त्रीषु गुरुतल्पसमं स्मृतम् इति। पुराणसारे — अपि वा मातरं गच्छेन्न गच्छेद्देवदारिकाम्। यदि गच्छेत् प्रमादेन गुरुदारसमं स्मृतम् इति । विष्णुः — पितृव्यमाता-महमातुलश्वशुरनृपपत्न्यभिगमनं गुरुदारगमनसदृशं पितृष्वसृ मातृष्वसृगमनं च श्रोत्रियर्त्विगुपाध्यायमित्रपत्न्यभिगमनं च स्वसुस्सख्यास्सगोत्राया उत्तमवर्णायाः कुमार्या रजस्वलायाश्शरणा-गतायाः प्रव्रजिताया निक्षिप्तायाश्च गमनम् इति । अतिपातकेषु परिगणितानां केषाञ्चिदिह ग्रहणमकामकारविषयम्।

### குருதல்பத்துக்கு ஸமமான பாதகங்கள்.

குருதல்ப ஸமபாதகங்களைச் சொல்லுகிறார், மனு:— கூடப்பிறந்தவர்களிடமும், குமாரிகளிடமும், நீசஸ்த்ரீகளிடமும், மித்ரன் புத்ரன் இவர்களின் பார்யைகளிடத்திலும் ரேதஸ்ஸைச் செலுத்துவது குருதல்ப பாபத்துக்கு ஸமம் என்று சொல்லுகின்றனர். யாஜ்ஞவல்க்யர்:— மித்ரனின் பார்யை, குமாரீ, பகினிகள், நீசஜாதி ஸ்த்ரீகள், ஸகோத்ரிகள், நாட்டுப்பெண், இவர்களைச் சேருவது குருதல்ப பாபத்துக்கு ஸமமாம். புராணஸாரத்தில்:— தாயிடம் சென்றாலும் செல்லலாம், தேவதாஸியைச் சேரக்கூடாது. அறியாமல் சென்றால் அது குருதாரகமன பாபத்திற்கு ஸமமாம். விஷ்ணு:— தகப்பனுடன் கூடப்பிறந்தவன், மாதாமஹன், அம்மான், மாமனார், அரசன் இவர்களின் பத்தினிகளைச் சேருவது குருதல்பகமனத்துக்கு ஸமமாம். அத்தை, மாதாவுடன் கூடப் பிறந்தவள் இவர்களைச் சேருவதும், வேதாத்யயனம் பண்ணினவன், ருத்விக், உபாத்யாயன், மித்ரன் இவர்களின் பத்னியைச் சேருவதும், தங்கை, தமக்கை, தோழியாய் இருப்பவள், ஸகோத்ரை, உயர்ந்த வர்ணஸ்த்ரீ, குமாரீ, ரஜஸ்வலை, சரணமடைந்தவள், ஸந்யாஸினீ, அடைக்கலமாய் வைக்கப்பட்டவள் இவர்களைச் சேர்வதும்

*(இவை குருதல்பகமன ஸமமாம்.) அதிபாதகங்களில் சொல்லிய சிலவற்றை இங்குச் சொல்லியது அபுத்தி பூர்வமாய்ச் செய்வதைப் பற்றியதாம்.*

उपपातकानि ।

उपपातकान्याह याज्ञवल्क्यः — गोवधो व्रात्यता स्तेयमृणानां चानपाक्रिया । अनाहिताऽग्निताऽपण्यविक्रयः परिवेदनम् । भृतकाध्ययनादानं भृतकाध्यापनं तथा । पारदार्यं पारिवित्त्यं वार्द्धुष्यं लवणक्रिया । स्त्रीशूद्रविट्क्षत्रवधो निन्दितार्थोपजीवनम् । नास्तिक्यं व्रतलोपश्च सुतानां चैव विक्रयः । धान्यकुप्यपशुस्तेय मयाज्यानां च याजनम् । पितृमातृगुरुत्याग स्तटाकारामविक्रयः । कन्याया दूषणं चैव परिविन्दकयाजनम् । कन्याप्रदानं तस्यैव कौटिल्यं व्रतलोपनम् । आत्मनोऽर्थे क्रियारम्भो मद्यपस्त्रीनिषेवणम् । स्वाध्यायाग्निसुतत्यागो बान्धवत्याग एव च । इन्धनार्थं द्रुमच्छेदः स्त्रीहिंसौषधजीवनम् । हिंस्रयन्त्रविधानं च व्यसनान्यात्मविक्रयः । शूद्रप्रेष्यं हीनसख्यं हीनयोनिनिषेवणम् । तथैवानाश्रमे वासः परान्नपरिपुष्टता । असच्छास्त्राधिगमनमाकरेष्वधिकारिता । भार्याया विक्रयश्चैषा मेकैकमुपपातकम् इति । कालेऽनुपनीतत्वं व्रात्यता । सत्यधिकारे अनाहिताग्निता । ज्येष्ठे तिष्ठति कनीयसो दाराग्निहोत्रसंयोगः परिवेदनम् । गुरुदारव्यतिरिक्तं पारदार्यम् । कनीयसि कृतविवाहे ज्येष्ठस्य विवाहराहित्यं पारिवित्त्यम् । वार्द्धुष्यं - निषिद्धवृद्धिप्रयोगः । लवणक्रिया - लवणस्योत्पादनम् । निन्दितार्थोपजीवनम् - अराजस्थापितार्थोपजीवनम् । व्रतलोपः - ब्रह्मचारिणः स्त्र्यादिप्रसङ्गः । कन्याया दूषणं - अङ्गुल्यादिना योनिविदारणम्, न तु संयोगः । हिंस्रयन्त्रस्य तिलेक्षुपीडाकरस्य प्रवर्तनम् । व्यसनानि - मृगयादीन्यष्टादश । आकरेषु - स्वर्णाद्युत्पत्तिस्थानेषु ।

உபபாதகங்கள். ௬

உபபாதகங்களைச் சொல்லுகிறார், யாஜ்ஞவல்க்யர்:— பசுவை வதைத்தல், காலத்தில் உபநயனம் ஆகாமல் இருத்தல், பொன் வெள்ளி இல்லாததைத் திருடுதல் கடன்களைக் கொடாமல் இருத்தல், அதிகாரம் இருக்கும் பொழுது ஆதானம் செய்யாமல் இருத்தல், நிஷித்த வஸ்துக்களை விற்றல், ஜ்யேஷ்டன் விவாஹம் ஆகாமல் இருக்கும் பொழுது கனிஷ்டன் விவாஹம், ஆதானம் இவைகளைச் செய்துகொள்ளல், கூலியைக் கொடுத்து வேதத்தைக் கற்றுக் கொள்ளுதல், கூலியைப் பெற்று வேதத்தைக் கற்பித்தல், (குருதாரத்தைத் தவிர்த்த) பரதாரத்தைச் சேருதல், கனிஷ்டனுக்கு விவாஹம் ஆயிருந்து ஜ்யேஷ்டன் விவாஹம் இல்லாமல் இருத்தல், நிஷித்தமான வட்டியால் ஜீவித்தல், உப்பைப் பயிரிடுதல், ஸ்த்ரீ, சூத்ரன், வைச்யன், க்ஷத்ரியன் இவர்களை வதைத்தல், அரசனால் ஸ்தாபிக்கப்படாத பணத்தால் ஜீவிப்பது, நாஸ்திகத் தன்மை, ப்ரம்ஹசர்ய வ்ரதலோபம், பிள்ளைகளை விற்பது, தான்யம், பொன், வெள்ளி, பசு இவைகளைத் திருடுதல், யாகம் செய்விக்கத் தகுதியற்றவர்களுக்கு யாகம் செய்வித்தல், பிதா, மாதா, குரு இவர்களை விட்டுவிடுதல், குளம், தோட்டம் இவைகளை விற்றல், கன்யகையைத் தூஷித்தல், பரிவேத்தாவுக்கு யாகம் செய்வித்தல், அவனுக்குப் பெண்ணைக் கொடுத்தல், வஞ்சகத் தன்மை, வ்ரதங்களை அனுஷ்டிக்காமல் இருத்தல், தனக்கென்று கார்யங்களை ஆரம்பித்தல், மத்யபானம் செய்யும் ஸ்த்ரீயைச் சேருதல், அத்யயனம், அக்னி, புத்ரன் இவர்களை விடுதல், பந்துக்களை விடுதல், விறகுக்காக மரத்தை வெட்டுதல், ஸ்த்ரீகளை ஹிம்ஸித்தல், ஔஷதத்தால் ஜீவித்தல், செக்கு முதலிய யந்த்ரங்களைச் செலுத்துதல், வேட்டையாடுதல் முதலிய பதினெட்டு வ்யஸனங்கள், தன்னையே விற்றல், சூத்ரனுக்கு வேலைக்காரனாக இருத்தல், ஆச்ரமம் இல்லாமல் இருத்தல், பரான்னத்தாலேயே வளர்தல், கெட்ட

சாஸ்த்ரங்களைக் கற்றுக் கொள்ளுதல், ஸ்வர்ணம் முதலியன எடுக்கும் இடங்களில் அதிகாரம் வகித்தல், பார்யையை விக்ரயம் செய்தல் இவைகளுள் ஒவ்வொன்றும் உபபாதகமாம்.

मनुरपि — गोवधोऽयाज्यसंयाज्यपारदार्यात्मविक्रयाः। गुरुमातृपितृत्यागः स्वाध्यायाग्न्योः सुतस्य च। परिवित्तिताऽनुजेन परिवेदनमेव च। तयोर्दानं च कन्यायास्तयोर्याजनमेव च। कन्याया दूषणं चैव वार्धुष्यं व्रतलोपनम्। तटाकारामदाराणामपत्यस्य च विक्रयः। व्रात्यता बान्धवत्यागो भृत्याऽध्यापनमेव च। भृत्या चाध्ययनादानमपण्यानां च विक्रयः। सर्वाकरेष्वधीकारो महायन्त्रप्रवर्तनम्। हिंसौषधीनां स्त्र्याजीवोऽभिचारो मूलकर्म च। इन्धनार्थमशुष्काणां द्रुमाणामवपपातनम्। आत्मार्थं च क्रियारम्भो निन्दितान्नादनं तथा। अनाहिताग्निता स्तेय मृणानामनपाक्रिया। असच्छास्त्राधिगमनं कौशीलव्यस्य च क्रिया। धान्यकुप्यपशुस्तेयं मद्यपस्त्रीनिषेवणम्। स्त्रीशूद्रविट्क्षत्रवधो नास्तिक्यं चोपपातकम् इति।

மனுவும்:— பசுவின் வதம், தகாதவனுக்கு யாகம் செய்வித்தல், பரதாரகமனம், தன்னையே விற்றுக் கொள்ளல், குரு, மாதா, பிதா இவர்களை விடுதல், அதாவது அவர்களுக்குச் சுச்ருஷை செய்யாமல் இருத்தல், ப்ரம்ஹயஜ்ஞம், அக்னி, புத்ரன் இவர்களை விடுதல், பரிவித்திதை, பரிவேதனம், அவர்களுக்குக் கன்யகையைக் கொடுத்தல், அவர்களுக்கு யாகம் செய்வித்தல், கன்யகையைத் தூஷித்தல், நிஷித்த வட்டியால் ஜீவித்தல், வ்ரதங்களை விடுதல், குளம், தோட்டம், பார்யை, குழந்தை இவைகளை விற்றல், காலத்தில் உபநயனம் இல்லாமல் இருத்தல், பந்துக்களை விடுதல், கூலியினால் வேதம் கற்பித்தல், கூலி கொடுத்து வேதம் கற்றுக் கொள்ளுதல், விற்கக் கூடாத எள் முதலிய வஸ்துக்களை விற்றல், பொன்

முதலிய உத்பத்தி செய்யும் இடங்களில் அதிகாரம் பெறுதல், ப்ரவாஹ்றதைத் தடுக்கும் அணை முதலிய பெரிய கார்யங்களில் ப்ரவர்த்தித்தல், பச்சிலைகளை வெட்டுதல், ஸ்த்ரீகளால் ஜீவித்தல், சூன்யம் வைத்தல், வேர்களால் வேலை செய்தல், விறகுக்காகக் காயாத மரங்களை வெட்டுதல், தனக்காகக் கார்யத்தை (பாகம் முதலியதை) ஆரம்பித்தல், நிந்திக்கப்பட்டதை (பூண்டு முதலியதை)ப் புஜித்தல், ஆஹிதாக்னியாயில்லாமல் இருத்தல், பொன் வெள்ளி இல்லாததைத் திருடுதல், கடனைத் தீர்க்காமல் இருத்தல், கெட்ட சாஸ்த்ரங்களைக் கற்றுக் கொள்ளுதல், நர்த்தனம், பாடுதல் முதலியவைவயை ஸேவித்தல், தான்யம், பொன், வெள்ளி, பசு இவைகளைத் திருடுதல், மத்யபானம் செய்யும் ஸ்த்ரீயைச் சேருதல், ஸ்த்ரீ, சூத்ரன், வைச்யன், க்ஷத்ரியன் இவர்களை வதைத்தல், நாஸ்திகத் தன்மை இவைகள் உபபாதகங்களாம்.

बोधायनः — अथोपपातकानि । अगम्यागमनं गुर्वी सखीं गुरुसखी मपपात्रां पतिताञ्च गत्वा भैषज्यकरणं ग्रामयाजनं रङ्गोपजीवनं नाट्याचार्यता गोमहिषीरक्षणं यच्चान्यदेवं युक्तं कन्यादूषणमिति । स्मृत्यन्तरे — विद्वद्ब्राह्मणपङ्क्तिभेदाचरण विधवा देवदासी वेश्या वार्द्धकी दासीगमनान्युपपातकानि इति ।

போதாயனர்:— உபபாதகங்கள் சொல்லப்படுகின்றன:— சேரக்கூடாத ஸ்த்ரீயைச் சேருதல், குருபத்னியின் தோழி, குருவின் ஸகி, தாஸீ, பதிதை இவர்களிடம் சேருதல், ஜீவனத்துக்காக வைத்தியம் செய்தல், ஸமூகத்துக்கு யாஜனம், நாடகத்தால் ஜீவனம், நாட்யத்திற்குச் சிக்ஷை செய்வித்தல், பசு, எருமை இவைகளைப் பிழைப்புக்காகக் காப்பாற்றுதல், கன்யகையைத் தூஷித்தல், இது போல் சாஸ்த்ரங்களில் சொல்லப்பட்ட மற்றதும் உபபாதகங்கள். ஓர் ஸ்ம்ருதியில்:— வித்வான்களான ப்ராம்ஹணர்களின்

பங்க்தியில் பேதம் செய்வது, விதவை, தேவதாஸீ, வேச்யை, தச்சனின் பத்னீ, தாஸீ இவர்களைச் சேருவது இவை உபபாதகங்கள்.

शङ्खलिखितौ — अभोज्यानां च भक्षणं परस्वापहरणं परदाराभिगमन मयाज्यानां च याजनं द्रुमगुल्मलतौषधीनां हिंसया जीवनमाभिचारमूलकर्मसु प्रवृत्तिर्देवर्षिपितॄणामृणस्यानपाक्रिया कुशीलवता इति।

சங்க லிகிதர்கள்:— நன்றி மறந்தவன், கபடமாய் வியாபாரம் செய்பவன், ப்ராம்ஹணனின் வ்ருத்தியைக் கெடுப்பவன், பொய்யாய்த் தோஷம் சொல்பவன், பதிதனை வர்ஜிக்காதவன், நிஷித்த வஸ்துக்களைப் புஜிப்பவன், நிஷித்த வஸ்துக்களை ப்ரதிக்ரஹிப்பவன் (இவர்கள் உபபாதகிகள்). ப்ருஹத்விஷ்ணு:— நிஷித்த வஸ்துக்களைப் புஜித்தல், பிறரின் தனத்தை அபஹரித்தல், பிறரின் பார்யையைச் சேருதல், அனர்ஹர்களுக்கு யாகம் செய்வித்தல், வ்ருக்ஷம், புதர், கொடி, பச்சிலை இவைகளை ஹிம்ஸித்து ஜீவித்தல், ஆபிசாரம் முதலிய கர்மங்களில் ப்ரவ்ருத்தித்தல், தேவ, ருஷி, பித்ருக்களின் கடனைத் தீர்க்காமல் இருத்தல், தொழிலாகப் பாடுதல் (இவைகள் உபபாதகங்கள்).

## सङ्करीकरणादीनि।

सङ्करीकरणान्याह मनुः — खराश्वोष्ट्रमृगेभाना मजाविकवधस्तथा । सङ्करीकरणं ज्ञेयं मीनाहिमहिषस्य च । कृमिकीटवयोहत्या मद्यानुगतभोजनम् । फलैधःकुसुमस्तेयमधैर्यं च मलावहम्। निन्दितेभ्यो धनादानं वाणिज्यं शूद्रसेवनम्। अपात्रीकरणं ज्ञेय मसत्यस्य च भाषणम्। ब्राह्मणस्य रुजः कृत्या घ्रातिरघ्रेयमद्ययोः। जैह्म्यं च मैथुनं पुंसि जातिभ्रंशकरं स्मृतमिति। विष्णुः। ब्राह्मणस्य रुजः करणमघ्रेयमद्ययोर्घ्रातिर्जैह्म्यं पशुष्वयोनिषु पुंसि च

मैथुन्यमित्येतानि जातिभ्रंशकराणि । ग्रामारण्यपशूनां हिंसनं सङ्करीकरणम् । निन्दितेभ्यो धनादानं वाणिज्यं कुसीदजीवन मसत्यभाषणं शूद्रसेवनमित्यपात्रीकरणानि । पक्षिणां जलचराणां जलजानां च घातनं कृमिकीटघातनं मद्यानुगतभोजनमिति मलावहानि । यदनुक्तं तत्प्रकीर्णकम् इति । तदेवं नवविधानि पापानि ।

ஸங்கரீகரணம் முதலியவை. ஸங்கரீகரணங்களைச் சொல்லுகிறார், மனு:— கழுதை, குதிரை, ஒட்டகை, மான், யானை, வெள்ளாடு, செம்மறியாடு இவைகளை வதைத்தல் ஸங்கரீகரணமாம். மீன், பாம்பு, எருமை, புழு, பூச்சி, பக்ஷி இவைகளைக் கொல்லுதல், மத்யத்துடன் சேர்த்துக் கொண்டு வரப்பட்ட வஸ்துவைப் புஜித்தல், பழம், விறகு, புஷ்பம் இவைகளைத் திருடுதல், தைர்யமின்மை இவைகள் மலிநீகரணங்கள். நிந்திக்கப்பட்டவர்கள் இடமிருந்து தனத்தைப் பெறுதல், வ்யாபாரம், சூத்ரனை ஸேவித்தல், பொய் சொல்லுதல் இவைகள் அபாத்ரீகரணங்கள் ஆகும். ப்ராம்ஹணனைத் தண்டம் முதலியதால் அடித்தல், முகரக் கூடாத வஸ்துவையும் மத்யத்தையும் முகர்தல், வக்ரத் தன்மை, புருஷனிடம் மைதுனம் செய்தல், இவை ஜாதி ப்ரம்சகரம் எனப்படும். விஷ்ணு:— ப்ராம்ஹணனை அடித்தல், முகரக் கூடாதது, மத்யம் இவைகளை முகர்தல், வக்ரத் தன்மை, பசுக்களிடமும், யோனி இல்லாத ஸ்தலங்களிலும், புருஷனிடமும் மைதுனம் செய்தல் இவைகள் ஜாதி ப்ரம்சகரங்கள் எனப்படும். க்ராம பசுக்கள், அரண்ய பசுக்கள் இவைகளை ஹிம்ஸித்தல் இவை ஸங்கரீகரணம். நிந்திக்கப்பட்டவர்கள் இடமிருந்து தனத்தைப் பெறுதல், வ்யாபாரம், நிந்தித்த வட்டியால் பிழைத்தல், பொய் சொல்லுதல், சூத்ரனை ஸேவித்தல் என்ற இவை அபாத்ரீகரணங்களாம். ஜலத்தில் ஸஞ்சரிக்கும் பக்ஷிகள், ஜலத்தில் உண்டாகும் ஜந்துக்கள், இவைகளையும் புழு பூச்சிகளையும் கொல்லுதல், மத்யத்துடன் சேர்த்துக்

கொண்டுவரப்பட்ட வஸ்துவைப் புஜித்தல் இவை மலிநீகரணங்கள். சொல்லப்படாதது எதுவோ அது ப்ரகீர்ணகம் எனப்படும்'' என்று. ஆகையால், இவ்விதம் பாதகங்கள் ஒன்பது விதங்களாகும்.

यत्तु कात्यायनेनोक्तम् — महापापं चातिपापं तथा पातकमेव च। प्रासङ्गिकं चोपपापमित्येवं पञ्चको गणः इति, अत्र पातकमिति समपापान्युक्तानि । उपपातकेषु कानिचिदगम्यागमना-दीन्यवान्तरभेदाविवक्षया प्रासङ्गिकमित्युक्तानि । अतिपातकाद्य-वान्तरभेदाविवक्षया त्रैविध्यमुक्तं विज्ञानेश्वरीये - महापातकतुल्यानि पापान्युक्तानि यानि तु। तानि पातकसंज्ञानि तन्न्यूनमुपपातकम् इति।

காத்யாயனரால்:— மஹாபாபம், அதிபாபம், பாதகம், ப்ராஸங்கிகம், உபபாபம் என்று பாபம் ஐந்து விதம் சொல்லப்பட்டதே யெனில், இந்த வசனத்தில் பாதகம் என்றதால் ஸமபாபங்கள் சொல்லப்பட்டன. உபபாதகங்களில், சில அகம்யாகமனம் முதலியனவும் அவாந்தர பேதத்தைப் பொருட்படுத்தாமல் ப்ராஸங்கிகம் என்றதால் சொல்லப்பட்டன. அதிபாதகம் முதலிய அவாந்தர பேதங்களைப் பொருட்படுத்தாமல் மூன்றுவிதம் என்று சொல்லப்பட்டுள்ளது விஜ்ஞானேச்வரீயத்தில்:— மஹாபாதகங்களுக்கு ஸமமாய் எந்தப் பாபங்கள் சொல்லப்பட்டனவோ, அவை பாதகங்கள் என்று பெயருள்ளவை. அவைகளுக்குக் குறைந்த பாபங்கள் உபபாதகங்கள் எனப்படும்.

## कामाकामकृतपापविचारः

अकामकृतानां पापानामुक्तप्रायश्चित्तैर्नाश इह व्यवहारश्च भवति। कामकृतानां त्विह व्यवहार्यत्वमात्रं सिद्ध्यति। तथा च याज्ञवल्क्यः — प्रायश्चित्तैरपैत्येनो यदज्ञानकृतं भवेत्। कामतो व्यवहार्यस्तु वचनादिह जायते इति । छागलेयः —

प्रायश्चित्तमकामानां कामावासौ न विद्यते इति ।

**புத்தி பூர்வமாயும், அபுத்தி பூர்வமாயும் செய்த பாபங்களைப் பற்றிய விசாரம்.**

*அறியாமல் செய்யப்பட்ட பாபங்களுக்கு, விதிக்கப்பட்ட ப்ராயஶ்சித்தங்களால் நாசமும், இந்த உலகத்தில் வ்யவஹாரத்திற்கு யோக்யதையும் ஏற்படுகின்றன. புத்தி பூர்வமாகச் செய்யப்பட்ட பாபங்களுக்கானால், இந்த உலகத்தில் வ்யவஹாரத்திற்கு யோக்யதைமட்டில் ஏற்படுகிறது. அவ்விதமே,* **யாஜ்ஞவல்க்யர்:—** *அஜ்ஞானத்தால் செய்யப்பட்ட பாபம் எதுவோ அது ப்ராயஶ்சித்தங்களால் நசிக்கிறது. ஜ்ஞானத்தால் செய்யப்பட்ட பாப விஷயத்தில் ப்ராயஶ்சித்தத்தால் இந்த உலகத்தில் வ்யவஹாரத்திற்கு யோக்யனாய் ஆகிறான், என்று வசனங்கள் இருப்பதால்,* **சாகலேயர்:—** *அஜ்ஞானத்தால் செய்யப்பட்ட பாபங்களுக்கு ப்ராயஶ்சித்தம் உண்டு. ஜ்ஞான பூர்வமாய்ச் செய்யப்பட்ட பாபங்களுக்கு ப்ராயஶ்சித்தம் இல்லை.*

वसिष्ठोऽपि — नाभिसन्धिकृते प्रायश्चित्तम् इति । मनुः — अकामतः कृते पापे प्रायश्चित्तं विदुर्बुधाः । कामकारकृतेऽप्याहुरेके श्रुतिनिदर्शनात् इति । जाबालिः — अकामकृतपापानां ब्रुवन्ति ब्राह्मणा व्रतम् । कामकारकृतेऽप्येके द्विजानां वृषलस्य च इति । देवलोऽपि — अभिसन्धिकृते पापेऽसकृद्वा नेह निष्कृतिः । अपरे निष्कृतिं ब्रूयुरभिसन्धिकृतेऽपि च इति ।

**வஸிஷ்டரும்:—** *ஜ்ஞானபூர்வமாய்ச் செய்யப்பட்ட பாபத்திற்கு ப்ராயஶ்சித்தம் இல்லை.* **மனு:—** *அஜ்ஞானத்தால் செய்யப்பட்ட பாபத்திற்கு ப்ராயஶ்சித்தத்தை அறிந்தவர்கள் சொல்லுகின்றனர். புத்திபூர்வமாய்ச் செய்யப்பட்ட பாபத்திற்கும் ப்ராயஶ்சித்தம் உண்டு என்கின்றனர் சிலர். வேதத்தில்*

அவ்வாறு காணப்படுகிறது. ஜாபாலி:— அஜ்ஞானத்தால் செய்யப்பட்ட பாபங்களுக்கு ப்ராயஶ்சித்தத்தை ப்ராம்ஹணர்கள் சொல்லுகின்றனர். புத்தி பூர்வமாய்ச் செய்யப்பட்ட பாபத்திற்கும் சிலர் மூன்று வர்ணத்தாருக்கும் சூத்ரனுக்கும் ப்ராயஶ்சித்தத்தைச் சொல்லுகின்றனர். தேவலரும்:— புத்தி பூர்வமாய்ச் செய்யப்பட்ட பாபத்திற்கும், அடிக்கடி செய்யப்பட்ட பாபத்திற்கும் ப்ராயஶ்சித்தம் இவ்வுலகில் இல்லை. சிலர் புத்தி பூர்வக்ருதமான பாபத்திற்கும் ப்ராயஶ்சித்தத்தை விதிக்கின்றனர்.

अङ्गिरास्तु कामकृतस्य द्विगुणं प्रायश्चित्तमाह— अकामतः कृते पापे प्रायश्चित्तं न कामतः। स्यादकामकृते यत्तद्द्विगुणं बुद्धिपूर्वके इति। स्मृत्यन्तरेऽपि — विहितं यदकामानां कामात्तु द्विगुणं भवेत् इति। तथा — म्लेच्छेनाधिगता शूद्रा ह्यज्ञानात्तु कथञ्चन। कृच्छ्रत्रयं प्रकुर्वीत ज्ञाने तु द्विगुणं भवेत् इति।

அங்கிரஸ்ஸோவெனில்:— புத்தி பூர்வக்ருதமான பாபத்திற்கு இரண்டு மடங்கு ப்ராயஶ்சித்தத்தைச் சொல்லுகிறார்:— "அறியாமல் செய்யப்பட்ட பாபத்திற்கு ப்ராயஶ்சித்தம் உண்டு. அறிந்து செய்யப்பட்டதற்கு ப்ராயஶ்சித்தம் இல்லை. அறியாமல் செய்யப்பட்டதற்கு எந்த ப்ராயஶ்சித்தமோ அதுவே அறிந்து செய்யப்பட்டதற்கு இரண்டு மடங்கு ஆகும். ஓர் ஸ்ம்ருதியிலும்:— அறியாமல் செய்யப்பட்ட பாபங்களுக்கு விதிக்கப்பட்டது எந்த ப்ராயஶ்சித்தமோ, அதுவே புத்தி பூர்வமாய்ச் செய்யப்பட்ட பாபங்களுக்கு இரண்டு மடங்கு ஆகும். அவ்விதமே, "அறியாமையால் சூத்ரஸ்த்ரீ ம்லேச்சனுடன் ஸம்பந்தப்பட்டால் அவள் மூன்று க்ருச்ரங்களை அனுஷ்டிக்க வேண்டும். அறிந்து செய்யப்பட்ட விஷயத்தில் அந்த ப்ராயஶ்சித்தம் இரண்டு மடங்கு ஆகும்", என்றுள்ளது.

अत्र माधवीये व्यवस्थापितम्। अकामकृते न विप्रतिपत्तिः। कामकृतस्य तु मुनिविप्रतिपत्तौ केचिन्निर्णयमाहुः। द्विविधा हि पापस्य शक्तिः। नरकोत्पादिका व्यवहारनिरोधिका चेति। तन्निवर्तकप्रायश्चित्तस्यापि शक्तिर्द्विविधा। नरकनिवारिका व्यवहारजननी चेति। तत्र प्रायश्चित्ताभाववादिनां मुनीनां नरकनिवारणाभावोऽभिप्रेतः। सद्भाववादिनां तु व्यवहारजननी शक्तिरभिप्रेता। द्विगुणप्रायश्चित्तेनेह लोके व्यवहारस्सिद्ध्यति।

இவ்விஷயத்தில், மாதவீயத்தில் இவ்விதம் வ்யவஸ்தை செய்யப்பட்டுள்ளது:— அறியாமற் செய்யப்பட்ட பாப விஷயத்தில் மாறுதல் இல்லை. புத்தி பூர்வமாய்ச் செய்யப்பட்ட பாபத்திற்காலுல் மஹர்ஷிகளின் அபிப்ராய பேதம் இருக்கும் பொழுது சிலர் இவ்விதம் நிர்ணயத்தைச் சொல்கின்றனர்:- பாபத்தின் சக்தி இரண்டு விதமாய் உள்ளது - நரகத்தை உண்டு பண்ணக் கூடியது என்றும், வ்யவஹாரத்தைத் தடுக்கக் கூடியது என்றும், அந்தப் பாபத்தை நிவர்த்திக்கின்ற ப்ராயஸ்சித்தத்திற்கும் சக்தி இரண்டு விதம் - நரகத்தை நிவர்த்திக்கக் கூடியது என்றும். வியவஹாரயோக்யதையை உண்டு பண்ணக் கூடியது என்றும். அதில், ப்ராயஸ்சித்தம் இல்லை என்று சொல்லுகின்ற ருஷிகளுக்கு நரக நிவாரணம் இல்லை என்பது அபிப்ராய விஷயம். ப்ராயஸ்சித்தம் உண்டு என்கிற ருஷிகளுக்காலுல் வ்யவஹார யோக்யதையை உண்டு பண்ணும் சக்தி அபிப்ராய விஷயமாகிறது. இரண்டு மடங்கு ப்ராயஸ்சித்தம் செய்து கொள்வதால் இவ்வுலகில் வ்யவஹார யோக்யதை ஸித்திக்கின்றது.

अपरे पुनः कामतो व्यवहार्यस्तु वचनादिह जायते इति याज्ञवल्क्यवचने अव्यवहार्य इति पदं छित्वा कृतप्रायश्चित्तोऽप्य-व्यवहार्यः नरकस्य निवृत्तिरस्तीति वदन्ति। अत्र चोपोद्वलकं मनुवचनं

बालघ्नांश्च कृतघ्नांश्च विशुद्धानपि धर्मतः । शरणागतहन्तृंश्च स्त्रीहन्तृंश्च न संवसेत् इति । अन्ये तु पूर्वोक्ताङ्गिरस्स्मृत्यन्तरवचने कामकृते विशेषेण द्विगुणप्रायश्चित्तावगमात्, मनुना कामकारकृतेऽप्याहुरेके श्रुतिनिदर्शनात् इति । तत्राविशेषेण प्रायश्चित्ताङ्गीकारात् आपस्तम्बेन च दोषवच्च कर्माभिसन्धिपूर्वं कृत्वाऽनभिसन्धिपूर्वं वाऽब्लिङ्गाभिरप उपस्पृशेद्वारुणीभिर्वा इति व्यवहारादिविशेषानभिधानेन कामाकाम-कृतयोः शुद्ध्यभिधानात्, गौतमेन च शिष्टस्याक्रियाप्रतिषिद्ध-सेवनमिति तत्र प्रायश्चित्तं कुर्यान्न कुर्यादिति मीमांसन्ते ( न कुर्यादित्याहुः ) न हि कर्म क्षीयत इति कुर्यादित्यपरं पुनःस्तोमेनेष्ट्वा पुनः सवनमायान्तीति, विज्ञायते व्रात्यस्तोमेनेष्ट्वा तरति सर्वं पाप्मानं तरति ब्रह्महत्यां योऽश्वमेधेन यजत इति पूर्वोत्तरपक्षभङ्ग्या पापक्षयस्य दर्शितत्वादकामकृतानां सर्वेषां पापानां तत्तदुक्तप्रायश्चित्तैरिहामुत्र च शुद्धिर्भवति, कामकृतानां च पतनीयव्यतिरिक्तानां द्विगुण-प्रायश्चित्तैर्नरकनिवृत्तिरिह व्यवहारश्च सिद्ध्यति । नाभिसन्धिकृते प्रायश्चित्तमिति वसिष्ठादिस्मरणं पतनीयपापविषयम् ।

மற்றும் சிலரோவெனில், "காமதோ வ்யவஹார்யஸ்து" என்ற யாஜ்ஞவல்க்ய வசனத்தில் "அவ்யவஹார்ய:" என்று பதம்பிரித்து, ப்ராயஸ்சித்தம் செய்து கொண்டவனும் இவ்வுலகில் வ்யவஹார யோக்யன் அல்லாதவனாக ஆகிறான். பரலோகத்தில் நரகத்திற்கு நிவ்ருத்தி உண்டு என்கின்றனர். இவ்விஷயத்தில், இதற்குப் பலத்தைக் கொடுக்கும் மனு வசனம் இதுவாகும்- "சிசுஹத்யை செய்தவர்கள், நன்றியை மறந்தவர்கள், சரணம் அடைந்தவர்களைக் கொன்றவர்கள், ஸ்த்ரீகளைக் கொன்றவர்கள் இவர்கள் ப்ராயஸ்சித்தத்தால் சுத்தர்களாயினும் அவர்களுடன் ஸஹவாஸம் செய்யக் கூடாது" என்று. மற்றவரோ வெனில், முன் சொல்லப்பட்ட அங்கிரஸ், ஸ்ம்ருத்யந்த்ரம் இவைகளின்

வசனங்களில், புத்தி பூர்வமாய்ச் செய்த பாப விஷயத்தில் பேதமில்லாமல் இரண்டு மடங்கு ப்ராயஶ்சித்தம் அறியப்படுவதால், மனுவினால் ''காமகாரக்ருதே....... நிதர்சனாத்'' என்று அந்தப் பாபத்தில் பேதமில்லாமல் ப்ராயஶ்சித்தத்தை அங்கீகரிக்கப்பட்டு இருப்பதால், ஆபஸ்தம்பராலும் ''தோஷமுள்ள கர்மத்தைப் புத்திபூர்வமாய்ச் செய்தாலும், அறியாமல் செய்தாலும் ஆபோஹிஷ்டாதி மந்த்ரங்களாலாவது, வாருண மந்த்ரங்களாலாவது ஸ்நானம் செய்ய வேண்டும்'' என்ற வசனத்தில் வ்யவஹாரம் முதலிய விசேஷம் சொல்லப்படாததாலும், புத்தி பூர்வமாய்ச் செய்யப்பட்டதற்கும் அறியாமல் செய்யப்பட்டதற்கும் ப்ராயஶ்சித்தம் சொல்லப்பட்டு இருப்பதாலும், கௌதமராலும் ''விதிக்கப்பட்ட கர்மத்தைச் செய்யாமல் இருப்பது, விலக்கப்பட்டவைகளைச் செய்வது என்று. அவ்விஷயத்தில் ப்ராயஶ்சித்தத்தைச் செய்யலாமா, செய்யக் கூடாதா என்று விசாரிக்கின்றனர். (செய்ய வேண்டாம் என்கின்றனர் சிலர்). கர்மமானது அனுபவிக்கப்படாமல் குறையாது என்பதால். செய்யலாம் என்பது ஸித்தாந்தம். 'புந:ஸ்தோமத்தைச் செய்தால் மறுபடி யாகாதிகளுக்கு யோக்யராகின்றனர்' என்றும், 'வ்ராத்யஸ்தோமம் செய்தால் எல்லாப் பாபங்களையும் தாண்டுகிறான்', என்றும், 'அச்வமேதம் செய்தால் ப்ரம்ஹஹத்யா பாபத்தைத் தாண்டுகிறான்' என்றும், பூர்வபக்ஷ ஸித்தாந்த ப்ரகாரமாய்ப் பாபக்ஷயம் உண்டு என்பது சொல்லப்பட்டு இருப்பதால், அறியாமல் செய்யப்பட்ட எல்லாப் பாபங்களுக்கும் அவையவைகளுக்கு விதிக்கப்பட்ட ப்ராயஶ்சித்தங்களால் இவ்வுலகிலும் பரலோகத்திலும் சுத்தி உண்டாகிறது. பதநீயம் தவிர்த்த புத்திபூர்வமாய்ச் செய்யப்பட்ட பாபங்களுக்கும் இரண்டு மடங்கு ப்ராயஶ்சித்தங்களால் நரக நிவ்ருத்தியும் இவ்வுலகில் வ்யவஹார யோக்யதையும்

ஸித்திக்கின்றது. "புத்திபூர்வமாய்ச் செய்த பாபத்திற்கு ப்ராயஶ்சித்தம் இல்லை" என்ற வஸிஷ்டர் முதலியவரின் வசனம் பதனீய பாபத்தைப் பற்றியது.

तथा च मनुः — अकामतः कृतं पापं वेदाभ्यासेन शुद्ध्यति। कामतस्तु कृतं मोहात् प्रायश्चित्तैः पृथग्विधैः ॥ इयं विशुद्धिरुदिता प्रमाप्याकामतो द्विजम्। कामतो ब्राह्मणवधे निष्कृतिर्न विधीयते इति। ब्राह्मणवध इति सुरापानादेरप्युपलक्षणम् - ब्रह्महत्या-सुरापानस्वर्णस्तेयेषु कामतः । कृतेषु निष्कृतिर्नास्ति विहितान्मरणादृते। यः कामतो महापापं नरः कुर्यात् कथञ्चन। न तस्य निष्कृतिर्दृष्टा भृग्वग्निपतनादृते इति स्मृतेः। एवं च पतनीये कर्मणि कामकृते मरणान्तिकप्रायश्चित्तेषु कल्मषक्षयो भवत्येव फलान्तराभावात्, नास्यास्मिन् लोके प्रत्यापत्तिर्विद्यते कल्मषं तु निर्हण्यत इत्यापस्तम्बस्मरणात्।

அவ்விதமே, மனு:— "அறியாமல் செய்த பாபம் வேதாப்யாஸத்தால் சுத்தமாகும். அறிந்தும் மோஹத்தால் செய்யப்பட்ட பாபம் பலவிதமான ப்ராயஶ்சித்தங்களால் சுத்தமாகும். அறியாமையால் ப்ராம்ஹணனைக் கொன்றதற்கு இந்த ப்ராயஶ்சித்தம் சொல்லப்பட்டது. அறிந்து ப்ராம்ஹணனை வதம் செய்தால் ப்ராயஶ்சித்தம் விதிக்கப்படுவதில்லை" என்று. ப்ராம்ஹண வதம் என்றது ஸுராபானம் முதலியதையும் சொல்லுகின்றது. "அறிந்து செய்யப்பட்ட ப்ரம்ஹஹத்யை, ஸுராபானம், ஸ்வர்ணஸ்தேயம் இவைகளில் ப்ராயஶ்சித்தம் கிடையாது, விதிக்கப்பட்ட மரணத்தைத் தவிர்த்து. எவன் அறிந்து மஹாபாபத்தைச் செய்வானோ அவனுக்கு மலையில் இருந்து விழுவது, நெருப்பில் விழுவது இவைகளைத் தவிர்த்து வேறு ப்ராயஶ்சித்தம் காணப்படவில்லை" என்று ஸ்ம்ருதி இருப்பதால். இவ்விதம் இருப்பதால், அறிந்து

செய்யப்பட்ட பதனீய கர்மத்தில் மரணாந்திக ப்ராயஶ்சித்தம் செய்யப்பட்டால் பாபக்ஷயம் அவச்யம் உண்டாகிறது, வேறு பலன் இல்லாததால். ''இவனுக்கு மறுபடி இவ்வுலகத்தில் வ்யவஹார யோக்யதை இல்லை. பாபம் மட்டிலும் போக்கப்படுகிறது'' என்று ஆபஸ்தம்ப வசனம் இருப்பதால்.

एतच्च मरणान्तिकप्रायश्चित्तं ब्राह्मणानां कलौ निषिद्धम् — प्रायश्चित्तविधानं च विप्राणां मरणान्तिकम् । भृग्वग्निपतनं चैव वृद्धादिमरणं तथा इति कलियुग निषिद्धधर्ममध्ये परिगणनात् । मिथ्यैतदिति हारीतो यो ह्यात्मानं परं वाऽभिमन्यतेऽभिशस्त एव भवति इत्यापस्तम्बस्मरणात् । अयमर्थः — एतन्मरणान्तिकप्रायश्चित्तं मिथ्या - न कर्तव्यम् । य आत्मानं परं वाऽभिमन्यते - मारयति, सोऽभिशस्त एव - ब्रह्महैव भवतीति अतः कामकृतमहापातकानां मरणान्तिकप्रायश्चित्तस्य कलौ निषेधात् द्वादश वार्षिकादि प्रायश्चित्तैः पापक्षयाभावादिह व्यवहार्यत्वमात्रं सिद्ध्यति । 'कामतो व्यवहार्यस्तु इति याज्ञवल्क्यवचनं च महापातकविषयम् । उपपातकादावपतनीये पुनः कामकृतेऽपि प्रायश्चित्ते कृते पापक्षयो भवत्येव मनुवचनात्, अकामतः कृतं पापं वेदाभ्यासेन शुद्ध्यति । कामतस्तु कृतं पापं प्रायश्चित्तैः पृथग्विधैः इत्याहुः ।

இந்த மரணாந்திக ப்ராயஶ்சித்தம் என்பது ப்ராம்ஹணர்களுக்குக் கலியுகத்தில் நிஷித்தமாகியது, ''ப்ராம்ஹணர்களுக்கு மரணாந்திக ப்ராயஶ்சித்த விதானமும், மலையின் உச்சியிலிருந்து விழுவதும், நெருப்பில் விழுவதும், வ்ருத்தர் முதலியவர்கள் புத்திபூர்வமாய் மரிப்பதும்'' என்று கலியுகத்தில் நிஷேதிக்கப்பட்ட தர்மங்களுள் சேர்க்கப்பட்டு இருப்பதால். ''இந்த மரணாந்திக ப்ராயஶ்சித்தம் செய்யத் தகாதது,'' என்கிறார் ஹாரீதர். எவன் தன்னையோ பிறனையோ

கொல்லுகின்றானோ அவன் ப்ரம்ஹஹத்யை செய்தவனே ஆவான்,'' என்று ஆபஸ்தம்ப வசனம் இருப்பதால். ஆகையால், அறிந்து செய்யப்பட்ட மஹாபாதகங்களுக்கு மரணாந்திக ப்ராயஸ்சித்தம் கலியில் நிஷேதிக்கப்பட்டு இருப்பதால், பன்னிரண்டு வர்ஷம் அனுஷ்டிக்கக் கூடிய வ்ரதம் முதலிய ப்ராயஸ்சித்தங்களால் பாபக்ஷயம் உண்டாகாதாகையால், இவ்வுலகில் வ்யவஹார யோக்யத்வம் மட்டில் உண்டாகிறது. ''காமதோ வ்யவஹார்ய:'' என்ற யாஜ்ஞவல்க்ய வசனமும் மஹாபாதகத்தைப் பற்றியது. அபதநீயமான உபபாதகம் முதலியதில் அறிந்து செய்யப்பட்டதாயினும் ப்ராயஸ்சித்தம் செய்யப்பட்டால் பாபக்ஷயம் ஏற்படுகிறது என்று மனு வசனத்தால் ''அறியாமற் செய்யப்பட்ட பாபம் பலவிதமான ப்ராயஸ்சித்தங்களால் நசிக்கும்'' என்கின்றனர்.

## प्रकाशरहस्यपापप्रायश्चित्तविचारः ।

द्विविधानि पापानि प्रकाशकृतानि रहस्यकृतानि चेति । तत्र प्रकाशकृतानां परिषदोऽनुमत्या प्रायश्चित्तं कार्यम् । तथा च याज्ञवल्क्यः — विख्यातदोषः कुर्वीत पर्षदोऽनुमते व्रतम् इति । पराशरः — वेदवेदाङ्गविदुषां धर्मशास्त्रं विजानताम् । स्वकर्मरतविप्राणां स्वकं पापं निवेदयेत् इति । यत्पापं कर्तृव्यतिरिक्तेन केनचिदपि न ज्ञातं, तद्रहस्यम् । तस्य प्रायश्चित्तमपि रहस्येव कर्तव्यम् ।

## ப்ரகாசமாயும், ரஹஸ்யமாயும் செய்யப்பட்ட பாபத்தின் ப்ராயஸ்சித்த விசாரம்.

பாபங்கள் இரண்டு விதம் - ப்ரகாசமாய்ச் செய்யப்பட்டவை, ரஹஸ்யமாய்ச் செய்யப்பட்டவை, என்று. அவைகளில் ப்ரகாசமாய்ச் செய்யப்பட்டவைகளுக்கு ஸபையின் அனுமதியால் ப்ராயஸ்சித்தம் செய்யப்பட வேண்டும். அவ்விதமே, யாஜ்ஞவல்க்யர்:—

ப்ரஸித்தமான பாபத்தை உடையவன் பரிஷத்தின் (ஸபை) அனுமதியின் பேரில் ப்ராயஶ்சித்தத்தைச் செய்ய வேண்டும். பராசரர்:— "வேதம் வேதாங்கம் அறிந்தவர்களும், தர்ம சாஸ்த்ரம் அறிந்தவர்களும், ஸ்வகர்மானுஷ்டானத்தில் ஈடுபட்டவர்களுமான ப்ராம்ஹணர்களின் முன்னிலையில் தனது பாபத்தைத் தெரிவிக்க வேண்டும்" என்று. எந்தப் பாபம் கர்த்தாவைத் தவிர்த்து ஒருவனாலும் அறியப்படவில்லையோ அது ரஹஸ்ய பாபம் எனப்படும். அதற்கு ப்ராயஶ்சித்தமும் ரஹஸ்யத்திலேயே செய்யப்பட வேண்டும்.

तथा च हारीतः — रहस्ये रहस्यं प्रकाशे प्रकाशम् इति । रहस्यत्वादेव नास्ति तत्र परिषदनुमत्यपेक्षा । मनुः — एतैर्द्विजातयः शोध्या व्रतैराविष्कृतैनसः । अनाविष्कृतपापांस्तु मन्त्रैर्होमैश्च शोधयेत् । ख्यापनेनानुतापेन तपसाऽध्ययनेन च । पापकृन्मुच्यते पापात्तथा दानेन चापदि । यथा यथा नरोऽधर्मं स्वयं कृत्वाऽनुभाषते । तथा तथा त्वचेवाहिस्तेनाधर्मेण मुच्यते । यथा यथा मनस्तस्य दुष्कृतं कर्म निन्दति । तथा तथा शरीरं हि तेनाधर्मेण मुच्यत इति ।

அவ்விதமே, ஹாரீதர்:— ரஹஸ்ய பாபத்தில் ரஹஸ்ய ப்ராயஶ்சித்தம். ப்ரகாச பாபத்தில் ப்ரகாச ப்ராயஶ்சித்தம், என்றார். ரஹஸ்யமானதினாலேயே அவ்விஷயத்தில் பரிஷத்தின் அனுமதியின் அபேக்ஷையில்லை. மனு:— "ப்ரகாசமான பாபமுடையவர்களான மூன்று வர்ணத்தாரும் இந்த ப்ராயஶ்சித்தங்களால் சுத்தி செய்யத் தகுந்தவர்கள். ரஹஸ்யமான பாபமுடையவர்களோ ஆனால் மந்த்ரங்களாலும் ஹோமங்களாலும் சுத்தர்களாக்க வேண்டும். வெளியிடுவதாலும், பச்சாத்தாபத்தாலும், தபஸ்ஸினாலும், வேதாத்யயனத்தாலும், பாபம் செய்தவன் பாபத்தினின்றும் விடுபடுவான். ஆபத்காலத்தில் தானத்தால் விடுபடுவான். மனிதன் பாபத்தைச் செய்த

பிறகு எவ்வளவுக்கு எவ்வளவு வெளியிட்டுச் சொல்லுகிருனே, அவ்வளவுக்கு அவ்வளவு அந்தப் பாபத்தால் ஸர்ப்பம் தோலினுல் போல் விடுபடுவான். அவனது மனதானது எவ்வளவுக்கு எவ்வளவு பாபகர்மத்தை நிந்திக்கின்றதோ, அவ்வளவுக்கு அவ்வளவு அவனது சரீரம் அந்தப் பாபத்தால் விடுபடுகிறது'' என்ருர்.

## परिषल्लक्षणम्।

परिषल्लक्षणमाह मनुः — दशावरा वा परिषद्यं धर्मं परिकल्पयेत्। त्र्यवरा वाऽपि वृत्तस्था तं धर्मं न विचालयेत्।। त्रैविद्यो हेतुकस्तर्की नैरुक्तो धर्मपाठकः । त्रयश्चाश्रमिणः पूर्वे परिषत्स्याद्दशावरा । ऋग्वेदविद्यजुर्विच्च सामवेदविदेव च । त्र्यवरा परिषत् ज्ञेया धर्मसंशयनिर्णये । एकोऽपि वेदविद्धर्मं यं व्यवस्येद्विचक्षणः । स विज्ञेयः परो धर्मो नाज्ञानां गदितोऽयुतैः इति।

### பரிஷத்தின் (ஸபை) லக்ஷணம்.

பரிஷத்தின் லக்ஷணத்தைச் சொல்லுகிருர், மனு:— பத்துப் பேர்களுக்குக் குறையாத பரிஷத்தானது எந்தத் தர்மத்தை விதிக்குமோ, அல்லது மூன்று பேர்களுக்குக் குறையாததாய் நியமத்துடன் கூடிய ஸபையானது எந்தத் தர்மத்தை விதிக்குமோ, அந்தத் தர்மத்தை அசைக்கக் கூடாது. மூன்று வேதங்களை அத்யயனம் செய்தவர்கள், ச்ருதி ஸ்ம்ருதிகளுக்கு விரோதம் இல்லாத ந்யாய சாஸ்த்ரம் அறிந்தவன், மீமாம்ஸாரூப தர்க்கத்தை அறிந்தவன், நிருக்தமறிந்தவன், மனுஸ்ம்ருதி முதலிய தர்மசாஸ்த்ரமறிந்தவன், ப்ரம்ஹசாரீ, க்ருஹஸ்தன், வானப்ரஸ்தன், என்ற இந்தப் பத்துப் பேர்கள் கூடியது தசாவரா பரிஷத் எனப்படுகிறது. ருக்வேதம், யஜுர்வேதம், ஸாமவேதம் இவைகளை அர்த்தத்துடன் அறிந்த மூவர்கள் கூடிய ஸபை தர்ம ஸம்சய நிர்ணய

விஷயத்தில் த்ரியவரா பரிஷத் எனப்படுகிறது. வேதம் அறிந்த வித்வானுகிய ஒருவனுவது எதைத் தர்மமாக நிச்சயிப்பானே, அது உயர்ந்த தர்மமாய் அறியத் தகுந்தது. தர்மம் அறியாத பதினுயிரமவர்கள் சொன்னுலும். அது தர்மம் ஆகாது, என்று.

याज्ञवल्क्यः — चत्वारो वेदधर्मज्ञाः पर्षत्त्रैविद्यमेव वा। सा ब्रूते यं स धर्मस्स्यादेको वाऽध्यात्मवित्तमः इति । पराशरः — चत्वारो वा त्रयो वाऽपि यं ब्रूयुर्वेदपारगाः। स धर्म इति विज्ञेयो नेतरैस्तु सहस्रशः। चत्वारो वा त्रयो वाऽपि वेदवन्तोऽग्निहोत्रिणः। ब्राह्मणानां समर्था ये परिषत् सा विधीयते । अनाहिताग्नयो येऽन्ये वेदवेदाङ्गपारगाः । पञ्च त्रयो वा धर्मज्ञाः परिषत् सा प्रकीर्तिता । मुनीनामात्मविद्यानां द्विजानां यज्ञयाजिनाम् । वेदव्रतेषु स्नातानामेकोऽपि परिषद्भवेत्। प्रमाणमार्गं मार्गन्तो ये धर्मं प्रवदन्ति वै। तेषामुद्विजते पापं सद्भूत गुणवादिनाम्।

யாஜ்ஞவல்க்யர்:— வேதங்களேயும் தர்மசாஸ்த்ரங்களேயும் அறிந்த நான்கு ப்ராம்ஹணர்கள் பரிஷத் எனப்படுவர். அல்லது மூன்று வேதங்களேயும் தர்மசாஸ்த்ரங்களேயும் அறிந்த மூவராவது பரிஷத் எனப்படும். அந்தப் பரிஷத் எதைச் சொல்லுமோ அது தர்மமாகும். அல்லது அத்யாத்ம சாஸ்த்ரமும் (தர்மசாஸ்த்ரமும்) அறிந்தவரில் சிறந்த ஒருவனுவது எதைச் சொல்வானே அது தர்மமாகும். பராசரர்:— வேதம் முழுவதும் கற்றவர்கள் நால்வர் அல்லது மூவர் எதைச் சொல்லுவார்களோ அது தர்மமாகும். மற்றவர் (வேதங் கற்காதவர்) ஆயிரம்பேர்கள் சொன்னுலும் தர்மமல்ல. வேதம் கற்றவரும், அக்னிஹோத்ரிகளும், ப்ராம்ஹணர்களுள் ஸமர்த்தருமாகிய நால்வர் அல்லது மூவர் கொண்டது பரிஷத் என்று விதிக்கப்பட்டுள்ளது. அனுஹிதாக்னிகளாயும், வேத வேதாங்கங்களே முழுவதும்

அறிந்தவரும், தர்மம் அறிந்தவருமாகிய ப்ராம்ஹணர்கள் ஐந்து அல்லது மூன்று பேர்கள் கொண்டது பரிஷத் எனச் சொல்லப்பட்டுள்ளது. முனிகளும், ஆத்மஜ்ஞர்களும், யாகங்கள் செய்தவரும், வேத வ்ரதங்கள் அனுஷ்டித்தவரும், ஆகிய ப்ராம்ஹணர்களுள் ஒருவர் உள்ளதும் பரிஷத்தாக ஆகும். எந்த ப்ராம்ஹணர்கள் சாஸ்த்ர ப்ரமாணத்தை ஆராய்கின்றவராய்த் தர்மத்தைச் சொல்லுகின்றனரோ, உண்மையான குணத்தைச் சொல்லுகின்ற அவரிடமிருந்து பாபம் பயத்தை யடைகின்றது.

यथाऽश्मनि स्थितं तोयं मरुतार्केण शुष्यति । एवं परिषदादेशान्नाशयेत्तत्र दुष्कृतम् । नैव गच्छति कर्तारं नैव गच्छति पर्षदम् । मारुतार्काग्निसंयोगात् पापं नश्यति तोयवत् । अमेध्यानि तु सर्वाणि प्रक्षिप्यन्ते यथोदके । तथैव किल्बिषं सर्वं प्रक्षिपेच्च द्विजानले । ये पठन्ति द्विजा वेदं पञ्चयज्ञरताश्च ये । त्रैलोक्यं तारयन्त्येते पञ्चेन्द्रियरता अपि । धर्मशास्त्ररथारूढा वेदखड्गधरा द्विजाः । क्रीडार्थमपि यं ब्रूयुः स धर्मः परमः स्मृतः । चातुर्वैद्यो विकल्पी च अङ्गविद्धर्मपाठकः । वृद्धाश्चाश्रमिणो मुख्या पर्षदेषा दशावरा इति । चतुर्णां वेदानां पारगश्चातुर्वैद्यः ।

எப்படிக் கல்லின் மேலுள்ள ஜலம் காற்றினலும் ஸூர்யனலும் வற்றுகின்றதோ, அப்படி பரிஷத்தானது தன்னுடைய தீர்மானத்தால் அவனிடமுள்ள பாபத்தைப் போக்குகின்றது. கர்த்தாவையும் பாபம் அடைவதில்லை. பரிஷத்தையும் அடைவதில்லை. காற்று, ஸூர்யன், அக்னி இவர்களின் சேர்க்கையால் ஜலம் வற்றுவதுபோல் பாபம் நசிக்கின்றது. அசுத்திகள் எல்லாம் எப்படி ஜலத்தில் போக்கப்படுகின்றதோ, அப்படியே பாபமெலாம் ப்ராம்ஹணனகிய அக்னியில் போடப்படுகிறது. எந்த ப்ராம்ஹணர்கள் வேதத்தைப் படிக்கின்றனரோ, எவர்கள்

ஐந்து யஜ்ஞங்களைச் செய்கின்றவரோ, அவர்கள் ஐந்து இந்த்ரியங்களுக்கு வச்யராயினும் மூவுலகங்களையும் சுத்தம் செய்கின்றனர். தர்மசாஸ்த்ரமெனும் தேரில் ஏறியவரும், வேதமெனும் சுத்தியைத் தரித்தவருமாகிய ப்ராம்ஹணர்கள் விளையாட்டிற்காகவாவது எதைச் சொல்லுவரோ அது சிறந்த தர்மம் எனப்பட்டுள்ளது. நான்கு வேதமறிந்தவர்கள், விகல்பீ, வேதாங்கங்களை யறிந்தவன், தர்மசாஸ்த்ரங்களை யறிந்தவன், பெரியோர்களான மூன்று ஆச்ரமம் உடையவர்கள் (ப்ரம்ஹசாரீ, க்ருஹஸ்தன், வானப்ரஸ்தன்) என்று இந்தப் பத்துப்பேர்கள் அடங்கியதும் தசாவரா பரிஷத் எனச் சொல்லப்பட்டுள்ளது.

विकल्प्यादिस्वरूपमुक्तमङ्गिरसा — धर्मस्य पर्षदश्चैव प्रायश्चित्तक्रमस्य च। त्रयाणां यः प्रमाणज्ञः स विकल्पी भवेद्द्विजः। शब्दे छन्दसि कल्पे च शिक्षायां च सुनिश्चितः। ज्योतिषां गणिते चैव स नैरुक्तोऽङ्गविद्भवेत्। वेदविद्याव्रतस्नातः कुलशीलसमन्वितः। अनेकधर्मशास्त्रज्ञः पठ्यते धर्मपाठकः इति। ब्रह्मचर्याश्रमादूर्ध्वं विप्रो वृद्धः। चातुर्वैद्यत्वाद्युक्तविशेषणविशिष्टा गृहस्थाश्रमवर्तिनो दश संख्याकाः परिषच्छब्दवाच्याः। ये चत्वारो वा त्रयो वाऽपि इत्यादिपक्षाः पूर्वमुक्तास्ते सर्वे महापापेभ्योऽर्वाचीनविषयाः युगान्तरविषया वा।

விகல்பீ முதலியவரின் ஸ்வரூபம் அங்கிரஸ்ஸால் சொல்லப்பட்டுள்ளது:— தர்மம், பரிஷத், ப்ராயச்சித் க்ரமம் இம்மூன்றின் ப்ரமாணத்தை யறிந்தவன் எவனோ அந்த ப்ராம்ஹணன் "விகல்பீ" எனப்படுவான். சப்த சாஸ்த்ரம், சந்தஸ், கல்பம் (ச்ரௌத ஸூத்ரம்), சிக்ஷை, ஜ்யோதிஷ கணித சாஸ்த்ரம், இவைகளில் ஜ்ஞானமுடைய வேதாங்கங்களை யறிந்தவன் நைருக்தன் ஆவான். வேதவித்யாஸ்நாதனும், வ்ரத ஸ்நாதனும், நற்குலத்தில்

பிறந்தவனும், நல்லொழுக்கமுள்ளவனும், அநேக தர்ம சாஸ்த்ரங்களை அறிந்தவனுமானவன் தர்மபாடகன் எனப்படுகிறான். ஐம்பதாண்டு வயதுக்கு மேலுள்ளவன் வ்ருத்தன் எனப்படுவான். சாதுர்வைதயத்வம் முதலிய விசேஷணங்களுடன் கூடியவரும், க்ருஹஸ்தாச்ரமத்தில் இருப்பவருமாகிய புத்ர ப்ராம்ஹணர்கள் பரிஷத் என்று பிறசித்தமாகச் சொல்லப்படுகின்றனர். "நால்வர் அல்லது மூவர்" என்று சொல்லப்பட்ட பக்ஷங்கள் முன் சொல்லப்பட்டவை எவையோ, அவையெல்லாம் மஹாபாதகங்களுக்குக் கீழ்ப்பட்டுள்ள பாபங்களைப் பற்றியவை, அல்லது மற்ற யுகங்களைப் பற்றியவை.

यदाह देवलः — पापानां तारतम्येन विप्राणां गुरुलाघवम् । एको नार्हति तत्कर्तुमनूचानोऽप्यनुग्रहम् । सुशान्तानां च विदुषां कलौ सङ्घः प्रशस्यते । धर्मज्ञा बहवो विप्राः कर्तुमर्हन्त्यनुग्रहम् इति । यत्तूक्तमङ्गिरसा — पातके तु शतं पर्षत् सहस्रं महदादिषु । उपपातके तु पञ्चाशत् स्वल्पे स्वल्पं तथा भवेत् इति । तदल्पीयोविषयम् ।

அதைச் சொல்லுகிறார், தேவலர்:— பாபங்களின் தாரதம்யத்தை அனுஸரித்து (பரிஷத்) ப்ராம்ஹணர்களின் அதிகமும் குறைவும். ஆகையால் ஸாங்கமாகிய வேதத்தைக் கற்றவனாயினும் ஒரு ப்ராம்ஹணன் அனுக்ரஹம் செய்ய அர்ஹனாகான். கலியுகத்தில் சாந்தர்களும், வித்வான்களுமாகிய ப்ராம்ஹணர்களின் கூட்டமே சிறந்ததெனப்படுகிறது. தர்மங்களை அறிந்த ப்ராம்ஹணர்கள் அநேகரே அனுக்ரஹம் செய்ய உரியவராகின்றனர். ஆங்கிரஸ் ஸ்ம்ருதியில்:— பாதகத்தில் நூறுபேர்கள் கொண்ட பரிஷத் வேண்டும். மஹாபாதகம் முதலியவைகளில் ஆயிரம் பேர்களடங்கிய பரிஷத் இருக்க வேண்டும். உபபாதகங்களில் ஐம்பது பேர்கள் கொண்ட பரிஷத் இருக்க வேண்டும். அல்பமான பாபத்தில்

ஸ்வல்பமான ப்ராம்ஹணர்களடங்கிய பரிஷத் இருக்கலாம்'', என்று சொல்லிய வசனமுள்ளதே எனில், அது அடிக்கடி செய்த பாபத்தைப் பற்றியது.

अङ्गिराः — आर्तानां मार्गमाणानां प्रायश्चित्तानि ये द्विजाः। जानन्तो न प्रयच्छन्ति ते तेषां समभागिनः। तस्मादार्तं समासाद्य ब्राह्मणं च विशेषतः। जानद्भिर्धर्मपन्थानं न भाव्यं तु पराङ्मुखैः। अनर्थितैरनाहूतैरपृष्टैश्चैव संसदि। प्रायश्चित्तं न दातव्यं जानद्भिरपि सर्वदा। यत्पुण्यमुद्धृते विप्रे म्रियमाणे जलादिषु। तत्पुण्यं तारिते पापात् प्रायश्चित्तैस्तु मानवैः। प्रायश्चित्तविधानेन दुष्कृतान्मोचयेन्नरम्। इहामुत्रसुखं विन्देद्विद्वानायुर्यशो बलम् इति।

அங்கிரஸ்:— வருந்தியவர்களும், தேடுகிறவர்களுமான பாபிகளுக்கு ப்ராயஸ்சித்தங்களை எந்த ப்ராம்ஹணர்கள் அறிந்திருந்தும் சொல்வதில்லையோ, அவர்கள் அந்தப் பாபிகளுடன் ஸமமான பாதகத்தை யடைகின்றனர். ஆகையால், வருந்தியவனை ப்ராம்ஹணன் ஸமீபத்தில் வந்தால் தர்ம மார்க்கத்தை யறிந்தவர்கள் பராங்முகர்களாய் இருக்கக் கூடாது. ப்ரார்த்திக்கப்படாதவரும், அழைக்கப்படாதவரும், கேட்கப்படாதவருமாகியவர்கள் தர்மத்தை அறிந்தவராயினும் ஸபையில் ப்ராயஸ்சித்தத்தை ஒரு பொழுதும் சொல்லக் கூடாது. ஜலம் முதலியவைகளில் விழுந்து மரிக்குந்தறுவாயிலுள்ளவனை வெளியேற்றினால் எந்தப் புண்யமோ, அந்தப் புண்யம் பாபியைப் பாபத்தினின்றும் ப்ராயஸ்சித்தத்தால் வெளியேற்றுவதால் அறிந்த மனிதர்களுக்கு உண்டாகும். எந்த வித்வானன மனிதன் ப்ராயஸ்சித்தத்தை விதித்துப் பாபியைப் பாபத்தினின்றும் விடுவிக்கின்றானோ, அவன் இவ்வுலகிலும் மேலுலகிலும் ஸுகத்தை அடைவான். ஆயுள், யசஸ், பலம் இவைகளையும் அடைவான்.

परिषदयोग्याः

नामधारकविप्राणां परिषत्त्वं नास्तीत्याह पराशरः — अत ऊर्ध्वं तु ये विप्राः केवलं नामधारकाः । परिषत्त्वं न तेष्वस्ति सहस्रगुणितेष्वपि इति । अत ऊर्ध्वम् - वर्णितेभ्यो गुणवद्भ्यो ब्राह्मणेभ्य ऊर्ध्वं तद्व्यतिरिक्ता गुणरहिता इति यावत् ।

**பரிஷத்துக்கு யோக்யரல்லாதவர்.**

*பெயரைமட்டும் தரித்துள்ள ப்ராம்ஹணர்களுக்குப் பரிஷத் தன்மை இல்லை என்கிறார், பராசரர்:— "இவர்களுக்கு மேல் எந்த ப்ராம்ஹணர்கள் பெயரை மட்டில் வஹித்துள்ளாரோ, அவர்கள் ஆயிரம் பேர்கள் கூடினாலும் பரிஷத் தன்மை யில்லை", என்று. இவர்களுக்கு மேல் = முன் சொல்லப்பட்டுள்ள நற்குணங்களுள்ள ப்ராம்ஹணர்களைக் காட்டிலும் வேறானவர்கள், அதாவது குணமற்றவர்கள்.*

स एव — सावित्र्याश्चापि गायत्र्याः सन्ध्योपास्त्यग्निकार्ययोः । अज्ञानात् कृषिकर्तारो ब्राह्मणा नामधारकाः । यथा काष्ठमयो हस्ती यथा चर्ममयो मृगः । ब्राह्मणो ह्यनधीयानस्त्रयस्ते नामधारकाः । प्रायश्चित्तं प्रयच्छन्ति ये द्विजा नामधारकाः । ते द्विजाः पापकर्माणः समेता नरकं ययुः इति । ययुर्यान्तीत्यर्थः ।

பராசரரே:— *காயத்ரியையும், ஸந்த்யோபாஸனத்தையும், அக்னி கார்யத்தையும் அறியாமல் க்ருஷி செய்பவரான ப்ராம்ஹணர்கள் நாமதாரக ப்ராம்ஹணர்கள் எனப்படுவர். மரத்தினால் செய்யப்பட்ட யானை எப்படியோ, தோலினால் செய்யப்பட்ட மான் எப்படியோ, அப்படியே அத்யயனம் செய்யாத ப்ராம்ஹணனும். அம் மூவரும் பெயரை மட்டும் தரித்தவராவர். நாமதாரகர்களான எந்த ப்ராம்ஹணர்கள் ப்ராயஶ்சித்தத்தை உபதேசிக்கின்றனரோ, அந்தப்*

பாபிகளான ப்ராம்ஹணர்கள் பாபியுடன் சேர்ந்து நரகத்தை யடைகின்றனர்.

स एव — अव्रतानाममन्त्राणां जातिमात्रोपजीविनाम् । सहस्रशः समेतानां परिषत्त्वं न विद्यते । यद्वदन्ति तमोमूढा मूर्खा धर्ममतद्विदः । तत्पापं शतधा भूत्वा तद्वक्तृनधिगच्छति । अज्ञात्वा धर्मशास्त्राणि प्रायश्चित्तं ददाति यः । प्रायश्चित्ती भवेत् पूतः किल्बिषं परिषत् व्रजेत् । राज्ञश्चानुमते स्थित्वा प्रायश्चित्तं विनिर्दिशेत् । स्वयमेव न कर्तव्यं कर्तव्या स्वल्पनिष्कृतिः इति ।

பராசரர்:— வ்ரதங்களில்லாதவரும், மந்த்ரம் இல்லாதவரும், ஜாதியால் மட்டும் பிழைப்பவருமாகியவர் ஆயிரம் பேர்கள் கூடி இருந்தாலும் அவர்களுக்குப் பரிஷத் தன்மை இல்லை. தமோகுணத்தால் மூடரும், மூர்க்கரும், அறியாதவர்களுமாகிய எவர்கள் ப்ராயஶ்சித்தத்தைச் சொல்லுகின்றனரோ, அவர்களை அந்தப் பாபியின் பாபம் பலவிதமாக ஆகி அடைகின்றது. எவன் தாம் சாஸ்த்ரங்களை அறியாமல் ப்ராயஶ்சித்தத்தைச் சொல்லுகிறானோ, அந்தப் பரிஷத்தைப் பாபம் அடைகின்றது. ப்ராயஶ்சித்தத்தை அபேக்ஷித்த பாபி சுத்தனாகின்றான். அரசனின் அனுமதியிலிருந்து ப்ராயஶ்சித்தத்தைச் சொல்ல வேண்டும். தானாகவே சொல்லக்கூடாது. ஸ்வல்பமான ப்ராயஶ்சித்தத்தைப் பரிஷத்தும் செய்து கொள்ள வேண்டும்.

## प्रायश्चित्तविधानस्थलम् ।

स एव — प्रायश्चित्तं सदा दद्याद्देवतायतनाग्रतः । आत्मकृच्छ्रं ततः कृत्वा जपेद्वै वेदमातरम् इति । देवतायतनाग्रत इति शैवस्य वैष्णवस्य वा पुरतः स्थित्वा निर्देष्टव्यम् । एतत् पुण्यतीर्थादिरूप-लक्षणम् । देवालये नदीतीरे शुचौ देशे सभास्थले । उपविश्य यथाशास्त्रं प्रायश्चित्तं विनिर्दिशेत् इति स्मृतेः । एवं प्रायश्चित्तं विनिर्दिश्यानन्तरं

निर्देष्टारः सर्वे स्वात्मशुद्ध्यर्थं तत्प्रायश्चित्तानुसारेण किञ्चित् कृच्छ्रं चरित्वाऽनन्तरं वेदमातरं - गायत्रीं यथाशक्ति जपेयुः ।

**ப்ராயஶ்சித்தம் விதிக்கும் இடம்**

பராசரர்:— "தேவாலயத்தின் முன்னிலையில் இருந்து ப்ராயஶ்சித்தத்தை விதிக்க வேண்டும். பிறகு தனது சுத்திக்காக க்ருச்ராசரணம் செய்து கொண்டு காயத்ரியை ஜபிக்க வேண்டும்" என்று. தேவாலயம் என்றதால் சிவாலயம் அல்லது விஷ்ணு ஆலயத்தின் முன்னிலையில் இருந்து ப்ராயஶ்சித்தத்தை விதிக்க வேண்டும். இது புண்யதீர்த்தம் முதலியவைகளையும் சொல்வதாகும். "தேவாலயம் நதீதீரம், சுத்தமான தேசம், ஸபாப்ரதேசம் இவைகளுள் ஒன்றில் உட்கார்ந்து சாஸ்த்ரப்படி ப்ராயஶ்சித்தத்தை விதிக்க வேண்டும்" என்று ஸ்ம்ருதி இருப்பதால். இவ்விதம் ப்ராயஶ்சித்தத்தை விதித்து, பிறகு ப்ராயஶ்சித்தம் விதித்தவர் எல்லோரும் தமது சுத்திக்காக அந்த ப்ராயஶ்சித்தத்திற்குத் தகுந்தபடி ஸ்வல்பமாக க்ருச்ரத்தை அனுஷ்டித்து, பிறகு வேத மாதாவான காயத்ரியை யதாசக்தி ஜபிக்க வேண்டும்.

अङ्गिराः — उपस्थानं व्रतादेशश्चर्या शुद्धिप्रकाशनम् । प्रायश्चित्तं चतुष्पादं विहितं धर्मकर्तृभिः इति । पराशरः — पापं प्रख्यापयेत् पापी दत्वा धेनुं तथा वृषम् । तिस्रो धेनूर्महापापे दत्वा प्रख्यापयेन्नरः । द्विगुणे व्रत आदिष्टे दक्षिणा द्विगुणा भवेत् । यावद्व्रतं तु कर्तव्यं दक्षिणा तावती भवेत् । वित्तशाठ्यं न कुर्वीत सति द्रव्येऽफलप्रदम् । विज्ञाप्य पापं सभ्यानां किञ्चिद्दत्वा व्रतं चरेत् इति ।

அங்கிரஸ்:— உபஸ்தானம், (பரிஷத்தையடைவது), வ்ரதாதேசம் (ப்ராயஶ்சித்தத்தை விதிப்பது), சர்யா (ப்ராயஶ்சித்தத்தை அனுஷ்டிப்பது), சுத்திப்ரகாசனம் (ப்ராயஶ்சித்த அனுஷ்டானத்தால் சுத்தியாகியதை வெளியிடுவது), என்று இந்த நான்கு விதமுடையது

ப்ராயஶ்சித்தம், என்று தர்ம சாஸ்த்ர கர்த்தாக்களால் சொல்லப்பட்டுள்ளது. பராசரர்:— பாபம் செய்தவன் கோதானத்தையும், வ்ருஷப தானத்தையும் செய்து பாபத்தை வெளியிட வேண்டும். மஹாபாப விஷயத்தில் மூன்று பசுக்களைத் தானம் செய்து பாபத்தை வெளியிட வேண்டும். வ்ரதம் இரண்டு மடங்காய் விதிக்கப்பட்டால் தக்ஷிணையும் இரண்டு மடங்காக ஆகும். வ்ரதம் எவ்வளவு மடங்கு விதிக்கப்பட்டதோ அவ்வளவு மடங்கு தக்ஷிணையும் ஆகும். தனம் இருக்கும் பொழுது தன விஷயத்தில் வஞ்சனையைச் செய்யக் கூடாது. அவ்விதம் செய்தால் அது பலனைக் கொடுக்காது. ஸபையில் உள்ளவர்க்குப் பாபத்தை வெளியிட்டு ஸ்வலப்தானமும் செய்து விட்டு, ப்ராயஶ்சித்தத்தை அனுஷ்டிக்க வேண்டும்.

## ब्रह्महत्या प्रायश्चित्तम्

अथ प्राणिहननस्य प्रायश्चित्तमुच्यते । तत्र ब्रह्मवधस्य महापातकस्य प्रायश्चित्तमाह पराशरः—चतुर्विद्योपपन्नस्तु विधिवत् ब्रह्मघातके । समुद्रसेतुगमनं प्रायश्चित्तं विनिर्दिशेत् इति । चतुर्विद्योपपन्नः - वेदाध्ययनानुष्ठानवान् अनेन सर्वा परिषदुपलक्ष्यते । समुद्रे दाशरथिना बद्धः सेतुः समुद्रसेतुः । तद्यात्रां ब्राह्मणघातके पुरुषे यथाविध्यनुष्ठेयत्वेन निर्दिशेदिति ।

### ப்ரம்ஹஹத்தியின் ப்ராயஶ்சித்தம்

இனி ப்ராணிகளைக் கொலை செய்ததற்கு ப்ராயஶ்சித்தம் சொல்லப்படுகிறது. அதில், மஹாபாபமான ப்ரம்ஹஹத்திக்கு ப்ராயஶ்சித்தத்தைச் சொல்லுகிறார், பராசரர்:— "நான்கு வித்யைகளையும் அறிந்தவன் ப்ரம்ஹஹத்தி செய்தவன் விஷயத்தில் விதிப்படி ஸமுத்ர ஸேது யாத்ரையை ப்ராயஶ்சித்தமாய் விதிக்க வேண்டும்," என்று. வேதாத்யயன ஸம்பந்நனும் அனுஷ்டாதாவாயும் உள்ளவன், சதுர்வித்யோபபன்னன்.

இதனுல் பரிஷத் முழுவதும் சொல்லப்படுகிறது. ஸமுத்ரத்தில் ஸ்ரீ ராமனுல் கட்டப்பட்ட ஸேது ஸமுத்ர ஸேது எனச் சொல்லப்படுகிறது. அந்த ஸேது யாத்ரையை விதிப்படி அனுஷ்டிக்க வேண்டும் என்று ப்ரம்ஹஹத்தி செய்தவனுக்கு விதிக்க வேண்டும்.

विधिवदित्युक्तम्, कोऽसौ विधिरित्याकाङ्क्षायां तदिति-कर्तव्यतामाह स एव — सेतुबन्धपथे भिक्षां चातुर्वर्ण्यात् समाचरेत्। वर्जयित्वा विकर्मस्थान् छत्रोपानद्विवर्जितः । अहं दुष्कृतकर्मा वै महापातककारकः। गृहद्वारेषु तिष्ठामि भिक्षार्थी ब्रह्मघातकः। गोकुलेषु वसेच्चैव ग्रामेषु नगरेषु च। तपोवनेषु तीर्थेषु नदीप्रस्रवणेषु च। एतेषु ख्यापयन्नेनः पुण्यं गत्वा तु सागरम् । दशयोजनविस्तीर्णं शतयोजनमायतम्। रामचन्द्रसमादिष्टं नलसञ्चयसञ्चितम्। सेतुं दृष्ट्वा समुद्रस्य ब्रह्महत्यां व्यपोहति । सेतुं दृष्ट्वा विशुद्धात्मा त्ववगाहेत सागरम् इति।

விதியுடன் என்று சொல்லப்பட்டதால், அந்த விதி எவ்விதமாகியது என்ற விஷயத்தில், அதில் செய்ய வேண்டியதைச் சொல்லுகிறுர், பராசரரே:— "ஸேது யாத்ரைக்குப் போகும் வழியில் நான்கு வர்ணத்தாரிடம் இருந்தும் பிக்ஷையை வாங்க வேண்டும், பாபம் செய்தவரைத் தவிர்த்து. குடை, பாதரக்ஷை இல்லாதவனுய் இருக்க வேண்டும். "நான் பாபம் செய்தவன், மஹாபாதகத்தைச் செய்தவன், வீடுகளின் வாயிற்படியில் நிற்கின்றேன், பிக்ஷையை விரும்புகிறேன், நான் ப்ரம்ஹஹத்தி செய்தவன்" என்று சொல்லி பிக்ஷை கேட்க வேண்டும். மாட்டுக் கொட்டில்களிலும், க்ராமங்களிலும், நகரங்களிலும், தபோவனங்களிலும், புண்ய தீர்த்தங்களிலும், நதிக்கரைகளிலும், மலையருவிகளிலும் என்ற இவைகளில் வஸிக்கவும். இவைகளில் பாபத்தை வெளியிட்டுக் கொண்டு புண்ய ப்ரதமான ஸமுத்ரத்தை

மறைந்துபத்து யோஜனை அகலமுள்ளதும், நூறு யோஜனை நீளமுள்ளதும், ஸ்ரீராமசந்த்ரனால் உத்தரவிடப்பட்டதும், நளனால் கட்டப்பட்டதும், ஆகிய ஸேதுவை தர்சித்தால் ப்ரம்ஹஹத்யா பாபத்தை அகற்றுவான். ஸேது தர்சனத்தால் சுத்தனாய் ஸமுத்ரத்தில் ஸ்நானம் செய்ய வேண்டும்'', என்று.

छत्रोपानद्विवर्जितः इति न केवलं भिक्षावेलायाम्, किन्तु मार्गगमनेऽपीति द्रष्टव्यम्। अहं दुष्कृत कर्मेति भिक्षमाणेन वक्तव्यः उक्तिप्रकारोऽभिहितः। अध्वश्रान्तस्तपोवनादिषु निवसेत्। तत्र व्याघ्रादिभये सति ग्रामे नगरे वा प्रविश्य गोशालादेवतायतनादौ पुण्यप्रदेशे निवसेत्। एतेषु व्यापयन्निति न केवलं भिक्षागृहेष्वेव पापप्रख्यापनम् किन्तु निवासस्थानेष्वपीत्यर्थः।

குடை, பாதரக்ஷை தரிக்கக்கூடாது என்பது பிக்ஷை கேட்கும் காலத்தில் மட்டும் அல்ல. வழி நடக்கும் காலத்திலும் என்றறியவும். ''நான் பாபி....'' என்றது பிக்ஷை கேட்கும் காலத்தில் சொல்ல வேண்டிய ப்ரகாரமாகும். வழி நடப்பதால் களைப்புற்றால் தபோவனம் முதலியவைகளில் தங்கலாம். அங்கு புலி முதலியவைகளால் பயம் ஏற்படுமாகில், நகரம் இவைகளில் நுழைந்து, மாட்டுக் கொட்டில், தேவாலயம் முதலிய புண்ய தேசங்களில் வஸிக்கவும். "இவ்விடங்களில் பாபத்தை வெளியிட வேண்டும்" என்றதற்கு பிக்ஷை வாங்கும் வீடுகளில் மட்டில் என்பது இல்லை, ஆனால் தங்கும் இடங்களிலும் பாபத்தை வெளியிட வேண்டும் என்பது பொருள்.

सेतुयात्रां समाप्य पुनः प्रत्यागतस्य कर्तव्यमाह स एव—पुनः प्रत्यागतो वेश्म वासार्थमुपसर्पति। सपुत्रः सह भृत्यैश्च कुर्याद्ब्राह्मणभोजनम्। गाश्चैवैकशतं दद्याच्चातुर्वेद्येऽथ दक्षिणाम्। ब्राह्मणानां प्रसादेन ब्रह्महा तु विमुच्यत इति।

ஸேது யாத்ரையை முடித்துத் திரும்பி வந்தவன் மறுபடி செய்ய வேண்டியதைச் சொல்லுகிறார், பராசரர்:— மறுபடி திரும்பி வந்தவன் வஸிப்பதற்காகத் தன் வீட்டை யடைய வேண்டும். புத்ரர்களுடனும் ப்ருத்யர்களுடனும் கூடியவனாய் ப்ராம்ஹணர்களுக்குப் போஜனம் செய்விக்க வேண்டும். பிறகு நான்கு வேதம் அறிந்த ப்ராம்ஹணனுக்கு நூற்றொன்று பசுக்களைத் தக்ஷிணையாய்க் கொடுக்க வேண்டும். ப்ராம்ஹணர்களின் அனுக்ரஹத்தால் அவன் பாபத்தினின்றும் விடுபடுவான், என்று.

सेतुं द्रष्टुमशक्नुवतो भूपतेः प्रायश्चित्तान्तरमाह स एव — यजेत वाऽश्वमेधेन राजा तु पृथिवीपतिः इति । कलौ पराशरोक्तप्रायश्चित्तमेव मुख्यम् । कृते तु मानवा धर्मास्त्रेतायां गौतमाः स्मृताः । द्वापरे शाङ्खलिखिताः कलौ पाराशराः स्मृताः इति स्मरणात् ।

ஸேதுவைத் தரிசிப்பதற்குச் சக்தியற்ற அரசனுக்கு மற்றொரு ப்ராயச்சித்தத்தைச் சொல்லுகிறார், பராசரர்:— பூமண்டலத்துக்கதிபதியான அரசனுகில் அச்வமேத யாகத்தையாவது செய்யலாம். கலியில் பராசரர் சொல்லிய ப்ராயச்சித்தம் முக்யமாகும். "க்ருதயுகத்தில் மனுவால் சொல்லப்பட்ட தர்மங்கள் முக்யங்களாகும். த்ரேதாயுகத்தில் கௌதமர் சொல்லிய தர்மங்களும், த்வாபரயுகத்தில் சங்கலிகிதர்கள் சொல்லிய தர்மங்களும், கலியுகத்தில் பராசரர் சொல்லிய தர்மங்களும் முக்யங்களாகும்" என்று ஸ்ம்ருதியிருப்பதால்.

व्यासोऽपि — गत्वा सेतुं समुद्रस्य स्नात्वा तत्र महोदधौ । दृष्ट्वा रामेश्वरं लिङ्गं ब्रह्महा तु विशुध्यति इति । श्रीरामायणेऽपि — सेतुबन्ध इति ख्यातं त्रैलोक्येनापि पूजितम् । एतत् पवित्रं परमं महापातकनाशनम् इति । प्रायश्चित्तानन्तरमाह याज्ञवल्क्यः — शिरःकपाली ध्वजवान् भिक्षाशी कर्म वेदयन् । ब्रह्महा द्वादशाब्दानि मितभुक् शुद्धिमाप्नुयात् इति ।

வ்யாஸரும்:— ஸமுத்ரத்தின் ஸேதுவை யடைந்து, அங்கு மஹோததியில் ஸ்நானம் செய்து, ராமேச்வர லிங்கத்தைத் தர்சித்தால், ப்ரம்ஹஹத்யை செய்தவன் சுத்தனாவான். ஸ்ரீ ராமாயணத்திலும்:— ஸேதுபந்தம் என்று ப்ரஸித்தமாயும் மூவுலகத்தாராலும் பூஜிக்கப்பட்டதாயும் உள்ள தீர்த்தம் மிகப் பரிசுத்தமாகியது. மஹாபாதகங்களையும் அகற்றக் கூடியது. மற்றொர் ப்ராயச்சித்தத்தைச் சொல்லுகிறார் யாஜ்ஞவல்க்யர்:— ப்ரம்ஹஹத்தி செய்தவன் பன்னிரண்டு வர்ஷம் முடியும் வரையில் மண்டையோட்டைத் தரித்தவனாயும், கொடியுடையவனாயும், பிக்ஷாந்நத்தைப் புஜிப்பவனாயும், தனது கார்யத்தைத் தெரிவிப்பவனாயும், அல்பமாகப் புஜிப்பவனாயும், இருந்தால் சுத்தியை அடைவான்.

मनुः — ब्रह्महा द्वादश समाः कुटीं कृत्वा वने वसेत् । भैक्षाश्यात्मविशुध्यर्थं कृत्वा शवशिरोध्वजम् इति । हेमाद्रौ — अज्ञानाद् ब्राह्मणं हत्वा चीरवासा जटी भवेत् । स्वेनैव हतविप्रस्य कपालं धारयेन्मुदा । तदभावेऽन्यदीयं वा पानार्थं बिभृयात् सदा । तद्वस्त्रं ध्वजदण्डेन धृत्वा वनचरो भवेत् । वन्याहारो भवेन्नित्यमेकाहारो मिताशनः । सम्यक् सन्ध्यामुपासीत त्रिकालं स्नानमाचरेत् । अध्यापनं चाध्ययनं वर्जयन् संस्मरेद्धरिम् । ब्रह्मचर्यव्रतं नित्यं चरेद्गन्धादिवर्जितः। तीर्थान्युपवसेच्चैव पुण्यक्षेत्राश्रमाणि च । यदि वन्यैर्न जीवेत ग्रामे भिक्षां समाचरेत् । अखण्डेन शरावेण रक्तवर्णेन वर्णतः । वदेच्च ब्रह्महाऽस्मीति स(वा)मागाराणि पर्यटेत् । चातुर्वर्ण्येषु वा भैक्षं त्रिवर्णेष्वथवा चरेत् । मृष्टामृष्टाविवेकेन कदन्नं चाविकुत्सयन् । द्वादशाब्दव्रतं कुर्यादेवं हरिपरायणः । व्रतमध्ये मृगैर्वाऽपि रोगैर्वापि हतो यदि । गोनिमित्तं द्विजार्थं वा नार्यर्थं यदि वा म्रियेत् । ब्रह्महा शुद्धिमाप्नोति द्वादशाब्दव्रतेन वै इति ।

மனு:— ப்ரம்ஹஹத்தி செய்தவன் பன்னிரண்டு வர்ஷம் முடியும் வரையில் அரண்யத்தில் குடிசைகட்டி அதில் வஸிக்க வேண்டும். தன்து சுத்திக்காகப் பிக்ஷாந்நத்தைப் புஜிப்பவனாய், சவத்தின் தலையை த்வஜமாகச் செய்து கொண்டு இருக்க வேண்டும். ஹேமாத்ரியில்:— அறியாமையால் ப்ராம்ஹணனைக் கொன்றால் கொன்றவன் மரவுரியைத் தரிப்பவனாயும் ஜடையுடையவனாயும் இருக்க வேண்டும். தன்னால் கொல்லப்பட்ட ப்ராம்ஹணனின் கபாலத்தைச் சந்தோஷத்துடன் (அருவருப்பின்றி) தரிக்க வேண்டும். அது இல்லாவிடில் வேறு சவத்தின் கபாலத்தை ஜல பானத்திற்காக எப்பொழுதும் தரிக்க வேண்டும். அந்தச் சவத்தின் வஸ்த்ரத்தை த்வஜமாகிய தண்டத்தால் தரித்து வனத்தில் ஸஞ்சரிக்க வேண்டும். எப்பொழுதும் காட்டில் உண்டாவதையே புஜிப்பவனாயும், ஒரு வேளை புஜிப்பவனாயும், ஸ்வல்பமாகப் புஜிப்பவனாயும் இருக்க வேண்டும். நன்றாக ஸந்த்யோபாஸனத்தைச் செய்ய வேண்டும். மூன்று காலங்களிலும் ஸ்நானம் செய்ய வேண்டும். வேதத்தைக் கற்பித்தல், வேதத்தைக் கற்றுக் கொள்ளுதல் இவைகளை வர்ஜிப்பவனாய் ஸ்ரீ ஹரியை ஸ்மரிக்க வேண்டும். கந்தம் முதலியவைகளை வர்ஜிப்பவனாய் எப்பொழுதும் ப்ரம்ஹசர்ய வ்ரதத்தை யனுஷ்டிக்க வேண்டும். புண்ய தீர்த்தங்களையும், புண்ய க்ஷேத்ரங்களையும், புண்யமான ஆச்ரமங்களையும் ஸேவித்து உபவாஸத்துடன் இருக்க வேண்டும். வனத்திலுள்ள வஸ்துக்களால் ஜீவிக்க முடியாவிடில், க்ராமத்தில் பிக்ஷாடனம் செய்யவும். உடையாததும், சிவப்பு நிறமுள்ளதுமாகிய மண்பாத்ரத்தினால் பிக்ஷையைப் பெற வேண்டும். நான் ப்ரம்ஹஹத்தி செய்தவன், என்று சொல்ல வேண்டும். ஏழு க்ருஹங்களில் பிக்ஷையைப் பெற வேண்டும். நான்கு வர்ணங்களிலும் பிக்ஷையைப் பெறலாம். அல்லது மூன்று வர்ணங்களில் பெறலாம்.

அதிகம், குறைவு என்ற பிரிவு இல்லாமல் அல்பமான அந்நத்தையும் தூஷிக்காமல் புஜிக்க வேண்டும். இவ்விதம் ஸ்ரீ ஹரியை ஸேவிப்பவனாய் பன்னிரண்டு வர்ஷங்கள் வரையில் வ்ரதத்தை யனுஷ்டிக்க வேண்டும். வ்ரதத்தின் நடுவில் (அதாவது பன்னிரண்டு வர்ஷத்திற்குள்) ம்ருகங்களாலோ, ரோகங்களாலோ கொல்லப்பட்டாலும், பசுக்களுக்காகவாவது, ப்ராம்ஹணனுக்காகவாவது, ஸ்த்ரீகளுக்காகவாவது சண்டை செய்து அதில் கொல்லப்பட்டு மரித்தாலும் ப்ரம்ஹஹத்தி செய்தவன் பன்னிரண்டு வர்ஷம் அனுஷ்டிக்கும் வ்ரத பலனால் சுத்தியை அடைகிறான்.

आपस्तम्बः — द्वादशवर्षाणि चरित्वा सिद्धस्सद्भिस्सम्प्रयोग इति । अत्र हरदत्तः — सद्भिस्सम्प्रयुज्यते येन विधिना स कर्तव्यः । स उच्यते - कृतप्रायश्चित्तः स्वहस्ते यवसं गृहीत्वा गामाह्वयेत् । सा यद्यागत्य श्रद्दधाना भक्षयति, तदा सम्यगनेन व्रतं चरितमिति जानीयात् । अन्यथा नेति इति ।

**ஆபஸ்தம்பர்:—** பன்னிரண்டு வர்ஷம் ப்ராயஸ்சித்த வ்ரதத்தை அனுஷ்டித்த பிறகு சிஷ்டர்களுடன் சேர்வதற்குச் சாஸ்த்ர ஸித்தமான விதியைச் செய்ய வேண்டும், என்றார். இவ்விஷயத்தில், **ஹரதத்தர்:—** சிஷ்டர்களுடன் எக்கார்யத்தால் சேரலாமோ அக்கார்யத்தைச் செய்ய வேண்டும். அது சொல்லப்படுகிறது. "ப்ராயஸ்சித்தம் செய்து கொண்டவன் தன் கையில் புல்லை க்ரஹித்துப் பசுவைக் கூப்பிட வேண்டும். அந்தப் பசுவானது ஸமீபத்தில் வந்து ச்ரத்தையுடன் அப்புல்லைப் பக்ஷிக்குமாகில் இவனால் நன்றாக வ்ரதம் அனுஷ்டிக்கப்பட்டது என்று அறிய வேண்டும். இல்லாவிடில் நன்றாக அனுஷ்டிக்கப்படவில்லை என்று அறிய வேண்டும்", என்று.

प्रायश्चित्तान्तरमाह मनुः — सर्वस्वं वा वेदविदे ब्राह्मणायोपपादयेत् । धनं वा जीवनायालं गृहं वा सपरिच्छदम् । ब्राह्मणार्थे गवार्थे वा सम्यक् प्राणान्परित्यजेत् । मुच्यते ब्रह्महत्याया गोप्ता गोब्राह्मणस्य च इति । स्वमरणमभ्युपगम्य गोब्राह्मणरक्षणे प्रवृत्तो यदि कथञ्चिज्जीवेत्तदा गोब्राह्मणयोस्स गोप्ता जीवन्नपि ब्रह्महत्याया मुक्तो भवति ।

மற்றோர் ப்ராயஶ்சித்தத்தைச் சொல்லுகிறார் மனு:— "அல்லது எல்லாமறிந்த ப்ராம்ஹணனுக்குத் தனது தனம் முழுவதையும் கொடுக்க வேண்டும். அல்லது ப்ராம்ஹணனது ஜீவனத்திற்குப் போதுமான தனத்தையாவது கொடுக்க வேண்டும். அல்லது உபகரணங்களுடன் கூடிய வீட்டையாவது கொடுக்க வேண்டும். அல்லது ப்ராம்ஹணனைக் காப்பாற்றுவதற்காவது, பசுக்களைக் காப்பாற்றுவதற்காவது நன்றாகச் சண்டை செய்து ப்ராணனை விட்டால், பசுவையும் ப்ராம்ஹணனையும் காப்பாற்றிய அவன் ப்ரம்ஹஹத்தியினின்றும் விடுபடுவான்," என்று. தன் மரணத்தை ஏற்றுக் கொண்டு பசுக்களையும் ப்ராம்ஹணர்களையும் காப்பாற்றுவதற்காக ப்ரவ்ருத்தித்தவன் பிழைத்திருந்தால், அப்பொழுது பசு, ப்ராம்ஹணர்களைக் காப்பாற்றிய அவன் பிழைத்திருந்தாலும் ப்ரம்ஹஹத்யா பாபத்தினின்றும் விடுபடுகிறான்.

स एव — यजेत वाऽश्वमेधेन स्वर्जिता गोसवेन वा । अभिजिद्विश्वजिद्भ्यां वा त्रिवृताऽग्निष्टुताऽपि वा । जपन् वाऽन्यतमं वेदं योजनानां शतं व्रजेत् । ब्रह्महत्यापनोदाय मितभुङ्नियतेन्द्रियः । हविष्यभुग्वानुसरेत् प्रतिस्रोतस्सरस्वतीम् । जपेद्वा नियताहारस्त्रिर्वै वेदस्य संहिताम् इति ।

மனுவே:— அச்வமேத யாகத்தையாவது செய்யலாம். அல்லது, ஸ்வர்ஜித், கோஸவம், அபிஜித், விச்வஜித், த்ரிவ்ருத் அக்னிஷ்டுத் என்ற யாகத்தையாவது செய்யவும். ஏதாவது ஒரு வேதத்தை ஜபித்துக் கொண்டு ஒரு யோஜனை தூரம் நடந்து செல்லவும். ப்ரம்ஹஹத்யா பாபத்தைப் போக்குவதற்காக ஸ்வல்பமாகப் புஜிப்பவனாய், இந்த்ரியங்களை அடக்கியவனாய், அல்லது ஹவிஸ்ஸைப் புஜிப்பவனாய் மேற்காகச் செல்லும் ஸரஸ்வதீ நதியை அனுஸரித்துச் செல்ல வேண்டும். அல்லது ஆஹார நியமத்துடன் வேத ஸம்ஹிதையை மூன்று தடவை அத்யயனம் செய்யவும்.

याज्ञवल्क्यः —— ब्राह्मणस्य परित्राणाद्गवां द्वादशकस्य वा । तथाऽश्वमेधावभृथस्नानाद्वा शुद्धिमाप्नुयात् । दीर्घतीव्रामयग्रस्तं ब्राह्मणं गामथापि वा । दृष्ट्वा पथि निरातङ्कं कृत्वा वा ब्रह्महा शुचिः इति । आवृत्त्या ब्रह्मवधे आचतुर्थाद्व्रतमावर्तनीयम् । तदाहतुर्मनुदेवली—— विधेः प्राथमिकादस्माद्द्वितीये द्विगुणं चरेत् । तृतीये त्रिगुणं चैव चतुर्थे नास्ति निष्कृतिः इति ।

யாஜ்ஞவல்க்யர்:— ஒரு ப்ராம்ஹணனைக் காப்பாற்றியதாலாவது, பன்னிரண்டு பசுக்களைக் காப்பாற்றியதாலாவது, அல்லது அச்வமேத யாகத்தின் அவப்ருதத்தில் ஸ்நானம் செய்ததாலாவது, ப்ரம்ஹஹத்தி செய்தவன் சுத்தனாவான். நீண்டதாயும் கடுமையாயுமுள்ள வ்யாதியால் பீடிக்கப்பட்ட ப்ராம்ஹணனையாவது, அல்லது அவ்விதமான பசுவையாவது பார்த்தால் அவர்களை வியாதியில்லாமற் செய்தால் ப்ரம்ஹஹத்தி செய்தவன் சுத்தனாவான். அடிக்கடி ப்ரம்ஹஹத்தி செய்தால் ப்ராயஶ்சித்தமும் அடிக்கடி செய்யப்பட வேண்டும், நான்காவது வரையில். அதைச் சொல்லுகின்றனர் மனுவும் தேவலரும்:— முதலில் சொல்லிய ப்ராயஶ்சித்தத்தை விட இரண்டு மடங்கு ப்ராயஶ்சித்தத்தை இரண்டாவது ப்ரம்ஹ

வதத்தில் செய்ய வேண்டும். மூன்றாவது ப்ரம்ஹவதத்தில் மூன்று மடங்கு ப்ராயஶ்சித்தத்தைச் செய்ய வேண்டும். நான்காவது ப்ரம்ஹவதத்தில் ப்ராயஶ்சித்தம் விதிக்கப்படுவதில்லை.

वधोद्यमे प्रायश्चित्तम् । वधोद्यमेऽपि वधप्रायश्चित्तमाह याज्ञवल्क्यः — चरेद्व्रतमहत्वाऽपि घातार्थं चेत्समाहितः इति । स्मृत्यन्तरेऽपि — अहत्वाऽपि यथावर्णं ब्रह्महत्याव्रतं चरेत् इति । यत्तु वसिष्ठवचनम् — द्वादशरात्रमब्भक्षो द्वादशरात्रमुपवसेत् इति, तन्मनोऽध्यवसित ब्रह्महत्यस्य तदैवोपरतजिघांसस्य वेदितव्यमिति माधवीये ।

கொல்வதற்காக முயன்றால் ப்ராயஶ்சித்தம்.

வதத்திற்காக முயன்றாலும் வதத்தின் ப்ராயஶ்சித்தத்தையே சொல்லுகிறார், யாஜ்ஞவல்க்யர்:— கொல்வதற்காக முயற்சி செய்தவன் கொல்லாவிடினும் கொன்றவனுக்குச் சொல்லிய ப்ராயஶ்சித்தத்தை அனுஷ்டிக்க வேண்டும், என்று. மற்றோர் ஸ்ம்ருதியில்:— கொல்லாமல் இருந்தாலும் (கொல்வதற்கு முயற்சி செய்தால்) அந்தந்த வர்ணத்துக்குத் தகுந்தபடி ப்ரம்ஹஹத்யா ப்ராயஶ்சித்தத்தை அனுஷ்டிக்க வேண்டும். வஸிஷ்டர்:— "பன்னிரண்டு நாள் முழுவதும் ஜலத்தை மட்டில் பக்ஷிப்பவனாய் இருந்து பன்னிரண்டு நாள் உபவாஸம் இருக்க வேண்டும்" என்று சொல்லிய வசனமோவெனில், மனதினால் ஸங்கல்பிக்கப்பட்ட ப்ராம்ஹண வதத்தையுடையவனையும், அப்பொழுதே கொல்லும் அபிப்ராயத்தை விட்டவனுமாகியவனைப் பற்றியது, என்று மாதவீயத்திலுள்ளது.

उक्तप्रायश्चित्ताकरणे राजकृत्यमुक्तं हेमाद्रौ — पत्तने वा स्वराष्ट्रे वा यो विप्रो ब्रह्महा भवेत् । ब्रह्महत्यां विनिश्चित्य त्रुटित्वा

तच्छिखां ततः । ब्रह्मसूत्रं त्रिधाच्छित्वा पिशिताशनवाहनम् । आरोहयित्वा तत्काले शवं तप्तमयं लिखेत् । गुरुतल्पे भगः कार्यः सुरापाने सुराध्वजः । स्तेये तु श्वपदं कार्यं ब्रह्महण्यशिराः पुमान् । एवं कृत्वा तु शास्त्रेण निर्वास्यो विषयाद्बहिः । तत्पुत्रा ब्रह्महनने सहायास्ते यदाऽभवन् । तानप्येवं पुनः कृत्वा निर्वास्याः पूर्ववद्बहिः । तत्क्षेत्रं बहुलं धान्यं पश्वारामादिकं च यत् । तत्सर्वं देवताप्रीत्यै राजा कुर्यात् समाहितः । विचार्य बहुधा राजा तत्पत्नीपुत्रकान् बहून् । दोषवन्तस्तथा तेऽपि कर्तव्या राजवल्लभैः । नो चेत्तद्वृत्तिधान्यादि तेभ्यो दत्वाऽथ शिक्षयेत् इति । पुत्रादीनां दोषाभावे तद्द्रव्यं तेभ्य एव दत्वा ब्रह्महन्त्रा सह संभाषणादिकं न कार्यमिति पुत्रादीन् शिक्षयेदित्यर्थः ।

— சொல்லிய ப்ராயஶ்சித்தத்தைச் செய்யாவிடில், அரசனின் கார்யம் சொல்லப்பட்டுள்ளது. ஹேமாத்ரியில்:— "பட்டணத்திலோ, தனது ராஜ்யத்திலோ, எந்த ப்ராம்ஹணன் ப்ரம்ஹஹத்தி செய்தவனோ, அவனது ப்ரம்ஹஹத்தியை விசாரித்து, நிச்சயித்து, செய்தவனாகில் அவனது சிகையை வெட்டி, பிறகு அவனது உபவீதத்தை மூன்றாக அறுத்து, பிசிதாசன வாஹனத்தில் ஏற்றி, அவனது நெற்றியில் பிணத்தின் வடிவமாய்ச் சூடு போடவும். குருதல்பகமன பாபத்தில் யோனியின் அடையாளத்தைச் செய்யவும். மத்யபானத்தில் மத்யகட அடையாளத்தைச் செய்யவும். ஸ்வர்ணஸ்தேயத்தில் நாயின் கால் போல் சூடு போடவும். ப்ரம்ஹஹத்தி செய்தவன் இடத்தில் தலையில்லாத புருஷ வடிவத்தைச் சுடவும். இவ்விதம் சாஸ்த்ரப்ரகாரம் செய்து, தனது தேசத்திற்கு வெளியில் அப்புறப்படுத்த வேண்டும். அவனது பிள்ளைகளும் ப்ரம்ஹஹத்திக்கு ஸஹாயர்களாக இருந்தவர்களாகில், அவர்களையும் முன்போல் செய்து, ராஜ்யத்திற்கு வெளியில் கடத்த வேண்டும். அவனது

நிலம், தான்யம், பசுக்கள், தோட்டம் முதலியவை எவையோ அவை எல்லாவற்றையும் தேவதைகளின் ப்ரீதிக்காக அரசன் ஏற்படுத்த வேண்டும். பலவிதமாக விசாரித்து அவனது பத்னீ, புத்ரர்கள் முதலானவர்கள் குற்றமுள்ளவர்களாகில், அவர்களேயும் தனது சேவகர்களால் ராஜ்யத்தினின்றும் வெளியேற்ற வேண்டும். அவர்கள் குற்றமற்றவர்களாகில் பாபியின் வ்ருத்தி, தான்யம் முதலியவைகளை அவர்களுக்குக் கொடுத்து அவர்களுக்கு நற்புத்தி சொல்ல வேண்டும்,'' என்று. புத்ரன் முதலியவர்களுக்குக் குற்றமில்லாவிடில் பாபியின் த்ரவ்யத்தை அவர்களுக்கே கொடுத்து ப்ரம்ஹஹத்தி செய்தவனுடன் கூட பேசுவது முதலியதைச் செய்யக் கூடாது என்று புத்ரன் முதலியவர்களுக்கு உபதேசிக்க வேண்டும், என்பது பொருள்.

स्मृत्यन्तरे — अयोरूपं द्विजं कृत्वा मूर्धहीनं प्रतापयेत् । अङ्कयित्वा ललाटे तु देशान्निर्वासयेद्बहिः । द्वादशाब्दविधानेन शुद्धो भवितुमर्हति । अशक्तो व्रतमाचर्तुमेवं कृत्वा विशुद्ध्यति इति ।

மற்றோர் ஸ்ம்ருதியில்:— தலையில்லாத ப்ராம்ஹணனின் உருவத்தை இரும்பால் செய்து, அதைக் காய்ச்ச வேண்டும். அதனால் நெற்றியில் அடையாளம் செய்து, தேசத்திற்கு வெளியில் விரட்ட வேண்டும். அவன் பன்னிரண்டு வர்ஷம் ப்ராயஸ்சித்தத்தை யனுஷ்டித்தால் சுத்திக்கு உரியவனுவான். வ்ரதத்தை யனுஷ்டிக்கச் சக்தியற்றவன் இவ்விதம் செய்தால் சுத்தனுகிருன்.

जनकादिहत्यायाः प्रायश्चित्तमुक्तं स्कान्दे — अज्ञानाज्जनकं हन्यान्निमित्तैर्बहुभिर्द्विजः । चतुर्विंशतिवर्षाणि व्रतं कृत्वा विशुद्ध्यति । द्विगुणं च गवां दानं कृत्वा शुद्धिमवाप्नुयात् । दीक्षितं ब्राह्मणं हत्वा द्विगुणं व्रतमाचरेत् । स्नातकं त्वृत्विजं हत्वा द्विगुणं व्रतमाचरेत् । मातामहं मातुलं च स्यालं जामातरं तथा । आचार्यस्य वधे चैव व्रतमुक्तं चतुर्गुणम्

इति। चत्वारिंशत्संस्कारपूतः स्नातकः । उत्पाद्य पुत्रं संस्कृत्येत्युक्तलक्षण आचार्यः ।

தகப்பன் முதலியவரைக் கொன்றதற்கு ப்ராயஶ்சித்தம் சொல்லப்பட்டுள்ளது. ஸ்காந்தத்தில்:— "ப்ராம்ஹணன் அறியாமையால் பல காரணங்களால் தகப்பனைக் கொன்றால், இருபத்து நான்கு வர்ஷம் ப்ராயஶ்சித்தத்தை யனுஷ்டித்தால் சுத்தனாவான். கோதானத்தை இரண்டு மடங்கு செய்தால் சுத்தனாவான். யாகத்தில் தீக்ஷை பெற்றுள்ள ப்ராம்ஹணனைக் கொன்றால் இரண்டு மடங்கு ப்ராயஶ்சித்தத்தை அனுஷ்டிக்க வேண்டும். ஸ்நாதகனையும், ருத்விக்கையும் கொன்றால் இரண்டு மடங்கு ப்ராயஶ்சித்தத்தை யனுஷ்டிக்க வேண்டும். மாதாமஹன், அம்மான், மைத்துனன், மாப்பிள்ளை, ஆசார்யன், இவர்களைக் கொன்றால் நான்கு மடங்கு ப்ராயஶ்சித்தம் சொல்லப்பட்டுள்ளது," என்று. ஸ்நாதகன் = நாற்பது ஸம்ஸ்காரங்களை யடைந்தவன். ஆசார்யன் = "உத்பாத்ய புத்ரம்" என்று ச்லோகத்தால் சொல்லப்பட்டவன்.

दक्षः — समम ब्राह्मणे दानं द्विगुणं ब्राह्मणब्रुवे । आचार्ये शतसाहस्रं सोदर्ये दत्तमक्षयम् इति प्रतिपाद्योक्तवान् समद्विगुणसाहस्र मानन्त्यं च यथाक्रमम् । दाने फलविशेषस्स्याद्धिंसायां तद्वदेव हि इति । आपस्तम्बः — गुरुं हत्वा श्रोत्रियं वा कर्मसमाप्तमेतेनैव विधिनौत्तमादुच्छ्वासाच्चरेत् । नास्यास्मिन् लोके प्रत्यापत्तिर्विद्यते । कल्मषं तु निर्हण्यत इति । गुरुः - पित्राचार्यादिः । श्रोत्रियः - अधीतवेदः । सोमान्तानि कर्माणि समाप्तानि यस्य, स कर्मसमाप्तः । तौ हत्वा, एतेन - कुटिं कृत्वेत्यनन्तरोक्तेन । औत्तमादुच्छ्वासात् - आप्राणवियोगादित्यर्थः ।

தக்ஷர்:— அப்ராம்ஹணனிடத்தில் கொடுக்கப்பட்ட தானம் ஸமமான பலனைக் கொடுக்கும். ப்ராம்ஹணன் என்று பெயர் மாத்ரம் வஹித்தவனிடத்தில் கொடுக்கப்பட்ட தானம் இரண்டு மடங்கு பலனைக் கொடுக்கும். ஆசார்யனிடத்தில் கொடுக்கப்பட்டது லக்ஷம் மடங்கு பலனைக் கொடுக்கும், என்று சொல்லிப் பிறகு சொல்லியுள்ளார் — ''இரண்டு மடங்கு, ஆயிரம் மடங்கு, அனந்தம் என்று முறையே தானத்தில் பலன் உண்டாகும். அவர்களை ஹிம்ஸித்தால் தோஷமும் அவ்விதமே உண்டாகும்,'' என்று. ஆபஸ்தம்பர்:— ''குரு, கர்மஸமாப்தனை ச்ரோத்ரியன், என்றவர்களைக் கொன்றால், முன் சொல்லிய விதிப்படி உயிர் போகும் வரையில் ப்ராயஸ்சித்தத்தை யனுஷ்டிக்க வேண்டும். இவனுக்கு இவ்வுலகில் சிஷ்டர்களுடன் சேர்ந்து வ்யவஹார ஸித்தி என்பது இல்லை. ஆனால் பாபம் மட்டில் நிவ்ருத்திக்கும்,'' என்று. குரு = பிதா ஆசார்யன் முதலியவன், ச்ரோத்ரியன் - வேதாத்யயனம் செய்தவன். கர்மஸமாப்தன் - ஸோமயாகம் முடியும் வரையிலுள்ள கர்மங்களை யனுஷ்டித்தவன். அவ்விருவர்களையும் கொன்றால், ''குடிசை கட்டிக்கொண்டு'' என்று முன் சொல்லிய நியமப்படி உயிர் போகும் வரையில், என்பது பொருள்.

भ्रूणहत्याया अपि यावज्जीवं व्रतधारणमुक्तमापस्तम्बेन – एतेनैव विधिनौत्तमादुच्छ्वासाच्चरेत् इति । भ्रूणहा द्वादशसमाः कपालीति बोधायनवचनं भ्रूणहत्यासमपापविषयम् । भ्रूणः - साङ्गवेदविदिति निश्चयः ।

ப்ரூணஹத்திக்கும் உயிருள்ள வரையில் வ்ரதானுஷ்டானம் சொல்லப்பட்டுள்ளது ஆபஸ்தம்பரால் :— முன் சொன்ன விதிப்படியே உயிருள்ள வரையில் ப்ராயஸ்சித்தத்தை யனுஷ்டிக்க வேண்டும்'' என்று.

"ப்ரூணஹத்தி செய்தவன் பன்னிரண்டு வர்ஷங்கள் வரையில் கபாலத்தைத் தரித்தவனாய்" என்ற போதாயன வசனம் ப்ரூணஹத்திக்கு ஸமமான பாபத்தைப் பற்றியது. ப்ரூண: - அங்கங்களுடன் கூடிய வேதத்தை யறிந்தவன்.

## क्षत्रियादिकृतब्रह्महत्या प्रायश्चित्तम्।

क्षत्रियादीनां ब्राह्मणवधे प्रायश्चित्तमाह व्यासः — अज्ञानाद्बाहुजो विप्रं हत्वा विविधसाधनैः । पश्चात्तापसमायुक्तो द्विगुणं व्रतमाचरेत्। अज्ञानादूरुजो हत्वा ब्राह्मणं त्रिगुणं चरेत्। पादजो ब्राह्मणं हत्वा मुसलैर्वधमर्हति । केचिदिच्छिन्ति कारीषं वधं तस्यैव पावनम्। ब्राह्मणीं स्थविरं हत्वा विधवां च सुवासिनीम्। बालं कन्यां यदा हन्यात् कारीषेणैव दाहयेत् इति।

க்ஷத்ரியன் முதலியவரால் செய்யப்பட்ட ப்ரம்ஹஹத்திக்கு ப்ராயஶ்சித்தம் - க்ஷத்ரியன் முதலியவர்க்கு ப்ராம்ஹணவதத்தில் ப்ராயஶ்சித்தத்தைச் சொல்லுகிறார், வ்யாஸர்:— க்ஷத்ரியன் அறியாமையால் பலவித ஸாதனங்களால் ப்ராம்ஹணனைக் கொன்று, பிறகு பஶ்சாத்தாபம் அடைந்தவனாகில் இரண்டு மடங்கு ப்ராயஶ்சித்தத்தை யனுஷ்டிக்க வேண்டும். வைச்யன் அறியாமையால் ப்ராம்ஹணனைக் கொன்றால் மூன்று மடங்கு ப்ராயஶ்சித்தத்தை யனுஷ்டிக்க வேண்டும். சூத்ரன் ப்ராம்ஹணனைக் கொன்றால் அவன் உலக்கைகளால் கொலைக்கு உரியவனாகிறான். சிலர், அவனுக்குக் காரீஷ வதத்தையே சுத்திகரமாக விரும்புகின்றனர். கிழவி, விதவை, ஸுமங்கலீ ஆகிய ப்ராம்ஹண ஸ்த்ரீயையும், ப்ராம்ஹணக் குழந்தை, கன்யகை இவர்களையும் கொன்றால் கொன்றவனைக் காரீஷங்களாலேயே தஹிக்க வேண்டும்.

स्मृत्यन्तरेऽपि — द्विगुणं क्षत्रियस्योक्तं त्रिगुणं तद्विशः स्मृतम्। ब्राह्मणं हन्ति यश्शूद्रस्तस्य दण्डो वधःस्मृतः । कन्याबालवधे

गर्भबाधने विप्रयोषिताम्। पूर्ववद्दण्डयेद्राजा ह्यन्यथा नरकं व्रजेत् इति। गौतमः — शूद्रो द्विजातीनतिसन्धायाभिहत्य च वाग्दण्ड-पारुष्याभ्यामङ्गं मोच्यो येनोपहन्यात् इति।

மற்றோர் ஸ்ம்ருதியில்:— சூத்ரன் க்ஷத்ரியனைக் கொன்றால் இரண்டு மடங்கு ப்ராயஶ்சித்தம். வைச்யனைக் கொன்றால் மூன்று மடங்கு ப்ராயஶ்சித்தம். ப்ராம்ஹணனைக் கொன்றால் அவனுக்குத் தண்டனை வதமே என்றுள்ளது. ப்ராம்ஹண ஸ்த்ரீகளின் கன்யகை, குழந்தை இவர்களைக் கொன்றாலும், கர்ப்பத்தைக் கொன்றாலும், முன்போல் அரசன் தண்டிக்க வேண்டும். தண்டிக்காத அரசன் நரகத்தை யடைவான். கௌதமர்:— சூத்ரன், மேல் மூன்று வர்ணத்தாரையும் கடுமையான சொல்லாலும் தண்டத்தாலும் திட்டி அடித்தால், எந்த அங்கத்தால் குற்றம் செய்தானோ அந்த அங்கத்தை அவனிடமிருந்து விடுவிக்க வேண்டும்.

क्षत्रियादिवधे प्रायश्चित्तमाह मनुः — तुरीयो ब्रह्महत्यायाः क्षत्रियस्य वधे स्मृतः। वैश्येऽष्टमांशो वृत्तस्थे शूद्रे ज्ञेयस्तु षोडशः। अकामतस्तु राजन्यं विनिपात्य द्विजोत्तमः। वृषभैकसहस्रा गा दद्यात् सुचरितव्रतः। त्र्यब्दं चरेद्वा नियतो जटी ब्रह्महणो व्रतम्। वसन् दूरतरे ग्रामाद्वृक्षमूलनिकेतनः। एतदेव चरेदब्दं प्रायश्चित्तं द्विजोत्तमः। प्रमाप्य वैश्यं वृत्तस्थं दद्याच्चैकशतं गवाम्। एतदेव व्रतं कृत्स्नं षण्मासान् शूद्रहा चरेत्। वृषभैकादशा वाऽपि दद्याद्विप्राय गाः सिताः इति।

க்ஷத்ரியன் முதலியவரை வதைத்தால் ப்ராயஶ்சித்தத்தைச் சொல்லுகிறார் மனு:— க்ஷத்ரியனை வதைத்தால், ப்ரம்ஹஹத்யா ப்ராயஶ்சித்தத்தில் நான்கில் ஒரு பாகம் ப்ராயஶ்சித்தமாகச் சொல்லப்பட்டுள்ளது. ஸாதுவான வைச்யனைக் கொன்றால், ப்ரம்ஹஹத்யா வ்ரதத்தின் எட்டில் ஒரு பாகம் ப்ராயஶ்சித்தமாய்ச்

சொல்லப்பட்டுள்ளது. சூத்ரனைக் கொன்றால், பதினாறில் ஒரு பங்கு ப்ராயச்சித்தம் சொல்லப்பட்டுள்ளது. ப்ராம்ஹணன் அபுத்தி பூர்வகமாய் க்ஷத்ரியனைக் கொன்றால் ப்ராயச்சித்தத்தை நன்றாகச் செய்து பிறகு ஆயிரம் பசுக்களையும் ஒரு வ்ருஷபத்தையும் கொடுக்க வேண்டும். அல்லது மூன்று வர்ஷம் ஜடாதாரியாய் ப்ரம்ஹஹத்யா வ்ரதத்தை யனுஷ்டிக்க வேண்டும். க்ராமத்திற்கு வெளியில் மரத்தினடியில் வஸிக்க வேண்டும். இந்த ப்ராயச்சித்தத்தையே ஒரு வர்ஷம் அனுஷ்டிக்க வேண்டும் சிஷ்டனான வைச்யனைக் கொன்றால். நூற்றொன்று பசுக்களையும் கொடுக்க வேண்டும். சூத்ரனைக் கொன்றவன் இதே வ்ரதத்தை ஆறு மாஸம் வரையில் செய்ய வேண்டும். அல்லது பத்துப் பசுக்களையும் ஒரு வ்ருஷபத்தையும் ப்ராம்ஹணனுக்குக் கொடுக்க வேண்டும்.

पराशरः — वैश्यं वा क्षत्रियं वाऽपि निर्दोषं योऽभि घातयेत्। सोऽपि कृच्छ्रद्वयं कुर्यात् गा विंशद्दक्षिणां ददत्। शिल्पिनं कारुकं शूद्रं स्त्रियं वा यस्तु घातयेत्। प्राजापत्यद्वयं कृत्वा वृषैकादश दक्षिणा इति। वैश्यादिवधे प्रकारान्तरेणापि प्रायश्चित्तमाह स एव— वैश्यं शूद्रं क्रियासक्तं विकर्मस्थं द्विजोत्तमम्। हत्वा चान्द्रायणं तस्य त्रिंशद्गाश्चैव दक्षिणाम् इति। ईषत्सुवृत्तं वैश्यं विहितसकलक्रियासक्तं शूद्रम्। द्विजोत्तमशब्दो विप्रे प्रसिद्धः; क्षत्रियेऽपि कथञ्चिद्वर्तयितुं शक्यम्, द्विजशब्दाभिधेयं वैश्यमपेक्ष्य तस्योत्तमत्वात्। तत्र क्षत्रियपक्षे विकर्मणि कस्मिंश्चित् ब्रह्मघातादौ तिष्ठतीति विकर्मस्थः। विप्रपक्षे तु ब्रह्मघातादिषु बहुष्वावृत्तेषु तिष्ठतीति विकर्मस्थः। एवं च सति चतुर्वर्णविषयमेकं प्रायश्चित्तं न्यायदर्शिनामेतत् संपद्यते। हत्वा यो वर्तते तस्येति योजनीयम्। दक्षिणां निर्दिशेदिति शेषः।

பராசரர்:— தோஷமற்ற வைச்யனையாவது க்ஷத்ரியனையாவது எவன் வதைத்தவனோ அவன் இரண்டு

க்ருச்ரங்களை அனுஷ்டித்து இருபது பசுக்களையும் தக்ஷிணையாகக் கொடுக்க வேண்டும். சில்பியாயும், காருவாயும் உள்ள சூத்ரனையாவது, ஸ்த்ரீயையாவது எவன் கொன்றானோ, அவன் இரண்டு ப்ராஜாபத்ய க்ருச்ரங்களை யனுஷ்டித்து, பதினொரு வ்ருஷபங்களைத் தக்ஷிணையாகக் கொடுக்க வேண்டும். வைச்யன் முதலியவர்களைக் கொன்றால், வேறு ப்ரகாரமாயும் ப்ராயஶ்சித்தத்தைச் சொல்லுகிறார், பராசரரே:— வைச்யனையும், நற்கார்யங்களைச் செய்யும் சூத்ரனையும், கெட்ட கார்யங்களைச் செய்யும் க்ஷத்ரியனையும், கொன்றால் சாந்த்ராயணம் ப்ராயஶ்சித்தம். முப்பது பசுக்களையும் தானம் செய்ய வேண்டும்,'' என்று. கொஞ்சம் நற்கார்யத்திலுள்ள வைச்யனையும், விதிக்கப்பட்ட எல்லா க்ரியைகளையும் அனுஷ்டிக்கும் சூத்ரனையும். இங்கு, 'த்விஜோத்தம:' என்ற பதம் ப்ராம்ஹணனிடத்தில் ப்ரஸித்தமாயுள்ளது. அந்தப் பதத்தை க்ஷத்ரியனிடத்திலும் எப்படியாவது சேர்க்க முடியும். 'த்விஜ' என்ற பதத்தால் சொல்லக் கூடிய வைச்யனை விட க்ஷத்ரியன் உத்தமனாகையால். அந்த க்ஷத்ரியன் என்று அர்த்தம் சொல்லும் பக்ஷத்தில், விகர்மஸ்தம் - ப்ரம்ஹவதம் முதலிய ஏதாவது பாப கார்யத்தில் இருக்கும் அவனை என்று பொருள். ப்ராம்ஹணன் என்று அர்த்தம் சொல்லும் பக்ஷத்தில், அடிக்கடி செய்யப்பட்ட அநேக ப்ரம்ஹஹத்திகளில் இருக்கும் அவனை என்பது பொருள். இவ்விதம் இருக்க நான்கு வர்ணத்தாரைப் பற்றியதாய் இது ஒரு ப்ராயஶ்சித்தம் என்று ந்யாயம் அறிந்தவர்களுக்கு ஸம்மதமாகிறது. அவனைக் கொன்று எவன் இருக்கிறானோ அவனுக்கு என்று சேர்த்துக் கொள்ள வேண்டும். 'தக்ஷிணாம்' என்றதற்குத் தக்ஷிணையை விதிக்க வேண்டும் என்பது சேர்க்கப்பட வேண்டும்.

षट्त्रिंशन्मते — षण्डं तु ब्राह्मणं हत्वा शूद्रहत्या व्रतं चरेत् । चान्द्रायणं प्रकुर्वीत पराकद्वयमेव वा इति । स्मृत्यन्तरे — शूद्रं हन्ति

द्विजो यस्तु निमित्तैर्हननोचितैः । दद्याद्दश गवां विप्रः पुनः संस्कारमर्हति । पञ्चगव्यं पिबेत् पश्चात् शुद्धो भवति निश्चितम् । तद्दारहननेऽप्यर्धं तत्पुत्रहननेऽपि च । हते शिशौ च तद्गर्भे तत्तदर्धं यथाक्रमम् इति ।

ஷட்த்ரிம்சந்மதத்தில்:— நபும்ஸகனை ப்ராம்ஹணனைக் கொன்றால் சூத்ரனைக் கொன்றதற்குச் சொல்லப்பட்டுள்ள ப்ராயச்சித்தத்தை யனுஷ்டிக்க வேண்டும். சாந்த்ராயணத்தையாவது, இரண்டு பராக க்ருச்ரங்களையாவது அனுஷ்டிக்க வேண்டும். ஓர் ஸ்ம்ருதியில்:— எந்த த்விஜன் கொல்வதற்கு யோக்யமான காரணங்களால் சூத்ரனைக் கொல்லுகின்றானோ, அவன் பத்துப் பசுக்களைத் தானம் செய்ய வேண்டும். புனருபனயனத்திற்கு அர்ஹனாகிறான். பிறகு பஞ்சகவ்யத்தைப் பருக வேண்டும். பிறகு சுத்தனாகிறான், நிச்சயம். சூத்ரனின் பத்னியைக் கொன்றாலும், அவனது புத்ரனைக் கொன்றாலும் பாதி ப்ராயச்சித்தம். சூத்ரனது குழந்தையைக் கொன்றாலும் நாலில் ஒரு பங்கு ப்ராயச்சித்தம். சூத்ரனது கர்ப்பத்தைக் கொன்றால் எட்டில் ஒரு பங்கு ப்ராயச்சித்தம்.

मनुः — दृतिकार्मुकबस्तावीन् पृथक् दद्याद्विशुद्धये । चतुर्णामपि वर्णानां नारीर्हत्वाऽनवस्थिताः इति । दृतिः - जलधारणचर्मकोशः । याज्ञवल्क्यः — दुर्वृत्ता ब्रह्मक्षत्रविट्छूद्रयोषाः प्रमाप्य तु । दृतिं धनुर्बस्तमविं क्रमाद्दद्याद्विशुद्धये । अप्रदुष्टां स्त्रियं हत्वा शूद्रहत्या व्रतं चरेत् इति । चातुर्वर्ण्यकर्तृके चण्डालवधे क्रमेण प्रायश्चित्तमाह पराशरः— चण्डालं हतवान् कश्चित् ब्राह्मणो यदि कञ्चन । प्राजापत्यं चरेत् कृच्छ्रं गोद्वयं दक्षिणां ददत् । चोरौ श्वपाक चण्डालौ विप्रेणाभिहतौ यदि । अहोरात्रोषितः स्नात्वा पञ्चगव्येन शुद्ध्यति । क्षत्रियेणापि वैश्येन शूद्रेणैवेतरेण वा। चण्डालस्य वधे प्राप्ते कृच्छ्रार्धेन विशुद्ध्यति इति । इतरः मूर्द्धावसिक्तसूतादिः ।

மனு:— நான்கு வர்ணத்தாருடைய நல்லொழுக்கம் இல்லாத ஸ்த்ரீகளைக் கொன்றால் முறையே தோல்பை, வில், வெள்ளாடு, செம்மறியாடு இவைகளைச் சுத்திக்காகக் கொடுக்க வேண்டும். யாஜ்ஞவல்க்யர்:— தோஷமுள்ள நான்கு வர்ணத்தாரின் ஸ்த்ரீகளைக் கொன்றால் சுத்திக்காக முறையே தோல்பை, வில், வெள்ளாடு, செம்மறியாடு இவைகளைக் கொடுக்க வேண்டும். கொஞ்சம் தோஷமுள்ள ஸ்த்ரீயைக் கொன்றால் சூத்ரனைக் கொன்றதற்காக விதிக்கப்பட்ட ப்ராயஸ்சித்தத்தை யனுஷ்டிக்க வேண்டும். சண்டாளனைக் கொன்ற நான்கு வர்ணத்தாருக்கும் முறையே ப்ராயஸ்சித்தத்தைச் சொல்லுகிறார் பராசரர்:— "ப்ராம்ஹணன் யாராவது ஒரு சண்டாளனைக் கொன்றால் அவன் ப்ராஜாபத்ய க்ருச்ரத்தை யனுஷ்டிக்க வேண்டும். இரண்டு பசுக்களையும் தக்ஷிணையாகக் கொடுக்க வேண்டும். திருடர்களான ச்வபாகன், சண்டாளன் இவர்களை ப்ராம்ஹணன் கொன்றால், அவன் ஒரு நாள் முழுவதும் உபவாஸமிருந்து, ஸ்நானம் செய்து, பஞ்சகவ்ய பானம் செய்தால் சுத்தனாவான். க்ஷத்ரியன், வைச்யன், சூத்ரன், மற்றவன் இவர்கள் சண்டாளனைக் கொன்றால், பாதி க்ருச்ரத்தால் சுத்தராவார்கள்.'' மற்றவன் என்பது மூர்த்தாவஸிக்தன், ஸூதன் முதலியவர்.

## शस्त्रग्रहणविचारः ।

आपस्तम्बः — परीक्षार्थेऽपि ब्राह्मण आयुधं नाददीत इति । तस्य प्रतिप्रसवमाह स एव — यो हिंसार्थमभिक्रान्तं हन्ति मन्युरेव मन्युं स्पृशति न तस्मिन् दोष इति पुराणे इति । वसिष्ठबोधायनौ — स्वाध्यायिनं कुले जातं यो हन्यादाततायिनम् । न तेन भ्रूणहा स स्यान्मन्युस्तं मन्युमृच्छति इति । मनुरपि — शस्त्रं द्विजातिभिर्ग्राह्यं धर्मो यत्रोपरुध्यते । द्विजातीनां च वर्णानां विप्लवे कालकारिते । आत्मनश्च परित्राणे दक्षिणानां च सङ्करे । स्त्रीविप्राभ्युपपत्तौ च घ्नन् धर्मेण न दुष्यति इति ।

**ஆயுதம் தரிப்பதைப் பற்றி விசாரம்.**

**ஆபஸ்தம்பர்:—** *ப்ராம்ஹணன் பரீக்ஷைக்காகவும் கூட ஆயுதத்தை க்ரஹிக்கக் கூடாது. அதற்கு விலக்கைச் சொல்லுகிறார்* **ஆபஸ்தம்பரே:—** *எவன் தன்னைக் கொல்லுவதற்காக வந்தவனைக் கொல்லுகின்றானோ அவனுக்குத் தோஷமில்லை. கோபமே மற்றொரு கோபத்தைத் தாக்குகிறது என்று புராணத்தில் சொல்லப்படுகிறது.* **வஸிஷ்டரும், போதாயனரும்:—** *அத்யயனமுள்ளவனும், நற்குலத்தில் பிறந்தவனும், தன்னைக் கொல்வதற்கு வந்தவனுமாகியவனை எவன் கொல்லுகின்றானோ, அவன் அதனால் ப்ரூணஹத்தி செய்தவனாக ஆகமாட்டான். இவனுடைய கோபம் அந்தக் கோபத்தைத் தாக்குகிறது.* **மனுவும்:—** *எந்த இடத்தில் தர்மம் விரோதிக்கப்படுகிறதோ அந்த இடத்தில் ப்ராம்ஹணர்கள் ஆயுதத்தைத் தரிக்கலாம். மூன்று வர்ணத்தாரும் காலவசத்தால் தொந்தரவு ஏற்பட்டாலும் ஆயுதம் தரிக்கலாம். தன்னைக் காப்பாற்றிக் கொள்வதற்கும், தக்ஷிணைகளான பசுக்களைக் காப்பாற்ற வேண்டியதற்கும், ஸ்த்ரீகள் ப்ராம்ஹணர்கள் இவர்களைக் காப்பாற்ற வேண்டியதற்கும், தர்மத்தால் ஆயுதமெடுத்துக் கொல்பவன் தோஷமுடையவனாகான்.*

गौतमः —प्राणसंशये ब्राह्मणोऽपि शस्त्रमाददीत इति। वसिष्ठः — अग्निदो गरदश्चैव शस्त्रपाणिर्धनापहः। क्षेत्रदारहरौ चैव षडेते त्वाततायिनः। आततायिनमायान्तमपि वेदान्तपारगम्। जिघांसन्तं जिघांसीयान्न तेन भ्रूणहा भवेत् इति।

**கௌதமர்:—** *ப்ராணனுக்கு ஸம்சயம் நேரிடும் ஸமயத்தில் ப்ராம்ஹணனும் ஆயுதத்தை க்ரஹிக்கலாம்.* **வஸிஷ்டர்:-** நெருப்பு வைப்பவனும், விஷங்கொடுப்பவனும் ஆயுதந் தரித்தவனும், தனத்தைக் கொள்ளையிட்டவனும், பூமியை அபஹரித்தவனும், பத்னியை அபஹரித்தவனும், ஆகிய இவ்வாறு பேர்களும்

ஆததாயிகள் எனப்படுகின்றனர். கொல்வதற்கு வருகிறவன் வேதாந்தத்தின் முடிவை யடைந்தவனாயினும் கொல்வதற்கு விரும்பியவனாயின் அவனைக் கொல்ல வேண்டும். அதனால் ப்ரூணஹத்தி செய்தவனாகான்.

गोवधप्रायश्चित्तम्

गोवधस्य सेतिकर्तव्यताकं प्रायश्चित्तं दर्शयति पराशरः — सशिखं वपनं कृत्वा त्रिसन्ध्यमवगाहनम्। गवां मध्ये वसेद्रात्रौ दिवा गा अप्यनुव्रजेत्। उष्णे वर्षति शीते वा मारुते वाति वा भृशम्। न कुर्वीतात्मनस्त्राणं गोरकृत्वा तु शक्तितः। आत्मनो यदि वाऽन्येषां गृहे क्षेत्रे खलेऽथवा। भक्षयन्तीं न कथयेत् पिबन्तं चैव वत्सकम्। पिबन्तीषु पिबेत्तोयं संविशन्तीषु संविशेत्। पतितां पङ्कलग्नां वा सर्व प्राणैस्समुद्धरेत्।

பசுவைக் கொன்றதற்கு ப்ராயஸ்சித்தம். கோவதத்திற்கு ப்ராயஸ்சித்தத்தை முறைகளுடன் கூடியதாய்ச் சொல்லுகிறார், பராசரர்:— "சிகையுடன் வபநம் செய்து கொண்டு, மூன்று காலங்களிலும் ஸ்நானம் செய்ய வேண்டும். ராத்ரியில் பசுக்களின் மத்தியில் வஸிக்க வேண்டும். பகலில் பசுக்களைப் பின் தொடர்ந்து செல்ல வேண்டும். அதிகமான வெயிலிலும், மழையிலும், குளிரிலும், காற்றிலும் பசுவுக்குச் சக்திக்கியன்றபடி ரக்ஷணம் செய்யாமல் தன்னை மட்டில் காப்பாற்றிக் கொள்ளக் கூடாது. தன்னுடைய அல்லது பிறருடைய வீட்டிலாவது, வயலிலாவது, களத்திலாவது மேய்ந்தால் சொல்லக் கூடாது. கன்று ஊட்டினாலும் சொல்லக் கூடாது. பசுக்கள் நீரைக் குடிக்கும் பொழுது குடிக்கலாம், படுக்கும் பொழுது படுக்கலாம். பசு கீழே விழுந்தாலும், சேற்றில் ஆழ்ந்தினாலும், அதைத் தனது முழுப் பலத்தாலும் வெளியேற்ற வேண்டும்.

गोवधस्यानुरूपेण प्राजापत्यं विनिर्दिशेत्। प्राजापत्यं ततः कृच्छ्रं विभजेत चतुर्विधम्। एकाहमेकभक्ताशी त्वेकाहं नक्तभोजनः। अयाचिताश्येकमहरेकाहं मारुताशनः। दिनद्वयं चैकभक्तो द्विदिनं नक्तभोजनः। दिनद्वयमयाची स्यात् द्विदिनं मारुताशनः। त्रिदिनं चैकभक्ताशी त्रिदिनं नक्तभोजनः। दिनत्रयमयाची स्यात् त्रिदिनं मारुताशनः। चतुरहं त्वेकभक्ताशी चतुरहं नक्तभोजनः। चतुर्दिनमयाची स्याच्चतुरहं मारुताशनः इति।

*கோவதத்திற்குத் தகுந்தபடி ப்ராஜாபத்ய க்ருச்ரத்தை விதிக்க வேண்டும். பிறகு ப்ராஜாபத்ய க்ருச்ரத்தை நான்கு விதமாய்ப் பிரிக்க வேண்டும். ஒரு நாள் பகலில் புஜிப்பவனும், ஒரு நாள் இரவில் மட்டில் புஜிப்பவனும், ஒரு நாள் யாசிக்காமல் கிடைத்ததைப் புஜிப்பவனும், ஒரு நாள் காற்றைப் புஜிப்பவனும், இருக்க வேண்டும். பிறகு இரண்டு நாள் பகலில் மட்டில் புஜிப்பவனும், இரண்டு நாள் இரவில் மட்டில் புஜிப்பவனும், இரண்டு நாள் யாசிக்காமல் கிடைத்ததைப் புஜிப்பவனும், இரண்டு நாள் காற்றை மட்டில் புஜிப்பவனும் இருக்க வேண்டும். பிறகு, மூன்று நாள் பகலில் மட்டில் புஜிப்பவனும், மூன்று நாள் இரவில் மட்டில் புஜிப்பவனும், மூன்று நாள் யாசிக்காமல் கிடைத்ததைப் புஜிப்பவனும், மூன்று நாள் காற்றை மட்டும் புஜிப்பவனும் இருக்க வேண்டும். பிறகு, நான்கு நாள் பகலில் மட்டில் புஜிப்பவனும், நான்கு நாள் இரவில் மட்டில் புஜிப்பவனும், நான்கு நாள் யாசிக்காமல் கிடைத்ததைப் புஜிப்பவனும், நான்கு நாள் காற்றை மட்டும் புஜிப்பவனும் இருக்க வேண்டும்."*

त एते चत्वारः कल्पा वध्यभेदेन योजनीयाः। तद्यथा — एकहायनस्य वधे प्रथमः। द्विहायनस्य वधे द्वितीयः। त्रिहायनस्य वधे तृतीयः। उपरितनवयस्कस्य वधे चतुर्थः। यथोक्तव्रतचरणानन्तर-

कर्तव्यमाह स एव — प्रायश्चित्ते ततश्चीर्णे कुर्यात् ब्राह्मणभोजनम्। विप्राणां दक्षिणां दद्यात् पवित्राणि जपेत् द्विजः। ब्राह्मणान् भोजयित्वा तु गोघ्नः शुद्ध्येन्न संशयः इति।

இவ்விதம் சொல்லப்பட்ட நான்கு விதிகளும் கொல்லப்பட்ட பசுவின் பேதத்தை யனுஸரித்து விதிக்கப்பட வேண்டும். அது எவ்விதம் எனில், ஒரு வயது சென்ற கன்றின் வதத்தில் முதல் விதி. இரண்டு வயது சென்ற கன்றின் வதத்தில் இரண்டாவது விதி. மூன்று வயது சென்ற பசுவின் வதத்தில் மூன்றுவது விதி. அதற்கு மேலான வயதுள்ள பசுவின் வதத்தில் நான்காவது விதி என்பதாம். இவ்விதம் சொல்லப்பட்டுள்ள வ்ரதத்தை யனுஷ்டித்த பிறகு செய்ய வேண்டியதைச் சொல்லுகிறார், பராசரரே:— ப்ராயஶ்சித்தம் செய்யப்பட்ட பிறகு ப்ராம்ஹணர்களுக்குப் போஜனம் செய்விக்க வேண்டும். ப்ராம்ஹணர்களுக்குத் தக்ஷிணையைக் கொடுக்க வேண்டும். சுத்தமான (பவமானஸூக்தம் முதலான) மந்த்ரங்களை ஜபிக்க வேண்டும். ப்ராம்ஹணர்களையும் போஜனம் செய்வித்தால் பசுவைக் கொன்றவன் சுத்தனாகிறான். ஸம்சயமில்லை.

याज्ञवल्क्यः — पञ्चगव्यं पिबेद्गोघ्नो मासमासीत संयतः। गोष्ठेशयो गोऽनुगामी गोप्रदानेन शुद्ध्यति। कृच्छ्रं चैवातिकृच्छ्रं च चरेद्वापि समाहितः। दद्यात्त्रिरात्रं वोपोष्य वृषभैकादशास्तु गाः इति।

யாஜ்ஞவல்க்யர்:— பசுவைக் கொன்றவன் பஞ்சகவ்யத்தையே பருக வேண்டும். போஜனம் செய்யக் கூடாது. ஒரு மாஸம் முழுவதும் நியமம் உடையவனாய் இருக்க வேண்டும். மாட்டுக் கொட்டிலிலேயே படுக்க வேண்டும். பசுக்களைத் தொடர்ந்து செல்ல வேண்டும். ஒரு பசுவைத் தானம் செய்தால் சுத்தனாகிறான். அல்லது ப்ராஜாபத்ய க்ருச்ரம், அதிக்ருச்ரம் இவைகளையாவது

நியமத்துடன் அனுஷ்டிக்க வேண்டும். அல்லது மூன்று நாள் உபவாஸமிருந்து ஒரு எருது, பத்துப் பசுக்கள் இவைகளையாவது கொடுக்க வேண்டும்.

गोवधनिमित्तान्याह पराशरः — रोधबन्धनयोक्त्राणि घातश्चेति चतुर्विधम् इति । वधनिमित्तमिति शेषः । तेषु वधेषु प्रायश्चित्तान्याह स एव — एकपादं चरेद्रोधे द्वौ पादौ बन्धने चरेत् । योक्त्रेषु पादहीनं स्याच्चरेत्सर्वं निपातने इति । पूर्वोक्तप्राजापत्यव्रतस्य पादादिभेदेन रोधादिवधेषु प्रायश्चित्तान्यवगन्तव्यानि ।

கோ வதத்திற்குக் காரணங்களைச் சொல்லுகிறார், பராசரர்:— அடைத்தல், கட்டிவைத்தல், கயிறு, அடித்தல் என்று நான்கு விதம் வதத்தின் காரணம். அந்த வத காரணங்களில் ப்ராயஶ்சித்தத்தைச் சொல்லுகிறார், பராசரரே:— அடைத்தலில் - நாலில் ஒரு பங்கு க்ருச்ரத்தையும், கட்டி வைத்தலில் - இரண்டில் ஒரு பங்கு க்ருச்ரத்தையும், கயிறுகளில் - முக்கால் க்ருச்ரத்தையும், அடிப்பதில் - முழு க்ருச்ரத்தையும் அனுஷ்டிக்க வேண்டும். முன் சொல்லப்பட்ட ப்ராஜாபத்ய வ்ரதத்தின் கால் பாகம் முதலிய பேதத்தால் அடைப்பது முதலியதால் உண்டாகிய வதங்களில் ப்ராயஶ்சித்தங்கள் அறியத் தகுந்தவை.

रोधबन्धने हिते अहिते च । तत्राहितस्य वधनिमित्तस्य रोधादेः स्वरूपमाह पराशरः— गोवाटे वा गृहे वाऽपि दुर्गेष्वप्यसमस्थले । नदीष्वथ समुद्रेषु त्वन्येषु च नदीमुखे । दग्धदेशे मृता गावः स्तम्भनाद्रोध उच्यते । योक्त्रदामकदोरैश्च कण्ठाभरणभूषणैः । गृहे वाऽपि वने वाऽपि बद्धा स्याद्गौर्मृता यदि । तदेव बन्धनं विद्यात् कामा कामकृतं यदि । हले वा शकटे पङ्क्तौ पृष्ठे वा पीडितो नरैः । गोपतिर्मृत्युमाप्नोति योक्त्रो भवति तद्वधे । मत्तः प्रमत्त उन्मत्तश्चेतनो वाऽप्यचेतनः । कामाकामकृतक्रोधो दण्डैर्हन्या दथोपलैः । प्रहृता वा

मृता वाऽपि तद्धि हेतुर्निपातने इति । अन्येषु - वापीकूपादिषु । नदीमुखं - समुद्रनदी सङ्गमप्रदेशः ।

அடைத்தல், கட்டிவைத்தல் என்ற இரண்டும் ஹிதங்களும் அஹிதங்களுமாய் உள்ளன. அவைகளுள் அஹிதமான வத காரணமான அடைத்து வைத்தல் முதலியதின் ஸ்வரூபத்தைச் சொல்லுகிறார், பராசரர்:— "பசுக்கொட்டிலிலாவது, வீட்டிலாவது, போக முடியாத இடங்களிலாவது, மேடு பள்ளமுள்ள இடத்திலாவது, நதிகளிலாவது, ஸமுத்திரத்திலாவது, மற்ற இடங்களிலாவது, நதீ ஸமுத்ர ஸங்கம ஸ்தலத்திலாவது, காட்டுத் தீயினால் பொசுக்கப்பட்ட இடத்திலாவது, அடைக்கப்பட்டுப் பசுக்கள் இறப்பது "ரோதம்" எனப்படுகிறது. தும்பு, தாவணி, கயிறு, கழுத்து ஆபரணம், மற்ற ஆபரணம், இவைகளால் வீட்டிலாவது வனத்திலாவது, கட்டப்பட்ட பசு இறந்தால் அதை, "பந்தனம்" என்று அறியவும். அது காமத்தால் செய்யப்பட்டாலும், அகாமத்தால் செய்யப்பட்டாலும், கலப்பையிலோ, வண்டியிலோ, வரிசையிலோ பின்பக்கத்தில் மனிதர்களால் குத்தப்பட்டுப் பெரிய எருதானது மரணமடைந்தால் அது "யோக்த்ரம்" எனப்படுகிறது. மத்தனுகவாவது, ப்ரமத்தனுகவாவது, உன்மத்தனுகவாவது, புத்தியுள்ளவனுகவாவது, புத்தியில்லாதவனுகவாவது, விரும்பியாவது, விரும்பாமலாவது, கோபமுள்ளவனுய், கழிகளாலாவது கற்களாலாவது அடித்தால், அடிக்கப்பட்ட பசு மரித்தால் அது 'காதம்'' எனப்படுகிறது'' என்று. மற்ற இடங்கள் - குட்டை, கிணறு முதலியவைகள். "தக்ததேசம்" என்பது காட்டுத் தீயினுல் எரிக்கப்பட்டு உஷ்ணமான சாம்பலுள்ள ப்ரதேசம்.

एषु स्थानेषु स्तम्भनात् गावो मृता भवन्ति । अतस्तादृशं स्तम्भनमत्र रोध उच्यते । योक्त्रं - पाशः शकटयुगच्छिद्रसंबद्धः ।

दामकं - धेनुबन्धनहेतुः पाशः । दोरं - रज्जुमात्रम् । कण्ठाभरणं - किङ्किण्यादिः । भूषणं - ललाटादौ बद्धवराटिकादि । पङ्क्तिः - खले मेधीबन्धनम् । गोपतिः - बलीवर्दः । मत्तः - धनादिना दृप्तः । प्रमत्तः - मद्यपानादिना परवशः । उन्मत्तः - व्याध्यादिना विभ्रान्तः । चेतनः - लोकव्यवहारक्षमः । अचेतनः - मुग्धः । मारयिष्यामीति बुद्धिः कामः । व्यर्थचेष्टामात्रं - अकामः । ताभ्यामुत्पादितः क्रोधो यस्यासौ । दण्डादिभिर्यदि हन्यात्तदा मरणमन्तरेण केवलं प्रहृता स्यात्, कामकृतः सम्प्रहारो घातः । अकामकृतं तु मारणं घात इत्यर्थः ।

இந்த ஸ்தலங்களில் அடைத்து வைப்பதால் பசுக்கள் இறக்கின்றன. ஆகையால் அவ்விதமான அடைத்தல் ''ரோதம்'' எனப்படுகிறது. யோக்த்ரம் - வண்டியின் நுகத்தடியின் இரண்டு த்வாரங்களில் கட்டப்பட்டுள்ள கயிறு. தாமகம் = கறவை மாட்டைக் கட்டும் கயிறு. ''தோரம்'' - ஸாதாரணக் கயிறு. கண்டாபரணம் - சலங்கை முதலியது. பூஷணம் - நெற்றி முதலியதில் கட்டப்பட்ட சோழி முதலியது. பங்க்தி - களத்தில் நடுவில் புதைக்கப்பட்டிருக்கும் கட்டை. மத்தன் - தனம் முதலியதால் மதமுள்ளவன். ப்ரமத்தன் - மத்யபானம் முதலியதால் பரவசனுயிருப்பவன். உன்மத்தன் - வ்யாதி முதலியதால் புத்தியில்லாதவன். சேதனன் - லோக வ்யவஹாரமறிந்தவன். அசேதனன் - மூடன். காம: - கொல்வேன் என்று புத்தி. அகாம: - பயனற்ற சேஷ்டை மட்டில். அவைகளால் உண்டாக்கப்பட்ட கோபத்தையுடையவன் - காமாகாம க்ருதக்ரோதன். கழி முதலியவைகளால் எப்பொழுது அடிப்பானே அப்பொழுது மரணமில்லாமல் அடிக்கப்பட்டதாய் மட்டில் ஆகும். அந்த இச்சையால் செய்யப்பட்ட அடியானது ''காதம்''. இச்சையில்லாமல் செய்யப்பட்ட கொலேயோ எனில் இது ''காதம்'' எனப்படுகிறது.

दण्डलक्षणमुक्तं तेनैव — अङ्गुष्ठमात्रस्थूलस्तु बाहुमात्र प्रमाणकः । आर्द्रस्तु सपलाशश्च दण्ड इत्यभिधीयते इति । अधिकप्रमाणदण्डादिभिर्मारणे तु प्रायश्चित्तद्वैगुण्यमाह स एव — दण्डादूर्ध्वं यदान्येन प्रहाराद्यदि पातयेत्। प्रायश्चित्तं तदा प्रोक्तं द्विगुणं गोवधे चरेत् इति । दण्डादूर्ध्वमधिकप्रमाणेनान्येन लगुडादिना पातयेत् - मारयेत्। अकामकृतेऽपि वधे द्विगुणमाचरेदित्यर्थः ।

தண்டத்தின் லக்ஷணம் சொல்லப்பட்டுள்ளது. பராசரராலேயே:— பெருவிரல் அளவு பருமனுடையதும், கையளவு நீளமுள்ளதும், ஈரமுள்ளதும், இலைகளுடன் கூடியதுமாகியது "தண்டம்" எனப்படுகிறது. இதைவிட அதிக அளவுள்ள தண்டம் முதலியதால் கொன்றால் ப்ராயஶ்சித்தம் இரண்டு மடங்கு என்றார் பராசரரே:— "தண்டத்திற்கு மேற்பட்ட அதிக அளவுள்ள கழி முதலியதால் கொன்றால், அப்பொழுது கோவதத்தை விட இரண்டு மடங்கு அதிகமான ப்ராயஶ்சித்தத்தை யனுஷ்டிக்க வேண்டும்" என்று. தண்டத்துக்கு மேல் அதிக அளவுள்ள பெருந்தடி முதலியதால் அடித்துக் கொன்றால் இச்சையுடன் செய்யப்படாது இருந்தாலும் அந்த வதத்தில் இரண்டு மடங்கு ப்ராயஶ்சித்தத்தை யனுஷ்டிக்க வேண்டும், என்று பொருள்.

द्विगुणप्रायश्चित्तस्य निमित्तान्तरमाह स एव — व्यापन्नानां बहूनां च बन्धने रोधनेऽपि वा । द्विगुणं तु व्रतस्यास्य प्रायश्चित्तं विशुद्धये इति । कामकृतगोवधे निमित्तविशेषानुपजीव्य प्रायश्चित्तविशेषान् दक्षिणासहितानाह स एव— काष्ठ लोष्टक पाषाणैः शस्त्रेणैवोद्धतो बलात्। व्यापादयति यो गां तु तस्य शुद्धिं विनिर्दिशेत्। चरेत् सान्तपनं काष्ठे प्राजापत्यं तु लोष्टके। तप्तकृच्छ्रं तु पाषाणे शस्त्रपातेऽतिकृच्छ्रकम्। पञ्च सान्तपने गावः प्राजापत्ये तथा त्रयः । तप्तकृच्छ्रे भवन्त्यष्टावतिकृच्छ्रे त्रयोदश इति।

இரண்டு மடங்கு ப்ராயஶ்சித்தத்திற்கு மற்றொரு காரணத்தையும் சொல்லுகிறார், பராசரரே:— வ்யாதியுள்ள அநேகம் பசுக்களைக் கட்டி வைத்தாலும், அடைத்து வைத்தாலும் சொல்லிய வ்ரதத்தை இரண்டு மடங்காகச் சுத்திக்காக அனுஷ்டிக்க வேண்டும். புத்திபூர்வமாய்ச் செய்யப்பட்ட கோவதத்தில் காரண பேதங்களுக்குத் தகுந்தபடி ப்ராயஶ்சித்த பேதங்களைத் தக்ஷிணைகளுடன் கூடியதாய்ச் சொல்லுகிறார், பராசரரே:— கட்டை, மண்கட்டி, பாராங்கல், ஆயுதம் இவைகளால் பலமாய் அடித்து பசுவை எவன் கொல்லுகின்றானோ அவனுக்கு ப்ராயஶ்சித்தத்தை (இவ்விதம்) விதிக்க வேண்டும். கட்டையினாலானால் ஸாந்தபன க்ருச்ரத்தையும், மண்கட்டியினாலானால், ப்ராஜாபத்யத்தையும், பாராங்கல்லினாலானால் தப்த க்ருச்ரத்தையும், ஆயுதத்தாலானால் அதிக்ருச்ரத்தையும் ப்ராயஶ்சித்தமாய் விதிக்க வேண்டும். ஸாந்தபன க்ருச்ரத்தின் முடிவில் ஐந்து பசுக்களையும், ப்ராஜாபத்ய க்ருச்ரத்தின் முடிவில் மூன்று பசுக்களையும், தப்தக்ருச்ரத்தின் முடிவில் எட்டுப் பசுக்களையும், அதிக்ருச்ரத்தின் முடிவில் பதின்மூன்று பசுக்களையும் தானம் கொடுக்க வேண்டும்.

सान्तपनादीनां स्वरूपमग्रे वक्ष्यते । गृहे बद्धस्य गोः बन्धनिमित्तमरणे प्रायश्चित्तमाह स एव— बन्धपाशनिरुद्धाङ्गो म्रियते यदि गो पशुः । भवने तत्र पापी स्यात् प्रायश्चित्तार्धमर्हति इति ।

ஸாந்தபனம் முதலியவைகளின் ஸ்வரூபம் மேலே சொல்லப்படும். வீட்டில் கட்டப்பட்ட பசுவுக்குக் கட்டுவதினால் உண்டாகிய மரண விஷயத்தில் ப்ராயஶ்சித்தத்தைச் சொல்லுகிறார், பராசரரே:— வீட்டில் கட்டி, கயிறினால் நெருக்கப்பட்ட பசுவானது மரித்தால், கட்டினவன் பாபியாவான். கோவத ப்ராயஶ்சித்தத்தில் பாதி ப்ராயஶ்சித்தத்தை அவன் அனுஷ்டிக்க வேண்டும்.

शृङ्गभङ्गादौ प्रायश्चित्तमाह स एव — पाषाणेनापि दण्डेन गावो येनाभिघातिताः । शृङ्गभङ्गे चरेत् पादं द्वौ पादौ नेत्रघातने । लाङ्गूले पादकृच्छ्रं तु द्वौ पादावस्थिभञ्जने । त्रिपादं चैव कर्णे तु चरेत् सर्वं निपातने । अतिदाहे चरेत् पादं द्वौ पादावतिवाहने । नासिक्ये पादहीनं तु चरेत् सर्वं निपातने । एका चेद्बहुभिः काचिद्दैवाद्व्यापादिता यदि । पादं पादं तु हत्यायाश्चरेयुस्ते पृथक् पृथक् । दहनात्तु विपद्येत अनड्वान् योक्त्रयन्त्रितः । उक्तं पराशरेणैव ह्येकं पादं यथाविधि । प्रेरयन् कूपवापीषु वृक्षच्छेदेषु पातयन् । गवाशनेषु विक्रीणन् ततः प्राप्नोति गोवधम् इति ।

கொம்பை ஒடிப்பது முதலியவைகளில் ப்ராயஸ்சித்தத்தைச் சொல்லுகிறார், பராசரரே:— கல்லினாலாவது, தண்டத்தினாலாவது, எவன் பசுக்களை அடிக்கின்றானோ, அவன் பசுவின் கொம்பை ஒடித்திருந்தால் நாலில் ஒரு பங்கு ப்ராயஸ்சித்தத்தை அனுஷ்டிக்க வேண்டும். கண்ணை அடித்திருந்தால் பாதி ப்ராயஸ்சித்தத்தை யனுஷ்டிக்க வேண்டும். வாலை ஒடித்தால் கால் பாகம் ப்ராயஸ்சித்தத்தையும், எலும்பை ஒடித்தால் பாதி ப்ராயஸ்சித்தத்தையும், காதை ஒடித்தால் முக்கால் ப்ராயஸ்சித்தத்தையம், வதைத்தால் முழு ப்ராயஸ்சித்தத்தையும் அனுஷ்டிக்க வேண்டும். அதிகமாய்ச் சூடினால் கால் ப்ராயஸ்சித்தத்தையும், அதிகமாய்ச்சுமக்கச் செய்தால் பாதி ப்ராயஸ்சித்தத்தையும், மூக்கின் உபத்ரவத்தினாலானால் முக்கால் ப்ராயஸ்சித்தத்தையும், கொலையில் முழு ப்ராயஸ்சித்தத்தையும் அனுஷ்டிக்க வேண்டும். பலர்கள் கூடி ஒரு பசுவைத் தெய்வாதீனமாய்க் கொல்லநேர்ந்தால், அவர்கள் எல்லோரும் ப்ரம்ஹஹத்யா வ்ரதத்தின் நாலில் ஒரு பாகத்தைத் தனித்தனியே அனுஷ்டிக்க வேண்டும். கட்டப்பட்ட எருது நெருப்பினால் இறந்தால், அவன் நாலில்

ஒரு பாகம் ப்ராயஶ்சித்தத்தை அனுஷ்டிக்க வேண்டும் என்றார் பராசரர். கிணறுகளிலும், குட்டைகளிலும், மரம் வெட்டும் இடங்களிலும் போகும்படி செலுத்தியவனும், பசுவைத் தின்னும் புலையர்களிடம் விற்பவனும், பசுவைக் கொன்ற பாபத்தையே அடைவான்.

अङ्गुष्ठमात्र स्थूले इत्युक्तप्रमाणदण्डेन सञ्चारणार्थं प्रहारे क्वचित् प्रायश्चित्ताभावमाह स एव - मूर्च्छितः पतितो वाऽपि दण्डेनाभिहतः स तु । उत्थितस्तु यदा गच्छेत् पञ्च सप्त दशैव वा । ग्रासं वा यदि गृह्णीयात्तोयं वाऽपि पिबेद्यदि । पूर्वं व्याध्युपसृष्टश्चेत् प्रायश्चित्तं न विद्यते इति ।

பெருவிரல் பருமனுள்ளது என்று சொல்லப்பட்ட லக்ஷணமுள்ள தண்டத்தினால் மேய்ப்பதற்காக அடித்தால் சில காலத்தில் ப்ராயஶ்சித்தம் இல்லை என்கிறார், பராசரரே:— தண்டத்தினால் அடிக்கப்பட்ட பசு மூர்ச்சை அடைந்தாலும், விழுந்தாலும் எப்பொழுது எழுந்து ஐந்து அல்லது ஏழு அல்லது பத்து அடிகள் நடந்தாலும், மறுபடி புல்லைத் தின்றாலும், தண்ணீரைக் குடித்தாலும், அது முன்பே வ்யாதி உள்ளதாகில் அவ்விஷயத்தில் ப்ராயஶ்சித்தம் இல்லை.

अन्यत्रापि क्वचित् प्रायश्चित्ताभावमाहाङ्गिराः — सायं सङ्गोपनार्थं तु न दुष्येद्रोधबन्धयोरिति । पराशरोऽपि — गवां संरक्षणार्थाय न दुष्येद्रोधबन्धयोः । तद्वधं तु न तं विद्यात्कामाकामकृतं तथा । कूपखाते तटाखाते नदीखाते तथैव च । अन्येषु धर्मखातेषु प्रायश्चित्तं न विद्यते । वेश्मद्वारे निवासेषु यो नरः खातुमिच्छति । स्वकार्यगृहखातेषु प्रायश्चित्तं विनिर्दिशेत् । निशिबन्धनिरोधेषु सर्पव्याघ्रहतेषु च । अग्निविद्युद्विपन्नेषु प्रायश्चित्तं न विद्यते । सङ्ग्रामे प्रहता ये च ये दग्धा वेश्मकेषु च । दावाग्निग्रामघातेषु प्रायश्चित्तं न

विद्यते । ग्रामखाते शरौघेण वेश्मभङ्गान्निपातने । अतिवृष्टौ हतानां च प्रायश्चित्तं न विद्यते । यन्त्रिता गौश्चिकित्सार्थं गूढगर्भविमोचने । यत्ने कृते विपद्येत प्रायश्चित्तं न विद्यते ।

மற்றும் ஒரு விஷயத்தில் ப்ராயஶ்சித்தம் இல்லை என்பதைச் சொல்லுகிறார், அங்கிரஸ்:— ஸாயங்காலத்தில் காப்பதற்காக அடைப்பதிலும், கட்டுவதிலும் தோஷமில்லை. பராசரரும்:— பசுக்களைக் காப்பதற்காக அடைத்து வைப்பதிலும், கட்டுவதிலும் பாபம் இல்லை. அதனால் பசு இறந்தால், அது எவ்வித வதமுமாகாது. கிணற்றிலும், குளத்திலும், நதியின் பள்ளத்திலும், மற்ற தர்மத்திற்கான பள்ளங்களிலும் விழுந்து மரித்தால் ப்ராயஶ்சித்தம் இல்லை. வீட்டின் வாசற்படியிலும், வஸிக்குமிடத்திலும், செய்யப்பட்ட பள்ளங்களிலும், தன் கார்யத்திற்காக வீட்டில் செய்யப்பட்ட பள்ளங்களிலும், பசு விழுந்து மரித்தால் ப்ராயஶ்சித்தம் உண்டு. இரவில் அடைத்திருந்தாலும், கட்டியிருந்தாலும், அப்பொழுது ஸர்ப்பம், புலி இவைகளால் கொல்லப்பட்டாலும், நெருப்பு, இடி இவைகளால் இறந்தாலும் ப்ராயஶ்சித்தம் இல்லை. யுத்தத்தில் கொல்லப்பட்டாலும், வீடுகளில் பொசுக்கப்பட்டாலும், காட்டுத்தீ, க்ராமத்தில் நெருப்பு முதலியவைகளால் இறந்தாலும் ப்ராயஶ்சித்தம் இல்லை. பாணங்களால் க்ராமத்திற்குத் தொந்திரவிலும், வீடு இடிந்து இறந்தாலும், அதிக மழையில் இறந்தாலும் ப்ராயஶ்சித்தம் இல்லை. வெளிவராத கர்ப்பத்தை வெளியாக்குவதற்காகக் கட்டப்பட்ட பசுவும், சிகித்ஸைக்காகக் கட்டப்பட்ட பசுவும் இறந்தால் ப்ராயஶ்சித்தம் இல்லை.

केशानां रक्षणार्थाय द्विगुणं व्रतमाचरेत् । द्विगुणे व्रत आदिष्टे दक्षिणा द्विगुणा भवेत् । राजा वा राजपुत्रो वा ब्राह्मणो वा बहुश्रुतः । अकृत्वा वपनं तस्य प्रायश्चित्तं विनिर्दिशेत् । सर्वान् केशान्

समुच्छि(द्धृ)त्य च्छेदयेदङ्गुलिद्वयम् । न स्त्रियाः केशवपनं न दूरे शयनासनम् । गृहेषु सततं तिष्ठेच्छुचिर्नियममाचरेत् । इह यो गोवधं कृत्वा प्रच्छादयितुमिच्छति । स याति नरकं घोरं कालसूत्रमसंशयम् । विमुक्तो नरकात्तस्मान्मर्त्यलोकेषु जायते । क्लीबो दुःखी च कुष्ठी च सप्त जन्मानि वै नरः । तस्मात् प्रकाशयेत् पापं निर्दिष्टं व्रतमाचरेत् । स्त्रीबालनृप गोविप्रेष्वतिकोपं विवर्जयेत् इति ।

கேசங்களை ரக்ஷிக்க வேண்டுமானல், வ்ரதத்தை இரண்டு மடங்கு அனுஷ்டிக்க வேண்டும். வ்ரதம் இரண்டு மடங்கு விதிக்கப்பட்டால் தக்ஷிணையும் இரண்டு மடங்காகக் கொடுக்கப்பட வேண்டும். அரசனுயினும், அரசனின் புத்ரனுயினும், அதிகமாக வேத சாஸ்த்ரம் கற்ற ப்ராம்ஹணனுயினும் அவர்களுக்கு வபனம் இல்லாமலே ப்ராயஶ்சித்தத்தை விதிக்கலாம். எல்லாக் கேசங்களையும் சேர்த்து நுனியில் இரண்டு விரல் அளவு கேசங்களைச் சேதிக்கவும். இவ்விதம் செய்வது ஸ்த்ரீகளுக்கும் பெண்களுக்கும் முண்டனம் என்று சொல்லப்படுகிறது. ஸ்த்ரீக்குக் கேசவபனமில்லை. தூரதேசத்தில் படுப்பது, இருப்பது என்பது இல்லை. வீட்டிலேயே நியமத்துடன் இருக்க வேண்டும். சுத்தையாய் வ்ரதத்தை யனுஷ்டிக்க வேண்டும். இவ்வுலகில் கோவதத்தைச் செய்து விட்டு எவன் அதை மறைப்பதற்கு விரும்புகின்றுனே அவன் கோரமான கால ஸூத்ர மெனும் நரகத்தை யடைகின்றுன். ஸம்சயமில்லை. அந்த நரகத்தை யனுபவித்து அங்கிருந்து திரும்பியவனுய் மனித உலகில் நபும்ஸகனுயும், துக்கமுடையவனுயும், குஷ்டரோகமுடையவனுயும், ஏழு ஜன்மங்களை அடைவான். ஆகையால் பாபத்தை வெளிப்படுத்த வேண்டும். எப்பொழுதும் ப்ராயஶ்சித்தத்தை யனுஷ்டிக்க வேண்டும். ஸ்த்ரீ, பாலர், அரசன், பசு, ப்ராம்ஹணன் இவர்களிடத்தில் அதிக கோபத்தை வர்ஜிக்க வேண்டும்.

हेमाद्रौ — यो विप्रो वृषभं हन्याच्छिवलिङ्गाङ्कितं तनौ। त्रिवारं क्ष्मां परिक्रम्य ब्रह्मचर्यव्रते स्थितः । धनुष्कोटिं ततो गत्वा गन्धमादनपर्वते। तत्र स्नात्वा त्रिरात्रं च रामलिङ्गं निरीक्ष्य च। कृत्वा चान्द्रायणं दत्वा गां च शुद्ध्येन्न संशयः इति। हेमाद्रौ — अनड्वान् हन्यते विप्रैरश्मदण्डशिलादिभिः । तप्तकृच्छ्रत्रयं कृत्वा पिबेयुः पञ्चगव्यकम्। शुद्धिमाप्नुयुरेतेन नान्यथा शुद्धिरिष्यते सति।

ஹேமாத்ரியில்:— சரீரத்தில் சிவலிங்கத்தால் அடையாளம் இடப்பட்ட வ்ருஷபத்தை எவன் கொல்வானோ, அவன் பூமியை மூன்று தடவை ப்ரதக்ஷிணம் செய்து, ப்ரம்ஹசர்ய வ்ரதத்தில் இருப்பவனாய், தனுஷ்கோடிக்குச் சென்று, கந்தமாதன பர்வதம் சென்று, அங்கு மூன்று நாள் ஸ்நானம் செய்து, ஸ்ரீ ராமநாதரைத் தர்சித்து, சாந்த்ராயண வ்ரதத்தை யனுஷ்டித்து, கோதானம் செய்தால் சுத்தனாவான். ஸம்சயமில்லை. ஹேமாத்ரியில்:— ப்ராம்ஹணர்கள் கல், தண்டம், சிலை முதலியவைகளால் எருதை அடித்துக் கொன்றால் மூன்று தப்தக்ருச்ரங்களைச் செய்து, பஞ்சகவ்யப்ராசனம் செய்ய வேண்டும். இதனால் சுத்தியை அடைவார்கள். இவ்விதம் செய்யாவிடில் சுத்தியில்லை.

## प्राण्यन्तरहनने प्रायश्चित्तम्।

प्रसङ्गात् प्राण्यन्तरहननस्यापि प्रायश्चित्तमुच्यते — तत्र मनुः — मार्जारनकुलौ हत्वा चाषं मण्डूकमेव च। श्वगोधोलूककाकांश्च शूद्रहत्याव्रतं चरेत्। पयः पिबेत्त्रिरात्रं वा योजनं वाऽध्वनो व्रजेत्। उपस्पृशेत् स्रवन्त्यां वा सूक्तं वाऽब्दैवतं जपेत्। अस्थिमतां तु सत्वानां सहस्रस्य प्रमापणे। पूर्णे चानस्यनस्थ्नां तु शूद्रहत्या व्रतं चरेत् इति। पक्षिषु कृम्यादिषु च अस्थिमत्सहस्रवधे शकटपरिमितानस्थिमद्वधे च शूद्रहत्याव्रतं चरेदित्यर्थः।

**மற்ற ப்ராணிகளைக் கொன்ருல் ப்ராயஶ்சித்தம்.** ப்ரஸங்க வசத்தால் மற்ற ப்ராணிகளைக் கொல்வதற்கும் ப்ராயஶ்சித்தம் சொல்லப்படுகிறது. அதில், **மனு:**— "பூனை, கீரி, காடை, தவளை, நாய், உடும்பு, கோட்டான், காக்கை, இவைகளைக் கொன்ருல் சூத்ரனைக் கொன்றதற்கு விதிக்கப்பட்ட ப்ராயஶ்சித்தத்தை யனுஷ்டிக்க வேண்டும். மூன்று நாள் முழுவதும் பாலை மட்டில் பருக வேண்டும். ஒரு யோஜனை தூரமுள்ள வழியையாவது நடக்க வேண்டும். நதியில் ஸ்நானமாவது செய்ய வேண்டும். ஜலதேவதாகமான ஸூக்தத்தையாவது ஜபிக்க வேண்டும். எலும்புள்ள ப்ராணிகளை ஆயிரக்கணக்காகக் கொன்ருல், எலும்பில்லாத ப்ராணிகளை ஒரு வண்டிக்கணக்காய்க் கொன்ருல் சூத்ரனைக் கொன்றதற்கு விதிக்கப்பட்ட ப்ராயஶ்சித்தத்தை யனுஷ்டிக்க வேண்டும்," என்று. பக்ஷிகளிலும், புழு முதலியவைகளிலும், எலும்புள்ளவைகளை ஆயிரக்கணக்கில் கொன்ருலும், எலும்பில்லாதவைகளை ஒரு வண்டியளவு கொன்ருலும் சூத்ரனைக் கொன்றதற்காக உள்ள வ்ரதத்தை யனுஷ்டிக்க வேண்டும், என்று பொருள்.

**आपस्तम्बः** — वायसप्रचलाकबर्हिणचक्रवाकहंसभास-मण्डूक नकुलडेरिकाऽश्वहिंसायां शूद्रवत् प्रायश्चित्तम् इति । प्रत्येकवधे तु स एव — किञ्चिदेव तु विप्राय दद्यादस्थिमतां वधे । अनस्थ्नां चैव हिंसायां प्राणायामेन शुद्ध्यति इति । **पराशरः** — हत्वा मूषिकमार्जारसर्पाजगरडुण्डुभान् । कृसरं भोजयेद्विप्रान् लोहदण्डश्च दक्षिणा इति । कृसरं - तिलमुद्गमिश्रमन्नम् । लोहशब्देन कार्ष्णायसमुच्यते ।

**ஆபஸ்தம்பர்:**— காக்கை, கழுகு, மயில், சக்ரவாகம், ஹம்ஸம், தண்ணீர்காக்கை, தவளை, நரி, மூஞ்சூறு, குதிரை இவைகளில் ஒன்றைக் கொன்ருல் சூத்ரனுடைய வதத்தில்

சொல்லிய ப்ராயஶ்சித்தத்தை யனுஷ்டிக்க வேண்டும். தனித்தனியே வதஞ்செய்தால் ஆபஸ்தம்பரே:— எலும்புள்ள ப்ராணிகளைக் கொன்றால், ப்ராம்ஹணனுக்கு ஸ்வல்ப த்ரவ்யத்தைக் கொடுக்க வேண்டும். எலும்பில்லாத ஒன்றைக் கொன்றால் ப்ராணாயாமத்தால் சுத்தனுவான். பராசரர்:— எலி, பூனை, ஸர்ப்பம், மலைப்பாம்பு, இருதலைப்பாம்பு, இவைகளைக் கொன்றால், ப்ராம்ஹணர்களுக்கு எள்ளுடனும் பயறுடனும் சேர்ந்த அன்னத்தைப் புஜிப்பிக்க வேண்டும். இரும்புத் தடியும் தக்ஷிணையாகக் கொடுக்கப்பட வேண்டும்.

याज्ञवल्क्यः — मार्जारगोधानकुलमण्डूकश्वपतत्रिणः । हत्वा त्र्यहं पिबेत् क्षीरं कृच्छ्रं वा पादकं चरेत् । गजे नीलवृषाः पञ्च शुके वत्सो द्विहायनः । खराजमेषेषु वृषो देयः क्रौञ्चे त्रिहायनः । हंसश्येन कपिक्रव्याज्जलस्थलशिखण्डिनः । भासं च हत्वा दद्याद्गामक्रव्यादस्तु वत्सकाम् । उरगेष्वायसो दण्डः पण्डके त्रपुसीसकम् । कोले घृतघटो देय उष्ट्रे गुञ्जा हयेऽशुकम् । तित्तिरौ तु तिलद्रोणं गजादीनामशक्नुवन् । दातुं दानं चरेत् कृच्छ्रमेकैकस्य विशुद्धये । फलपुष्पान्नरसजसत्वाघाते घृताशनम् । किञ्चित् सास्थिवधे देयं प्राणायामस्त्वनस्थिके । वृक्षगुल्मलतावीरुच्छेदने जप्यमृक्शतम् । स्यादोषधिवृथाच्छेदे क्षीराशी गोऽनुगो दिनम् इति ।

யாஜ்ஞவல்க்யர்:— பூனை, உடும்பு, கீரி, தவளை, நாய், பக்ஷி இவைகளைக் கொன்றால் மூன்று நாள் பாலை மட்டில் பருக வேண்டும். அல்லது நாலில் ஒரு பங்கு க்ருச்ரத்தை யனுஷ்டிக்க வேண்டும். யானையைக் கொன்றால் ஐந்து கறுப்புக் காளைகளைக் கொடுக்க வேண்டும். கிளியைக் கொன்றால் இரண்டு வயதுள்ள கன்றைக் கொடுக்க வேண்டும். கழுதை, ஆடு, மேஷம், க்ரௌஞ்சமிவைகளின் வதத்தில் மூன்று வயதுள்ள வ்ருஷபத்தைக் கொடுக்க வேண்டும். ஹம்ஸம், பருந்து,

குரங்கு, மாம்ஸத்தைப் புஜிக்கும் பக்ஷி, நீர் மயில், மயில், தண்ணீர்காக்கை இவைகளைக் கொன்ருல், பசுவைக் கொடுக்க வேண்டும். மாம்ஸம் புஜிக்காத பக்ஷிகளைக் கொன்ருல் சிறிய பெண்ணுன பசுக்கன்றை (கிடாரியை)க் கொடுக்க வேண்டும். பாம்புகளைக் கொன்ருல் இரும்புத் தடி தக்ஷிணை. நபும்ஸகவதத்தில் பித்தளை, ஈயம் இவைகளைக் கொடுக்கவும். பன்றியைக் கொன்ருல் நெய் குடத்தைக் கொடுக்கவும். ஒட்டகையாஞல் குன்றிமணி தங்கம் கொடுக்கவும். குதிரையையாஞல் வஸ்த்ரம் கொடுக்கவும். தித்திரி பக்ஷியைக் கொன்ருல் பதக்கு எள் கொடுக்கவும். யானை முதலியதைக் கொடுக்க சக்தியற்றவன் ஒவ்வொரு தானத்திற்கும் ஒவ்வொரு க்ருச்ரத்தை யனுஷ்டிக்கவும். பழம், புஷ்பம், அன்னம், ரஸவஸ்து இவைகளில் உண்டாகும் ப்ராணியைக் கொன்ருல் நெய்யை ப்ராசனம் செய்ய வேண்டும். எலும்புடன் கூடிய ஐந்துவைத் கொன்ருல் யாதாவது ஒன்றைத் தானம் செய்ய வேண்டும். எலும்பு இல்லாத ஜந்துவின் வதத்தில் ப்ராணுயாமம் செய்யப்பட வேண்டும். மரம், புதர், கொடி, கொடிகள் நிறைந்த புதர் இவைகளை வெட்டிஞல் நூறு வேத ருக்குகளை ஜபிக்க வேண்டும். ஒஷதிகளை வீணுக வெட்டிஞல் ஒரு நாள் முழுவதும் பாலை மட்டில் பருகி, பசுவைத் தொடர்ந்து செல்பவஞ யிருக்க வேண்டும்.

पराशरः — गजस्य च तुरङ्गस्य महिषोष्ट्रनिपातने । प्रायश्चित्तमहोरात्रं त्रिसन्ध्यमवगाहनम् । कुरङ्गं वानरं सिंहं चित्रं व्याघ्रं तु घातयन् । शुद्ध्यते स त्रिरात्रेण विप्राणां तर्पणेन च । वृकजम्बुक ऋक्षाणां तरक्षुश्वानघातकः । तिलप्रस्थं द्विजे दद्याद्वायुभक्षो दिनत्रयम् । मृगरोहिद्वराहाणामवेर्बस्तस्य घातकः । अफालकृष्टमश्नीया दहोरात्रमुपोष्य सः । शिंशुमारं तथा गोधां हत्वा कूर्मं च शल्यकम् । वृन्ताक फलभक्षी चाप्यहोरात्रेण शुद्ध्यति । एवं चतुष्पदानां च सर्वेषां

वनचारिणाम् । अहोरात्रोषितस्तिष्ठेज्जपन्वै जातवेदसम् । क्रौञ्चसारसहंसांश्च चक्रवाकांश्च कुक्कुटान् । जालपादं च शरभ महोरात्रेण शुद्ध्यति ।

பராசரர்:— யானையையாவது, குதிரையையாவது, எருமைக் கடாவையாவது, ஒட்டகையையாவது கொன்றால், ஒரு நாள் முழுவதும் உபவாஸம் ப்ராயஸ்சித்தம். மூன்று காலமும் ஸ்நானம் செய்ய வேண்டும். மான், குரங்கு, ஸிம்ஹம், புலி, சித்ரம் இவைகளைக் கொன்றால் மூன்று நாள் ப்ராயஸ்சித்தத்தால் சுத்தனாகிறான். ப்ராம்ஹண போஜனமும் செய்விக்க வேண்டும். செந்நாய், நரி, கரடி, சிவிங்கி, நாய் இவைகளைக் கொன்றவன் மூன்று நாள் வாயுவை மட்டில் பக்ஷித்து உபவாஸமிருந்து ஒரு படி எள்ளை ப்ராம்ஹணனுக்குக் கொடுக்க வேண்டும். பெண் மான், பன்றி, செம்மறியாடு, வெள்ளாடு இவைகளைக் கொன்றவன் உழப்படாத பூமியில் உண்டாகிய தான்யத்தை மட்டில் புஜிக்க வேண்டும். ஒரு நாள் முழுவதும் உபவாஸமிருக்க வேண்டும். முதலை, உடும்பு, ஆமை, முட்பன்றி இவைகளைக் கொன்றால், வ்ருந்தாக பழத்தை மட்டில் பக்ஷிப்பவனாய் ஒரு நாள் உபவாஸமிருந்தால் சுத்தனாவான். இவ்விதம் காட்டில் ஸஞ்சரிக்கும் நாற்கால் ப்ராணிகளுள் எதைக் கொன்றாலும், ஒரு நாள் முழுவதும் உபவாஸத்துடன் ஜாதவேதஸ மந்த்ரத்தை ஜபிப்பவனாய் இருக்க வேண்டும். க்ரௌஞ்சம், ஸாரஸம், ஹம்ஸம், சக்கரவாகம், கோழி, வாத்து முதலியது, சரபம் இவைகளைக் கொன்றால் ஒரு நாள் உபவாஸத்தால் சுத்தனாகிறான்.

बलाकाटिट्टिभौ वाऽपि शुकपारावतावपि । अहिनक्रविघाती च शुद्ध्यते नक्तभोजनात् । वृककाककपोतानां शारितित्तिरिघातकः । अन्तर्जल उभे सन्ध्ये प्राणायामेन शुद्ध्यति । गृध्रश्येन-

शशादानामुलूकस्य च घातकः । अपकाशी दिनं तिष्ठेत् त्रिकालं मारुताशनः । वल्गुली टिट्टिभानां च कोकिलाखञ्जरीटके । लाविका रक्तपक्षेषु शुद्ध्यते नक्तभोजनात् । कारण्डवचकोराणां पिङ्गलाकुररस्य च । भारद्वाजादिकं हत्वा शिवं पूज्य विशुध्यति । भेरुण्डचाषभासांश्च पारावतकपिञ्जलौ । पक्षिणां चैव सर्वेषामहोरात्रमभोजनम् इति । हेमाद्रौ — महिषीहनने विप्रो महासान्तपनं चरेत् । सा चेद्दोग्ध्री बालवत्सा महासान्तपनद्वयम् इति ।

நாரை, சிறு குருவி, கிளி, புரு, பாம்பு, முதலே இவைகளைக் கொன்றால், பகலில் உபவாஸமிருந்து இரவில் புஜிப்பதால் சுத்தனாகிறான். செந்நாய், காக்கை, புரு, சாரி, தித்திரி இவைகளைக் கொன்றால், இரண்டு ஸந்த்யா காலங்களிலும் ஜலத்திற்குள் மூழ்கி ப்ராணாயாமத்தைச் செய்வதால் சுத்தனாகிறான். கழுகு, பருந்து, சசாதம், கோட்டான் இவைகளைக் கொன்றவன் ஒரு நாள் முழுவதும் பக்வாந்நத்தைப் புஜிக்காதவனாய் இருக்க வேண்டும். மூன்று வேளை காற்றை மட்டும் புஜிப்பவனாய் இருக்க வேண்டும். வல்குலீ, சிறு குருவி, குயில், வலியன், லாவிகா, சிவப்பு இறக்கையுடைய பக்ஷி, இவைகளைக் கொன்றால், பகலில் உபவாஸமிருந்து இரவில் புஜிப்பதால் சுத்தனாவான். காரண்டவம், சகோரம், பிங்களா, குரரம், பாரத்வாஜம் முதலியது இவைகளைக் கொன்றால் சிவனைப் பூஜிப்பதால் சுத்தனாவான். பேருண்டம், காடை, நீர்க்காக்கை, புரு, கபிஞ்ஜலம், எல்லாப் பக்ஷிகள் இவைகளைக் கொன்றால் ஒரு நாள் முழுவதும் உபவாஸம் இருக்க வேண்டும். ஹேமாத்ரியில்:— ப்ராம்ஹணன், எருமையைக் கொன்றால் மஹாஸாந்தபன க்ருச்ரத்தை யனுஷ்டிக்க வேண்டும். அந்த எருமை சிறு கன்றுடையதும் கறக்கக் கூடியதுமாக இருந்தால் மஹாஸாந்தபனம் இரண்டு முறை யனுஷ்டிக்க வேண்டும்.

वृक्षच्छेदादिप्रायश्चित्तम्।

स एव — इन्धनार्थं द्रुमच्छेदी तद्दोषस्योपशान्तये। प्राजापत्यं सकृत् कृत्वा शुद्धिमाप्नोत्यनुत्तमाम्। कृष्यर्थमिन्धनार्थं वा यज्ञवृक्षविभेदने। पराकं तत्र कुर्वीत शुद्धो भवति वृक्षहा। बिल्वाश्वत्थौ यदा छिन्द्यात्तदा चान्द्रायणं चरेत्। पुष्पारामस्य विच्छेदी वनद्रोहीति गद्यते। तद्दोष परिहारार्थं गायत्र्या लक्षमुच्यते। तिन्त्रिणीचूतयोश्छेदे बहुजन्तूपकारणात्। कपित्थामलकच्छेदी सम्यक् चान्द्रायणं चरेत्। कोविदारतरौ निम्बे प्राजापत्यं विशोधनम्।

மரம் வெட்டுவது முதலியதற்கு ப்ராயஶ்சித்தம்.

ஹேமாத்ரியே:— விறகுக்காக மரங்களை வெட்டுபவன் அந்தத் தோஷத்தைப் போக்குவதற்காக ஒரு முறை ப்ராஜாபத்ய க்ருச்ரத்தை யனுஷ்டித்துச் சிறந்த சுத்தியை அடைகிறான். பயிரிடுவதற்காகவாவது, விறகுக்காகவாவது யஜ்ஞார்ஹமான மரத்தை வெட்டினால் பராக க்ருச்ரத்தை அனுஷ்டிக்க வேண்டும். வ்ருக்ஷத்தை வெட்டியவன் சுத்தனாவான். பில்வம், அரசு, இவைகளை வெட்டினால் சாந்த்ராயணத்தை யனுஷ்டிக்க வேண்டும், பூந்தோட்டத்தை வெட்டியவன் வனத்ரோஹீ எனப்படுகிறான். அந்தப் பாபத்தைப் போக்குவதற்கு காயத்ரியை லக்ஷம் முறை ஜபிக்க வேண்டும். அநேக ஜந்துக்களுக்கு உபகாரமாயுள்ள புளி, மா இந்த வ்ருக்ஷங்களை வெட்டினாலும், விளா, நெல்லி இவைகளை வெட்டினாலும் சாந்த்ராயண க்ருச்ரத்தை விதிப்படி அனுஷ்டிக்க வேண்டும். மலையத்தி, வேம்பு, இவைகளை வெட்டினால் ப்ராஜாபத்ய க்ருச்ரம் ப்ராயஶ்சித்தம்.

खर्जूरे नालिकेरे च तालहिन्तालयोस्तथा। तप्तकृच्छ्रं चरेद्विद्वांश्छेददोषोपशान्तये। जम्बीरमातुलुङ्गादीन् छित्वा पापविशुद्धये। सम्यक् स्नात्वा शुचिर्भूत्वा गीताशास्त्रं पठेत् क्रमात्।

तटाककूपकासारच्छेदने विप्रसत्तमः । पूर्ववत्तं दृढं कृत्वा प्राजापत्यं समाचरेत् । विष्ण्वालयादिविच्छेदे तद्वद्ध्वैन्दवमाचरेत् । शून्यालयस्य विच्छेदे पराकं द्विजसत्तमः इति ।

பேரிச்சை. தென்னை, பனை, கூந்தல்பனை இவைகளை வெட்டினால் தப்தக்ருச்ரத்தை யனுஷ்டிக்க வேண்டும். எலுமிச்சை, மாதுளை முதலியது இவைகளை வெட்டினால் விதிப்படி ஸ்நானம் செய்து, சுத்தனாயிருந்து, கீதாசாஸ்த்ரத்தை க்ரமப்படி படிக்க வேண்டும். ப்ராம்ஹணன் தடாகம், கிணறு, குட்டை இவைகளை நாசம் செய்தால் முன் போலவே அவைகளைத் திடப்படுத்தி, பிறகு ப்ராஜாபத்ய க்ருச்ரத்தை யனுஷ்டிக்க வேண்டும். விஷ்ணுவின் ஆலயம் முதலியதைக் கெடுத்தால் அதைப் புதிப்பித்து சாந்த்ராயணத்தை யனுஷ்டிக்க வேண்டும். பாழுங்கோயிலை இடித்தால் பராக க்ருச்ரத்தை யனுஷ்டிக்க வேண்டும்.

याज्ञवल्क्यः — वृक्षगुल्मलतावीरुच्छेदने जप्यमृक्छतम् । स्यादोषधिवृथाच्छेदे क्षीराशी गोऽनुगो दिनम् इति । अत्र वृथाच्छेदीति विशेषणाद्यज्ञार्थच्छेदने न दोषः । यत्तु शङ्खवचनम् — संवत्सरं व्रतं कुर्याच्छित्वा वृक्षं फलप्रदम् इति तच्छेदनावृत्तिविषयम् । दृष्टार्थत्वेऽपि कर्षणाङ्गभूतहलाद्यर्थत्वे न दोषः । फलपुष्पोपगान्न हिंस्यात् पादपान् कर्षणकर्मार्थ मुपहन्यात् इति स्मृतेः । महातटाकच्छेदे विशेषमाह देवलः — बहुधान्योद्भवस्याथ तटाकस्य विभेदने । ब्रह्महत्याव्रतं कृत्वा कपालध्वजवर्जितम् । पुनः संस्कारकृत् पश्चात् शुद्धिमाप्नोत्यसंशयम् इति ।

**யாஜ்ஞவல்க்யர்:—** "மரம், புதர், கொடி, கொடிகள் அடர்ந்த புதர் இவைகளை வெட்டினால் நூறு வேதருக்குகளை ஜபிக்க வேண்டும். ஒஷதிகளை வீணாக வெட்டினால் ஒரு நாள் பாலை மட்டில் பருகி மாடுகளைத் தொடர்ந்து

செல்பவனுயிருக்க வேண்டும்,'' என்று. இங்கு வீணாய் என்று விசேஷணமிருப்பதால் யாகம் முதலியதற்காகச் சேதிப்பதில் தோஷமில்லை. ஆனால், சங்கரின் வசனம்:— ''பழத்தைக் கொடுக்கும் மரத்தை வெட்டினால் ஒரு வர்ஷம் வ்ரதத்தை யனுஷ்டிக்க வேண்டும்'' என்றுள்ளதே யெனில், அது அடிக்கடி வெட்டுவதைப் பற்றியது. இவ்வுலகில் வேண்டியதற்காகினும் உழுவதற்கு அங்கமாகிய கலப்பை முதலியவைகளைச் செய்வதற்காகில் தோஷமில்லை. ''பழம், புஷ்பம் இவைகளுடன் கூடிய வ்ருக்ஷங்களை வெட்டக் கூடாது. உழுவதற்காகவாகில் வெட்டலாம்'' என்று ஸ்ம்ருதியிருப்பதால். பெரிய ஏரியை உடைத்து விட்டால் விசேஷ ப்ராயய்சித்தத்தைச் சொல்லுகிறார், தேவலர்:— அதிக தான்யம் விளைய ஸாதனமாகிய ஏரியை உடைத்தால் கபாலம் கொடி இவைகள் இல்லாமல் ப்ரம்ஹஹத்திக்குச் சொல்லிய ப்ராயய்சித்தத்தை அனுஷ்டித்து, புனஸ்ஸம்ஸ்காரம் செய்து கொண்டால் சுத்தியடைவான். ஸம்சயமில்லை.

## सुरापानादिप्रायश्चित्तम्।

अथ सुरापानादेः प्रायश्चित्तमुच्यते । पिष्टादिजन्यो द्रव्यविशेषस्सुरा। तथा च मनुः — गौडी पैष्टी च माध्वी च विज्ञेया त्रिविधा सुरा। यथैवैका न पातव्या तथा सर्वा द्विजोत्तमैः। सुरा वै मलमन्नानां पाप्मा च मलमुच्यते ।तस्मात् ब्राह्मण राजन्यौ वैश्यश्च न सुरां पिबेत्। यक्ष रक्षः पिशाचान्नं मद्यं मांसं सुराऽऽसवम्। तद्ब्राह्मणेन नात्तव्यं देवानामश्नता हविः इति।

### ஸுராபானம் முதலியதின் ப்ராயய்சித்தம்

இனி ஸுராபானம் முதலியதற்கு ப்ராயய்சித்தம் சொல்லப்படுகிறது. மாவு முதலியதிலிருந்து உண்டாகிய ஓர் த்ரவ்யம் ஸுரா எனப்படுகிறது. அவ்விதமே, மனு:— ''கௌடீ, பைஷ்டீ, மாத்வீ என்று மூன்று விதம் ஸுரை

என்று அறியத்தக்கது. எப்படி ஒரு ஸுரையைப் பானம் பண்ணக்கூடாதோ அவ்விதமே மூன்று ஸுரைகளையும் ப்ராம்ஹணர்கள் பானம் செய்யக் கூடாது. ஸுரை என்பது அந்நங்களின் மலம் ஆகும். மலம் என்பது பாபம் எனப்படுகிறது. ஆகையால் ப்ராம்ஹணன், க்ஷத்ரியன், வைச்யன் இவர்கள் ஸுரையைப் பானம் செய்யக் கூடாது. மத்யம், மாம்ஸம், ஸுரை, ஆஸவம் இவைகள் யக்ஷர்கள், ராக்ஷஸர்கள், பிசாசர்கள் இவர்களுக்கு அன்னமாகும். ஆகையால், தேவர்களுடைய ஹவிஸ்ஸைப் புஜிப்பவனை ப்ராம்ஹணன் அதைச் சாப்பிடக் கூடாது'', என்று.

राजन्यवैश्ययोः सुरापाननिषेधः पैष्टीविषयः । गौडीमाध्व्योरेकादशसु मद्येष्वनुक्रमणात् तत्पाने तयोर्दोषाभावात् । अत एव सुराऽऽसवं सुरारूपं मद्यं ब्राह्मणेन नात्तव्यमिति ब्राह्मणस्यैव तन्निषेधः । पैष्ट्या अकामकृते सकृत्पाने गौडीमाध्व्योरसकृत्पाने कामकृते च ब्राह्मणस्य प्रायश्चित्तं तुल्यम् ।

க்ஷத்ரிய வைச்யர்களுக்கு ஸுராபானத்தை நிஷேதித்தது பைஷ்டமத்யத்தைப் பற்றியது. கௌடீ, மாத்வீ என்ற மத்யங்களைப் பதினொரு மத்யங்களுள் சேர்ந்திருப்பதால் அதைப் பானம் பண்ணுவதில் அவ்விருவருக்கும் தோஷமில்லையாதலால். ஆகையாலேயே, ''ஸுரா ஆஸவமும், ஸுரா ரூபமும் ஆகிய மத்யம் ப்ராம்ஹணனால் பருகத்தகுந்ததல்ல'' என்று ப்ராம்ஹணனுக்கு மட்டில் நிஷேதம். பைஷ்ட மத்யத்தை அபுத்தி பூர்வமாக ஒரு தடவை உபயோகித்ததிலும், கௌடீ, மாத்வீ இவைகளைப் புத்தி பூர்வமாய்ப் பல தடவை உபயோகித்ததிலும் ப்ராம்ஹணனுக்கு ப்ராயஸ்சித்தம் ஸமானமாகும்.

श्रुतिरपि — न सुरां पिबेत् । न कलञ्जं भक्षयेत् । न तस्य वै प्रायश्चित्तं मरणान्तमेव इति । मरणान्तमेव प्रायश्चित्तं अन्यत्तु

नास्तीत्यर्थः । तथाचापस्तम्बः — सुरापोऽग्निस्पर्शां सुरां पिबेत् मृतः शुद्धो भवति इति ।

வேதமும்:— "ஸுரையைப் பானம் பண்ணக்கூடாது. களஞ்சத்தைப் பக்ஷிக்கக் கூடாது. அவனுக்கு ப்ராயச்சித்தம் இல்லை. மரணந்தமே ப்ராயச்சித்தம்" என்று. மரணந்தமே அவனுக்கு ப்ராயச்சித்தம், வேறு ப்ராயச்சித்தம் இல்லை, என்பது பொருள். அவ்விதமே, ஆபஸ்தம்பர்:— ஸுரையைப் பானம் செய்தவன் அக்னி போல் கொதிக்கும் ஸுரையைப் பானம் செய்ய வேண்டும். அவன் இறந்தால் சுத்தனாகிறான்.

पराशरोऽपि — सुरापानं सकृत् कृत्वा अग्निवर्णां सुरां पिबेत् । स पा(ल)तयेदथात्मानमिह लोके परत्र च इति । मनुः — सुरां पीत्वा द्विजो मोहा दग्निवर्णां सुरां पिबेत् । तया स काये निर्दग्धे मुच्यते किल्बिषात्ततः । गोमूत्रमग्निवर्णं वा पिबेदुदकमेव वा । पयो घृतं वाऽऽमरणाद्गोशकृद्रसमेव वा इति ।

பராசரரும்:— ஒரு முறை ஸுராபானம் செய்தால் அக்னி போல் கொதிக்கும் ஸுரையைப் பானம் செய்ய வேண்டும். அவன் இவ்வுலகத்திலும் பரலோகத்திலும் தன்னைச் சுத்தனாக்கிக் கொள்ளுகிறான். மனு:— ப்ராம்ஹணன் மோஹத்தால் ஸுரையைப் பானம் பண்ணினால் அக்னி போல் உள்ள ஸுரையைப் பானம் செய்ய வேண்டும். அதனால் சரீரம் பொசுக்கப்பட்டால் அந்தப் பாபத்தினின்றும் அவன் விடுபடுவான். அக்னி போல் உள்ள கோமூத்ரத்தையாவது, ஜலத்தையாவது பருக வேண்டும். பாலையாவது, நெய்யையாவது, சாணிப்பாலையாவது சாகும் வரையில் பருக வேண்டும்.

कलौ मरणान्तप्रायश्चित्तस्य निषिद्धत्वात्तदभिप्रायेण प्रायश्चित्तान्तरमाह स एव— कणान् वा भक्षयेदब्दं पिण्याकं वा

सकृन्निशि । सुरापानापनुत्त्यर्थं वालवासा ध्वजी जटी इति । एत् जिह्वास्पृष्टमात्रविषयमित्यन्ये।

கலியில் மரணாந்த ப்ராயஶ்சித்தம் நிஷித்தமாகையால், அந்த அபிப்ராயத்துடன் வேறு ப்ராயஶ்சித்தத்தைச் சொல்லுகிறார், மனுவே:— "ப்ராம்ஹணன் ஸுராபான ப்ராயஶ்சித்தத்திற்காக ஒரு வர்ஷம் வரையில் இரவில் ஒரு முறை அரிசி நொய்களையாவது, எள்ளுப்பிண்ணாக்கையாவது பக்ஷிக்க வேண்டும். பசுவின் ரோமம் முதலியதால் செய்யப்பட்ட ஆடையுடையவனும், கள் பாத்ரத்தை அடையாளமுடையவனும், சடையுடையவனும் இருக்க வேண்டும்," என்று. இது நாக்கினால் ஸ்பர்சிக்கப்பட்டதைப் பற்றியது மட்டில் என்று சிலர்.

याज्ञवल्क्यः — सुराम्बुघृतगोमूत्रपयसामग्निसन्निभम् । सुरापोऽन्यतमं पीत्वा मरणाच्छुद्धिमृच्छति । वालवासा जटी वाऽपि ब्रह्महत्याव्रतं चरेत् । पिण्याकं वा कणान् वाऽपि भक्षयेत्त्रिसमा निशि । अज्ञानात्तु सुरां पीत्वा रेतो विण्मूत्रमेव वा । पुनः संस्कारमर्हन्ति त्रयो वर्णा द्विजातयः । पतिलोकं न सा याति ब्राह्मणी या सुरां पिबेत् । इहैव सा शुनी गृध्री सूकरी चोपजायते इति ।

யாஜ்ஞவல்க்யர்:— ஸுராபானம் செய்தவன், ஸுரை, ஜலம், நெய், கோமூத்ரம், பால் இவைகளுள் ஒன்றை நெருப்புக்குச் சமமாய்க் காய்ச்சி, பானம் செய்தால் சுத்தியை அடைவான். அல்லது பசுவின் ரோமம் முதலியதால் செய்யப்பட்ட ஆடையுடையவனும், சடை தரித்தவனும் ப்ரம்ஹஹத்திக்கு விதிக்கப்பட்ட ப்ராயஶ்சித்தத்தை யனுஷ்டிக்க வேண்டும். மூன்று வர்ஷம் வரையில் இரவில் மட்டில் எள்ளுப் பிண்ணாக்கையாவது, அரிசி நொய்யையாவது பக்ஷிக்க வேண்டும். முந்திய மூன்று வர்ணத்தார்களும் அஜ்ஞானத்தால் ஸுராபானம்

செய்தால், அல்லது ரேதஸ், மலம், மூத்ரம் இவைகளைப் பானம் செய்தாலும் மறுபடி ஸம்ஸ்காரத்திற்கு உரியவராகின்றனர். எந்த ப்ராம்ஹண ஸ்த்ரீ ஸுராபானம் செய்தவளோ அவள் பதிலோகத்தை யடைவதில்லை. அவள் இவ்வுலகிலேயே பெண் நாயாயும், பெண் கழுகாயும், பெண் பன்றியாயும் பிறப்பாள்.

गौतमः — सुरापस्य ब्राह्मणस्योष्णामासिञ्चेयुस्सुरामास्ये मृतश्शुद्ध्येत् अमत्या पाने पयो घृतमुदकम् इति, ततोऽस्य संस्कारो मूत्रपुरीषरेतसां च प्राशने इति च। यत्त्वङ्गिरोवचनम् — भूमिप्रदानं कुर्यात्तु सुरां पीत्वा द्विजोत्तमः। पुनर्न च पिबेज्जातु संस्कृतस्स तु शुद्ध्यति इति, तद्गौडीमाद्ध्व्योस्सकृत् पानविषयमिति माधवीये।

கௌதமர்:— "புத்தி பூர்வமாக ஸுராபானம் செய்த ப்ராம்ஹணனின் வாயில் கொதிக்கிற ஸுரையை விட வேண்டும். அதனால் அவன் இறந்தால் சுத்தனாகிறான். அஜ்ஞானத்தால் பருகிய விஷயத்தில் பால், நெய், ஜலம் இவைகளை முன்போல் பருக வேண்டும்," என்று. "பிறகு அவனுக்குப் புனருபநயனம் செய்ய வேண்டும். மூத்ரம், மலம், ரேதஸ் இவைகளைப் புத்திபூர்வமாகச் சாப்பிட்டால் புனருபநயனம் ப்ராயஶ்சித்தம்" என்றும். ஆனால், அங்கிரஸ்ஸின் வசனம்:— ப்ராம்ஹணன் ஸுராபானம் செய்தால் பூதானம் செய்ய வேண்டும். மறுபடி ஒரு காலும் ஸுராபானம் செய்யக் கூடாது. புனருபநயனமானபின் அவன் சுத்தனாகிறான்" என்றுள்ளதே யெனில், அது கௌடீ, மாத்வீ இவைகளை ஒரு முறை பானம் செய்ததைப் பற்றியது, என்று மாதவீயத்தில் உள்ளது.

यत्तु पुनर्बृहस्पतिनोक्तम् — गौडीं माध्वीं सुरां पैष्टीं पीत्वा विप्रस्समाचरेत्। तप्तकृच्छ्रं पराकं च चान्द्रायणमनुक्रमात् इति, तत् सङ्कल्पमात्रविषयम्।

ஆனால், ப்ருஹஸ்பதியினால்:— "கௌட, மாத்வீ, பைஷ்ட என்ற ஸுரைகளை ப்ராம்ஹணன் பானம் செய்தால், தப்தக்ருச்ரம், பராகக்ருச்ரம், சாந்த்ராயணக்ருச்ரம் இவைகளை முறையே அனுஷ்டிக்க வேண்டும்," என்று சொல்லப்பட்டுள்ளதேயெனில், அது ஸங்கல்பத்தை மட்டில் பற்றியது.

प्रायश्चित्ताकरणे दण्डनमुक्तं हेमाद्रौ — सुरापं दण्डयेद्राजा मरणं यदि नेच्छति । ब्रह्मसूत्रं शिखां सम्यक् त्रुटित्वा वापयेच्छिरः । सुराभाण्डं ललाटे तु तापयित्वाऽङ्कयेत् सुधीः । आनीय मृन्मयं भाण्डं सुरापूरितमादरात् । बध्वा कण्ठे खरं यानमारोप्य नगरं ततः । निस्साणं ध्वनयन् भृत्यैरटित्वा नगराद्बहिः । प्रोत्सार्यस्सहसा राज्ञा न दुष्टस्तेन कर्मणा । स पापी द्वादशाब्दं तु कपालध्वजवर्जितम् । ब्रह्महत्याव्रतं कृत्वा शुद्धिमाप्नोति नान्यथेति ।

ப்ராயஶ்சித்தம் செய்து கொள்ளாவிடில் தண்டனை மட்டில் சொல்லப்பட்டுள்ளது, ஹேமாத்ரியில்:— ஸுராபானம் செய்தவன் மரணத்தை விரும்பாவிடில் அவனை அரசன் தண்டிக்க வேண்டும். யஜ்ஞோபவீதத்தை யறுத்து, சிரஸ்ஸை நன்றாக முண்டனம் செய்வித்து, கள் பாண்டத்தை நெற்றியில் சூடவேண்டும். ஸுரை நிறைந்த மட்பாத்ரத்தைக் கொண்டு வந்து அவன் கழுத்தில் கட்டி, கழுதை வாகனத்தின் மேல் ஏற்றி வைத்து, வாத்யத்தைக் கோஷிக்கச் செய்து, வேலைக்காரர்களால் நகரத்தைச் சுற்றுவித்து, நகரத்துக்கு வெளியில் அப்புறப்படுத்த வேண்டும். இவ்விதம் செய்தால் அவன் தோஷமுள்ளவனாகான். அந்தப் பாபி பன்னிரண்டு வர்ஷம் வரையில் கபாலம் த்வஜம் இல்லாமல் ப்ரம்ஹஹத்திக்கு விதித்த ப்ராயஶ்சித்தத்தை யனுஷ்டித்தால் சுத்தனாகிறான். வேறு விதத்தால் சுத்தியில்லை.

तत्रैव – यदि रोगनिवृत्त्यर्थमौषधार्थं सुरां पिबेत्। तस्योपनयनं भूयस्तथा चान्द्रद्वयं विदुः । उपोष्य रजनीमेकां पञ्चगव्येन शुद्ध्यति इति । पराशरः — पतत्यर्धं शरीरस्य यस्य भार्या सुरां पिबेत् । पतितार्धशरीरस्य निष्कृतिर्न विधीयते इति । उक्तव्रतव्यतिरिक्तेन शुद्धिर्नास्तीत्यर्थः ।

ஹேமாத்ரியிலேயே:— ரோகம் நிவ்ருத்தியாவதற்காக மருந்துக்காக ஸுரையைப் பானம் செய்தால், அவனுக்கு மறுபடி உபநயனம் செய்யப்பட வேண்டும். இரண்டு சாந்த்ராயண க்ருச்ரம் அனுஷ்டிக்க வேண்டும். ஒரு நாள் உபவாஸமிருந்து, பஞ்சகவ்ய ப்ராசனம் செய்தால் சுத்தனுகிறன். பராசரர்:— "எவனது பார்யை ஸுராபானம் செய்கிறளோ அவனது சரீரத்தின் பாதி பாகம் பாபமுள்ளதாகிறது. பாபமுள்ள பாதி சரீரமுடையவனுக்கு ப்ராயஸ்சித்தம் விதிக்கப்படுவதில்லை," என்று. சொல்லிய ப்ராயஸ்சித்தத்தைத் தவிர்த்து மற்றதனுல் சுத்தியில்லை, என்பது பொருள்.

प्रायश्चित्तमाह स एव — गायत्रीं जपमानस्तु कृच्छ्रं सान्तपनं चरेत् । गोमूत्रं गोमयं क्षीरं दधि सर्पिः कुशोदकम्। एकरात्रोपवासश्च कृच्छ्रं सान्तपनं स्मृतम् इति। एतच्च त्रिविधसुरापानविषयम्। मद्यपाने तु प्रायश्चित्तमाह बृहस्पतिः — पीत्वा प्रमादतो मद्यमतिकृच्छ्रं चरेत् द्विजः। कारयेत्तस्य संस्कारं शक्त्या विप्रांस्तु भोजयेत् इति।

ப்ராயஸ்சித்தத்தைச் சொல்லுகிறர், பராசரரே:— "காயத்ரியை ஜபிப்பவனுயிருந்து, ஸாந்தபனம் என்கிற க்ருச்ரத்தை யனுஷ்டிக்க வேண்டும். கோமூத்ரம், கோமயம், பால், தயிர், நெய், குசத்தின் ஜலம் இவைகளை மட்டில் ஒவ்வொரு நாளிலும் பருகவேண்டும். ஒரு நாள் முழுவதும் உபவாஸமிருக்க வேண்டும். இவ்விதம் ஆறு

நாள் செய்வது ஸாந்தபனம் எனப்படும்'', என்று. இது மூன்று விதமான ஸுரையைப் பானம் பண்ணிய விஷயத்தைப் பற்றியது. மத்யபானத்திலோ வெனில் ப்ராயஶ்சித்தத்தைச் சொல்லுகிறார், ப்ருஹஸ்பதி:— ப்ராம்ஹணன் அறியாமையால் மத்யத்தைப் பானம் செய்தால், அதிக்ருச்ரத்தை அனுஷ்டிக்க வேண்டும். அவனுக்குப் புனருபநயனம் செய்ய வேண்டும். யதாசக்தி ப்ராம்ஹணர்களையும் ஜபிக்க வேண்டும்.

कामकारे तु पराशरः — मद्यपस्तु द्विजः कुर्यान्नदीं गत्वा समुद्रगाम्। चान्द्रायणे ततश्चीर्णे कुर्याद्ब्राह्मणभोजनम्। अनडुत्सहितां गां च दद्याद्विप्रेषु दक्षिणाम् इति । मद्यं - पनसादि जन्यं मदकारणं द्रव्यम्। तदाह पुलस्त्यः - पानसद्राक्षमाधूक खार्जूरं तालमैक्षवम्। मधूत्थं सैरमारिष्टं मैरेयं नालिकेरजम् । समानानि विजानीयात् मद्यान्येकादशैव तु इति । द्विजः - ब्राह्मणः । कामादपि च राजन्यो वैश्यो वापि कथञ्चन । मद्यमेव सुरां पीत्वा न दोषं प्रतिपद्यते इति बृहद्याज्ञवल्क्यस्मरणात्। मद्यं सौरी गौडी माध्वी च पैष्टी निषिद्धैव। एकादशानामन्यतमस्य पाने महानदीतीरे चान्द्रायणं चरित्वा ब्राह्मणभोजनं कृत्वा दक्षिणां दद्यात्।

புத்திபூர்வமாகச் செய்த விஷயத்தில் பராசரர்:— மத்யபானம் செய்த பிராம்ஹணன் ஸமுத்ரத்தை அடையும் நதியை அடைந்து சாந்த்ராயணத்தைச் செய்து பிறகு ப்ராம்ஹண போஜனத்தைச் செய்விக்கவும். எருதுடன் கூடிய ஒரு பசுவை ப்ராம்ஹணனுக்குத் தானம் செய்ய வேண்டும். மத்யம் - பலாப்பழம் முதலியவற்றிலிருந்து உண்டாக்கிய மதந்தரும் பொருள். புலஸ்தியர்:— பலா, திராக்ஷை, இலுப்பை, பேரீச்சை, பனை, கரும்பு, தேன், ஸைரம், பூவத்தி, மைரேயம், தென்னை என்ற பதினொன்றிலிருந்து உண்டாக்கிய மத்யங்களும் ஸமமானவை. க்ஷத்திரியனாவது வைச்யனாவது புத்தி

பூர்வமாகவே மத்யம் ஸுரை இவற்றைப் பானம் செய்தால் அவனுக்குத் தோஷமில்லை என பிருஹத்யாஜ்ஞவல்க்ய ஸ்ம்ருதி கூறும். (த்விஜன் - ப்ராம்ஹணன்) மத்யம் ஸுரை, கௌடீ, பைஷ்டீ, இவை நிஷித்தமே. இந்தப் பதினொன்றில் ஏதாவதொன்றைப் பானம் செய்தாலும் மஹாநதியின் கரையில் சாந்திராயணத்தை அனுஷ்டித்து பிராம்ஹண போஜனம் செய்வித்து தக்ஷிணையைக் கொடுக்க வேண்டும்.

हेमाद्रौ - माधूकं सैरमारिष्टं मैरेयं नालिकेरजम्। तालहिन्तालजं चैव द्राक्षाखर्जूरसंभवम्। वृक्षोद्भवमिदं मद्यं नवधा परिकीर्तितम्। एतेष्वन्यतमं वापि पिबेद्द्विर्न कदाचन। एतेष्वन्यतमं यस्तु पिबेदज्ञानतो द्विजः। तस्योपनयनं भूयस्तप्तकृच्छ्रत्रयं चरेत्। सुराप स्पृष्टमन्नं च सुराभाण्डोदकं तथा। सुरापानसमं प्राहुस्तत्र चान्द्रस्य भक्षणम्। तस्योपनयनं भूयः पञ्चगव्यस्य सेवनम् इति। मनुः — यस्य कायगतं ब्रह्म मद्येनाप्लाव्यते सकृत्। तस्य व्यपैति ब्राह्मण्यं शूद्रत्वं स च गच्छति। अज्ञानाद्वारुणीं पीत्वा संस्कारेणैव शुद्ध्यति। मतिपूर्वमनिर्देश्यं प्राणान्तिकमिति स्थितिः। अपस्सुराभाजनस्था मद्यभाण्डस्थितास्तथा। पञ्चरात्रं पिबेत् पीत्वा शंखपुष्पीशृतं पयः। स्पृष्ट्वा दत्त्वा च मदिरां विधिवत् प्रतिगृह्य च। शूद्रोच्छिष्टाश्च पीत्वापः कुशवारि पिबेत्त्र्यहम्। ब्राह्मणस्तु सुरापस्य गन्धमाघ्राय सोमपः। प्राणानप्सु त्रिरायम्य घृतं प्राश्य विशुद्ध्यति। अज्ञानात् प्राश्य विण्मूत्रं सुरासंसृष्टमेव च। पुनस्संस्कारमर्हन्ति त्रयो वर्णा द्विजातयः इति।

ஹேமாத்ரியில்:— இலுப்பை, ஸைரம், பூவத்தி, மைரேயம், தென்னை, பனை, கூந்தல்பனை, திராக்ஷை, பேரீச்சை இந்த ஒன்பது விருக்ஷங்களிலிருந்து உண்டாக்கிய மத்யங்களுள் ஒன்றையும் பிராம்ஹணன் ஒரு காலும் குடிக்கக் கூடாது. இவைகளில் ஒன்றை அறியாமையால் குடித்தவனுக்கு மறுபடி உபநயனம் செய்ய வேண்டும்.

மூன்று தப்தக்ருச்ரங்களை அனுஷ்டிக்க வேண்டும். கள் குடிப்பவனால் தொடப்பட்ட அன்னத்தை உண்பதும், கள்பானையில் உள்ள ஜலத்தைக் குடிப்பதும் ஸுராபானத்திற்கு ஸமமானது. சாந்திராயணத்தை அனுஷ்டிக்க வேண்டும். மறுபடி உபநயனம் செய்விக்க வேண்டும். பஞ்சகவ்யபானம் செய்ய வேண்டும். மனு:— எவனுடைய சரீரத்திலுள்ள வேதம் மத்யத்தினால் ஒரு தடவை யாவது மூழ்கடிக்கப்படுகிறதோ, அவனுடைய ப்ராம்மண்யம் போய் விடுகிறது. அவனும் சூத்ரனாகிறான். அறியாமையால் மத்யபானம் செய்தால் புனருபநயனத்தாலேயே சுத்தனாகிறான். புத்திபூர்வமாகப் பானம் செய்தால் ப்ராயஶ்சித்தம் சொல்லப்படுவதில்லை. மரணாந்த ப்ராயஶ்சித்தமே தான் என்பது நிர்ணயம். ஸுராபாத்ரத்திலுள்ள ஜலத்தை அல்லது மத்ய பாண்டத்திலுள்ள ஜலத்தைக் குடித்தால், சங்க புஷ்பியுடன் காய்ச்சப்பட்ட ஜலத்தை ஐந்து நாள் பருக வேண்டும். மத்யத்தைத் தொட்டாலும், கொடுத்தாலும், வாங்கிக் கொண்டாலும், சூத்ரன் குடித்து மீதியான ஜலத்தைக் குடித்தாலும், மூன்று நாள் குசத்துடன் சேர்த்துக் காய்ச்சப்பட்ட ஜலத்தைப் பருக வேண்டும். ஸோமபானம் செய்த ப்ராம்ஹணன் ஸுராபானம் செய்தவனுடைய வாஸனையை மோந்தால், ஜலத்தில் மூழ்கி, மூன்று ப்ராணாயாமம் செய்து, நெய்யைப் பருகினால் சுத்தனாவான். அறியாமையால் விஷ்டை, மூத்ரம், ஸுரையுடன் சேர்ந்த வஸ்து இவைகளை உட்கொண்டால் முன் மூன்று வர்ணத்தாரும் புனருபநயனத்துக்கு உரியவராகின்றனர்.

देवलः — हिन्तालतालखर्जूरनालिकेरमधूद्भवम् । गन्धं वायुवशात् प्राप्तं घ्रात्वा विप्रस्य दक्षिणम् । हस्तमाघ्राय सहसा शुद्धिमाप्नोति तत्क्षणात् । अभावे भास्करं दृष्ट्वा स्पृष्ट्वा कर्णं स्मरेद्धरिम् इति ।

தேவலர்:— கூந்தல்பனே, பனே, பேரீச்சை, தென்னே, இவைகளின் மத்தியத்திலிருந்து உண்டாகிய வாஸனேயைக் காற்றினுல் வந்ததை முகர்ந்தால் உடனே ப்ராம்ஹணனின் வலது கையை முகர்ந்தால் அப்பொழுதே சுத்தியடைகிறுன். ப்ராம்ஹணன் கிடைக்காவிடில் ஸூர்யனேப் பார்த்து, வலது காதைத் தொட்டு, ஹரியை ஸ்மரிக்க வேண்டும்.

## विण्मूत्रादि भक्षणप्रायश्चित्तम्।

पराशरः — अज्ञानात् प्राश्य विण्मूत्रं सुरासंसृष्टमेव च। पुनः संस्कारमर्हन्ति त्रयो वर्णा द्विजातयः। अजिनं मेखला दण्डः भैक्षचर्याव्रतानि च। निवर्तन्ते द्विजातीनां पुनः संस्कारकर्मणि। विण्मूत्रस्य विशुद्ध्यर्थं प्राजापत्यं समाचरेत्। पञ्चगव्यं प्रकुर्वीत स्नात्वा पीत्वा शुचिर्भवेत् इति। स्नात्वा पञ्चगव्येन। एतच्च पुनस्संस्कारात् प्रागेव कर्तव्यम्।

### விஷ்டை, மூத்ரம் முதலியதைப் பக்ஷித்ததற்கு ப்ராயஶ்சித்தம்.

பராசரர்:— ''அறியாமையால் முதல் மூன்று வர்ணத்தாரும் விஷ்டை, மூத்ரம், ஸுரையுடன் கலந்த வஸ்து இவைகளே உட்கொண்டால் புனருபநயனத்திற்கு அர்ஹராகின்றனர். த்விஜர்களுக்குப் புனருபநயனத்தில் க்ருஷ்ணுஜினம், மேகலே, தண்டம், பிக்ஷாசரணம், வ்ரதங்கள் இவைகள் நிவ்ருத்திக்கப்படுகின்றன. விஷ்டை, மூத்ரம் இவைகளேப் பக்ஷித்தால் ப்ராயஶ்சித்தத்திற்காக ப்ராஜாபத்ய க்ருச்ரத்தை யனுஷ்டிக்க வேண்டும். பஞ்சகவ்யத்தால் ஸ்நானம் செய்து, பஞ்சகவ்யத்தைப் பருகி, சுத்தனுகிறுன்'' என்று. பஞ்சகவ்ய ஸ்நானத்தை ப்ராயஶ்சித்தத்திற்கு முன்பே செய்ய வேண்டும்.

कामकारे तु स एव — अमेध्यरेतो गोमांसं चण्डालान्नमथापि वा । यदि भुक्तं तु विप्रेण कृच्छ्रं चान्द्रायणं चरेत् इति । अमेध्यं - विण्मूत्रादि । तथा च मनुः — प्राश्य मूत्रपुरीषाणि द्विजश्चान्द्रायणं चरेदिति ।

புத்திபூர்வமாய்ச் செய்த விஷயத்தில், பராசரரே:— விஷ்டை, மூத்ரம் முதலியது. ரேதஸ், கோமாம்ஸம், சண்டாளனின் அந்நம் இவை ப்ராம்ஹணனால் புஜிக்கப்பட்டால், சாந்த்ராயண க்ருச்ரத்தை அனுஷ்டிக்க வேண்டும். அவ்விதமே, மனு:— ப்ராம்ஹணன் மூத்ரம், விஷ்டை இவைகளை உட்கொண்டால் சாந்த்ராயணத்தை யனுஷ்டிக்க வேண்டும்.

यत्तु चतुर्विंशतिमतेऽभिहितम् — विण्मूत्रभक्षणे विप्रश्चरेच्चान्द्रायणद्वयम् । श्वादीनां चैव विण्मूत्रे चरेच्चान्द्रायणत्रयम् इति तदेतदभ्यासविषयमिति माधवीये । यमः — द्विजोऽज्ञानान्मलं मूत्रं खरमानुषयोः कपेः । मयूरहंसगृध्राणां सकृद्भुक्त्वा तु पातकी । पुनः कर्म प्रकुर्वीत तप्तकृच्छ्रं विशोधनम् । रोगिणो न पुनः कर्म कृच्छ्रमात्रमुदीरितम् । सुखी भूत्वा पिबेत् गव्यं नारीणामर्धमीरितम् इति ।

சதுர்விம்சதி மதத்தில்:— "மல மூத்ரங்களை ப்ராம்ஹணன் பக்ஷித்தால் இரண்டு சாந்த்ராயணங்களை யனுஷ்டிக்க வேண்டும். நாய் முதலியதின் மல மூத்ரங்களை உட்கொண்டால் மூன்று சாந்த்ராயணங்களை யனுஷ்டிக்க வேண்டும்" என்று சொல்லப்பட்ட வசனமோவெனில், அது அடிக்கடி செய்வதைப் பற்றியது, என்று மாதவீயத்தில் உள்ளது. யமன்:— ப்ராம்ஹணன் அறியாமையால் கழுதை, மனிதன், குரங்கு, மயில், ஹம்ஸம், கழுகு இவைகளின் மல மூத்ரங்களை ஒரு தடவை உட்கொண்டால் பாபியாவான். அவனுக்குப் புனருபநயனம் செய்ய

வேண்டும். தப்தக்ருச்ரம் ப்ராயஶ்சித்தம். ரோகமுள்ளவனாகில் அவனுக்குப் புனருபநயனம் இல்லை. க்ருச்ரம் மட்டில் விதிக்கப்பட்டுள்ளது. ரோக நிவ்ருத்திக்குப் பிறகு பஞ்சகவ்யத்தைப் பருக வேண்டும். சொல்லிய ப்ராயஶ்சித்தத்தில் ஸ்த்ரீகளுக்குப் பாதி ப்ராயஶ்சித்தம் விதிக்கப்படுகிறது.

## चण्डालघटस्थजलपाने प्रायश्चित्तम्।

पराशरः — चण्डालघटसंस्थं तु यत्तोयं पिबति द्विजः। तत्क्षणात् क्षिपते यस्तु प्राजापत्यं समाचरेत्। यदि न क्षिप्यते तोयं शरीरे यस्य जीर्यते। प्राजापत्यं न दातव्यं कृच्छ्रं सान्तपनं चरेत् इति। प्रथममज्ञानात् पीत्वा पश्चात्तदानीमेव यदि वमेत्, तदा प्राजापत्यम्। तज्जरणे सान्तपनं कृच्छ्रं परिषदा दातव्यम्। न तु प्राजापत्यम्।

### சண்டாளனின் குடத்திலுள்ள ஜலத்தைப் பருகினால் ப்ராயஶ்சித்தம்.

பராசரர்:— "சண்டாளனின் குடத்திலுள்ள ஜலத்தை ப்ராம்ஹணன் பருகினால், உடனே அந்த ஜலத்தை வெளியாக்கிவிட்டால் ப்ராஜாபத்ய க்ருச்ரத்தை யனுஷ்டிக்க வேண்டும். அவ்விதம் வெளியிடாமல் அவனது சரீரத்திலேயே அந்த ஜலம் ஜீர்ணமானால் ப்ரஜாபாத்யத்தை விதிக்கக் கூடாது. ஸாந்தபன க்ருச்ரத்தை அவன் அனுஷ்டிக்க வேண்டும்", என்று. முதலில் அறியாமையால் பருகி, பிறகு அப்பொழுதே வாந்தி செய்துவிட்டால், அப்பொழுது ப்ராஜாபத்யம், அந்த ஜலம் ஜீர்ணமாகிவிட்டால், ஸாந்தபன க்ருச்ரத்தைப் பரிஷத் விதிக்க வேண்டும். ப்ராஜாபத்யத்தை விதிக்கக் கூடாது.

बुद्धिपूर्वं तत्पाने वर्णभेदेन प्रायश्चित्तभेदमाह स एव — चरेत् सान्तपनं विप्रः प्राजापत्यमनन्तरः। तदर्धं तु चरेद्वैश्यः पादं शूद्रस्य दापयेदिति। रजकाद्यन्त्यजभाण्डोदकादिपाने प्रायश्चित्तमाह स एव

— भाण्डस्थमन्त्यजानां तु जलं दधि पयः पिबेत्। ब्राह्मणः क्षत्रियो वैश्यश्शूद्रश्चैव प्रमादतः। ब्रह्मकूर्चोपवासेन द्विजातीनां तु निष्कृतिः। शूद्रस्य चोपवासेन तथा दानेन शक्तितः इति। ब्रह्मकूर्चस्वरूपमग्रे वक्ष्यते। तत्सहित उपवासस्त्रैवर्णिकस्य। चतुर्थस्य ब्रह्मकूर्चस्थाने दानं द्रष्टव्यम्।

புத்திபூர்வமாய் அந்த ஜலத்தைப் பருகினால், வர்ணத்துக்குத் தகுந்தபடி ப்ராயச்சித்த பேதத்தைச் சொல்லுகிறார், பராசரரே:— ப்ராம்ஹணன் ஸாந்தபன க்ருச்ரத்தை யனுஷ்டிக்க வேண்டும். க்ஷத்ரியன் ப்ராஜாபத்ய க்ருச்ரத்தை யனுஷ்டிக்க வேண்டும். வைச்யன் ப்ராஜாபத்ய க்ருச்ரத்தின் பாதியை யனுஷ்டிக்க வேண்டும். சூத்ரன் கால் ப்ராஜாபத்ய க்ருச்ரத்தை யனுஷ்டிக்க வேண்டும். வண்ணான் முதலியவரின் பானையிலுள்ள ஜலம் முதலியதைப் பருகினால், ப்ராயச்சித்தத்தைச் சொல்லுகிறார், பராசரரே:— "அந்த்யஜர்களுடைய பாத்ரத்திலுள்ள ஜலம், தயிர், பால் இவைகளை நான்கு வர்ணத்தாரும் அறியாமையால் பருகினால், ப்ரம்ஹகூர்ச்ச பஞ்சகவ்ய ப்ராசனம், உபவாஸம் இவைகளால் முதல் மூன்று வர்ணத்தாருக்கும் சுத்தி. சூத்ரனுக்கு உபவாஸத்தாலும், யதாசக்தி தானத்தாலும் சுத்தி," என்று. ப்ரம்ஹ கூர்ச்சத்தின் ஸ்வரூபம் மேலே சொல்லப்படப் போகிறது. அத்துடன் கூடிய உபவாஸம் முதல் மூன்று வர்ணத்தாருக்கு. சூத்ரனுக்கு ப்ரம்ஹகூர்ச்சத்துக்குப் பதிலாகத் தானம் என்றறியவும்.

## चण्डालवाप्यादिजलपाने प्रायश्चित्तम्।

पराशरः — चण्डालखातवापीषु पीत्वा सलिलमग्रजः। अज्ञानात्त्वेकभुक्तेन त्वहोरात्रेण शुद्ध्यति। चण्डालभाण्डसंस्पृष्टं पीत्वा कूपगतं जलम्। गोमूत्रयावकाहारस्त्रिरात्राच्छुद्धिमाप्नुयात् इति।

चण्डालस्वामिकवाप्युदकपाने एकभुक्तम् । कामकारे तूपवासः । चण्डालभाण्डसंस्पृष्टकूपस्थजलपाने गोमूत्रसहितयवपिष्टादिकं दिनत्रयमाहारत्वेन स्वीकुर्यादित्यर्थः ।

**சண்டாளனின் குட்டை முதலியதன் ஜலத்தைப் பருகுவதில் ப்ராயஶ்சித்தம்.**

பராசரர்:— *"சண்டாளன் வெட்டிய குட்டைகளில் உள்ள ஜலத்தை ப்ராம்ஹணன் அறியாமல் குடித்தால், ஒரு வேளை போஜனத்தாலும், உபவாஸத்தாலும் சுத்தியடைகிறான். சண்டாள பாத்ரத்தால் தொடப்பட்ட கிணற்றிலுள்ள ஜலத்தைக் குடித்தால் மூன்று நாள் கோமூத்ரத்துடன் கூடிய யவையைப் புஜிப்பதால் சுத்தனாகிறான்" என்று. சண்டாளனுக்குச் சொந்தமாகிய குட்டையின் ஜலத்தைக் குடித்தால், ஒரு வேளை போஜனம் ப்ராயஶ்சித்தம். புத்தி பூர்வமானால் உபவாஸம். சண்டாளனுடைய பாத்ரத்தால் தொடப்பட்ட கிணற்றிலுள்ள ஜலத்தைக் குடித்தால், கோமூத்ரத்துடன் கூடிய யவையின் மாவு முதலியதை மூன்று நாள் முழுவதும் ஆஹாரமாய் க்ரஹிக்க வேண்டும், என்பது பொருள்.*

**उच्छिष्टविषयतदपवादौ ।**

देवलः — विप्रस्य पीतशेषं यत्तोयमन्यः पिबेद्यदि । मद्यपानसमं प्रोक्तं तत्तोयं मुनिपुङ्गवैः । पीत्वाऽज्ञानात् द्विजः कुर्यात् प्राजापत्यं विशुद्धये इति । पृथक् पात्राभावे तु मार्कण्डेयः – पात्राभावे तृषार्तस्तु पीतशेषं पिबेत् द्विजः । भूमौ किञ्चिन्निपात्याथ पीत्वा विप्रो न दोषभाक् इति । वृद्धशातातपः — पीतशेषं तु यत् किञ्चित् भाजने मुखनिस्सृतम् । अभोज्यं तद्विजानीयाद्भुक्त्वा चान्द्रायणं चरेत् । पीतोच्छिष्टं च पानीयं पीत्वा तु ब्राह्मणः क्वचित् । त्रिरात्रं तु व्रतं कुर्याद्वामहस्तेन वा पुनः इति । एतत् स्वोच्छिष्टविषयम् ।

**உச்சிஷ்டத்தைப் பற்றியதும், அதன் மறுப்பும்.**

தேவலர்:— ப்ராம்ஹணன் குடித்து மீந்த ஜலத்தை மற்றொருவன் குடித்தால், அது மத்யபானத்துக்கு ஸமம், என்று முனிவர்களால் சொல்லப்பட்டுள்ளது. அதை ப்ராம்ஹணன் அறியாமையால் குடித்தால், ப்ராஜாபத்ய க்ருச்ரத்தைச் சுத்திக்காக அனுஷ்டிக்க வேண்டும். தனிப் பாத்ரமில்லாவிடில், மார்க்கண்டேயர்:— வேறு பாத்ரமில்லாவிடில் தாகமுள்ளவன் குடித்து மீந்ததைக் குடிக்கலாம். பூமியில் கொஞ்சம் ஜலத்தை விட்டு விட்டுப் பிறகு பானம் செய்தால் தோஷத்தை யடைவதில்லை. வ்ருத்தசாதாதபர்:— "குடித்து மீந்ததைக் குடித்தாலும், போஜன பாத்ரத்தில் வாயிலிருந்து விழுந்ததை மறுபடி புஜித்தாலும், அந்த புஜிக்கக் கூடாத வஸ்துவைப் புஜித்ததற்காகச் சாந்த்ராயணத்தை யனுஷ்டிக்க வேண்டும். குடித்து மீந்த ஜலத்தை ப்ராம்ஹணன் குடித்தால், மூன்று நாள் வ்ரதத்தை யனுஷ்டிக்க வேண்டும். இடது கையினால் குடித்தாலும் இதுவே வ்ரதம்,'' என்று. இவ்விதம் சொல்லியது தன்னுடைய மீதியைப் பற்றியது.

हारीतः — स्त्रियुच्छिष्टस्थिता आपो यदि कश्चित् पिबेत् द्विजः । शङ्खपुष्प्या विपक्केन त्र्यहं क्षीरेण शुद्ध्यति । शूद्रोच्छिष्टजलं पीत्वा त्रिरात्रं यावकं पिबेत् इति ।

ஹாரீதர்:— ஸ்த்ரீயின் உச்சிஷ்டமாயுள்ள ஜலத்தை ப்ராம்ஹணன் குடித்தால், சங்க புஷ்பியுடன் காய்ச்சப்பட்ட பாலினால் மூன்று நாள் வ்ரதமனுஷ்டித்தால் சுத்தனாவான். சூத்ரன் குடித்த மீதி ஜலத்தைக் குடித்தால், மூன்று நாள் யவைக் கஞ்சியை மட்டில் குடிக்க வேண்டும்.

### निषिद्धक्षीरपानप्रायश्चित्तम् ।

स एव — मृतवत्सापयः पीत्वा मुखेनापि जलं द्विजः । उपोष्य रजनीमेकां पञ्चगव्येन शुद्ध्यति इति । चतुर्विंशतिमते — स्त्रीक्षीरं तु

द्विजः पीत्वा कथञ्चित् काममोहितः । पुनस्संस्कृत्य चात्मानं प्राजापत्यं समाचरेत् । अजोष्ट्रीसन्धिनीक्षीरं मृगाणां वनचारिणाम् । अनिर्दशाया गोश्चैव पीत्वा दिनमभोजनम् इति । अत्रिः — कविकोष्ट्र्योश्च यत्क्षीरं मृगाणां वनचारिणाम् । छागजं गार्दभं क्षीरं भुक्त्वा दिनमभोजनम् इति ।

**விலக்கப்பட்ட பாலைப் பருகுவதில் ப்ராயஶ்சித்தம்.**

ஹாரீதரே:— *கன்று இறந்த பசுவின் பாலைக் குடித்தாலும், வாயினால் ஜலத்தைக் குடித்தாலும், ஒரு நாள் உபவாஸமிருந்து, பஞ்சகவ்ய ப்ராசனத்தால் சுத்தனாவான்.* சதுர்விம்சதிமதத்தில்:— *ப்ராம்ஹணன் காமத்தால் மயங்கி ஸ்த்ரீயின் பாலைக் குடித்தால், புனருபநயனம் செய்து கொண்டு, ப்ராஜாபத்ய க்ருச்ரத்தை யனுஷ்டிக்க வேண்டும். ஆடு, ஒட்டகை, ஸந்தினீ இவைகளின் பாலையும், காட்டு ம்ருகங்களின் பாலையும், ஈன்று பத்துநாளாகாத பசுவின் பாலையும் குடித்தால் ஒரு நாள் உபவாஸமிருக்க வேண்டும். (ஸந்தினீ = கர்ப்பத்திற்காக விடப்பட்ட பசு)* அத்ரி:— *செம்மறியாடு, ஒட்டகை, காட்டு ம்ருகங்கள், வெள்ளாடு, கழுதை இவைகளின் பாலைக் குடித்தால் ஒரு நாள் முழுவதும் உபவாஸமிருக்க வேண்டும்.*

विष्णुः — गोऽजामहिषीवर्जं सर्वपयांसि प्राश्योपवसेत् इति । अयं चैकदिनोपवासोऽज्ञानकृते सकृत्पाने वेदितव्यः । असकृत्पाने तु पराशरः — पीयूषं श्वेतलशुनं वृन्ताकफलगृञ्जनम् । पलाण्डु-वृक्षनिर्यासदेवस्वकवकानि च । उष्ट्रीक्षीरं मृगीक्षीरमज्ञानाद्भुञ्जते द्विजः । त्रिरात्रमुपवासेन पञ्चगव्येन शुद्ध्यति इति । पीयूषः - अभिनवं पयः । पयसोऽभिनवत्वं दशाहान्तः पातित्वम् ।

விஷ்ணு:— *பசு, வெள்ளாடு, எருமை இவைகளைத் தவிர்த்து மற்றவைகளின் பாலைக் குடித்தால், ஒரு நாள்*

உபவாஸமிருக்க வேண்டும். இந்த ஒரு நாள் உபவாஸம் அறியாமையால் ஒரு தடவை செய்யப்பட்ட பானத்தில், என்று அறியத்தக்கது. அடிக்கடி பானம் செய்ததிலோவெனில், பராசரர்:— பீயூஷம், வெள்ளைப் பூண்டு, வ்ருந்தாகபலம், க்ருஞ்சனம் (பூண்டின் ஓர் வகை), பலாண்டு, மரத்தின் பிசின், தேவதையின் ஸ்வத்து, கவகம், ஒட்டகையின் பால், மானின் பால், இவைகளை ப்ராம்ஹணன் அறியாமையால் உட்கொண்டால் மூன்று நாள் உபவாஸமிருந்து, பஞ்சகவ்ய ப்ராசனத்தால் சுத்தனுவான், பீயூஷம் = புதிதாகிய பால், அதாவது ஈன்று பத்து நாட்களாகாத பசுவின் பால்.

कामकृते तु शङ्खः — क्षीराणि यान्यपेयानि तद्विकाराशने बुधः । सप्तरात्रं व्रतं कुर्यात् प्रयत्नेन समाहितः इति । कामतोऽभ्यासे तु शातातपः — सन्धिन्या अन्तर्दशाहाया अवत्सायाश्च गोः क्षीरप्राशने वृथामांसे प्राजापत्यं उष्ट्रीखरीमानुषी क्षीरप्राशने चान्द्रायणं पुरुषस्य पुनरुपनयनं च इति ।

புத்திபூர்வமாய்ச் செய்த விஷயத்தில், சங்கர்:— குடிக்க நிஷித்தமான பால், அதனின் விகாரங்கள் இவைகளை அறிந்தவன் உட்கொண்டால், கவனமுடையவனுய் முயற்சியுடன் ஏழு நாள் வ்ரதத்தை யனுஷ்டிக்க வேண்டும். புத்தி பூர்வமாய்ப் பல முறை செய்தால், சாதாதபர்:— கர்ப்பத்திற்காக விடப்பட்ட பசு, ஈன்று பத்து நாட்களுக்குட்பட்ட பசு, கன்று மரித்த பசு, இவைகளின் பாலை ப்ராம்ஹணன் பருகினுலும், வ்யர்த்தமாய் மாம்ஸத்தை உபயோகித்தாலும், ப்ராஜாபத்ய க்ருச்ரம் அனுஷ்டிக்கப்பட வேண்டும். ஒட்டகை, கழுதை, ஸ்த்ரீ இவர்களின் பாலை உட்கொண்டால் சாந்த்ராயணம் ப்ராயஸ்சித்தமாகும். புருஷனுக்குப் புனருபநயனமும் செய்யப்பட வேண்டும்.

स्मृतिसारे — क्षीरं लवणसंमिश्रमुच्छिष्टेऽपि च यद्धृतम् । स्नानं रजकतीर्थेषु ताम्रे गव्यं सुरासमम् इति । यमः — ताम्रपात्रस्थितं गव्यं नालिकेरोदकं तथा । लवणाक्तं पयश्चैव मद्यगन्धं तथैव च । पीत्वा द्विजश्चरेच्चान्द्रं प्राजापत्यमकामतः इति ।

ஸ்ம்ருதிஸாரத்தில்:— உப்புடன் கூடிய பாலும், உச்சிஷ்டத்தில் போஜனமத்தியில் நெய்யைப் பெற்றுக் கொள்ளுதலும், வண்ணான் துறைகளில் ஸ்நானம் செய்வதும், தாம்ரபாத்ரத்தில் வைக்கப்பட்ட பாலும் ஸுரைக்கு ஸமமாகும். யமன்:— தாம்ரபாத்ரத்தில் உள்ள பாலையும், இளநீரையும், உப்புடன் சேர்ந்த பாலையும், மத்தியத்தின் வாஸனையுள்ளதையும், ப்ராம்ஹணன் உட்கொண்டால், சாந்த்ராயணத்தை யனுஷ்டிக்க வேண்டும். புத்தி பூர்வமாயில்லாவிடில் ப்ராஜாபத்யத்தை அனுஷ்டிக்க வேண்டும்.

पराशरः — सकांस्यं नालिकेराम्बु कांस्ये च रसमैक्षवम् । नालिकेररसं पक्वमभूमिष्ठं जलं तथा । नालिकेरोदकं ताम्रपात्रस्थं गव्यमेव च । लवणाक्तं पयश्चैव मद्याघ्राणं तथैव च । द्विजः कामाच्चरेच्चान्द्रं पीत्वाऽज्ञानात् प्रजापतिम् इति । देवलः — ताम्रपात्रस्थितं दुग्धं गोमूत्रं तक्रमेव वा । नालिकेरोदकं तत्स्थं पीत्वा चान्द्रायणं चरेत् इति । निमित्तान्तरेऽपि भोजनप्रकरणे प्रायश्चित्तमुक्तम् ॥

பராசரர்:— வெண்கலப் பாத்ரத்தில் உள்ள இளநீரையும், வெண்கலப் பாத்ரத்திலுள்ள கரும்புச் சாற்றையும், காய்ச்சப்பட்ட இளநீரையும், பூமியில் இல்லாத ஜலத்தையும், தாம்ரபாத்ரத்தில் உள்ள இளநீர், பால் இவைகளையும், உப்புடன் கூடிய பாலையும், மத்யத்தின் வாஸனையையும் ப்ராம்ஹணன் புத்திபூர்வமாய் உட்கொண்டால், சாந்த்ராயணத்தை யனுஷ்டிக்க

வேண்டும். அறியாமையால் உட்கொண்டால் ப்ராஜாபத்யத்தை யனுஷ்டிக்க வேண்டும். தேவலர்:— தாம்ரபாத்ரத்தில் உள்ள பால், கோமூத்ரம், மோர், இளநீர் இவைகளை உட்கொண்டால் சாந்த்ராயணத்தை யனுஷ்டிக்க வேண்டும். மற்ற நிமித்தங்களிலும் உள்ள ப்ராயஶ்சித்தம் போஜன ப்ரகரணத்தில் (ஆஹ்னிககாண்டத்தில்) சொல்லப்பட்டுள்ளது.

## सुवर्णादिस्तेयप्रायश्चित्तम्।

अथ स्तेयस्य प्रायश्चित्तमुच्यते। तत्र स्वर्णस्तेयप्रायश्चित्तमाह मनुः — सुवर्णस्तेयकृद्विप्रो राजानमभिगम्य तु। स्वकर्म ख्यापयन् ब्रूयान्मां भवाननुशास्त्विति। गृहीत्वा मुसलं राजा सकृद्धन्यात्तु तं स्वयम्। वधेन शुद्ध्यति स्तेनो ब्राह्मणस्तपसैव वा। तपसाऽपनुनुत्सुस्तु सुवर्णस्तेयजं मलम्। चीरवासा द्विजोऽरण्ये चरेत् ब्रह्महणो व्रतम्। एतैर्व्रतैरपोहेत पापं स्तेयकृतं द्विजः इति। वधपक्षो नाम धारकमात्रविप्रविषयः। तपःपक्षस्तु सवनस्थत्वादि गुणोपेतब्राह्मणविषय इति माधवीये।

**தங்கம் முதலியதைத் திருடியதற்கு ப்ராயஶ்சித்தம்.**
இனி திருட்டுக்கு ப்ராயஶ்சித்தம் சொல்லப்படுகிறது. அதில் தங்கத்தைத் திருடியதற்கு ப்ராயஶ்சித்தம் சொல்லுகிறார், மனு:— "ஸ்வர்ணத்தைத் திருடிய ப்ராம்ஹணன் அரசனிடம் சென்று, தனது கார்யத்தை வெளியிட்டு, என்னை நீர் தண்டிக்க வேண்டும், என்று சொல்ல வேண்டும். அரசன் உலக்கையை எடுத்துக் கொண்டு தானே அவனை ஒரு தடவை அடிக்க வேண்டும். அவன் அதனால் சுத்தனாகிறான். அந்த ப்ராம்ஹணன் தபஸ்ஸினாலாவது சுத்தனாகிறான். தபஸ்ஸினால் ஸ்வர்ணஸ்தேய பாபத்தைப் போக்குவதற்கு விரும்பினால் காட்டில் மரவுரி தரித்தவனாய், ப்ரம்ஹஹத்தி செய்தவனின்

வ்ரதத்தை யனுஷ்டிக்க வேண்டும். ப்ராம்ஹணன் இந்த வ்ரதங்களை யனுஷ்டித்தால் ஸ்வர்ணஸ்தேயத்தால் உண்டான பாபத்தைப் போக்குவான்'' என்று. வதம் என்று சொல்லியது நாமதாரகமான ப்ராம்ஹணனைப் பற்றியது. தபஸ் செய்கிறது என்கிற பக்ஷம், யாகத்திலிருக்கின்றவர் முதலிய ப்ராம்ஹணனைப் பற்றியது, என்று மாதவீயத்திலுள்ளது.

अत्र सुवर्णशब्दः परिमाणविशेषोपेतहेमवचनः । तथा च याज्ञवल्क्यः — जालसूर्यमरीचिस्थं त्रसरेणूरजः स्मृतम् । तेऽष्टौ लिक्षा तु तास्तिस्रो राजसर्षप उच्यते । गौरस्तु ते त्रयष्षट् ते यवो मध्यस्तु ते त्रयः । कृष्णलः पञ्च ते माषस्ते सुवर्णस्तु षोडश इति ।

இவ்விஷயத்தில் ஸ்வர்ணம் என்கிற சப்தம் ஒரு அளவுடன் கூடிய தங்கத்தைச் சொல்லுகிறது. அவ்விதமே, யாஜ்ஞவல்க்யர்:— ஜன்னல் வழியாய் வந்த ஸூர்ய கிரணத்திலுள்ள தூளி த்ரஸரேணு எனப்படும். அந்த ரேணுக்கள் எட்டுக் கொண்டது லிக்ஷா. லிக்ஷை மூன்று கொண்டது ராஜஸர்ஷபம். ராஜஸர்ஷபம் மூன்று கொண்டது கௌரம் (வெண்கடுகு). கௌரம் ஆறு கொண்டது யவமத்யம். யவமத்யம் மூன்று கொண்டது க்ருஷ்ணலம். க்ருஷ்ணலம் ஐந்து கொண்டது ஒரு மாஷம். மாஷம் பதினாறு கொண்டது ஸ்வர்ணம்.

स्तेयस्वरूपमाह व्यासः — समक्षं वा परोक्षं वा बलाच्चौर्येण वा पुनः । परस्वानामुपादानं स्तेयं इत्युच्यते बुधैः इति । अपहृतं धनं स्वामिने दत्वैव स्तेयप्रायश्चित्तं कार्यम् — स्तेये ब्रह्मस्वभूतस्य सुवर्णादेः कृते पुनः । स्वामिनेऽपहृतं दत्वा हत्या निष्कृतिमाचरेत् इति स्मरणात् । यदा सुवर्णमपहृत्य तदभुक्त्वा तदानीमेवानुतापेन प्रत्यर्पयेत्, तदाऽऽपस्तम्बोक्तं द्रष्टव्यं चतुर्थकालं मिताशनेन त्रिवर्षमव स्थानम् इति ।

திருட்டின் ஸ்வரூபத்தைச் சொல்லுகிறூர், **வ்யாஸர்:—** நேரிலோ, மறைவிலோ, பலாத்காரத்தாலோ, திருடுவதாலோ பிறரின் தனத்தை க்ரஹிப்பது ஸ்தேயமென்று அறிந்தவர்களால் சொல்லப்படுகிறது. ''திருடப்பட்ட தனத்தை உடையவனுக்குக் கொடுத்து விட்டே ப்ராயஶ்சித்தம் செய்யப்பட வேண்டும்''. ''ப்ராம்ஹணனுக்குச் சொந்தமாகிய ஸ்வர்ணம் முதலியதைத் திருடினூல், திருடிய வஸ்துவை உடையவனுக்குக் கொடுத்து விட்டு, ப்ரம்ஹஹத்யா ப்ராயஶ்சித்தத்தைச் செய்ய வேண்டும்'' என்று ஸ்ம்ருதியிருப்பதால். எப்பொழுது ஸ்வர்ணத்தை யபகரித்து அதைத் தான் புஜிக்காமல் அப்பொழுதே பச்சாத்தாபத்துடன் உடையவனுக்குத் திருப்பிக் கொடுத்துவிடுகிறூனே அப்பொழுது, **ஆபஸ்தம்பரால்** சொல்லப்பட்ட ப்ராயஶ்சித்தம் அறியத்தக்கது. ''மூன்று வர்ஷம் வரையில் நான்கு காலத்துக்கு ஒரு முறை ஸ்வல்பமான போஜனத்துடன் இருப்பது,'' என்று.

मानसापहारे तु सुमन्तुराह — सुवर्णस्तेयी द्वादशरात्रं वायुभक्षः पूतो भवति इति। याज्ञवल्क्यः — ब्राह्मण स्वर्णहारी तु राज्ञे मुसलमर्पयेत् । स्वकर्म ख्यापयंस्तेन हतो मुक्तोऽपि वा शुचिः । अनिवेद्य नृपे शुद्ध्येत् सुरापव्रतमाचरेत्। आत्म तुल्यं सुवर्णं वा दद्याद्वा विप्रतुष्टिकृत् इति।

மனதினூல் அபஹரிக்கும் விஷயத்தில் சொல்லுகிறூர், **ஸுமந்து:—** ஸ்வர்ணஸ்தேயம் செய்தவன் பன்னிரண்டு நாள் வரையில் வாயுவை மட்டில் பக்ஷிப்பவனுய் இருந்தால் சுத்தனுகிறுன். **யாஜ்ஞவல்க்யர்:—** ப்ராம்ஹணனின் ஸ்வர்ணத்தைத் திருடியவன் அரசனிடம் சென்று தனது கார்யத்தைத் தெரிவித்து உலக்கையைக் கொடுக்க வேண்டும். அரசனூல் அவன் அடிக்கப்பட்டாலும், அல்லது விடப்பட்டாலும்

சுத்தனாகிறான். அரசனிடம் தெரிவிக்காவிடில் ஸுராபானம் செய்தவனின் ப்ராயஶ்சித்தத்தை அனுஷ்டித்தால் சுத்தனாகிறான். அல்லது தன் சுத்திக்கு இயன்ற ஸ்வர்ணத்தையாவது கொடுக்க வேண்டும். அல்லது, ப்ராம்ஹணனின் குடும்பத்துக்குப் போதுமான ஸ்வர்ணத்தைக் கொடுக்க வேண்டும்.

पराशरः — अपहृत्य सुवर्णं तु ब्राह्मणस्य ततः स्वयम् । गच्छेन्मुसलमादाय राजानं स्ववधाय तु । ततः शुद्धिमवाप्नोति राज्ञाऽसौ मुक्त एव च । कामतस्तु कृतं यत् स्यान्नान्यथा वधमर्हति इति । आपस्तम्बः — स्तेनः प्रकीर्णकेशोंऽसे मुसलमाधाय राजानं गत्वा कर्माचक्षीत तेनैनं हन्याद्वधे मोक्षः इति ।

பராசரர்:— ப்ராம்ஹணனின் ஸ்வர்ணத்தை அபஹரித்தால், பிறகு தானாகவே உலக்கையைத் தரித்து அரசனிடம் தன்னை வதைப்பதற்காகச் செல்ல வேண்டும். அப்பொழுது அவன் சுத்தியடைகிறான். அல்லது விடப்பட்டாலும் சுத்தனாகிறான். இது புத்திபூர்வமாய்ச் செய்யப்பட்ட பாப விஷயத்தில். அபுத்திபூர்வமானால் வதத்துக்குரியவனல்லன். ஆபஸ்தம்பர்:— ஸ்வர்ணஸ்தேயம் செய்தவன் தலை மயிரை விரித்துக் கொண்டு, தோளில் உலக்கையை வைத்துக் கொண்டு, அரசனை யடைந்து, தனது கார்யத்தைத் தெரிவிக்க வேண்டும். அந்த உலக்கையால் அரசன் இவனைக் கொல்ல வேண்டும். கொல்லப்பட்டால் பாபத்தினின்றும் விடுபடுவான்.

हेमाद्रौ — हत्वा ब्रह्मस्वमज्ञात्वा द्वादशाब्दं तु पूर्ववत् । कपालध्वजहीनं तु ब्रह्महत्याव्रतं चरेत् । यद्वांऽसे मुसलं धृत्वा विस्रस्यात्मशिरोरुहान् । गत्वा राजानमाचष्टे प्रहृतस्तेन मस्तके । मृत्वा शुद्धिमवाप्नोति नान्यथा शुद्धिरिष्यते । गुरूणां यज्ञ कर्तॄणां

धर्मिष्ठानां तथैव च । श्रोत्रियाणां द्विजानां तु हृत्वा हेम कथं भवेत् । तच्छुद्ध्यर्थं स्वदेहे तु सम्पूर्णं लेपयेत् घृतम् । कारीषच्छादितो दग्धः स्तेयपापात् प्रमुच्यते इति ।

ஹேமாத்ரியில்:— *அறியாமையால் ப்ராம்ஹண தனத்தை அபஹரித்தால், பன்னிரண்டு வர்ஷம் வ்ரதத்தை முன் சொல்லியது போல் அனுஷ்டிக்க வேண்டும். கபாலம், த்வஜம் இவைகளில்லாமல் ப்ரம்ஹஹத்யா ப்ராயச்சித்தத்தை யனுஷ்டிக்க வேண்டும். அல்லது தோளில் உலக்கையை வைத்துக் கொண்டு, தலை மயிர்களை அவிழ்த்துக் கொண்டு, அரசனிடம் சென்று, அவனிடம் தனது கார்யத்தைச் சொல்லி, அவனால் தலையில் அடிக்கப்பட்டு இறந்தால், சுத்தியை யடைகிறான். வேறு விதமாய்ச் சுத்தியென்பதில்லை. குருக்கள், யாகம் செய்பவர்கள், தார்மிஷ்டர்கள், ச்ரோத்ரியர்கள் என்ற ப்ராம்ஹணர்களின் ஸ்வர்ணத்தை அபஹரித்தால் ப்ராயச்சித்தம் எப்படியெனில், ப்ராயச்சித்தத்திற்காகத் தன் தேஹத்தில் முழுவதும் நெய்யைப் பூசிக் கொள்ள வேண்டும். பிறகு எரிமுட்டைகளால் மூடப்பட்டுத் தஹிக்கப்பட்டால் ஸ்வர்ணஸ்தேய பாபத்தினின்றும் விடுபடுவான்.*

अल्पस्वर्णापहरणे प्रायश्चित्तमाह गौतमः — त्रसरेणुसमं हेम हृत्वा कुर्यात् समाहितः । प्राणायामद्वयं सम्यक् तेन शुद्ध्येन्न संशयः । प्राणायामत्रयं कृत्वा हृत्वा लिक्षाप्रमाणकम् । प्राणायामाश्च चत्वारो राजसर्षपमात्रतः । गौरसर्षपमात्रं तु हृत्वा हेम विचक्षणैः । स्नात्वा च विधिवत्कार्यं गायत्र्यष्टसहस्रकम् । यवमात्रसुवर्णस्य स्तेये शुद्धो जपेद्द्विजः । आसायं प्रातरारभ्य गायत्रीं वेदमातरम् । हेम्नः कृष्णलमात्रं तु हृत्वा सान्तपनं चरेत् । माषमात्र सुवर्णस्य प्रायश्चित्तं तु कथ्यते । गोमूत्रपक्वयवभुग्देवार्चन परायणः । मासत्रयेण शुद्धः स्यात्

नारायणपरायणः । रूप्यमात्र सुवर्णस्य स्तेयं कृत्वा प्रमादतः । जपेद्वै लक्षगायत्रीमन्यथा दोषमाप्नुयात् । निष्कमात्रसुवर्णस्य हरणे विप्रसत्तमाः । ब्रह्महत्याव्रतं कृत्वा षडब्दं शुद्धिमाप्नुयात् । किञ्चिन्न्यूनसुवर्णस्य स्तेये तु द्विजसत्तमाः । गोमूत्रपक्वयवभुगब्देनैकेन शुद्ध्यति । संपूर्णस्य सुवर्णस्य स्तेयं कृत्वा मुनीश्वराः । ब्रह्महत्याव्रतं कुर्याद् द्वादशाब्दान् समाहितः इति ।

*ஸ்வல்பமான ஸ்வர்ணத்தை அபஹரித்த விஷயத்தில் ப்ராயஶ்சித்தத்தைச் சொல்லுகிறார், கௌதமர்:— த்ரஸரேணுவுக்கு ஸமமான தங்கத்தை அபஹரித்தால், இரண்டு ப்ராணாயாமங்களை விதிப்படி செய்ய வேண்டும். அதனால் சுத்தனாவான். ஸம்சயமில்லை. லிக்ஷா என்ற அளவுள்ள தங்கத்தை, அபஹரித்தால் மூன்று ப்ராணாயாமங்கள். ராஜஸர்ஷபம் என்ற அளவுள்ள தங்கத்தை அபஹரித்தால், நான்கு ப்ராணாயாமங்கள். வெண்கடுகு அளவுள்ள தங்கத்தை அபஹரித்தால், அறிந்தவர்கள் ஸ்நானம் செய்து விதிப்படி 1008 முறை காயத்ரியை ஜபிக்க வேண்டும். யவை அளவுள்ள ஸ்வர்ணத்தை அபஹரித்தால் ப்ராம்ஹணன் ஸ்நானம் செய்து சுத்தனாய் காலை முதல் மாலை வரை வேத மாதாவான காயத்ரியை ஜபிக்க வேண்டும். கிருஷ்ணலம் என்ற அளவுள்ள தங்கத்தை அபஹரித்தால் ஸாந்தபன க்ருச்ரத்தை அனுஷ்டிக்க வேண்டும். மாஷம் என்ற அளவுள்ள ஸ்வர்ணத்தை அபஹரித்தால் ப்ராயஶ்சித்தம் சொல்லப்படுகிறது. கோமூத்ரத்தில் பக்வமான யவத்தைப் புஜிப்பவனாய் தேவ பூஜை செய்பவனாய் நாராயணனைப் பூஜிப்பவனாய் மூன்று மாஸமிருந்தால் சுத்தனாவான். ரூப்யத்தின் அளவுள்ள ஸ்வர்ணத்தை அறியாமல் அபஹரித்தால் லக்ஷம் முறை காயத்ரியை ஜபிக்க வேண்டும். இல்லாவிடில் பாபத்தை அடைவான். நிஷ்கம் அளவுள்ள ஸ்வர்ணத்தை அபஹரித்தால் 6 வருஷம் வரை*

ப்ரும்ஹஹத்திக்குச் சொல்லிய ப்ராயச்சித்தத்தை அனுஷ்டித்தால் சுத்தி. ஸ்வர்ணம் என்ற அளவிற்குக் கொஞ்சம் குறைந்த ஸ்வர்ணத்தை அபஹரித்தால் கோமூத்ரத்தில் பக்வமான அன்னத்தை ஒரு வருஷம் புஜிக்க சுத்தி. ஸ்வர்ணத்தின் அளவுக்குச் சரியான தங்கத்தைத் திருடினுல் பன்னிரண்டு வர்ஷம் வரை நியமமுடையவனுய் ப்ரம்ஹஹத்திக்குச் சொல்லிய ப்ராயச்சித்தத்தை யனுஷ்டித்தால் சுத்தனுவான்.

अज्ञानादपहृतस्य सुवर्णस्य पुनर्दाने तु प्रायश्चित्तमाह स एव— ब्रह्मस्वं यस्तु हृत्वा च पश्चात्तापमवाप्य च। पुनर्दत्वा तु विप्रेभ्यः प्रायश्चित्तमिदं चरेत्॥ कृच्छ्रं सान्तपनं कृत्वा द्वादशाहोपवासतः। शुद्धिमाप्नोति विप्रेन्द्र अन्यथा पतितो भवेत् इति।

அறியாமையால் அபஹரிக்கப்பட்ட ஸ்வர்ணத்தை மறுபடியும் கொடுத்து விட்டால், ப்ராயச்சித்தத்தைச் சொல்லுகிறுர், கௌதமரே:— எவன் ப்ராம்ஹணனின் ஸ்வர்ணத்தை அபஹரித்துப் பிறகு பச்சாத்தாபத்தை யடைந்துள்ளானே, அவன் மறுபடி அதை ப்ராம்ஹணர்களுக்குக் கொடுத்து விட்டு, சொல்லப்படும் ப்ராயச்சித்தத்தை யனுஷ்டிக்க வேண்டும். பன்னிரண்டு நாள் உபவாஸமிருந்து, ஸாந்தபன க்ருச்ரத்தை யனுஷ்டித்தால் சுத்தியை யடைவான். இல்லாவிடில் பதிதனுவான்.

## क्षत्रियादीनां स्तेयप्रायश्चित्तम्।

राज्ञां स्तेयप्रकारोऽभिहितश्शिवरहस्ये — अन्यायाद्विप्रग्रामेषु अनाथेभ्यो धनं हरेत्। अदण्ड्येभ्योऽपि यद्वित्तं स्तेयं तद्भूभुजामिह। स्तेयं कृत्वा सुरां पीत्वा मृत्वा राजा विशुद्ध्यति इति।

க்ஷத்ரியர் முதலியவர் திருடினல்.

க்ஷத்ரியர்களுக்குத் திருட்டின் ப்ரகாரம் சொல்லப்பட்டுள்ளது, சிவரஹஸ்யத்தில்:— ப்ராம்ஹணர்களின் க்ராமங்களில் அந்யாயமாய் அநாதர்களிடமிருந்து பணத்தை அபஹரித்தாலும், தண்டனைக்கு அர்ஹரல்லாதவரிடமிருந்து த்ரவ்யத்தை யபஹரித்தாலும், அது க்ஷத்ரியர்களுக்குத் திருட்டு எனப்படுகிறது. க்ஷத்ரியன் திருடினலும், ஸுராபானம் செய்தாலும் மரணந்த ப்ராயஶ்சித்தத்தால் சுத்தனுவான்.

नागरखण्डे — ऊरुजस्तु सुरां पीत्वा हृत्वा स्वर्णं द्विजन्मनाम्। राजवच्छुद्धिमाप्नोति यच्छेद्वा द्व्ययुतं गवाम्। पादजस्तु सुरां पीत्वा हृत्वा हेम द्विजन्मनाम्। राज्ञा दण्ड्यः स्वधर्मेण मुसलेन हतः शुचिः इति। कात्यायनः — विप्रादीनां तु नारीणां स्तेयं वा पानमेव वा। संभवेद्यदि दैवेन नेच्छन्ति मरणं बुधाः। त्याज्या एव स्त्रियस्ताश्च न पोष्या धर्मलिप्सुभिः इति।

நாகரகண்டத்தில்:— வைச்யன் ஸுராபானம் செய்தாலும், முதல் மூன்று வர்ணத்தாரின் ஸ்வர்ணத்தை யபஹரித்தாலும், க்ஷத்ரியனைப் போல் ப்ராயஶ்சித்தம் செய்தால் சுத்தனுவான். அல்லது இருபதினுயிரம் பசுக்களைத் தானம் செய்யலாம். சூத்ரன் ஸுராபானம் செய்தாலும், முதல் மூன்று வர்ணத்தாரின் ஸ்வர்ணத்தை யபஹரித்தாலும், அவனை அரசன் உலக்கையினுல் தர்மசாஸ்த்ரப்படி அடிக்க வேண்டும். பிறகு அவன் சுத்தனுவான். காத்யாயனர்:— ப்ராம்ஹணர் முதலியவர்களின் ஸ்த்ரீகளுக்கு ஸ்வர்ணஸ்தேயமாவது, ஸுராபானமாவது, தைவாதீனமாய் ஏற்பட்டால், மரண தண்டனையை அறிந்தவர்கள் விரும்பவில்லை. அந்த ஸ்த்ரீகளை த்யாகம் செய்ய வேண்டும். தர்மத்தை விரும்பியவர்கள் அவர்களைப் போஷிக்கக் கூடாது.

### रजतस्तेयप्रायश्चित्तम्।

रजतस्तेये प्रायश्चित्तमाह नारदः — सुवर्णमानं यस्मिन् वै राजतं स्तेयकर्मणि । कुर्यात् सान्तपनं सम्यगन्यथा पतितो भवेत् । दशनिष्कान्तपर्यन्तमूर्ध्वं निष्कचतुष्टयात् । हृत्वा तु रजतं विद्वान् कुर्याच्चान्द्रायणं द्विजः । दशादिशतनिष्कान्त रजतस्तेयकर्मणि । चान्द्रायणद्वयं प्रोक्तं तत्पापपरिशोधकम् । शतादूर्ध्वं सहस्रान्तं प्रोक्तं चान्द्रायणत्रयम् । सहस्रादधिकस्तेये ब्रह्महत्याव्रतं चरेत् इति ।

### வெள்ளியைத் திருடியதற்கு ப்ராயம்சித்தம்.

*வெள்ளியைத் திருடியதற்கு ப்ராயம்சித்தத்தைச் சொல்லுகிறுர், நாரதர்:— ஸ்வர்ணம் என்ற அளவுள்ள வெள்ளியைத் திருடினுல், ஸாந்தபன க்ருச்ரத்தை விதிப்படி யனுஷ்டிக்க வேண்டும். இல்லாவிடில் பதிதனுவான். நான்கு நிஷ்க அளவுக்கு மேல் பத்து நிஷ்க அளவுக்குட்பட்ட வெள்ளியைத் திருடினுல், த்விஜன் சாந்த்ராயணத்தை யனுஷ்டிக்க வேண்டும். பத்து முதல் நூறு வரையில் உள்ள நிஷ்க அளவுள்ள வெள்ளியைத் திருடினுல், அந்தப் பாபத்திற்கு ப்ராயம்சித்தம் இரண்டு சாந்த்ராயணங்கள் சொல்லப்பட்டுள்ளன. நூறுக்கு மேல் ஆயிரம் முடிய நிஷ்க அளவுள்ள வெள்ளியைத் திருடினுல், மூன்று சாந்த்ராயணங்கள் சொல்லப்பட்டுள்ளன. ஆயிரம் நிஷ்கத்துக்கு மேல் திருடினுல் ப்ரம்ஹஹத்திக்குச் சொல்லப்பட்ட ப்ராயம்சித்தத்தை யனுஷ்டிக்க வேண்டும்.*

### ताम्रस्तेये प्रायश्चित्तम्।

ताम्रस्तेये प्रायश्चित्तमुक्तं हेमाद्रौ —पलद्वये पञ्चगव्यं पीत्वा शुद्धिमवाप्नुयात् । प्राजापत्यं पञ्चपले तप्तं दशपले स्मृतम् । विंशत्पले तु चान्द्रं स्यात् पञ्चाशत् तत्त्रयं स्मृतम् । ताम्रे षष्टिपले प्रोक्तं मासं

कृत्वाऽघमर्षणम् । कण्ठदघ्नजले स्थित्वा शुद्धिमाप्नोति पूर्वजः । ताम्रेऽशीतिपले तत्र स्तेयं कृत्वा तु पूर्वजः । भूपरिक्रमणं कृत्वा भूयश्चान्द्रं ततः परम् । हृत्वा शतपलं ताम्रं स्वर्णस्तेयसमं विदुः इति । सुवर्णचतुष्टयपरिमितं पलम्, पलं सुवर्णाश्चत्वारस्तच्चत्वारि ध्रुवो भवेत् । चत्वारिंशद्ध्रुवाणां च भार इत्युच्यते बुधैः इति स्मृतेः ।

**தாம்ரத்தைத் திருடியதற்கு ப்ராயஶ்சித்தம்.**

தாம்ரத்தைத் திருடியதற்கு ப்ராயஶ்சித்தம் சொல்லப்பட்டுள்ளது. ஹேமாத்ரியில்:— "இரண்டு பலம் தாம்ரத்தைத் திருடினால், பஞ்சகவ்ய பானத்தால் சுத்தனுவான். ஐந்து பலம் ஆனுல், ப்ராஜாபத்ய க்ருச்ரம், பத்துப் பலமானுல், தப்த க்ருச்ரம். இருபது பலம் ஆனுல், சாந்த்ராயணம். ஐம்பது பலம் ஆனுல், ஒரு மாஸம் கழுத்தளவுள்ள ஜலத்தில் நின்று அகமர்ஷண ஸ்நானம் செய்தால், ப்ராம்ஹணன் சுத்தியை யடைவான். எண்பது பலம் தாம்ரத்தை ப்ராம்ஹணன் திருடினுல், பூப்ரதக்ஷிணம் செய்து, மறுபடி சாந்த்ராயணத்தை யனுஷ்டிக்க வேண்டும். நூறு பலம் தாம்ரத்தைத் திருடினுல், அது ஸுவர்ணஸ்தேயத்துக்கு ஸமம் என்கின்றனர்," என்று. "நான்கு ஸ்வர்ணம் கொண்டது ஒரு பலம். நான்கு பலம் கொண்டது த்ருவம் எனப்படுகிறது. நாற்பது த்ருவம் கொண்டது ஒரு பாரம் எனப்படுகிறது, அறிந்தவர்களால்" என்று ஸ்ம்ருதி இருப்பதால்.

**कांस्यादिस्तेये प्रायश्चित्तम् ।**

चतुर्विंशतिमते — कांस्यपित्तलमुख्येषु अयस्कान्तेषु पञ्चसु । सहस्रनिष्कमानं तु पारक्यं परिकीर्तितम् । प्रायश्चित्तं तु लोहानां स्तेये रजतवत् स्मृतम् इति ।

**வெண்கலம் முதலியதைத் திருடியதற்கு ப்ராயஶ்சித்தம்.**

சதுர்விம்சதி மதத்தில்:— *வெண்கலம், பித்தளை முதலியவைகளிலும், அயக்காந்தம் ஐந்திலும், ஆயிரம் நிஷ்கம் அளவுள்ளது பாரக்யம் எனப்பட்டுள்ளது. உலோகங்களைத் திருடிய விஷயத்தில் ப்ராயஶ்சித்தம் வெள்ளியைத் திருடியதற்குப் போலறியத்தக்கது.*

धनधान्यादिस्तेयप्रायश्चित्तम्।

मनुः — धान्यान्नधनचौर्याणि कृत्वा कामात् द्विजोत्तमः। स्वजातीयगृहादेव कृच्छ्राब्देन विशुद्ध्यति। मनुष्याणां तु हरणे स्त्रीणां क्षेत्रगृहस्य च। कूपवापीजलानां च शुद्धिश्चान्द्रायणं स्मृतम्। द्रव्याणामल्पसाराणां स्तेयं कृत्वाऽन्यवेश्मनः। चरेत् सान्तपनं कृच्छ्रं तन्निर्यात्यात्मशुद्धये। भक्ष्यभोज्यापहरणे यानशय्यासनस्य च। पुष्पमूलफलानां च पञ्चगव्यं विशोधनम्। तृणकाष्ठद्रुमाणां च शुष्कान्नस्य गुडस्य च। चेलचर्मामिषाणां च त्रिरात्रं स्यादभोजनम् मणिमुक्ताप्रवालानां ताम्रस्य रजतस्य च। अयः कांस्योपलानां च द्वादशाहं कणान्नता। कार्पासकीटजोर्णानां द्विखुरैकखुरस्य च। पक्षिगन्धौषधीनां च रज्ज्वाश्चापि त्र्यहं पयः। एतैर्व्रतैरपोहेत पापं स्तेयकृतं द्विजः इति।

**தனம், தான்யம் முதலியவைகளைத் திருடியதற்கு ப்ராயஶ்சித்தம்.**

மனு:— *ப்ராம்ஹணன் தன் வர்ணத்தாரின் வீடுகளில் தான்யம், தனம் இவைகளைப் புத்திபூர்வமாய்த் திருடினால், அப்த க்ருச்ரத்தால் (முப்பது க்ருச்ரம்) சுத்தனாகிறான். மனிதர்கள், ஸ்த்ரீகள், பூமி, வீடு, கிணறு, நடைவாபீ இவைகளின் ஜலம் இவைகளைத் திருடினால் சாந்த்ராயணத்தால் சுத்தி சொல்லப்பட்டுள்ளது. பிறர்*

வீட்டிலிருந்து அல்பமான த்ரவ்யங்களை அபஹரித்தால், அந்த த்ரவ்யத்தைக் கொடுத்து விட்டு, தனது சுத்திக்காக ஸாந்தபன க்ருச்ரத்தை யனுஷ்டிக்க வேண்டும். பக்ஷ்யம், போஜ்யம், வாஹனம், படுக்கை, ஆஸனம், புஷ்பம், கிழங்கு, பழம் இவைகளை அபஹரித்தால் பஞ்சகவ்யப்ராசனம் சுத்திகரமாகும். புல், கட்டை, மரம், காய்ந்த அன்னம், வெல்லம், வஸ்த்ரம், தோல், மாம்ஸம் இவைகளைத் திருடினால், மூன்று நாள் உபவாஸம் ப்ராயஸ்சித்தமாகும். மணி, முத்து, பவழம், தாம்ரம், வெள்ளி, இரும்பு, வெண்கலம், கல் இவைகளைத் திருடினால், பன்னிரண்டு நாள் வரை நொய்யை மட்டில் புஜிப்பது ப்ராயஸ்சித்தம். பஞ்சு, பட்டு நூல், கம்பளி, இரட்டைக் குளம்பு ம்ருகம், ஒற்றைக் குளம்பு ம்ருகம், பக்ஷி, வாஸனை த்ரவ்யம், கொடி, கயிறு இவைகளைத் திருடினால், மூன்று நாள் பாலைமட்டில் பருகி வ்ரதம் இருக்க வேண்டும். இந்த வ்ரதங்களை யனுஷ்டித்தால் திருட்டினலுண்டான பாபத்தை த்விஜன் போக்கிக் கொள்வான்.

## भूम्यपहारप्रायश्चित्तम्।

भूम्यपहारे दोषाधिक्यमाह पराशरः — वापीकूप तटाकाद्यैर्वाजपेय शतैरपि । गवां कोटिप्रदानेन भूमिहर्ता विशुद्ध्यति इति । नारदः — केदारे तप्तकृच्छ्रं स्याद्गृहादेश्चान्द्रमीरितमिति ।

### பூமியை அபஹரிப்பதில் ப்ராயஸ்சித்தம்.

பூமியை அபஹரிப்பதில் அதிக பாபத்தைச் சொல்லுகிறார், பராசரர்:— பூமியை அபஹரித்தவன், வாபீ, கிணறு, தடாகம் இவைகளைச் செய்வதாலும், நூறு வாஜபேய யாகங்களைச் செய்வதாலும், கோடி பசுக்களைக் கொடுப்பதாலும் சுத்தனாவான். நாரதர்:— வயலை அபஹரித்தால் தப்த க்ருச்ரமும், வீடு முதலியதை

அபஹரித்தால் சாந்த்ராயணமும், ப்ராயஶ்சித்தம் எனச் சொல்லப்பட்டுள்ளது.

राजदण्डमाहापस्तम्बः — (अयमस्य दण्डः) पुरुषवधे स्तेये भूम्यादान इति स्वान्यादाय वध्यः, चक्षुर्निरोधस्त्वेतेषु ब्राह्मणस्येति ॥ भूम्यादानं - भूम्यपहारः । पुरुषवधादिषु निमित्तेषु शूद्रो वध्यः । ब्राह्मणस्य तु पट्टबन्धादिना चक्षुषी निरोद्धव्ये, न तूत्पाटयितव्ये । न शारीरो ब्राह्मणे दण्डः, अक्षतो ब्राह्मणो व्रजेत् इत्यादि स्मरणात् ।

*அரசனின் தண்டனையைச் சொல்லுகிறார்* **ஆபஸ்தம்பர்:—** *(இது இவனுக்குத் தண்டனை) "மனிதனை வதைத்தாலும், திருடினாலும், பூமியை அபஹரித்தாலும், அவனுடைய பொருள்களைப் பறிமுதல் செய்து, வதம் செய்ய வேண்டும். இதே குற்றங்களில் ப்ராம்ஹணனுக்கானால் அவன் கண்ணைக் கட்டிவிட வேண்டும்," என்று. அந்தக் குற்றங்களில் வதைப்பது என்பது சூத்ரனை. ப்ராம்ஹணனுக்கோவெனில், கட்டுவது முதலியதால் கண்களை மறைக்கவேண்டும். கண்களைப் பெயர்க்கக்கூடாது. "ப்ராம்ஹணனுக்குச் சரீர தண்டனையில்லை, ப்ராம்ஹணன் சரீர தண்டனையில்லாமல் போக வேண்டும்" என்பது முதலிய வசனங்களிருப்பதால்.*

## वस्त्रादिस्तेय प्रायश्चित्तम् ।

देवस्वामी — स्थूलतन्तुकृते वस्त्रे स्तेयं कृत्वा तु पूर्वजः । पश्चात्तापसमायुक्तः प्राजापत्यं समाचरेत् । सूक्ष्मतन्तुकृते वस्त्रे पराकं मुनिचोदितम् । पीतवस्त्रं मुषित्वा तु तप्तकृच्छ्रद्वयं चरेत् । नीलमये सूक्ष्मवस्त्रे चरेच्चान्द्रायणत्रयम् । मूल्याधिके पट्टवस्त्रे कौशेये च मुनीश्वराः । सद्यः पतति पापात्मा घृताक्तोऽग्निं विशेत्तदा इति ।

**வஸ்த்ரம் முதலியதைத் திருடியதில் ப்ராயஶ்சித்தம்.**

தேவஸ்வாமி:— பருமனான நூல்களால் செய்யப்பட்ட வஸ்த்ரத்தைத் திருடி, பிறகு பச்சாத்தாபத்துடன் கூடிய ப்ராம்ஹணன், ப்ராஜாபத்ய க்ருச்ரத்தை யனுஷ்டிக்க வேண்டும். மெல்லிய நூல்களால் செய்யப்பட்ட வஸ்த்ரத்தின் விஷயத்தில், பராகக்ருச்ரம் முனிவரால் விதிக்கப்பட்டுள்ளது. மஞ்சள் நிறமுள்ள வஸ்த்ரத்தைத் திருடினால், இரண்டு தப்த க்ருச்ரத்தை யனுஷ்டிக்க வேண்டும். நீல வர்ணமான மெல்லிய வஸ்த்ரத்தை திருடினால், மூன்று சாந்த்ராயணத்தை யனுஷ்டிக்க வேண்டும். அதிக விலையுள்ள பட்டு வஸ்த்ரம், வெண்பட்டு இவைகளில் ஓ முனிவர்களே! அப்பொழுதே பதிதனாகிறான். அவன் நெய்யைத் தேகத்தில் பூசிக் கொண்டு நெருப்பில் விழவேண்டும்.

## अजादिहरणे प्रायश्चित्तम्।

जाबालिः — अजं बस्तं गृहेऽरण्ये पारक्यं गर्वितो द्विजः। मुषित्वा निष्कृतिं तत्र प्राजापत्यं समाचरेत् इति। मार्कण्डेयः — मार्जारं नकुलं सर्पं भारद्वाजं कपिं तथा। कृच्छ्रार्धमाचरेद्धृत्वा ज्ञात्वा तद्द्विगुणं चरेत्। द्विजानां तल्पहरणे प्रायश्चित्तं प्रजापतिः। प्राह चान्द्रं पराकं च तप्तं चैव यथाक्रमम् इति।

**ஆடு முதலியதைத் திருடியதற்கு ப்ராயஶ்சித்தம்.**

ஜாபாலி:— காட்டிலோ, வீட்டிலோ உள்ள பிறருடைய வெள்ளாடு, செம்மறியாடு இவைகளை ப்ராம்ஹணன் திருடினால் ப்ராஜாபத்ய க்ருச்ரத்தை ப்ராயஶ்சித்தமாய் அனுஷ்டிக்க வேண்டும். மார்க்கண்டேயர்:— பூனை, கீரி, ஸர்ப்பம், பாரத்வாஜம், குரங்கு, இவைகளை அபஹரித்தால், ப்ராஜாபத்ய க்ருச்ரத்தின் பாதியை அனுஷ்டிக்க வேண்டும். புத்திபூர்வமானால், இரண்டு மடங்கு அனுஷ்டிக்க

வேண்டும். மூன்று வர்ணத்தாரின் படுக்கையை அபஹரித்தால், முறையே சாந்த்ராயணம், பராகம், தப்தம் இவைகள் ப்ராயஶ்சித்தம்.

मरीचिः — यो विप्रः पापमज्ञात्वा उपानत्पादुके हरेत्। स तु देहविशुद्ध्यर्थं प्राजापत्यं समाचरेत् । छत्रं हरेद्द्विजो यस्तु महातपनिवारणम् । वस्त्रावृते पराकं स्यात्केतकीपर्णसंवृते । यावकं तालपत्रैश्च निर्मिते राजवल्लभे । पञ्चगव्यं पिबेत् पश्चात् सर्वपापविनाशनम् । पुष्पजालं हि पारक्यं देवपूजार्थमादरात् । सुगन्धिकरवीरादि हृत्वा विप्रस्स पापभाक् । देवार्थपुष्पहरणे चान्द्रं वत्सरसेवनात्। पराकं ब्रह्मनिर्माणे कायं क्षत्रियवैश्ययोः इति ।

மரீசி:— எந்த ப்ராம்ஹணன் பாபத்தை அறியாமையால் பாதரக்ஷை, பாதுகை இவைகளை அபஹரித்தானோ அவன் சுத்திக்காக ப்ராஜாபத்ய க்ருச்ரத்தை யனுஷ்டிக்க வேண்டும். எந்த ப்ராம்ஹணன் வெயிலைப் போக்குகின்ற குடையை அபஹரித்தானோ அவனுக்கு ப்ராயஶ்சித்தம் சொல்லப் படுகிறது. அந்தக் குடை வஸ்த்ரத்தால் செய்யப் பட்டிருந்தால், பராகக்ருச்ரம் ப்ராயஶ்சித்தம். தாழை இலையால் செய்யப்பட்டிருந்தால், யாவகம் ப்ராயஶ்சித்தம். பனையோலையினால் செய்யப்பட்டிருந்தால், அரசனுக்கு ப்ரியமாயிருந்தால், ஸர்வபாபஹரமான பஞ்சகவ்யத்தை ப்ராசனம் செய்ய வேண்டும். ப்ராம்ஹணன் தேவபூஜைக்காக ஆதரவுடன் பிறருடைய நல்ல வாஸனையுள்ள அரளி முதலிய புஷ்பங்களை அபஹரித்தால், பாபத்தை யடைவான். தேவதைக்காகிய புஷ்பத்தை யபஹரித்தால் சாந்த்ராயணம் ப்ராயஶ்சித்தம் ஒரு வர்ஷம். ப்ராம்ஹணனுடையதாகில் பராகக்ருச்ரம். க்ஷத்ரிய வைச்யர்களுடையதாகில் ப்ராஜாபத்யக்ருச்ரம் ப்ராயஶ்சித்தம்.

देवलः — कदलीं मातुलुङ्गं च नालिकेरं च पानसम् । द्राक्षाखर्जूरजम्बीरचूतजम्बूफलानि च । फलानि विविधानीह देवप्रियकराणि वै । हृत्वा विप्रस्तु पारक्यं प्रायश्चित्तमिदं चरेत् । ऋतुत्रये पराकं स्याद्वत्सरे चान्द्रमुच्यते इति । गृहोपकरणहरणे प्रायश्चित्तमाह गौतमः — मुसलं दृषदं चैव ह्युलूखलमनन्तरम् । वेणुपात्रं तथा शूर्पं मृन्मयं भाण्डमेव च । गृहोपकरणं हृत्वा पुनःसंस्कारमर्हति इति ।

தேவலர்:— *பிறருடைய வாழை, மாதுளை, தென்னை, பலா, த்ராக்ஷை, பேரிச்சை, எலுமிச்சை, மா, நாவல் இவைகளின் பழங்களையும், தேவர்களுக்கு ப்ரியமான பலவித பழங்களையும் ப்ராம்ஹணன் அபஹரித்தால் இந்த ப்ராயஶ்சித்தத்தை யனுஷ்டிக்க வேண்டும். ஆறு மாஸம் அபஹரித்தால் பராகக்ருச்ரம். ஒரு வர்ஷமானுல் சாந்த்ராயணம் ப்ராயஶ்சித்தமாகும். வீட்டிற்குரிய ஸாமான்களை அபஹரித்தால் ப்ராயஶ்சித்தம் சொல்லுகிருர், கௌதமர்:— உலக்கை, அம்மி, உரல், கூடை முதலியது, முறம், மண்பாத்ரம், இவை முதலாகிய வீட்டுக்குரிய ஸாமான்களை அபஹரித்தால், புனருபநயனத்திற்கு அர்ஹனுகிருன்.*

सालिग्रामादेः पूजोपकरणस्य च हरणे प्रायश्चित्तम् ।

देवलः — सालिग्रामं शैवलिङ्गं प्रतिमां चक्रपाणिनः । घण्टामुपस्करं विप्रो यो हरेत् पापबुद्धिमान् । सालिग्रामे तु चान्द्रं स्याच्छिवलिङ्गे तथैव च । प्राजापत्यं चक्रपाणेरितरेषु तथैव च । शतादूर्ध्वं तु रुद्राक्षं हृत्वा चान्द्रत्रयं स्मृतम् । शते पराकमल्पे तु गायत्रीजपमाचरेत् इति । नारदः — लेखिनीं बन्धसूत्रं च पुस्तकं फलकं तथा । हृत्वा दत्वा च तद्द्रव्यं पश्चात्तापसमन्वितः । प्राजापत्यं चरेत् कृच्छ्रं तदा देहविशुद्धये इति ।

**ஸாளிக்ராமம் முதலியதையும் பூஜை ஸாமான்களையும் அபஹரிப்பதில் ப்ராயஸ்சித்தம்.**

தேவலர்:— ஸாளிக்ராமம், சிவலிங்கம், விஷ்ணுவின் பிம்பம் (விக்ரஹம்), மணி, பூஜை ஸாமான்கள், இவைகளைப் பாபபுத்தியுள்ள எந்த ப்ராம்ஹணன் அபஹரிப்பானோ அவனுக்கு ப்ராயஸ்சித்தம் சொல்லப்படுகிறது. ஸாளிக்ராமத்தில் சாந்த்ராயணம். சிவலிங்கத்திலும் அப்படியே. விஷ்ணுவின் பிம்பத்தில் ப்ராஜாபத்யம். மற்ற ஸாமான்களிலும் அதே. நூறுக்கு மேற்பட்ட ருத்ராக்ஷத்தை அபஹரித்தால், மூன்று சாந்த்ராயணம் சொல்லப்பட்டுள்ளது. நூறானால் பராகக்ருச்ரம் ப்ராயஸ்சித்தம். அல்பமானால் காயத்ரீஜபம் மட்டில். நாரதர்:— எழுதுகோல், கட்டும் கயிறு, புஸ்தகம், பலகை இவைகளை அபஹரித்தால், பச்சாத்தாபத்துடன் கூடியவன் அந்த த்ரவ்யத்தைக் கொடுத்து விட்டு, ப்ராஜாபத்ய க்ருச்ரத்தை யனுஷ்டிக்க வேண்டும்.

माध्यस्थ्येन धनग्रहणे प्रायश्चित्तम्।

देवलः — व्यवहारादि कलहे प्रायश्चित्तादि कर्मसु । धनं गृहीत्वा यो विप्रः कौटसाक्ष्यं वदेत चेत् । तस्य पुत्राश्च पौत्राश्च तदा नाशमवाप्नुयुः । तस्य देहविशुद्ध्यर्थं महाचान्द्रमुदीरितम् इति । मनुः — द्विजवादे महाचान्द्रं धर्मशास्त्रे तदर्धतः । इतरेषु विवादेषु कायकृच्छ्रं समाचरेत् इति । देवलः — ग्रामणीः प्राड्विवाकश्च राजद्वारे पुरोहितः । प्रजाभ्यः कार्यसिद्ध्यर्थं यो हरेत्तस्य निष्कृतिः । एकवारे तु चान्द्रं स्यान्महाचान्द्रं द्विवारके इति ।

**மத்யஸ்தம் செய்து தனத்தை க்ரஹித்தால் ப்ராயஸ்சித்தம்.**

தேவலர்:— வ்யவஹாரம் முதலிய கலஹத்திலும், ப்ராயஸ்சித்தம் முதலிய கார்யங்களிலும், பணத்தை

க்ரஹித்து எந்த ப்ராம்ஹணன் பொய் ஸாக்ஷ்யம் சொல்லுகின்றானோ, அவனுடைய புத்ரர்களும், பௌத்ரர்களும் அப்பொழுதே நரகத்தையடைவார்கள். அவனுக்குத் தேஹம் சுத்தமாவதற்காக மஹாசாந்த்ராயணம் ப்ராயஶ்சித்தமாகச் சொல்லப்பட்டுள்ளது. **மனு:—** ப்ராம்ஹணனுடன் வாதம் செய்தால் மஹாசாந்த்ராயணம் ப்ராயஶ்சித்தம். தர்மசாஸ்த்ரத்திலானால் அதனில் பாதி, மற்ற விவாதங்களிலானால் ப்ராஜாபத்ய க்ருச்ரம் அனுஷ்டிக்க வேண்டும். **தேவலர்:—** க்ராமாதிகாரியாவது, நீதிபதியாவது, அரசனுடைய க்ருஹத்தில் உள்ள புரோஹிதனாவது, ஜனங்களிடமிருந்து அவர்களின் கார்ய ஸித்திக்காகத் தனத்தை அபஹரித்தால், எவன் அபஹரித்தானோ அவனுக்கு ப்ராயஶ்சித்தம் சொல்லப்படுகிறது. ஒரு தடவையானால் சாந்த்ராயணம் ப்ராயஶ்சித்தம். இரண்டு தடவையானால் மஹாசாந்த்ராயணம் ப்ராயஶ்சித்தம்.

**वानस्पत्यं फलं मूलं दार्वग्र्यर्थं तथैव च । तृणं च गोभ्यो ग्रासार्थ मस्तेयं मनुरब्रवीत् । चणकव्रीहिगोधूमयवानां मुद्गमाषयोः । अनिषिद्धो ग्रहीतव्यो मुष्टिरेकोऽध्वनि स्थितैः इति । आपस्तम्बः — यथा कथा च परपरिग्रहमभिमन्यते स्तेनो ह भवतीति कौत्सहारीतौ तथा काण्वपुष्करसादी । सन्त्यपवादाः परिग्रहेष्विति वार्ष्यायणिः । शम्योषायुग्यघासोनस्वामिनः प्रतिषेधयन्ति । अतिव्यवहारे व्यृद्धो भवति । सर्वत्रानुमतिपूर्वमिति हारीतः इति । शम्योषाः - कोशधान्यानि माषमुद्गादयः ।**

**மனு:—** மரங்களின் பழம், கிழங்கு, எரிப்பதற்கான கட்டை, பசுக்களுக்காகப் புல் இவைகளை க்ரஹித்தால், அது திருட்டல்ல என்றார் மனு. கடலை, நெல், கோதுமை, யவை, பயறு, உளுந்து இவைகளில் ஒரு

முஷ்டியளவுள்ளதை வழியில் வருந்தியவர் எடுத்துக் கொள்ளலாம் தடையில்லாமல். **ஆபஸ்தம்பர்:—** எந்த வழியாலும், எந்த ஸந்தர்ப்பத்திலானுலும் பிறர் ஸொத்தைத் தனக்கு என்று ஆசைவைப்பவன் திருடனுகிருன், என்று கௌத்ஸரும், ஹாரீதரும், காண்வரும், புஷ்கரஸாதியும் நினைக்கிருர்கள். ஆனுல் வார்ஷ்யாயணி என்பவர் பிறர் ஸொத்தை எடுப்பதிலும் சில விலக்கு நியமங்கள் உண்டு, என்று நினைக்கிருர். கோசதான்யங்களான உளுந்து, பயறு முதலியவை, நுகத்தடியில் கட்டப்படும் காளை மாட்டுக்கு ஆஹாரமான வைக்கோல் முதலியன, இவைகள் யஜமானனைக் கொண்டு தடை செய்கிறதில்லை. அதிகமாக எடுப்பது தோஷமுள்ளதாக ஆகிறது. எந்த வஸ்துவாயினும் உடையவனின் அனுமதியைக் கொண்டே பெற வேண்டும், என்கிருர் ஹாரீதர்.

गौतमः — गोऽग्न्यर्थे तृणमेधान् वीरुद्वनस्पतीनां च पुष्पाणि स्ववदाददीत फलानि चापरिवृतानाम् इति। मनुः — द्विजोऽध्वगः क्षीणवृत्तिः द्वाविक्षू द्वे च मूलके। आददानः परक्षेत्रान्न हस्तच्छेदमर्हति इति । अत्र द्विज इति विशेषणाच्छूद्रस्तु दण्ड्य एव । तथा च स्मृत्यन्तरे — तृणं वा यदि वा काष्ठं मूलं वा यदि वा फलम्। अनापृष्टं तु गृह्णानो हस्तच्छेदनमर्हति इति।

**கௌதமர்:—** பசுவுக்காகவும், அக்னிக்காகவும் புல், விறகு இவைகளையும், கொடி, வ்ருக்ஷம், இவைகளின் புஷ்பங்களையும், வேலியில்லாத மரங்களின் பழங்களையும் தன்னுடையது போல் எடுத்துக் கொள்ளலாம். **மனு:—** ''வழி நடக்கும் ப்ராம்ஹணன், ஆஹாரமில்லாமலிருந்தால் இரண்டு கரும்புகளையும், இரண்டு கிழங்குகளையும் பிறனின் நிலத்திலிருந்து எடுத்தால் அவனுக்குத் தண்டனையாக ஹஸ்தச்சேதம் இல்லை,'' என்று. இவ்விடத்தில் த்விஜ: என்று இருப்பதால் சூத்ரன் எடுத்தால் அவனுக்குத்

தண்டனையுண்டு. அவ்விதம், ஓர் ஸ்ம்ருதியில்:— புல், விறகு, கிழங்கு, பழம் இவைகளை உடையவனைக் கேளாமல் எடுப்பவன் ஹஸ்த சேதனத்துக்கு அர்ஹனுகிருன்.

## गुरुतल्पगमने प्रायश्चित्तम्।

अगम्यागमने प्रायश्चित्तमुच्यते । तत्र गुरुतल्पगमन प्रायश्चित्तमाह मनुः — गुरुतल्प्यभिभाष्यैनस्तप्ते स्वप्यादयोमये । सूर्मिं ज्वलन्तीमाश्लिष्य मृत्युना स विशुद्ध्यति । स्वयं वा शिश्नवृषणावुत्कृत्याधाय चाञ्जलौ । नैर्ऋतीं दिशमातिष्ठे दानिपातादजिह्मगः । खट्वाङ्गी चीरवासा वा श्मश्रुलो निर्जने वने । प्राजापत्यं चरेत् कृच्छ्रमब्दमेकं समाहितः । चान्द्रायणं वा त्रीन् मासानभ्यस्येन्नियतेन्द्रियः । हविष्येण यवाग्वा वा गुरुतल्पापनुत्तये । एतैर्व्रतैरपोहेयुर्महापातकिनो मलम् इति ।

### குருதல்ப கமனத்தில் ப்ராயஶ்சித்தம்.

சேரக்கூடாதவளைச் சேர்ந்தால் ப்ராயஶ்சித்தம் சொல்லப்படுகிறது. அதில் குருதல்ப கமனத்திற்கு ப்ராயஶ்சித்தத்தைச் சொல்லுகிருர், மனு:— குருபார்யா கமனம் செய்தவன் பாபத்தை வெளியிட்டுச் சொல்லி, இரும்பு மயமான படுக்கையில் நெருப்பினுல் காய்ந்துள்ள ஸ்த்ரீ பிம்பத்தை அணைந்து படுத்து மரித்தால் அவன் அப்பாபத்தினின்றும் சுத்தனுவான். அல்லது, தானுக ஆண்குறிகளை வெட்டி எடுத்து இரு கைகளிலும் வைத்துக் கொண்டு, தென்மேற்குத் திக்கில் நேராகச் சரீரம் விழும் வரையில் செல்லவேண்டும். அல்லது கட்வாங்கம் என்ற ஆயுதந் தரித்தவனுய், மரவுரி தரித்தவனுய், மீசையுடையவனுய், ஜனங்களற்ற காட்டில் ப்ராஜாபத்ய க்ருச்ரத்தை ஒரு வர்ஷம் வரையில் கவனமுடையவனுய் அனுஷ்டிக்க வேண்டும். அல்லது, மூன்று மாஸம் வரையில் புலன்களை அடக்கி, சாந்த்ராயணத்தை

யனுஷ்டிக்க வேண்டும். குருபார்யாகமன பாபத்தைப் போக்குவதற்காக ஹவிஸ்ஸினாலாவது, கஞ்சியினாலாவது ப்ராணதாரணம் செய்து கொள்ள வேண்டும். மஹாபாதகம் செய்தவர்கள், சொல்லிய வ்ரதங்களால் தமது பாபத்தைப் போக்கிக் கொள்ள வேண்டும்.

याज्ञवल्क्यः — तप्तेऽयश्शयने सार्धमायस्या योषिता स्वपेत्। गृहीत्वोत्कृत्य वृषणौ नैर्ऋत्यां वोत्सृजेत्तनूम्। प्राजापत्यं चरेत् कृच्छ्रं समा वा गुरुतल्पगः। चान्द्रायणं वा त्रीन् मासानभ्यस्येद्वेदसंहिताम् इति।

யாஜ்ஞவல்க்யர்:— குருபார்யாகமனம் செய்தவன், காய்ச்சப்பட்ட இரும்புப் படுக்கையில் காய்ச்சப்பட்ட இரும்புப் பெண் உருவத்துடன் படுக்க வேண்டும். அல்லது, ஆண்குறிகளை வெட்டியெடுத்துக் கைகளில் வைத்துக் கொண்டு தென்மேற்குத் திக்கில் சென்று சரீரத்தை விட வேண்டும். அல்லது, மூன்று வர்ஷம் வரை ப்ராஜாபத்ய க்ருச்ரத்தை யனுஷ்டிக்க வேண்டும். அல்லது, மூன்று மாஸம் சாந்த்ராயணத்தை அனுஷ்டிக்க வேண்டும். அல்லது, வேத ஸம்ஹிதையை அத்யயனம் செய்ய வேண்டும்.

पराशरः — मातरं यदि गच्छेत्तु भगिनीं स्वसुतां तथा। एतास्तु मोहितो गत्वा त्रीणि कृच्छ्राणि सञ्चरेत्। चान्द्रायणत्रयं कुर्याच्छिश्नच्छेदेन शुद्ध्यति इति। एतद्व्याख्यातं माधवीये - मातरं - जननीम्। भगिनी - एकोदरा। अत्र त्रीणि प्रायश्चित्तानि प्राजापत्यत्रयमेकम्। चान्द्रायणत्रयं द्वितीयम्। शिश्नच्छेदस्तृतीयम्। तच्च त्रयं मैथुनप्रकारभेदविषयतया योजनीयम्। मैथुनं चाष्टविधम् — स्मरणं कीर्तनं केलिः प्रेक्षणं गुह्यभाषणम्। सङ्कल्पोऽध्यवसायश्च क्रियानिर्वृत्तिरेव च। एतन्मैथुनमष्टाङ्गं प्रवदन्ति मनीषिणः इति स्मरणात्। तत्राद्यं व्रतमल्पत्वादप्रवर्तकस्मरणादिपञ्चविधापराध

विषयम् । द्वितीयं तु पूर्वस्माद्गुरुत्वात् प्रवर्तकसङ्कल्पाध्यवसायविषयम् । तृतीयं त्वतिमहत्त्वात् क्रियानिर्वृत्तिविषयमिति । रेतस्सेकात् पूर्वं तु निवृत्तौ ब्रह्महत्याव्रतं कार्यम् । रेतस्सेकात् पूर्वमेव निवृत्तो यदि मातरम् । ब्रह्महत्याव्रतं कुर्यात् कपालध्वजवर्जितम् । रेतस्सेकान्तनिर्वृत्तौ मुष्कच्छेदनमर्हति इति स्मृतेः ।

பராசரர்:— பெற்ற தாய், ஸஹோதரியான பகினீ, தனது பெண் இவர்களிடம் மோஹத்தால் சேர்ந்தால், மூன்று க்ருச்ரங்களை யனுஷ்டிக்க வேண்டும். மூன்று சாந்த்ராயணங்களை யனுஷ்டிக்க வேண்டும். ஆண்குறியை வெட்டுவதால் சுத்தனாகிறான். இது மாதவீயத்தில் வ்யாக்யானம் செய்யப்பட்டுள்ளது. இவ்விஷயத்தில் மூன்று ப்ராயஶ்சித்தங்கள். மூன்று ப்ராஜாபத்யம் என்பது ஒரு ப்ராயஶ்சித்தம். மூன்று சாந்த்ராயணம் என்பது இரண்டாவது. ஆண் குறியை வெட்டுவது மூன்றாவது. இம்மூன்றும் ஸங்கமத்திலுள்ள பேதத்துக்குத் தகுந்தபடி சேர்க்கப்பட வேண்டும். மைதுனம் என்பது எட்டுவிதம். ''நினைப்பது, சொல்வது, விளையாடுவது, பார்ப்பது, ரஹஸ்யம் பேசுவது, நிச்சயிப்பது, முயற்சி, கார்யத்தைச் செய்வது, இவ்விதம் எட்டு விதமுள்ளது மைதுனம் என்கின்றனர் அறிந்தவர்கள்'', என்று வசனமிருப்பதால். அந்த மூன்று ப்ராயஶ்சித்தங்களுள், முதலாவது வ்ரதம் நினைப்பது முதலியது ஐந்தைப் பற்றியது. இரண்டாவது வ்ரதம் முந்தியதை விட அதிகமானதால் நிச்சயிப்பது, முயற்சி என்ற இரண்டைப் பற்றியது. மூன்றாவது வ்ரதம் மிகப் பெரியதாகையால் கார்யத்தைச் செய்வதைப் பற்றியது. ரேதஸ்ஸேகத்துக்கு முன் நிவ்ருத்தியானால் ப்ரம்ஹஹத்யாப்ராயஶ்சித்தத்தை யனுஷ்டிக்க வேண்டும். ''மாதாவைச் சென்று ரேதஸ்ஸேகத்துக்கு முன் நிவ்ருத்தனானால் ப்ரம்ஹஹத்யா ப்ராயஶ்சித்தத்தைக் கபாலம் த்வஜம் இவைகளைத் தரிக்காமல் அனுஷ்டிக்க

வேண்டும். ரேதஸ்ஸேகம் முடியவானால் ஆண் குறியைச் சேதனம் செய்வது ப்ராயஸ்சித்தம்'', என்று வசனம் இருப்பதால்.

वसिष्ठः — सवृषणं शिश्नमुत्कृत्याञ्जलावाधाय दक्षिणामुखो गच्छेत यत्रैव प्रतिहतस्तत्रैव तिष्ठेदाप्रलयात् इति । आपस्तम्बः — गुरुतल्पगामी सवृषणं शिश्नं परिवास्याञ्जलावाधाय दक्षिणां दिशमनावृत्तिं व्रजेत् । ज्वलितां वा सूर्मिं परिष्वज्य समाप्नुयात् इति । अत्र हरदत्तः - गुरुरत्र पिता । नाचार्यादिः । तल्पशब्देन शयनवचिना भार्या लक्ष्यते । सा च साक्षाज्जननी । न तत्सपत्नी तां गत्वा साण्डं शिश्नं क्षुरादिना च्छित्वा अञ्जलावाधाय दक्षिणां दिशमनावर्तमानो गच्छेत् । आयसी ताम्रमयी अन्तस्सुषिरा स्त्रीप्रतिकृतिस्सूर्मिः । तामग्नौ तप्तां परिष्वज्य समाप्नुयात् - म्रियेत वा ।

வஸிஷ்டர்:— ஆண்குறிகளை அறுத்தெடுத்து, கைகளில் வைத்துக் கொண்டு, தெற்கு நோக்கியவனாய்ச் செல்ல வேண்டும். எந்த இடத்தில் தடுக்கப்பட்டானோ அங்கேயே சாகும் வரையில் நிற்கவேண்டும். ஆபஸ்தம்பர்:— குருதாரத்தைச் சேர்ந்தவன், ஆண்குறிகளை வெட்டிக் கைகளில் வைத்துக் கொண்டு, தெற்குத் திக்கை நோக்கித் திரும்பாமல் செல்ல வேண்டும். அல்லது காய்ச்சப்பட்ட இரும்பு ப்ரதிமையை அணைத்துக் கொண்டு மரிக்க வேண்டும். இவ்விடத்தில், ஹரதத்தர்:— குரு என்றது பிதா. ஆசார்யன் முதலியவரல்லர். சயனத்தைச் சொல்லும் தல்பம் என்ற சப்தத்தால் பார்யை சொல்லப்படுகிறாள். அவள் பெற்ற தாய். ஸபத்னீ மாதா அல்ல. அவளைச் சென்றால், ஆண்குறிகளைச் சேதித்து கைகளில் வைத்துக் கொண்டு, தெற்குத் திக்கை நோக்கித் திரும்பாதவனாய்ச் செல்ல வேண்டும். அல்லது இரும்பினாலாவது தாம்ரத்தினாலாவது செய்யப்பட்டு உள்ளே ரந்த்ரமுள்ள ஸ்த்ரீயின் உருவம் ஸூர்மி

எனப்படுகிறது. அக்னியில் காய்ச்சப்பட்ட அதை அணைத்துக் கொண்டு மரிக்க வேண்டும்.

संवर्तः — पितृदारान् समारुह्य मातृवर्जं नराधमः । भगिनीं मातुराप्तां वा स्वसारं वाऽन्यमातृजाम् । एता गत्वा स्त्रियो मोहात् तप्तकृच्छ्रं समाचरेत् इति । पराशरस्तु — पितृदारान् समारुह्य मातुराप्तां च भ्रातृजाम् । गुरुपत्नीं स्नुषां चैव भ्रातृभार्यां तथैव च । मातुलानीं सगोत्रां च प्राजापत्यत्रयं चरेत् । गोद्वयं दक्षिणां दत्वा शुद्ध्यते नात्र संशयः इति । माधवीये व्याख्यातमेतत् - मातुराप्ता मातुस्सखी, भ्रातृजा - ज्येष्ठस्य कनिष्ठस्य वा सुता । गुरवः - आचार्य विद्यादातृज्येष्ठभ्रातृऋत्विजः अभयदाताऽन्नदाता च । अकामतस्सकृद्गमन इदं प्रायश्चित्तम् इति ।

ஸம்வர்த்தர்:— மாதாவைத் தவிர்த்த பிதாவின் பார்யை, ஸஹோதரீ, மாதாவின் ஸகீ, வேறு மாதாவின் பகினீ, இவர்களை மோஹத்தால் சேர்ந்தால் அந்த இழிவான மனிதன் தப்தக்ருச்ரத்தை யனுஷ்டிக்க வேண்டும். பராசரரோவெனில்:— பிதாவின் பார்யை, மாதாவின் ஸகீ, ப்ராதாவின் புத்ரீ, குரு பத்னீ, நாட்டுப் பெண், ப்ராதாவின் பார்யை, மாதுல பத்னீ, ஸகோத்ரை இவர்களை யடைந்தால் மூன்று ப்ராஜாபத்ய க்ருச்ரத்தை யனுஷ்டிக்க வேண்டும். இரண்டு பசுக்களைத் தக்ஷிணையாகக் கொடுக்க வேண்டும். இவ்விதம் செய்தால் சுத்தியடைவான். ஸம்ஶயமில்லை. இதற்கு மாதவீயத்தில் வ்யாக்யானம் செய்யப்பட்டுள்ளது:— குரு என்பது ஆசார்யன், வித்யையைக் கற்பித்தவன், ஜ்யேஷ்ட ப்ராதா, ருத்விக், அபயம் அளித்தவன், அன்னம் அளித்தவன் இவர்களைக் குறிக்கின்றது. அறியாமல் ஒரு தடவை சென்ற விஷயத்தில் இந்த ப்ராயஶ்சித்தம்.

अकामकृतगमने रेतस्सेकात् प्राङ्निवृत्तौ तु यमः — चण्डालीं पुल्कसीं म्लेच्छीं स्नुषां च भगिनीं सखीम् । मातापित्रोः स्वसारं च

निक्षिप्तां शरणागताम्। मातुलानीं प्रव्रजितां सगोत्रां नृपयोषितम्। शिष्यभार्यां गुरोर्भार्यां गत्वा चान्द्रायणं चरेत् इति।

*அறியாமல் சென்று ரேதஸ்ஸேகத்துக்கு முன் நிவ்ருத்தித்தால், யமன்:— சண்டாளீ, புல்கஸீ, ம்லேச்சீ, நாட்டுப்பெண், ஸஹோதரீ, ஸகீ, மாதாபிதாக்களின் பகினீ, அடைக்கலமாக வைக்கப்பட்டவள், சரணமடைந்தவள், மாதுல பத்னீ, ஸந்யாஸிநீ, ஸகோத்ரை, அரசனின் ஸ்த்ரீ, சிஷ்யனின் பார்யை, குருவின் பார்யை இவர்களையடைந்தால் சாந்த்ராயணத்தை யனுஷ்டிக்க வேண்டும்.*

कामकृतगमने रेतस्सेकान्तनिर्वृत्तौ नारदः — माता मातृष्वसा श्वश्रूर्मातुलानी पितृष्वसा। पितृव्यपत्नी शिष्यस्त्री भगिनी तत्सखी स्नुषा। दुहिताऽऽचार्यभार्या च सगोत्रा शरणागता। राज्ञी प्रव्रजिता धात्री साध्वी वर्णोत्तमा च या। आसामन्यतमां गत्वा गुरुतल्पग उच्यते। शिश्नस्योत्कर्तनं तत्र नान्यो दण्डो विधीयते इति।

*புத்தி பூர்வமாய்ச் சென்று ரேதஸ்ஸேகம் முடியும் வரையில் சேர்ந்த விஷயத்தில், நாரதர்:— மாதா, மாத்ருபகினீ, மாமியார், மாதுலன் பார்யை, பிதாவின் பகினீ, பிதாவின் ப்ராதாவின் பத்னீ, சிஷ்யனின் ஸ்த்ரீ, ஸஹோதரீ, அவர்களுடைய ஸகீ, நாட்டுப் பெண், பெண், ஆசார்யனின் பார்யை, ஸகோத்ரை, சரணமடைந்தவள், அரசனின் ஸ்த்ரீ, ஸந்யாஸினீ, செவிலித்தாய், பதிவ்ரதை, உயர்ந்த வர்ணத்தாள் இவர்களுள் ஒருத்தியை யடைந்தால் அவன் குருதல்பத்தைச் சென்றவன் எனப்படுகிறுன். அவ்விஷயத்தில் ஆண்குறியைச் சேதிப்பதே தண்டனை, வேறு தண்டனை இல்லை.*

पराशरोऽपि — मातृष्वसृगमेऽप्येवमात्ममेढ्रनिकर्तनम्। अज्ञानेन तु यो गच्छेच्चरेच्चान्द्रायणद्वयम्। दशगोमिथुनं दद्याच्छुद्धिं

पाराशरोऽब्रवीदिति । तत्र मातृष्वसृग्रहणं श्वश्र्वादेरप्युपलक्षणम् । कलौ मरणान्तप्रायश्चित्तस्य निषेधात् खट्वाङ्गी चीरवासा वा इति मन्वाद्युक्तं प्रायश्चित्तान्तरं कर्तव्यम् ।

பராசரரும்:— "மாத்ருபகினீயை யடைந்தாலும், இவ்விதமே தனது ஆண்குறியைச் சேதிக்க வேண்டும். அபுத்திபூர்வமாய்ச் சேர்ந்தால் இரண்டு சாந்த்ராயணம் அனுஷ்டிக்க வேண்டும். பத்துப் பசுக்களையும், பத்துக் காளைகளையும் கொடுக்க வேண்டும். இவ்விதம் செய்தால் சுத்தியைப் பராசரர் விதித்தார்," என்று. இவ்விடத்தில் மாத்ருபகினீ என்றது மாமியார் முதலியவரையும் சொல்லும். கலியுகத்தில் மரணாந்த ப்ராயஶ்சித்தம் நிஷேதிக்கப்பட்டிருப்பதால், "கட்வாங்கீ (குந்தாலி) என்ற ஆயுதத்தைத் தரித்தவனாய், மரவுரியுடன்" என்று மனு சொல்லிய வேறு ப்ராயஶ்சித்தத்தை யனுஷ்டிக்க வேண்டும்.

## सवर्णागमने प्रायश्चित्तम् ।

सवर्णागमने प्रायश्चित्तमाहापस्तम्बः — सवर्णायामन्यपूर्वायां सकृत्सन्निपाते पादः पततीत्युपदिशन्ति । एवमभ्यासे पादः पादश्चतुर्थे सर्वम् इति । उज्ज्वलायां व्याख्यातमिदम् — अन्यः पूर्वः पतिर्यस्यास्सा अन्यपूर्वा परभार्या, तस्यां सवर्णायां सकृदभिगमने पादः पतति । पतितस्य द्वादशवार्षिकं प्रायश्चित्तम् । तस्य तुरीयांशस्त्रीणि वर्षाणि । एतच्च श्रोत्रियभार्यायां ऋतुकाले कामतः प्रथमदूषकस्य ब्राह्मणस्य । एवमभ्यासे - प्रत्यभ्यासं पादः पादः पतति । अतश्चतुर्थे सन्निपाते सर्वमेव पतति । ततश्च पूर्णं द्वादशवार्षिकं कर्तव्यम् । तृतीये नव वर्षाणि, द्वितीये षडिति ।

**ஸவர்ணேயான ஸ்த்ரீயைச் சேர்ந்த விஷயத்தில் ப்ராயஸ்சித்தம்.**

ஸவர்ணுகமன விஷயத்தில் ப்ராயஸ்சித்தம் சொல்லுகிறுர், ஆபஸ்தம்பர்:— "அந்யபார்யையான ஸவர்ணஸ்த்ரீயிடம் ஒரு தடவை சேர்ந்தால் ஒரு பாதம் (கால் ப்ரம்ஹவர்ச்சஸம்) கெட்டு விடுகிறது, என்று சொல்லுகின்றனர். இவ்விதம் ஒவ்வொரு தடவையிலும் ஒவ்வொரு பாதம் வீழ்கிறது. நான்காவது தடவையில் முழுவதுமே விழுகிறது" என்று. இந்த ஸூத்ரம் உஜ்வலையில் இவ்விதம் வ்யாக்யானம் செய்யப்பட்டுள்ளது:- அந்யன் எவளுக்கு முன் பதியாய் இருந்தாளே அவள் அந்ய பூர்வை, பிறனின் பார்யை என்பதாம். அந்த ஸவர்ண ஸ்த்ரீயினிடம் ஒரு தடவை செல்வதால் ஒரு பாதம் வீழ்கிறது. பதிதனுக்குப் பன்னிரண்டு வர்ஷம் உள்ள வ்ரதம் ப்ராயஸ்சித்தம். இது ச்ரோத்ரியனின் பார்யையிடம் ருது காலத்தில் புத்திபூர்வமாய் முதல் தடவையாகக் கெடுத்த ப்ராம்ஹணனுக்கு. இவ்விதம் மறுபடி செய்தால், ஒவ்வொரு தடவைக்கும் ஒவ்வொரு பாதம் வீழ்கிறது. நான்காவது தடவையில் நான்காவது பாதமும் வீழ்கிறது. ஆகையால் ஸம்பூர்ணமான பன்னிரண்டு வர்ஷம் அனுஷ்டிக்கக் கூடிய ப்ராயஸ்சித்தத்தை யனுஷ்டிக்க வேண்டும். மூன்றுவது தடவையில், ஒன்பது வர்ஷங்கள். இரண்டாவது தடவையில், ஆறு வர்ஷங்கள்.

संवर्तः — ब्राह्मणीं ब्राह्मणो गत्वा प्राजापत्यं समाचरेत् । एवं शुद्धिस्समाख्याता संवर्तवचनं यथा इति । व्याघ्रः — ब्राह्मणो ब्राह्मणीं गच्छेदकामां यदि कामतः । कृच्छ्रं चान्द्रायणं कुर्यादर्धमेव प्रमादतः । अर्धमेव सकामायां तप्तकृच्छ्रं सकृद्रतौ । अर्धमर्धं नृपादीनां दारेषु ब्राह्मणश्चरेत् । एतद्व्रतं चरेत् सार्धं श्रोत्रियस्य परिग्रहे । अश्रोत्रियश्चेत् द्विगुणमगुप्तामर्धमेव च इति । क्षेत्रिणः प्रायश्चित्तविशेषाना-

देशात्सामान्य-प्रायश्चित्तं द्रष्टव्यम् । तच्च याज्ञवल्क्येन दर्शितम्— प्राणायामशतं कार्यं सर्वपापापनुत्तये । उपपातकजातानामनादिष्टस्य चैव हि इति ।

ஸம்வர்த்தர்:— *ப்ராம்ஹணன் ப்ராம்ஹண ஸ்த்ரீயை அடைந்தால் ப்ராஜாபத்ய க்ருச்ரத்தை யனுஷ்டிக்க வேண்டும். இவ்விதம் ப்ராயஸ்சித்தம் ஸம்வர்த்தருடைய வசனப்படி சொல்லப்பட்டு உள்ளது. வ்யாக்ரர்:— இச்சையில்லாத ப்ராம்ஹண ஸ்த்ரீயை ப்ராம்ஹணன் புத்திபூர்வமாய் அடைந்தால், சாந்த்ராயண க்ருச்ரத்தை யனுஷ்டிக்க வேண்டும். அறியாமையால் அடைந்தால் பாதி ப்ராயஸ்சித்தமே. அவள் புத்திபூர்வமாக இருந்தால் பாதி ப்ராயஸ்சித்தமே. ஒரு தடவை மட்டிலானல் தப்தக்ருச்ரம். ப்ராம்ஹணன் க்ஷத்ரியன் முதலியவரின் பத்னிகளைச் சேர்ந்தால் கால் பாகம் க்ருச்ரம். ச்ரோத்ரியனின் பார்யையினிடம் சேர்ந்தால் ஒன்றரை க்ருச்ரம் அனுஷ்டிக்க வேண்டும். அச்ரோத்ரியனுகில் இரண்டு மடங்கு ப்ராயஸ்சித்தம். அவள் ரக்ஷிக்கப்படாதவளாகில் பாதி க்ருச்ரம். ஸ்த்ரீயின் பதிக்கு ப்ராயஸ்சித்தம் ஒன்றும் சொல்லாததால், ஸாதாரணமான ப்ராயஸ்சித்தமாகும். அது சொல்லப்பட்டுள்ளது, யாஜ்ஞவல்க்யரால்:— எல்லாப் பாபங்களையும் போக்குவதற்கு நூறு ப்ராணயாமங்கள் செய்யப்பட வேண்டும். உப பாதகங்களுக்கும், ப்ராயஸ்சித்தம் சொல்லப்படாதவை களுக்கும் அப்படியே.*

संबन्ध्यादिस्त्रीगमने प्रायश्चित्तम् ।

चतुर्विंशतिमते — संबन्धिनः स्त्रियं गत्वा सपादं कृच्छ्रमाचरेत् । विधवागमने कृच्छ्रमहोरात्रसमन्वितम् । व्रतस्थागमने कृच्छ्रं सपादं तु समाचरेत् । सखिभार्यां समारुह्य ज्ञातिस्वजनयोषितः । स कृत्वा प्राकृतं कृच्छ्रं पादं कुर्यात्ततः पुनः । कुमारीगमने विप्रः चरेच्चान्द्रायणं व्रतम् । पतितां तु द्विजो गत्वा तदेव व्रतमाचरेत् इति ।

### ஸம்பந்தி முதலியவரின் ஸ்த்ரீகமனத்தில் ப்ராயச்சித்தம்.

சதுர்விம்சதிமதத்தில்:— உறவினனின் ஸ்த்ரீயை யடைந்தால் ஒன்றேகால் க்ருச்ரத்தை யனுஷ்டிக்க வேண்டும். விதவையை யடைந்தால் ஒரு க்ருச்ரமும் ஒரு நாள் உபவாஸமும். நியமத்தில் இருப்பவளை யடைந்தால், ஒன்றேகால் க்ருச்ரத்தை யனுஷ்டிக்கவும். மித்ரனின் பார்யையை யடைந்தாலும், ஜ்ஞாதி, பந்து ஜனங்கள் இவர்களின் ஸ்த்ரீயை யடைந்தாலும், ஒன்றேகால் க்ருச்ரத்தை யனுஷ்டிக்க வேண்டும். குமாரியை யடைந்தால் ப்ராம்ஹணன் சாந்த்ராயண வ்ரதத்தை யனுஷ்டிக்க வேண்டும். பதிதையை யடைந்தால் ப்ராம்ஹணனின் அதே வ்ரதத்தை யனுஷ்டிக்க வேண்டும்.

### स्वैरिणीगमने प्रायश्चित्तम्।

स्वैरिणीगमने शङ्खलिखितौ — स्वैरिण्यां वृषल्यामवकीर्णः सचेलस्नात उदकुम्भं दद्यात् ब्राह्मणाय । वैश्यायां चतुर्थकालाहारो ब्राह्मणान् भोजयेत् । क्षत्रियायां त्रिरात्रोपोषितो यवाढकं दद्यात् । ब्राह्मण्यां त्र्यहमुपोष्य घृतपात्रं दद्यात् इति ।

### ஸ்வைரிணீ கமனத்தில் ப்ராயச்சித்தம்.

ஸ்வைரிணீ (யதேச்சையா யிருப்பவள்) கமனத்தில், சங்கலிகிதர்கள்:— சூத்ர ஜாதியான யதேச்சையா யிருப்பவளைச் சேர்ந்தவன் வஸ்த்ரத்துடன் ஸ்நானம் செய்து, ப்ராம்ஹணனின் பொருட்டு ஜலபாத்ரத்தைக் கொடுக்க வேண்டும். வைச்ய ஜாதியானால், நான்கு வேளைக்கு ஒரு முறை புஜித்து ப்ராம்ஹணர்களுக்குப் போஜனம் செய்விக்க வேண்டும். க்ஷத்ரிய ஜாதியானால், மூன்று நாள் உபவாஸமிருந்து ஒரு மரக்கால் யவையைக் கொடுக்க வேண்டும். ப்ராம்ஹண ஜாதியானால், மூன்று நாள் உபவாஸமிருந்து நெய் பாத்ரம் கொடுக்க வேண்டும்.

वर्धकीगमने षड्विंशे प्रायश्चित्तमुक्तम्—ब्राह्मणीं वर्धकीं गत्वा किञ्चित् दद्यात् द्विजातये । राजन्यां तु धनुर्दद्यात् वैश्यां गत्वा तु चेलकम् । शूद्रां गत्वा तु वै विप्रः उदकुम्भं द्विजातये । दिवसोपाषितो वा स्याद्दद्याद्विप्राय भोजनम् इति । तल्लक्षणं स्मृत्यन्तरेऽभिहितम्—चतुर्थे स्वैरिणी प्रोक्ता पञ्चमे वर्धकी भवेत् इति । इदं च गर्भानुत्पत्तिविषयम् । तदुत्पत्तौ तूशना - गमने तु व्रतं यत् स्यात् गर्भे तद्द्विगुणं चरेत् इति ।

வர்த்தகியான ஸ்த்ரீயைச் சேர்ந்தால், ஷட்விம்சத்தில் ப்ராயஸ்சித்தம் சொல்லப்பட்டுள்ளது:— வர்த்தகியான ப்ராம்ஹண ஸ்த்ரீயைச் சேர்ந்தால், ப்ராம்ஹணனுக்கு ஏதாவது ஒரு வஸ்துவைத் தானம் செய்ய வேண்டும். க்ஷத்ரிய ஸ்த்ரீயையானால் தனுஸ்ஸைக் கொடுக்கவும். வைச்யையானால், வஸ்த்ரத்தைக் கொடுக்கவும். சூத்ரியையானால், ஜலபாத்ரத்தைத் தானம் செய்யவும். அல்லது ஒரு நாள் உபவாஸமிருந்து ப்ராம்ஹணனுக்குப் போஜனம் செய்விக்கவும். வர்த்தகீயின் லக்ஷணம் ஓர் ஸ்ம்ருதியில் சொல்லப்பட்டுள்ளது:— நான்காமவனைச் சேர்ந்தவள் ஸ்வைரிணீ. ஐந்தாமவனைச் சேர்ந்தவள் வர்த்தகீ எனப்படுவாள். இவ்விதம் சொல்லியது கர்ப்போத்பத்தி இல்லாததைப் பற்றியது. கர்ப்போத்பத்தியிலோ, உசனஸ்:— சேரக்கூடாதவளைச் சேர்ந்த விஷயத்தில் எது ப்ராயஸ்சித்தமோ அது இரண்டு மடங்கு ப்ராயஸ்சித்தம் கர்ப்போத்பத்தி விஷயத்தில்.

जातिभेदेन गर्भोत्पादने प्रायश्चित्तम् । जातिभेदेन गर्भाधाने चतुर्विंशतिमतेऽभिहितम्—ब्राह्मणीगमने कृच्छ्रं गर्भे सान्तपनं चरेत् । राज्ञीगर्भे पराकं स्याद्विड्गर्भे तु त्र्यहाधिकम् । शूद्रागर्भे द्विजः कुर्यात्तद्वच्चान्द्रायणं व्रतम् । चण्डाल्यां गर्भमाधाय गुरुतल्पव्रतं चरेत् इति ।

### ஜாதி பேதத்தால் கர்ப்போத்பாதன விஷயத்தில் ப்ராயச்சித்தம்.

*ஜாதி பேதத்தால் கர்ப்போத்பத்தி விஷயத்தில் ப்ராயச்சித்தம் சொல்லப்பட்டுள்ளது, சதுர்விம்சதிமதத்தில்:— ப்ராம்ஹணியை யடைந்தால் ப்ராஜாபத்ய க்ருச்ரம். கர்ப்போத்பத்தி செய்தால் ஸாந்தபன க்ருச்ரத்தை யனுஷ்டிக்க வேண்டும். க்ஷத்ரிய ஸ்த்ரீயினிடத்திலானால், பராக க்ருச்ரம். வைச்ய ஸ்த்ரீயினிடத்திலானால், பாத க்ருச்ரத்துடன் பராக க்ருச்ரம். சூத்ர ஸ்த்ரீயினிடமானால் ப்ராம்ஹணன் சாந்த்ராயண வ்ரதத்தை யனுஷ்டிக்க வேண்டும். சண்டாள ஸ்த்ரீயினிடமானால் குருதல்ப கமனத்துக்கு விதிக்கப்பட்ட ப்ராயச்சித்தத்தைச் செய்ய வேண்டும்.*

### चण्डाल्यादि गमने प्रायश्चित्तम्।

चण्डालीगमने प्रायश्चित्तमाह पराशरः —चण्डालीं वा श्वपाकीं वाऽप्यनुगच्छति यो द्विजः । त्रिरात्रमुपवासित्वा विप्राणामनुशासनात् । सशिखं वपनं कृत्वा प्राजापत्यद्वयं चरेत् । गोद्वयं दक्षिणां दद्याच्छुद्धिं पाराशरोऽब्रवीत् इति । ब्राह्मण्यां शूद्राज्जाता चण्डाली, आरूढपतितात् जाता, सगोत्राज्जाता च । एतत्त्रिविधचण्डाल सन्ततौ जाता स्त्री चण्डाली । क्षत्तुरुग्रायां जाता श्वपाकी । द्विजः - ब्राह्मणः ।

### சண்டாளி முதலியவர்களைச் சேர்ந்தால் ப்ராயச்சித்தம்.

*சண்டாளியைச் சேர்ந்தால் ப்ராயச்சித்தம் சொல்லுகிறார், பராசரர்:— சண்டாளியையாவது, ச்வபாகியையாவது எந்த ப்ராம்ஹணன் சேருகிறானோ, அவன் மூன்று நாள் உபவாஸமிருந்து, ப்ராம்ஹணர்களின் ஆஜ்ஞையினால் சிகையுடன் வபனம் செய்து கொண்டு, இரண்டு ப்ராஜாபத்ய க்ருச்ரத்தை யனுஷ்டிக்க வேண்டும். இரண்டு பசுக்களைத் தக்ஷிணை கொடுக்க வேண்டும். இதனால்*

சுத்தி யடைகிறான், என்றார் பராசரர். ப்ராம்ஹண ஸ்த்ரீயினிடம் சூத்ரனுக்கு உண்டானவள் சண்டாளீ. ஆரூடபதிதனிடமிருந்தும் (ஸன்யாஸத்திலிருந்து தவறியவன்) ஸகோத்ரனிடமிருந்தும் பிறந்தவள் சண்டாளீ. இவ்விதமான மூன்று வித சண்டாள ஜாதியில் பிறந்த ஸ்த்ரீ சண்டாளீ. க்ஷத்தாவுக்கு உக்ரஸ்த்ரீயினிடத்தில் பிறந்தவள் ச்வபாகீ.

यमः — चण्डाल पुल्कसानां तु गत्वा भुक्त्वा च योषितम्। कृच्छ्राब्दमाचरेत् ज्ञानादज्ञानादैन्दवद्वयम् इति। एतदभ्यासविषयम्। नारदः — चण्डालीं तु द्विजः पूर्वमज्ञात्वा कामपीडितः। पश्चात् ज्ञात्वा तु चण्डालीं शुद्धिमिच्छन्मनस्यथ। रामसेतुमुपागम्य चापाग्रे प्रत्यहं शुचिः। प्रातः स्नात्वा मासमात्रं पूर्ववच्छुद्धिमाप्नुयात् इति। गौतमः — द्विजः कामातुरो गच्छन्नविचार्य च सङ्गमम्। पश्चाच्चण्डालजातीयां ज्ञात्वा शुद्धिपरायणः। रामेश्वरधनुष्कोट्यां प्रातःस्नानाद्विशुद्ध्यति इति।

**யமன்:—** ''சண்டாளன், புல்கஸன் இவர்களின் ஸ்த்ரீயை யடைந்தால், புத்திபூர்வமா யிருந்தால், முப்பது க்ருச்ரங்களை யனுஷ்டிக்க வேண்டும். அறியாமற் சென்றால் இரண்டு சாந்த்ராயணம் அனுஷ்டிக்க வேண்டும்,'' என்று. இது அடிக்கடி செய்த விஷயம். **நாரதர்:—** ப்ராம்ஹணன் அறியாமையால் காமத்தால் சண்டாளியை யடைந்து, பிறகு சண்டாளீ யென்றறிந்து மனதில் சுத்தியை விரும்பினால், ராமஸேதுவை யடைந்து, தனுஷ்கோடியில் ஒவ்வொரு நாளும் ஒரு மாதம் வரையில் விடியற்காலையில் ஸ்நானம் செய்தால் முன்போல் சுத்தனாகிறான். **கௌதமர்:—** ப்ராம்ஹணன் அஜ்ஞானத்தால் சண்டாளியை யடைந்து, பிறகு அவளைச் சண்டாளீ என்றறிந்து சுத்தியை விரும்பினால், ராமேச்வர தனுஷ்கோடியில் ப்ராத: ஸ்நானம் செய்வதால் சுத்தனாகிறான்.

यमः - रेतस्सिक्त्वा कुमारीषु स्वयोनिष्वन्त्यजासु च । सपिण्डापत्यदारेषु प्राणत्यागो विधीयते इति । एतत् संवत्सराभ्यासविषयम् । जाबालिः — चण्डालीं रूपसंपन्नां दृष्ट्वा विप्रोऽसकृद्व्रजन्। स चण्डालसमो ज्ञेयः कारीषवधमर्हति। चापाग्रे वा मासमात्रं प्रातःस्नानाद्विशुद्ध्यति। तद्गर्भधारणे विप्रो मुष्कच्छेदनमर्हति इति ।

யமன்:— "குமாரிகள், தன்னைச் சேர்ந்தவர்கள், சண்டாளிகள், ஜ்ஞாதிகளின் பெண்கள், பத்னிகள் இவர்களை யடைந்தால் ப்ராணத்யாகமே ப்ராயச்சித்தமாக விதிக்கப்படுகிறது," என்று. இது ஒரு வர்ஷம் அப்யஸித்த விஷயத்தைப் பற்றியது. ஜாபாலி:— நல்ல ரூபமுள்ள சண்டாள ஸ்த்ரீயை ப்ராம்ஹணன் கண்டு, அவளிடம் பல தடவை சென்றால், அவன் சண்டாளனுக்கு ஸமனாவான். அவன் எரிமுட்டைகளால் எரிக்கப்படுவதற்கு உரியவனாவான். அல்லது தனுஷ்கோடியில் ஒரு மாஸம் முழுவதும் ப்ராதः ஸ்நானம் செய்தால் சுத்தனாவான். அவளிடம் கர்ப்போத்பத்தியைச் செய்தால் ஆண்குறியைச் சேதிப்பதற்கு அர்ஹனாகிறான்.

## तुरुष्कीपुल्कसीगमने प्रायश्चित्तम्।

तुरुष्कीगमने प्रायश्चित्तमाह देवलः — चण्डालश्च तुरुष्कश्च द्वावेतौ तुल्यपापिनौ । तदङ्गना तथा ज्ञेया विप्रैः पापभयातुरैः । ज्ञात्वाऽज्ञात्वा तुरुष्कीं यो द्विजः कामातुरस्सकृत् । गत्वा शुद्धिमवाप्नोति चण्डालीगमने यथा इति । संवर्तः — पुल्कसीगमनं कृत्वा कामतोऽकामतोऽपि वा। कृच्छ्रं चान्द्रायणं कुर्यात्ततो मुच्येत किल्बिषादिति।

**துருஷ்கீ, புல்கஸீ கமனத்தில் ப்ராயஸ்சித்தம்.**

துருஷ்கீ கமனத்தில் ப்ராயஸ்சித்தத்தைச் சொல்லுகிறார், தேவலர்:— சண்டாளனும், துருஷ்கனும் இவ்விருவரும் ஸமபாபிகள், அவ்விருவரின் ஸ்த்ரீயும் அவ்விதமானவள், என்று பாபத்தினின்றும் பயந்தவர்களால் அறியப்பட வேண்டும். எந்த ப்ராம்ஹணன் அறிந்தோ அறியாமலோ துருஷ்கியை ஒரு முறை சேருகின்றானோ, அவன் சண்டாளீ கமனத்தில் விதித்த ப்ராயஸ்சித்தத்தை யனுஷ்டித்தால் சுத்தனாகிறான். ஸம்வர்த்தர்:— அறிந்தோ, அறியாமலோ புல்கஸியைச் சேர்ந்தால், சாந்த்ராயண க்ருச்ரத்தை யனுஷ்டித்தால் அந்தப் பாபத்தினின்றும் விடுபடுவான்.

**नट्यादिगमने प्रायश्चित्तम्।**

स एव— नटीं शैलूषकीं चैव रजकीं बुरुडीं तथा। एतासु गमनं कृत्वा चरेच्चान्द्रायणद्वयम् इति । चान्द्रायणद्वयमभ्यासविषयम्, बलात्कारविषयं च । तथा च जाबालिः — द्विजः कामातुरो ग्रामचण्डालीं रजकाह्वयाम् । अज्ञानाद्रमयेत् पापी प्रायश्चित्तं समाचरेत् । उभयोरैकमत्यं चेत्तत्र चान्द्रं विदुर्बुधाः । बलात्कारेण द्वैगुण्यमभ्यासे च तथा स्मृतम् । रेतस्सेकात् पूर्वमेव प्राजापत्यं विशोधनम् । नटिनीं च द्विजो गच्छन् चरेच्चान्द्रायण व्रतम् । तां गत्वानेकवारं तु चरेच्चान्द्रायणद्वयम् । केशसंवपनं कृत्वा पुनस्संस्कारमर्हति । वर्षादूर्ध्वं तु पतितस्स्यादेवात्र न संशयः इति ।

**நடி முதலியவர்களைச் சேர்ந்தால் ப்ராயஸ்சித்தம்.**

ஸம்வர்த்தர்:— நடி, சைலூஷகீ, ரஜகீ, புருடீ இவர்களைச் சேர்ந்தால் இரண்டு சாந்த்ராயண வ்ரதத்தை யனுஷ்டிக்க வேண்டும். இரண்டு சாந்த்ராயணம் என்றது அடிக்கடி செய்ததைப் பற்றியது. அவ்விதமே, ஜாபாலி:—

ப்ராம்ஹணர்களுடைய வீட்டில் பிக்ஷை வாங்க வேண்டும்,'' என்று இவ்விஷயத்தில் அறிந்து செய்தது, அறியாமல் செய்தது என்ற பேதத்தைக் கொண்டு ப்ராயஶ்சித்தங்களின் தாரதம்யத்துக்கு வ்யவஸ்தை யறியத் தக்கது. ப்ராயஶ்சித்தம் செய்து கொண்ட பிறகு பரிவேத்தா செய்ய வேண்டியதைச் சொல்லுகிறார், வஸிஷ்டர்:— ''பரிவேத்தா க்ருச்ராதி க்ருச்ரத்தை யனுஷ்டித்து ஜ்யேஷ்டனுக்குக் கொடுத்து, மறுபடியும் அந்தப் பெண்ணையே விவாஹம் செய்து கொள்ள வேண்டும்,'' என்று. ஜ்யேஷ்டனுக்குத் தெரிவித்து, மறுபடி அவளையே விவாஹம் செய்து கொள்ள வேண்டும்,'' என்பது பொருள். இந்த ந்யாயமே மாற்றிச் செய்யப்பட்ட ஆதானத்திலும், தங்கை தமக்கைகளுக்கு மாறிச் செய்த விவாஹ விஷயத்திலும் அறியத்தக்கது, என்று மாதவீயத்திலுள்ளது.

## उष्ट्रादियुक्तयानारोहणे प्रायश्चित्तम्।

उष्ट्रादियुक्तशकटाद्यारोहणे प्रायश्चित्तमाह मनुः – उष्ट्रयानं समारुह्य खरयानं च कामतः। स्नात्वा च विप्रो दिग्वासाः प्राणायामेन शुद्ध्यति इति । याज्ञवल्क्यः – प्राणायामी जले स्नात्वा खरयानोष्ट्रयानगः। नग्नः स्नात्वा च भुक्त्वा च गत्वा चैव दिवा स्त्रियम् इति।

## ஒட்டகை முதலியதுடன் கூடிய வாகனத்தில் ஏறியதற்கு ப்ராயஶ்சித்தம்.

ஒட்டகை முதலியதுடன் கூடிய வண்டி முதலியதில் ஏறியதற்கு ப்ராயஶ்சித்தம் சொல்லுகிறார், மனு:— ஒட்டகையடன் கூடிய வாஹனத்திலும், கழுதையுடன் கூடிய வாஹனத்திலும், ப்ராம்ஹணன் புத்தி பூர்வமாய் ஏறினாலும், வஸ்த்ரமில்லாமல் ஸ்நானம் செய்தாலும், ப்ராணாயாமத்தால் சுத்தனாகிறான். யாஜ்ஞவல்க்யர்:— கழுதை ஒட்டகை கூடிய வண்டிகளில் ஏறினாலும்,

வஸ்த்ரமில்லாமல் ஸ்நானம் போஜனம் செய்தாலும், பகலில் ஸ்த்ரீ ஸங்கம் செய்தாலும், ப்ராணாயாமத்துடன் ஜலத்தில் ஸ்நானம் செய்து சுத்தனாகிறான்.

## खराद्यारोहणे प्रायश्चित्तम्।

खराद्यारोहणे प्रायश्चित्तमाह मार्कण्डेयः – खरमारुह्य विप्रोऽसौ योजनं यदि गच्छति। तप्तकृच्छ्रत्रयं कृत्वा शुद्धिमाप्नोति वै द्विजः। उष्ट्रं च महिषं चैव ह्यनड्वाहं द्विजस्सकृत्। आरुह्य योजनं गच्छेत् प्राजापत्यमुदीरितम्। अजं बस्तं तथाऽऽरुह्य पूर्ववद्यदि गच्छति। तत्र सान्तपनं प्रोक्तं शरीरस्य विशोधनम्। पुनः कर्म प्रकुर्वीत तेन शुद्ध्येन्न संशयः इति। पुनःकर्म - पुनरुपनयनम्।

### கழுதை முதலியதில் ஏறினால் ப்ராயஶ்சித்தம்.

மார்க்கண்டேயர்:— ப்ராம்ஹணன் கழுதையின் மேலேறி ஒரு யோஜனை தூரம் சென்றால், மூன்று தப்த க்ருச்ரத்தைச் செய்தால் சுத்தனாவான். ப்ராம்ஹணன் ஒட்டகை, எருமைக்கடா, எருது இவைகளில் ஒரு முறை ஏறி ஒரு யோஜனை தூரம் சென்றால், ப்ராஜாபத்ய க்ருச்ரம் ப்ராயச்சித்தமாகச் சொல்லப்பட்டுள்ளது. வெள்ளாடு செம்மறியாடு இவைகளில் ஏறி ஒரு யோஜனை தூரம் சென்றால், அவ்விஷயத்தில் சரீர சுத்திக்காக ஸாந்தபன க்ருச்ரம் ப்ராயஶ்சித்தமாகச் சொல்லப்பட்டுள்ளது. புனருபநயனமும் செய்து கொள்ள வேண்டும். அதனால் சுத்தனாவான். ஸம்சயமில்லை.

## कारागृहवासे प्रायश्चित्तम्।

कारागृहवासे प्रायश्चित्तमाह गौतमः – बलाद्बन्दीकृतो यस्तु म्लेच्छचण्डालदस्युभिः। कारागृहे मासमात्रमुषित्वा कायमाचरेत्। प्राजापत्यं च चान्द्रं च चरेत्संवत्सरोषितः इति। यमः – कारागृहाद्विनिर्गत्य प्रायश्चित्तं यथोदितम्। कृत्वा विप्रः पुनः कर्म

कृत्वा शुद्धिमवाप्नुयात्। बलात् बन्दीकृता नारी तत्रैव निवसेद्यदि। पक्षं मासमृतुं चाब्दमुत्सृष्टा चेत्तदा पतिः । षष्टिभिर्मृत्तिकाभिश्च घृतशौचमनन्तरम्। कारयित्वा विधानेन स्नापयित्वा नदीजलैः। कारयेत्पूर्ववद्विप्रः प्रायश्चित्तमनुक्रमात् । अर्धमुक्तं तु तत्स्त्रीणां प्रायश्चित्तं विशोधनम्। तस्या दोषनिवृत्तिस्स्याज्जनवादो न हीयते। अतस्तत्पोषणं कुर्यात् संसर्गादीन्न कारयेत् । तत्रैव गर्भसंपत्तौ परित्यागो विधीयते इति।

**சிறைச்சாலையில் வஸித்ததற்கு ப்ராயஶ்சித்தம்.**

**கௌதமர்:—** எவன் பலாத்காரமாய் ம்லேச்சன், சண்டாளன் திருடன் இவர்களால் பிடிக்கப்பட்டு, சிறைச்சாலையில் அடைக்கப்பட்டு, ஒரு மாஸம் வரையில் வஸித்தானே, அவன் ஒரு ப்ராஜாபத்ய க்ருச்ரத்தை யனுஷ்டிக்க வேண்டும். ஒரு வர்ஷம் இருந்தால், ப்ராஜாபத்ய க்ருச்ரமும், சாந்த்ராயணமும் அனுஷ்டிக்க வேண்டும். **யமன்:—** சிறைச்சாலையிலிருந்து வெளிவந்து விதிப்படி ப்ராயஶ்சித்தத்தைச் செய்து கொண்டு, மறுபடி உபநயனம் செய்து கொண்டால் ப்ராம்ஹணன் சுத்தனாகிறான். பலாத்காரமாய்ச் சிறைச்சாலையில் அடைக்கப்பட்ட ஸ்த்ரீ அங்கேயே வஸித்தால், ஒரு பக்ஷம், ஒரு மாஸம், ஒரு ருது (இரண்டு மாஸம்), ஒரு வர்ஷம் வரையில் இருந்தால், அப்பொழுது அவளின் புருஷன் அறுபது தடவை மண்களால் க்ருதசௌசம் செய்வித்து, விதிப்படி நதீ ஜலங்களால் ஸ்நானம் செய்வித்து, முன்போல் க்ரமமாய் ப்ராயஶ்சித்தத்தைச் செய்விக்க வேண்டும். இவ்விஷயத்தில் ஸ்த்ரீகளுக்கு முன் சொல்லிய ப்ராயஶ்சித்தத்தில் பாதி ப்ராயஶ்சித்தம் என்று சொல்லப்பட்டுள்ளது. அவளுக்குப் பாபம் விலகும். ஆனாலும் ஜனங்களின் அபவாதம் குறையாது. ஆகையால் அவளைக் காப்பாற்ற வேண்டும். அவளுடன் சேர்க்கை முதலியதைச் செய்யக் கூடாது. அங்கேயே கர்ப்பம்

உண்டாகிவிட்டால் அவளைப் பரித்யாகம் செய்ய வேண்டும்.

## कुग्रामवासे प्रायश्चित्तम्।

कुग्रामवासप्रायश्चित्तमाह मरीचिः – श्रोत्रियश्च तटाकादिस्तृणं पर्णं तथेन्धनम्। बान्धवाः स्वकुलीनाश्च विद्या चैवोपकारिणी। न सन्ति यत्र ग्रामे तु स कुग्राम इति स्मृतः। तत्र ग्रामे द्विजो यस्तु हव्यकव्यपराङ्मुखः। एकत्र दिवसे तिष्ठेन्महाचान्द्रायणं चरेत् इति।

### குக்ராமத்தில் வஸிப்பதற்கு ப்ராயஶ்சித்தம்.

மரீசி:— வேதாத்யயனம் செய்தவன், குளம் முதலியது, புல், இலை, விறகு, பந்துக்கள், தன் குலத்தில் பிறந்தவர்கள், உபகரிக்கும் வித்யை என்ற இவைகள் எந்த க்ராமத்தில் இல்லையோ, அந்த க்ராமம் குக்ராமம் எனப்படுகிறது. அந்த க்ராமத்தில் எந்த ப்ராம்ஹணன் தேவ பித்ரு கார்யங்களில் நோக்கமில்லாதவனாக ஒரு நாள் வஸிக்கிறானே அவன் மஹாசாந்த்ராயணத்தை யனுஷ்டிக்க வேண்டும்.

## दुर्देशगमने प्रायश्चित्तम्।

दुर्देशगमने प्रायश्चित्तमाह बोधायनः – सिन्धुसौवीरसौराष्ट्रां स्तथा प्रत्यन्तवासिनः। अङ्गवङ्गकलिङ्गांश्च गत्वा संस्कारमर्हति इति। प्रत्यन्तवासिनः - चण्डालादि वासप्रदेशान्। स एव – पद्भ्यां स कुरुते पापं यः कलिङ्गान् प्रपद्यते। ऋषयो निष्कृतिं तस्य प्राहुर्वैश्वानरं हविः इति।

### துர்தேசங்களுக்குச் சென்றால் ப்ராயஶ்சித்தம்.

போதாயனர்:— ஸிந்து, ஸௌவீரம், ஸௌராஷ்ட்ரம், சண்டாளாதிகள் வஸிக்கும் ப்ரதேசங்கள், அங்கம், வங்கம், களிங்கம், இந்தத் தேசங்களுக்குச் சென்றால் புனருபநயனம்

செய்து கொள்ள வேண்டும். போதாயனரே:— எவன் களிங்கதேசத்தை யடைகின்றானோ அவன் கால்களால் பாபம் செய்கிறான். அவனுக்கு வைச்வாநரஹவிஸ்ஸினால் செய்யும் யாகத்தை ப்ராயஸ்சித்தமாக ருஷிகள் சொல்லுகின்றனர்.

## श्वसृगालादिदंशने प्रायश्चित्तम्।

श्वादिदंशे प्रायश्चित्तमाह याज्ञवल्क्यः – पुंश्चली वानरखरैर्दष्टः श्वोष्ट्रादिवायसैः। प्राणायामं जले कृत्वा घृतं प्राश्य विशुद्ध्यति इति। मनुः – श्वसृगालखरैर्दष्टो ग्राम्यैः क्रव्याद्भिरेव च। नराश्वोष्ट्रैर्वराहैश्च प्राणायामेन शुद्ध्यति इति। एतन्नदीस्नानादेरप्युपलक्षणम्। तथा च बोधायनः – शुना दष्टस्तु यो विप्रो नदीं गत्वा समुद्रगाम्। प्राणायामशतं कृत्वा घृतं प्राश्य विशुद्ध्यति। सुवर्णरजताभ्यां वा गवां शृङ्गोदकैश्च वा। नवैर्वा कलशैः स्नात्वा सद्य एव शुचिर्भवेत् इति।

### நாய் நரி முதலியவை கடித்தால் ப்ராயஸ்சித்தம்.

யாஜ்ஞவல்க்யர்:— வ்யபிசாரிணீ, குரங்கு, கழுதை, நாய், ஒட்டகை முதலியது, காக்கை இவைகளால் கடிக்கப்பட்டவன் ஜலத்தில் மூழ்கி, ப்ராணாயாமம் செய்து, நெய்யைப் பருகினால் சுத்தனாகிறான். மனு:— நாய், நரி, கழுதை க்ராமத்தில் உள்ள மாம்ஸத்தைப் பக்ஷிக்கும் பக்ஷிகள், மனிதன், குதிரை, ஒட்டகை, பன்றி இவைகளால் கடிக்கப்பட்டவன் ப்ராணாயாமம் செய்வதால் சுத்தனாகிறான். ப்ராணாயாமம் என்றது நதீ ஸ்நானம் முதலியதையும் சொல்லுகின்றது. அவ்விதமே, போதாயனர்:— எந்த ப்ராம்ஹணன் நாயால் கடிக்கப்பட்டானோ அவன் ஸமுத்ரகாமினியான நதியை யடைந்து, (ஸ்நானம் செய்து) நூறு ப்ராணாயாமம் செய்து, நெய்யைப் பருகினால் சுத்தனாகிறான். அல்லது தங்கம் வெள்ளி இவைகளுடன் கூடிய ஜலத்தினாலாவது,

பசுக்களின் கொம்பிலிருந்து விழும் ஜலத்தினுலாவது, புதிதான கலசங்களிஞல் விடப்பட்ட ஜலத்திஞலாவது ஸ்நானம் செய்தால் அப்பொழுதே சுத்தனுகிருன்.

हारीतः – श्वानो वा क्रोष्टुको वाऽपि नारी वा यदि वा नरः। आखुर्नकुलमार्जारवायसग्राम्यसूकराः। एतैर्दष्टे द्विजस्याङ्गे प्रायश्चित्तं कथं भवेत्। स्नानं कृत्वा सचेलं तु विप्राणामनुशासनात्। प्रोक्षणीभिश्च तिसृभिः कारयेन्मार्जनं द्विजः। प्राणायामत्रयं कुर्याद्द्याद्गोभ्यस्तृणं नरः। सह द्विजैश्च भुक्तेन शुद्ध्यते नात्र संशयः इति। अङ्गिराः – ब्रह्मचारी शुना दष्टस्त्र्यहं सायं पयः पिबेत्। गृहस्थस्तु द्विरात्रं वाऽप्येकाहं वाऽग्निहोत्रवान्। नाभेरूर्ध्वं तु दष्टस्य तदेव द्विगुणं भवेत्। स्यादेतत्त्रिगुणं वक्त्रे मस्तके तु चतुर्गुणम्। अव्रतस्सव्रतो वाऽपि शुना दष्टस्तथा द्विजः। दृष्ट्वाऽग्नीन् हूयमानांस्तु सद्य एव शुचिर्भवेत् इति।

ஹாரீதர்:— நாய், நரி, ஸ்த்ரீ, மனிதன், எலி, கீரி, பூனை, காக்கை, க்ராமப் பன்றி, இவைகளால் ப்ராம்ஹணனின் தேஹம் கடிக்கப்பட்டால் அவனுக்கு ப்ராயஶ்சித்தம் எப்படி ? அவன் ப்ராம்ஹணர்களின் அனுஜ்ஞையிஞல் ஸசேல ஸ்நானம் செய்து, மூன்று ப்ரோக்ஷணீ மந்த்ரங்களால் ப்ரோக்ஷணம் செய்து கொள்ள வேண்டும். மூன்று ப்ராணுயாமம் செய்ய வேண்டும். பசுக்களுக்குப் புல்லைக் கொடுக்க வேண்டும். ப்ராம்ஹணர்களுடன் புஜித்தால் சுத்தனுகிருன். ஸம்ஶயமில்லை. அங்கிரஸ்:— ப்ரம்ஹசாரீ நாயால் கடிக்கப்பட்டால் மூன்று நாள் வரையில் இரவில் பாலை மட்டில் பருக வேண்டும். க்ருஹஸ்தனுஞல் இரண்டு நாள் மட்டில். அக்னிஹோத்ரியாஞல் ஒரு நாள் மட்டில். நாபிக்கு மேல் கடிக்கப்பட்டவனுக்கு முன் சொன்ன ப்ராயஶ்சித்தமே இரண்டு மடங்காகும். முகத்தில் கடிக்கப்பட்டால் மூன்று மடங்காகும். தலையில் கடிக்கப்பட்டால் நான்கு மடங்காகும். ப்ராம்ஹணன்

ப்ரம்ஹசாரியானாலும் மற்றவனானாலும் நாயினால் கடிக்கப்பட்டால் ஹோமம் செய்யப்படும் அக்னிகளைத் தர்சித்தால் அப்பொழுதே சுத்தனாகிறான்.

पराशरः – वृकश्वानसृगालाद्यैर्दष्टो यस्तु द्विजोत्तमः । स्नात्वा जपेत् स गायत्रीं पवित्रां वेदमातरम् । गवां शृङ्गोदके स्नानं महानद्योस्तु सङ्गमे । समुद्रदर्शनाद्वाऽपि शुना दष्टः शुचिर्भवेत् । वेदविद्याव्रतस्नातः शुना दष्टो द्विजो यदि । स हिरण्योदके स्नात्वा घृतं प्राश्य विशुद्ध्यति । सव्रतस्तु शुना दष्टो यस्त्रिरात्रमुपावसेत् । घृतं कुशोदकं पीत्वा व्रतशेषं समापयेत् । अव्रतस्सव्रतो वाऽपि शुना दष्टो भवेत् द्विजः । प्रणिपातात् भवेत् पूतो विप्रैश्चक्षुर्निरीक्षितः । शुनाघ्रातावलीढस्य नखैर्विलिखितस्य च । अद्भिः प्रक्षालनं प्रोक्तमग्निना चोपचूलनम् । शुना तु ब्राह्मणी दष्टा जम्बुकेन वृकेण वा । उदितं ग्रहनक्षत्रं दृष्ट्वा सद्यः शुचिर्भवेत् । कृष्णपक्षे यदा सोमो न दृश्येत कदाचन । यां दिशं व्रजते सोमस्तां दिशं वाऽवलोकयेत् । असद्ब्राह्मणके ग्रामे शुना दष्टो द्विजोत्तमः । वृषं प्रदक्षिणीकृत्य सद्यः स्नात्वा विशुद्ध्यति इति । वृकशुनोरारण्यकत्वग्राम्यत्वाभ्यां भेदः । सृगालः - जम्बुकः - आदिशब्देन वराहादयो गृह्यन्ते । तैर्दष्टः स्नात्वा गायत्र्यष्टशतं जपेत् ।

19. பராசரர்:— செந்நாய், நாய், நரி முதலியவைகளால் கடிக்கப்பட்ட ப்ராம்ஹணன் ஸ்நானம் செய்து, வேதமாதாவும் பரிசுத்தையுமான காயத்ரியை ஜபிக்க வேண்டும். பசுக்களின் கொம்பிலிருந்து விழும் ஜலத்தினால் ஸ்நானம், மஹாநதிகள் சேருமிடத்தில் ஸ்நானம், ஸமுத்ர தர்சனம் இவைகளுள் ஒன்றினால் நாயால் கடிக்கப்பட்டவன் சுத்தனாவான். வேத வித்யை, வ்ரதம் இவைகளைச் செய்து ஸ்நானம் செய்த ப்ராம்ஹணன் நாயால் கடிக்கப்பட்டால், அவன் தங்கத்துடன் கூடிய ஜலங்களால் ஸ்நானம் செய்து நெய்யைப் பருகினால் சுத்தனாகிறான்.

வ்ரதத்தை யனுஷ்டிக்கும் பொழுது கடிக்கப்பட்டவன் மூன்று நாள் உபவாஸம் இருக்க வேண்டும். பிறகு நெய், தர்ப்பையுடன் கூடிய ஜலம் இவைகளைப் பருகி, பிறகு வ்ரதத்தின் மீதியை முடிக்க வேண்டும். வ்ரதம் அனுஷ்டிக்காதவனாயினும், வ்ரதம் அனுஷ்டிப்பவனாயினும் ப்ராம்ஹணன் நாயால் கடிக்கப்பட்டால், அவன் ப்ராம்ஹணர்களை நமஸ்கரித்து, அவர்களால் கண்களால் பார்க்கப்பட்டால் சுத்தனாகிறான். நாயினால் முகர்க்கப்பட்டு நக்கப்பட்டாலும், நகங்களால் கீறப்பட்டாலும், அந்த இடத்தை ஜலத்தால் அலம்ப வேண்டும். அக்னியினால் அந்த இடத்தை தபிக்கச் செய்வதும் ப்ராயஸ்சித்தம். எந்த ப்ராம்ஹண ஸ்த்ரீ நாயாலாவது, நரியாலாவது, செந்நாயாலாவது கடிக்கப்பட்டவளோ, அவள் இரவில் உதயமாகிய க்ரஹங்கள், நக்ஷத்ரங்கள் இவைகளைப் பார்த்தால் அப்பொழுதே சுத்தையாகிறாள். க்ருஷ்ண பக்ஷத்தில் சந்த்ரன் எப்பொழுது காணப்படவில்லையோ அப்பொழுது சந்த்ரன் எந்தத் திக்கில் இருக்கக் கூடுமோ அந்தத் திக்கையாவது பார்க்க வேண்டும். ப்ராம்ஹணர்கள் இல்லாத க்ராமத்தில் ப்ராம்ஹணன் நாயால் கடிக்கப்பட்டால், காளை மாட்டை ப்ரதக்ஷிணம் செய்து, ஸ்நானம் செய்தால் அப்பொழுதே சுத்தனாகிறான்,'' என்று. வ்ருகம் என்பது காட்டு நாய் (செந்நாய்); ச்வா என்பது க்ராமத்தில் உள்ள நாய் என்று பேதம். ஆதி யென்றதால் பன்றி முதலியவை சொல்லப்படுகின்றன. அவைகளால் கடிக்கப்பட்டவன் ஸ்நானம் செய்து, நூற்றெட்டு முறை காயத்ரியை ஜபிக்க வேண்டும்.

जपे संख्याविशेषमाहोशनाः – दंष्ट्र्यादिदष्टो गायत्र्यष्टशतं प्राणायामशतं वा इति । एतच्चासमर्थविषयम् । समर्थस्तु गोशृङ्गोदकस्नानादिकमाचरेत् । तत्र गोशृङ्गस्नानं नाम शृङ्गोदक पूरितोदकेन गायत्र्या शतवारमभिमन्त्रितेन सेचनम्, गोशृङ्गेण शतं स्नानं गायत्र्या इति हारीतस्मरणात् । गोशृङ्गोदकस्नान सङ्गमस्नान

समुद्रदर्शनानामधममध्यमोत्तमाङ्गभेदेन वा दंशतारतम्येन वा व्यवस्था। वेदाध्ययनं वा सौम्यप्राजापत्यादिव्रतानि वा समाप्य स्नातः वेदविद्याव्रतस्नातः । स यदि शुना दष्टस्तदा हिरण्यमुदके निधाय तेनोदकेन स्नात्वा घृतं प्राश्य विशुद्ध्यति । तत्रापि ब्राह्मणश्चेद्गायत्रीं शतकृत्वो जपेत्।

ஜபத்தில் கணக்குப் பேதத்தைச் சொல்லுகிறூர், உசனஸ்:— *பல் உள்ள ஜந்துக்கள் முதலியவைகளால் கடிக்கப்பட்டவன், காயத்ரியை நூற்றெட்டு முறை ஜபிக்கவும். அல்லது ப்ராணுயாமத்தை நூறு தடவை செய்யவும். இது அசக்தனைப் பற்றியது. சக்தனுவெனில், பசுவின் கொம்பு ஜலத்தினுல் ஸ்நானம் செய்வது என்பது முதலியதைச் செய்ய வேண்டும். அவைகளுள் கோச்ருங்கோதக ஸ்நானம் என்பது கொம்பில் நிரப்பப்பட்ட ஜலத்தை நூறு முறை காயத்ரியால் அபிமந்த்ரித்து, அதனுல் முழுகுவது. ''நூறு தடவை காயத்ரியைச் சொல்லிப் பசுவின் கொம்பின் ஜலத்தால் ஸ்நானம்'' என்று ஹாரீதரின் ஸ்ம்ருதியால். பசுவின் கொம்பு ஜலத்தால் ஸ்நானம், நதீ ஸங்கம ஸ்நானம், ஸமுத்ர தர்சனம் என்ற இவைகளுக்குக் கீழ்ப்பட்ட அங்கம், நடுவாகிய அங்கம், மேலாகிய அங்கம் இவைகளின் பேதத்தாலாவது, கடித்ததின் தாரதம்யத்தாலாவது வ்யவஸ்தையை யறியவேண்டும். வேதவித்யாவ்ரத ஸ்நாதன் - வேதாத்யயனத்தையாவது, ஸௌம்யம் ப்ராஜாபத்யம் முதலிய வ்ரதங்களையாவது முடித்து ஸ்நானம் செய்தவன். அவன் நாயால் கடிக்கப்பட்டானுகில், அப்பொழுது ஸ்வர்ணத்தை ஜலத்தில் போட்டு, அந்த ஜலத்தினுல் ஸ்நானம் செய்து, நெய்யைப் பருகினுல் சுத்தனுகிறுன். அதிலும் கடிக்கப்பட்டவன் ப்ராம்ஹணனுகில் காயத்ரியை நூறு முறை ஜபிக்க வேண்டும்.*

तदाह बोधायनः – वेदविद्याव्रतस्नातः शुना दष्टस्तु ब्राह्मणः। शतपर्यायमावृत्य गायत्रीं शुद्धिमाप्नुयात् इति । चान्द्रायणादिव्रतेन सहितः सव्रतः । स त्रिरात्रमुपोष्य चतुर्थेऽह्नि घृतं प्राश्य कुशोदकं च पीत्वा पश्चाद्व्रतशेषं समापयेत् । सव्रताव्रतावुभावपि विप्रान् प्रणिपत्य तैर्निरीक्षितौ यथोक्तप्रायश्चित्ताचरणेन पूतौ भवतः । यदा ब्राह्मणी श्वादिभिर्दष्टा तदा सा रात्रावुदितान् ग्रहान् सोमाङ्गारकादीन् नक्षत्राणि कृत्तिकादीन्यवलोक्य शुद्धा भवति । सोमदर्शनासम्भवे तदवस्थितियोग्यां दिशं वा चक्षुषाऽवलोकयेत् । तच्चावलोकनं पञ्चगव्यप्राशनस्य चोपलक्षणम् ।

அதைச் சொல்லுகிறுர், போதாயனர்:— வேதவித்யாவ்ரத ஸ்நாதகுன் ப்ராம்ஹணன் நாயால் கடிக்கப்பட்டால், நூறு முறை காயத்ரியை ஜபித்தால் சுத்தியை அடைவான். சாந்த்ராயணம் முதலிய வ்ரதத்துடன் கூடியவன் ஸ்வ்ரதன். அவன் மூன்று நாள் உபவாஸமிருந்து, நான்காவது நாளில் நெய்யைப் பருகி, தர்ப்பை ஜலத்தையும் பருகி, பிறகு வ்ரதத்தின் மீதியை முடிக்க வேண்டும். ஸவ்ரதன், அவ்ரதன் என்ற அவ்விருவரும் ப்ராம்ஹணர்களை நமஸ்கரித்து, அவர்களால் பார்க்கப்பட்டால், முன் சொல்லிய ப்ராயஶ்சித்தத்தை யனுஷ்டித்ததிஞல் சுத்தராயாகின்றனர். எப்பொழுது ப்ராம்ஹண ஸ்த்ரீ நாய் முதலியவைகளால் கடிக்கப்பட்டாளோ, அப்பொழுது அவள் இரவில் உதித்த சந்த்ரன், செவ்வாய் முதலிய க்ரஹங்களையும், க்ருத்திகை முதலிய நக்ஷத்ரங்களையும் பார்த்தால் சுத்தை யாகிறுள். சந்த்ரனைப் பார்க்க முடியாவிடில், அவன் இருக்கக் கூடிய திக்கையாவது கண்ணுல் பார்க்க வேண்டும். அதில், பார்க்க வேண்டும் என்றது பஞ்சகவ்ய ப்ராசனத்தையும் சொல்லுகிறது.

अत एवाङ्गिराः – ब्राह्मणी तु शुना दष्टा सोमे दृष्टिं निपातयेत्। समुद्रदर्शनाद्वाऽपि शुना दष्टा शुचिर्भवेत् । सोममार्गेण वा पूता पञ्चगव्येन शुद्ध्यति इति । सोमदर्शनासम्भवे समुद्रदर्शनादिग्वलोकनाद्वा शुद्ध्यतीत्यर्थः । यस्मिन् ग्रामे ब्राह्मणा न सन्ति, तत्र ब्राह्मणप्रणिपातनिरीक्षणयोः स्थाने वृषभप्रदक्षिणं द्रष्टव्यम् । एतेषु वचनेषु यत्र यत्र प्रायश्चित्तबाहुल्यम्, तत्र तत्रोत्तमाङ्गविषयत्वं दंशनावृत्तिविषयत्वं चोहनीयम् । ब्रह्मचारिगृहस्थाग्नि होत्रिषूत्तरोत्तरं तपोबाहुल्यात् प्रायश्चित्तह्रास इति माधवीये ।

அங்கிரஸ்:— ப்ராம்ஹண ஸ்த்ரீ நாயால் கடிக்கப்பட்டால், சந்த்ரனிடத்தில் பார்வையைச் செலுத்த வேண்டும். ஸமுத்ரத்தைத் தர்சித்தாலாவது சுத்தை யாவாள். அல்லது சந்த்ரன் இருக்கக் கூடிய திக்கையாவது பார்த்து, பஞ்சகவ்ய ப்ராசனம் செய்தால் சுத்தையாவாள். சந்த்ரனைப் பார்க்கமுடியாவிடில், ஸமுத்ரத்தைப் பார்த்தாலாவது, சந்த்ரன் உள்ள திக்கைப் பார்ப்பதாலாவது சுத்தையாகிறாள், என்பது பொருள். எந்த க்ராமத்தில் ப்ராம்ஹணர்கள் இல்லையோ, அவ்விடத்தில் ப்ராம்ஹணர்களின் நமஸ்காரம் தர்சனம் இவைகளுக்குப் பதிலாக வ்ருஷபத்தின் ப்ரதக்ஷிணம் அறியத்தக்கது. இந்த வசனங்களில் எந்த எந்த இடத்தில் ப்ராயஶ்சித்தம் அதிகமாய் உள்ளதோ, அங்கங்கு, சிறந்த அங்கங்களைப் பற்றியது என்பதும், கடித்ததின் ஆவ்ருத்தியைப் பற்றியது என்பதும் ஊஹிக்கப்பட வேண்டும். ப்ரம்ஹசாரீ, க்ருஹஸ்தன், அக்னிஹோத்ரீ என்ற இவர்களுள் மேல் உள்ளவன் அதிக தபஸ் உள்ளவன் ஆகையால் ப்ராயஶ்சித்தத்தின் குறைவு என்பது மாதவீயத்தில் உள்ளது.

## शरीरे कृम्युत्पत्तौ प्रायश्चित्तम्।

शरीरे कृम्युत्पत्तौ प्रायश्चित्तमाह शातातपः – ब्राह्मणस्य व्रणद्वारे यदा संपद्यते कृमिः । प्रायश्चित्तं तदा कार्यमिति शातातपोऽब्रवीत्। गोमूत्रं गोमयं क्षीरं दधि सर्पिः कुशोदकम्। त्र्यहं स्नात्वा च पीत्वा च कृमिदष्टः शुचिर्भवेत् इति। बोधायनः – ब्राह्मणस्य व्रणद्वारे पूयशोणितसम्भवे। कृमिरुत्पद्यते तत्र प्रायश्चित्तं कथं भवेत्। गोमूत्रं गोमयं क्षीरं दधि सर्पिः कुशोदकम्। त्र्यहं स्नात्वा च पीत्वा च कृमिदष्टः शुचिर्भवेत् इति। एतच्च नाभेरधोभागे द्रष्टव्यम्। उपरिभागे तु भानुराह– नाभिकण्ठान्तरोद्भूते व्रणे चोत्पद्यते कृमिः। षड्रात्रं तु तदा प्रोक्तं प्राजापत्यं शिरो व्रणे इति।

**சரீரத்தில் புழு உண்டானல் ப்ராயஶ்சித்தம்.**

**சாதாதபர்:—** ப்ராம்ஹணனுடைய சரீரத்தில் வ்ரணத்தின் முகத்தில் எப்பொழுது புழு உண்டாகிறதோ அப்பொழுது ப்ராயஶ்சித்தம் செய்யப்பட வேண்டும் என்ருர் சாதாதபர். புழுவினுல் கடிக்கப்பட்டவன், பசுவின் மூத்ரம், சாணி, பால், தயிர், நெய், தர்ப்பையின் ஜலம் இவைகளால் மூன்று நாள் ஸ்நானம் செய்து, அவைகளைப் பருகினுல் சுத்தனுவான். **போதாயனர்:—** ப்ராம்ஹணனுடைய வ்ரணத்தின் முகத்தில் துர்நீர் ரக்தம் இவைகள் உண்டாகி புழு உண்டாகிறது. அதில் ப்ராயஶ்சித்தம் எப்படி ? எனில், புழுவினுல் கடிக்கப்பட்டவன் பஞ்சகவ்யத்தால் மூன்று நாள் ஸ்நானம் செய்து அதைப் பருகினுல் சுத்தனுவான். இது நாபி கீழ்பாகத்தில் உண்டாகியதைப் பற்றியது என்று அறியவும். கொப்பூழுக்கு மேல் பாகத்திலானுல் சொல்லுகிருர். **பானு:—** நாபிக்கும் கழுத்திற்கும் நடுவில் உள்ள ப்ரதேசத்தில் வ்ரணத்தில் புழு உண்டானுல் அப்பொழுது ஆறு நாள் ப்ராஜாபத்யம் ப்ராயஶ்சித்தம். தலையிலானுல்

ஒரு ப்ராஜாபத்ய க்ருச்ரம் ப்ராயஶ்சித்தம்.

## दुर्ब्राह्मणगृहभोजने प्रायश्चित्तम्।

अथाभोज्यभोजने प्रायश्चित्तमुच्यते। तत्र दुर्ब्राह्मणगृहे भोजने प्रायश्चित्तमाह भारद्वाजः – निराचारस्य विप्रस्य निषिद्धाचरणस्य च। अन्नं भुक्त्वा द्विजः कुर्याद्दिनमेकमभोजनम् इति । तदशक्तौ प्रायश्चित्तान्तरमाह पराशरः – सदाचारस्य विप्रस्य तथा वेदान्तवेदिनः। भुक्त्वाऽन्नं मुच्यते पापादहोरात्रान्तरान्नरः इति। एतदनभ्यासाभिप्रायम् ।अभ्यासे त्वाह स एव – परपाकनिवृत्तस्य परपाकरतस्य च। अपचस्य च भुक्त्वाऽन्नं द्विजश्चान्द्रायणं चरेत् इति।

**துர் ப்ராம்ஹணரின் வீட்டில் புஜிப்பதில் ப்ராயஶ்சித்தம்.**

புஜிக்கக் கூடாத அன்னத்தைப் புஜிப்பதில் ப்ராயஶ்சித்தம் சொல்லப்படுகிறது. அதில் துர் ப்ராம்ஹணனின் வீட்டில் போஜனம் செய்தால் ப்ராயஶ்சித்தத்தைச் சொல்லுகிறுர், **பாரத்வாஜர்:—** ஆசாரமற்றவனும், விலக்கப்பட்ட ஆசாரத்தை உடையவனுமான ப்ராம்ஹணனின் அன்னத்தைப் புஜித்தால் ஒரு நாள் முழுவதும் உபவாஸம் செய்ய வேண்டும். அதைச் செய்ய முடியாவிடில் வேறு ப்ராயஶ்சித்தத்தைச் சொல்லுகிறுர், **பராசரர்:—** நல்ல ஆசாரமுடையவனும், வேதம் வேதாந்தம் இவைகளை அறிந்தவனுமான ப்ராம்ஹணனின் அன்னத்தைப் புஜித்தால் ஒரு நாளுக்குள் பாபத்தினின்றும் விடுபடுவான். இது பல தடவை செய்யாததைப் பற்றியது. பல தடவையானுல் சொல்லுகிறுர், **பராசரரே:—** பரபாக நிவ்ருத்தன், பரபாக ரதன், அபசன் இவர்களின் அன்னத்தைப் புஜித்தால் ப்ராம்ஹணன் சாந்த்ராயணத்தை யனுஷ்டிக்க வேண்டும்.

## परपाकनिवृत्तादिलक्षणानि।

तेषां लक्षणमाह स एव – गृहीत्वाऽग्निं समारोप्य पञ्चयज्ञान्न निर्वपेत्। परपाकनिवृत्तोऽसौ मुनिभिः परिकीर्तितः। पञ्च यज्ञान् स्वयं कृत्वा परान्नेनोपजीवति। सततं प्रातरुत्थाय परपाकरतस्तु सः। गृहस्थधर्मो यो विप्रो ददातिपरिवर्जितः। ऋषिभिर्धर्मतत्वज्ञैरपचः परिकीर्तितः इति। ददातिपरिवर्जितः - अन्नदानवर्जितः केवलं स्वयमेव भुङ्क्ते सोऽपच इत्युच्यते। तस्य निन्दा प्रत्यक्षं श्रुतावाम्नायते - 'नार्यमणं पुष्यति नोसखायम्। केवलाघो भवति केवलादी इति।

**பரபாக நிவ்ருத்தன் முதலியவரின் லக்ஷணங்கள்.**

*அவர்களின் லக்ஷணத்தைச் சொல்லுகிறார் பராசரர்:— அக்னியை க்ரஹித்து, ஸமாரோபணம் செய்து, பஞ்சமஹாயஜ்ஞங்களைச் செய்யாதவன் பரபாக நிவ்ருத்தன், என்று முனிவர்களால் சொல்லப் பட்டுள்ளான். எப்பொழுதும் காலையில் எழுந்து, பஞ்சமஹாயஜ்ஞங்களைத் தான் செய்து, பராந்நத்தினுல் ஜீவிப்பவன் பரபாகரதன் எனப்படுகிறான். க்ருஹஸ்த தர்மமுள்ள எந்த ப்ராம்ஹணன் அன்னதானம் செய்யாமல் இருக்கின்றானோ அவன் தர்மம் அறிந்த ருஷிகளால் அபசன் எனச் சொல்லப்பட்டுள்ளான். எவன் தான் மட்டில் புஜிப்பவனாய் இருக்கின்றானோ அவன் அபசன் என்று சொல்லப்படுகிறான். அவனைப் பற்றிய நிந்தை வேதத்தில் ஸ்பஷ்டமாய்ச் சொல்லப்படுகிறது:— "பெரியோரைப் போஷிக்காமலும் மித்ரனைப் போஷிக்காமலும் தான் மட்டில் புஜிப்பவன் பாபத்தையே யடைபவனாகிறான்".*

शातातपबृहस्पती – यो हि हित्वा विवाहाग्निं गृहस्थ इति मन्यते। अन्नं तस्य न भोक्तव्यं वृथापाको हि स स्मृतः। वृथा पाकस्य भुञ्जानः प्रायश्चित्तं चरेत् द्विजः। प्राणायामशतं कृत्वा घृतं प्राश्य विशुद्ध्यति इति।

சாதாதபரும் ப்ருஹஸ்பதியும்:— எவன் ஔபாஸனத்தை விட்டு க்ருஹஸ்தன் என்று தன்னை நினைத்துள்ளானோ, அவனது அன்னத்தைப் புஜிக்கக் கூடாது. அவன் வ்ருதாபாகன் என்று சொல்லப்பட்டுள்ளான். வ்ருதாபாகனின் அன்னத்தைப் புஜித்த ப்ராம்ஹணன் ப்ராயம்சித்தம் அனுஷ்டிக்க வேண்டும். நூறு ப்ராணாயாமங்கள் செய்து, நெய்யைப் பருகினால் சுத்தனாவான்.

वृथापाके यत् प्रायश्चित्तं तदेव ब्राह्मणनिन्दकादावपि द्रष्टव्यम्। निन्दावचनेन सह पाठात्। तथा च व्यासः – पङ्क्तिभेदी वृथापाकी नित्यं ब्राह्मणनिन्दकः। आदेशी वेदविक्रेता पञ्चैते ब्रह्मघातकाः इति। शौनकः – अनिक्रदं जपेन्मन्त्रं दशवारं यदा तदा। वेदविक्रयिणो गेहे भुङ्क्ते पापात् प्रमुच्यते इति। हारीतः – यदन्नं प्रतिलोमस्य शूद्रजस्योत्तमस्त्रियाम्। महापातकिनश्चैव यदन्नं स्त्रीकृतघ्नयोः। आरूढपतितस्यैव सगोत्राभर्तुरेव च। पाषण्डानाश्रितानां च यतेश्चैव तथैव च। अतिकृच्छ्रं चरेत् भुक्त्वा प्रमादाद् ब्राह्मणस्सकृत्। मत्या चान्द्रायणं कुर्यादामं चेदर्धमेव च। तद्धस्तभोजने चापि त्रिगुणं सहभोजने। चतुर्गुणं तदुच्छिष्टे पानीये त्वर्धमेव च। कृच्छ्राब्दपादमुद्दिष्ट मभ्यासाज्ञानभोजने। मत्याऽभ्यासे तथा कुर्यात्त्रिंशत्कृच्छ्रं द्विजोत्तमः इति। उत्तमस्त्री - ब्राह्मणी। तस्यां प्रातिलोम्येन शूद्रादुत्पन्नश्चण्डालः। सत्यपि सामर्थ्ये नास्तिक्येन किञ्चिदप्याश्रममप्राप्तः अनाश्रितः।

வ்ருதாபாகனுக்குச் சொல்லிய ப்ராயம்சித்தம் எதுவோ, அதுவே ப்ராம்ஹணனை நிந்திப்பவன் முதலியவருக்கும் ப்ராயம்சித்தம் என்று அறியவும். நிந்தாவசனத்துடன் சேர்த்துப் படித்து இருப்பதால். அவ்விதமே, வ்யாஸர்:— பங்க்திபேதம் செய்பவன்,

வ்ருதாபாகன், எப்பொழுதும் ப்ராம்ஹணர்களை நிந்திப்பவன், ஆதேசீ, வேதத்தை விற்பவன், இவ்வைவரும் ப்ரம்ஹகாதகர்களாவர். சௌனகர்:— வேதவிக்ரயம் செய்தவன் வீட்டில் புஜித்தால் கனிக்ரதம் என்ற மந்த்ரத்தைப் பத்து முறை ஜபித்தால் பாபத்தினின்றும் விடுபடுவான். ஹாரீதர்:— ப்ராம்ஹண ஸ்த்ரீயினிடம் சூத்ரனால் பிறந்த ப்ரதிலோமன், மஹா பாதகம் செய்தவன், ஸ்த்ரீ, நன்றி மறந்தவன், ஆரூட பதிதன், ஸகோத்ரையை விவாஹம் செய்து கொண்டவன், பாஷண்டன், அனாஸ்ரிதன் (சக்தியிருந்தும் ஒரு ஆச்ரமத்தையும் அடையாமல் இருப்பவன்.) ஸந்யாஸீ, இவர்களின் அன்னத்தை அறியாமையால் ப்ராம்ஹணன் ஒரு தடவை புஜித்தால், அதிக்ருச்ரத்தை யனுஷ்டிக்க வேண்டும். புத்திபூர்வமாய்ப் புஜித்தால், சாந்த்ராயணத்தை யனுஷ்டிக்க வேண்டும். ஆமத்தை க்ரஹித்தால், பாதி ப்ராயஸ்சித்தம். அவர்கள் கையால் புஜித்தால் நான்கு மடங்கு, அவர்கள் குடித்த மீதி ஜலத்தைக் குடித்தால், பாதி ப்ராயஸ்சித்தம். அறியாமையால் பல தடவை புஜித்தால், அப்த க்ருச்ரத்தின் கால்பாகம். புத்தி பூர்வமாய்ப் பல தடவை புஜித்தால், முப்பது க்ருச்ரம்.

## राजाद्यन्नभोजनफलानि।

राजान्नं तेज आदत्ते शूद्रान्नं ब्रह्मवर्चसम्। आयुस्सुवर्णकारान्नं यशश्चर्मावकर्तिनः। कारुकान्नं प्रजां हन्ति बलं निर्णेजकस्य च। गणान्नं गणिकान्नं च लोकेभ्यः परिकृन्तति। रूपं चिकित्सकस्यान्नं पुंश्चल्यास्त्वन्नमिन्द्रियम्। विष्ठा वार्धुषिकस्यान्नं शस्त्रविक्रयिणो मलम्। एवमेते त्वभोज्यान्नाः क्रमशः परिकीर्तिताः। भुक्त्वाऽतोऽन्यतमस्यान्नममत्या क्षपणं त्र्यहम्। मत्या भुक्त्वा चरेत् कृच्छ्रं रेतो विण्मूत्रमेव च इति।

## அரசன் முதலியவரின் அன்னத்தைப் புஜித்தால் ப்ராயஶ்சித்தம்.

ஸுமந்து:— *அரசனின் அன்னம் தேஜஸ்ஸை அபஹரிக்கும், சூத்ரனின் அன்னம் ப்ரம்ஹ தேஜஸ்ஸையும், தட்டானுடைய அந்நம் ஆயுஸ்ஸையும், சக்கிலியனுடைய அன்னம் கீர்த்தியையும், சிற்பியின் அன்னம் ப்ரஜையையும், வண்ணானுடைய அன்னம் பலத்தையும், கூட்டத்தின் அன்னமும் வேசியின் அன்னம் நல்ல உலகங்களையும், வைத்தியனின் அன்னம் ரூபத்தையும், வ்யபிசாரிணியின் அந்நம் இந்த்ரியத்தையும், அபஹரிக்கும். வட்டியால் ஜீவிப்பவனின் அன்னம் விஷ்டைக்கு ஸமமாகும். ஆயுதத்தை விற்பவனின் அன்னம் மலத்துக்கு ஸமமாகும். இவ்விதம் இந்தப் புஜிக்கக் கூடாத அன்னமுடையவர்கள் வரிசையாகச் சொல்லப்பட்டனர். இவர்களுள் யாராவது ஒருவனின் அன்னத்தை அறியாமையால் புஜித்தால், மூன்று நாள் உபவாஸம் ப்ராயஶ்சித்தம். புத்திபூர்வமாய்ப் புஜித்தால், ப்ராஜாபத்ய க்ருச்ரத்தை யனுஷ்டிக்க வேண்டும். சுக்லம், மலம், மூத்ரம் இவைகளை உட்கொண்டாலும், ப்ராஜாபத்யம் ப்ராயஶ்சித்தம்.*

विष्णुः – गणकगणिकास्तेनगायकान्नानि भुक्त्वा सप्तरात्रं पयसा वर्तेत तक्ष्णोऽन्नं चर्मकर्तुश्च श्वपाकवार्द्धुषिककदर्य दीक्षितबद्धनिगलाभिशस्तषण्डानां च पुंश्चलीदांभिकचिकित्सक लुब्धक क्रूरोच्छिष्टभोजिनां च अवीरस्त्री सुवर्णकारसपत्नपतितानां च पिशुनानृतवादिधर्मसोमविक्रयिणां च शैलूषतुन्नवायकृतघ्न निषादरङ्गावतारि वेदशास्त्रविक्रयिणां च श्वजीविशौण्डिकतैलिक चैलनिर्णेजकानां च रजस्वलासहोपपतिवेश्मनां च भ्रूणघ्नावेक्षित-मुदक्या संस्पृष्टं पतत्रिणाऽवलीढं शुनास्पृष्टं गोघ्रातं च कामतः पदास्पृष्टमवक्षुतं च मत्तक्रुद्धातुराणां चानर्चितं वृथा मांसं च त्रिरात्रमुपवसेत् इति।

**विष्णुः**— கணக்கன், வேசி, திருடன், பாடகன், இவர்களின் அன்னத்தைப் புஜித்தால், ஏழு நாள் வரையில் பாலை மட்டில் பருகி இருக்க வேண்டும். தச்சன், சக்கிலியன், ச்வபாகன், வட்டியால் ஜீவிப்பவன், க்ருபணன், தீக்ஷிதன், விலங்கிடப்பட்டவன், அபவாதம் அடைந்தவன், நபும்ஸகன், வ்யபிசாரிணீ, டம்பன், வைத்யன், லோபி, கொடியவன், உச்சிஷ்டத்தைப் புஜிப்பவன், பர்த்தா புத்ரன் இல்லாத ஸ்த்ரீ, தட்டான், சத்ரு, பதிதன், கோள் சொல்லுபவன், பொய் சொல்லுபவன், தர்மத்தை விற்பவன், ஸோமத்தை விற்பவன், நடிப்பவன், தையற்காரன், நன்றி மறந்தவன், வேடன், நாடகத்தில் நடிப்பவன், வேதம் விற்பவன், ஆயுதம் விற்பவன், நாய்களால் பிழைப்பவன், கள் விற்பவன், எண்ணெய் விற்பவன், வஸ்த்ரத்தை வெளுப்பவன், ரஜஸ்வலை, ஜாரனை வீட்டில் வைத்திருப்பவள் இவர்களின் அன்னத்தையும், கர்ப்பஹத்தி செய்தவனால் பார்க்கப்பட்டதும், ரஜஸ்வலையால் தொடப்பட்டதும், பக்ஷியினால் கொத்தப்பட்டதும், நாயால் தொடப்பட்டதும், பசுவினால் முகர்க்கப்பட்டதும், புத்திபூர்வமாய்க் காலினால் தொடப்பட்டதும், தும்மலால் கெடுக்கப்பட்டதும், ஆகிய அன்னத்தையும், மதமுள்ளவன், கோபமுடையவன், வ்யாதிஸ்தன், இவர்களுடைய அன்னத்தையும், புகழப்படாத அன்னத்தையும், தேவபித்ரு சேஷமில்லாத மாம்ஸத்தையும் புஜித்தால், மூன்று நாள் உபவாஸம் இருக்க வேண்டும்.

त्रिरात्रोपवासः अकामकृतसकृद्भोजनविषयः । अत्रैव विषये लिखितोऽपि – भुक्त्वा वार्धुषिकस्यान्नं सव्रतस्याव्रतस्य वा । शूद्रस्य च तथा भुक्त्वा त्रिरात्रं स्यादभोजनम् इति । अस्मिन्नेव विषये अशक्तस्य ब्रह्मकूर्चपानमाह पराशरः – शूद्रान्नं सूतकान्नं चाप्यभोज्यस्यान्नमेव च । शङ्कितं प्रतिषिद्धान्नं पूर्वोच्छिष्टं तथैव च ।

यदि भुक्तं तु विप्रेण चाज्ञानादापदाऽपि वा। ज्ञात्वा समाचरेत् कृच्छ्रं ब्रह्मकूर्चं तु पावनम् इति। अज्ञानाद्वा आपत्काले वा यो विप्रो भुङ्क्ते, स ब्रह्मकूर्चमाचरेत्। यस्तु ज्ञात्वा भुङ्क्ते स प्राजापत्यमाचरेदित्यर्थः।

மூன்று நாள் உபவாஸம் என்றது அறியாமையால் ஒரு முறை புஜித்ததைப் பற்றியது. இதே விஷயத்தில், லிகிதரும்:— வட்டியால் ஜீவிப்பவன், வ்ரதத்தை யனுஷ்டிக்கிறவன், வ்ரதத்தை யனுஷ்டிக்காதவன், சூத்ரன் இவர்களின் அன்னத்தைப் புஜித்தால், மூன்று நாள் உபவாஸம் இருக்க வேண்டும். இதே விஷயத்தில் சக்தியற்றவனுக்கு ப்ரம்ஹகூர்ச்ச பஞ்சகவ்ய ப்ராசனத்தைச் சொல்லுகிறார். பராசரர்:— சூத்ரன், ஆசௌசமுடையவன், எவனுடைய அன்னம் நிஷேதிக்கப்பட்டுள்ளதோ அவன் இவர்களின் அன்னம், ஸந்தேஹிக்கப்பட்டது, விலக்கப்பட்டது, முன்னால் உச்சிஷ்டமாக்கப்பட்டது, இந்த அன்னங்கள் ப்ராம்ஹணனால் அறியாமையாலாவது, ஆபத்தாலாவது புஜிக்கப்பட்டால் ப்ரம்ஹகூர்ச்ச பஞ்சகவ்ய ப்ராசனம் செய்ய வேண்டும். அறிந்து புஜிக்கப்பட்டால் ப்ராஜாபத்ய க்ருச்ரத்தை யனுஷ்டிக்க வேண்டும்.

अकामकृत सकृद्भोजनविषये अशक्तस्य हारीतस्तूपवासमाह – मृतसूतकशूद्रान्नं सदोषेणापि संस्कृतम्। शङ्कितं प्रतिषिद्धान्नं विद्विषोऽन्नमथापि वा। यदि भुञ्जीत विप्रो यः प्रायश्चित्तं कथं भवेत्। एकरात्रोपवासश्च गायत्र्यष्टशतं जपेत्। प्राशयेत् पञ्चभिर्मन्त्रैः पञ्चगव्यं पृथक् पृथक्। एतेन शुद्ध्यते विप्रो ह्यन्यैश्चाभोज्यभोजनैः इति। अकामकृताभ्यासे तु विष्णुनोक्तं सप्तरात्रपयोव्रतं द्रष्टव्यम्। मनुस्तु यवयवागूपानमाह – अभोज्यानां तु भुक्त्वान्नं स्त्रीशूद्रोच्छिष्टमेव च। जग्ध्वा मांसमभक्ष्यं च सप्तरात्रं यवान् पिबेत् इति। कामकृताभ्यासे हारीतोक्तं चान्द्रायणम्।

அறியாமையால் ஒரு முறை புஜித்த விஷயத்தில், சக்தியற்றவனுக்கு உபவாஸத்தைச் சொல்லுகிறுர், ஹாரீதர்:— ம்ருதாசௌசீ, ஜனனசௌசீ, சூத்ரன் இவர்களின் அன்னம், அசுத்தனுல் சமைக்கப்பட்ட அன்னம், ஸந்தேகப்பட்ட அன்னம், விலக்கப்பட்ட அன்னம், சத்ருவின் அன்னம் இவைகளை ப்ராம்ஹணன் புஜித்தால், அவனுக்கு ப்ராயச்சித்தம் எப்படி ? ஒரு நாள் உபவாஸமும் நூற்றெட்டு முறை காயத்ரீ ஜபமும் ப்ராயச்சித்தம். ஐந்து மந்த்ரங்களால் பஞ்சகவ்யத்தைத் தனித்தனியாய் ப்ராசனம் செய்விக்க வேண்டும். இவைகளால் ப்ராம்ஹணன் சுத்தனுகிறுன். அபோஜ்ய போஜனத்திலும் இதே ப்ராயச்சித்தம். அறியாமையால் பலமுறை செய்யப்பட்ட விஷயத்தில் விஷ்ணுவால் சொல்லப்பட்ட ஏழுநாள் உபவாஸம் ப்ராயச்சித்தம் என்று அறியத்தக்கது. மனுவோவெனில், யவைக் கஞ்சியின் பானத்தை விதிக்கின்றுர்:— அபோஜ்யான்னர்களின் அன்னத்தையும், ஸ்த்ரீ சூத்ர உச்சிஷ்டத்தையும் நிஷித்தமான மாம்ஸத்தையும், புஜித்தால், ஏழுநாள் முழுவதும் யவைக் கஞ்சியை மட்டில் குடிக்க வேண்டும். புத்திபூர்வமாய் அடிக்கடி புஜித்தால், ஹாரீதரால் சொல்லப்பட்ட சாந்த்ராயணம் ப்ராயச்சித்தம்.

तथा शङ्खोऽपि – शूद्रान्नं ब्राह्मणो भुक्त्वा तथा रङ्गावतारिणः। चिकित्सकस्य क्रूरस्य तथा स्त्रीमृगजीविनः। अभिशस्तस्य चोरस्य अवीरायाः स्त्रियास्तथा। चर्मकारस्य वैणस्य क्लीबस्य पतितस्य च। रुक्मकारस्य तक्ष्णश्च रजकस्य च वार्धुषेः। कदर्यस्य नृशंसस्य वेश्यायाः कितवस्य च। गणान्नं भूमिपालान्नं मृगजीविश्ववृत्तिनाम्। सौनिकान्नं सूतकान्नं भुक्त्वा मासव्रतं चरेत् इति। मासव्रतं - चान्द्रायणम्।

சங்கரும்:— சூத்ரன், நாடகத்தில் நடிப்பவன், வைத்யன், கொடியவன், ஸ்த்ரீகளால் பிழைப்பவன்,

ம்ருகத்தால் பிழைப்பவன், அபவாதமுள்ளவன், திருடன், பதி புத்ரன் இல்லாத ஸ்த்ரீ, சக்கிலியன், மூங்கிலால் ஜீவிப்பவன், நபும்ஸகன், பதிதன், தட்டான், தச்சன், வண்ணான், வட்டியால் ஜீவிப்பவன், லோபி, ஹிம்ஸிப்பவன், வேசி, சூதாடுபவன், இவர்களின் அன்னத்தையும், கூட்டம், அரசன், ம்ருகங்களால் ஜிவிப்பவன், நாயால் பிழைப்பவன், மாம்ஸம் விற்கிறவன், ஆசௌச முடையவன் இவர்களின் அன்னத்தையும் ப்ராம்ஹணன் புஜித்தால், சாந்த்ராயண க்ருச்ரத்தை யனுஷ்டிக்க வேண்டும்.

## शुक्तादिभक्षणे प्रायश्चित्तम्।

शुक्तादिभक्षणे प्रायश्चित्तमाह मनुः – शुक्तानि च कषायांश्च पीत्वाऽमेध्यान्यपि द्विजः । तावद्भवत्यप्रयतो यावत्तन्न व्रजत्यधः इति। आपस्तम्बः – अभोज्यं भुक्त्वा नैष्पुरीष्यं तत् सप्तरात्रेणावाप्यते इति । अभोज्यमांसादिभक्षणे निष्पुरीषभावः कर्तव्यः । यावदुदरं निष्पुरीषं भवति, तावदुपवस्तव्यम् । तत् सप्तरात्रेणावाप्यते। येषां त्रिरात्रेणैव नैष्पुरीष्यमवाप्यते, तेषां तावतैव शुद्धिः । तथा च गौतमः – अभोज्यभोजने निष्पुरीषभावस्त्रिरात्र मभोजनं सप्तरात्रं वा इति।

### புளித்தது முதலியதைப் பக்ஷிப்பதில் ப்ராயஶ்சித்தம்.

மனு:— காடி முதலிய புளித்த வஸ்துக்களையும், கஷாயங்களையும், அசுத்த வஸ்துக்களையும் ப்ராம்ஹணன் குடித்தால், அவை ஜீர்ணமாகும் வரையில் அசுத்தனுவான். ஆபஸ்தம்பர்:— "நிஷித்தமான மாம்ஸம் முதலியதைப் புஜித்தால், வயிற்றில் மலமில்லாமலிருப்பது ப்ராயஶ்சித்தம், அது ஏழு நாளால் அடையப்படும்," என்று. நிஷித்தமான மாம்ஸம் முதலியதைப் புஜித்தால், வயிற்றில் மலம் இல்லாமை செய்யத் தகுந்தது. வயிற்றில்

மலம் என்பது எது வரையில் இல்லாமல் இருக்குமோ அது வரையில் உபவாஸம் இருக்க வேண்டும். அது (மலமின்மை யென்பது) ஏழு நாளில் அடையக் கூடியது. எவர்களுக்கு மூன்று நாட்களாலேயே மலம் இல்லாமை ஏற்படுமோ, அவர்களுக்கு மூன்று நாளாலேயே சுத்தி. அவ்விதமே, கௌதமர்:— நிஷித்தமான வஸ்துவைப் புஜித்தால், வயிற்றில் மலம் இல்லாமல் இருக்கும் தன்மை ப்ராயஶ்சித்தம். அத்தன்மை மூன்று நாட்களால் அல்லது ஏழு நாட்களால்.அடையக்கூடும்.

## व्यतीपातादिभोजने प्रायश्चित्तम्।

व्यतीपातादिभोजने प्रायश्चित्तमाह देवलः – व्यतीपाते यदन्नं च महापुरुषभोजनम् । कर्मण्यरिजने भुक्तिर्दशाहे बलिभोजनम् । भूतप्रेतपिशाचानां यदन्नं परिकल्पितम् । कलुषं वर्जनीयं तत् ब्रह्मराक्षसभोजनम्। एतेष्वदंस्तु यो विप्रो धनलोभपरायणः। तदानीं मृत्युमाप्नोति जीवेद्वा पापकार्यसौ । तत्र दोषोपशान्त्यर्थं प्रायश्चित्तमिदं स्मृतम्। प्राजापत्यद्वयं कृत्वा पुनस्संस्कारपूर्वकम्। पञ्चगव्यं पिबेत् पश्चाच्छुद्धो भवति भूतले इति।

**வ்யதீபாதம் முதலியதில் புஜிப்பதில் ப்ராயஶ்சித்தம்.**

தேவலர்:— வ்யதீபாதான்னம், மஹாபுருஷான்னம், கர்மான்னம், சத்ருவின் அன்னம், தசாஹத்தில் பலி, பூதம், ப்ரேதம், பிசாசம், ப்ரம்ஹராக்ஷஸம் இவைகளைக் குறித்து வைக்கப்பட்ட அன்னம், இவைகள் பாபப்ரதங்கள். அவைகளை வர்ஜிக்க வேண்டும். எந்த ப்ராம்ஹணன் பணத்தாசையால் இந்த அன்னங்களைப் புஜிக்கின்றானோ அவன் அப்பொழுதே மரணத்தை யடைவான். பாபச் செயலுடைய இவன் பிழைத்தாலும் அந்தப் பாபத்தைப் போக்குவதற்கு ப்ராயச்சித்தம் இவ்விதம் விதிக்கப்பட்டுள்ளது. இரண்டு ப்ராஜாபத்ய க்ருச்ரம்

அனுஷ்டித்து, புநருபனயனம் செய்து கொண்டு, பஞ்சகவ்ய ப்ராசனம் செய்ய வேண்டும். பிறகு இப்புவியில் சுத்தனுவான்.

### अयुतसहस्रभोजने प्रायश्चित्तम्।

अयुतसहस्रभोजने प्रायश्चित्तमाह मार्कण्डेयः – अयुते वा सहस्रे वा द्विजो ब्राह्मणभोजने। जिह्वाचापल्यतः क्षिप्रं भुञ्जीतापः पिबेत्तु वा। पक्षं वा मासमथ वा भुक्त्वा विप्रो निरन्तरम्। कृच्छ्रं पराकं चान्द्रं च कृत्वा शुद्धिमवाप्नुयात्। वर्षोपरीह शूद्रत्वमवाप्नोतीह निश्चितम् इति। देवलः– अयुते वा सहस्रे वा नानावर्णसमागमे। पतितक्लीबबैडाल-व्रात्यतस्करपूरिते। गुण्डगोलकसङ्कीर्णे नटगायकसंकुले। पाषण्डजनसंसर्गे सर्वपातकिसङ्कुले। भाण्डोच्छिष्टस्वयंपाके स्त्रीजनैरुपशोभिते। यो विप्रो लोकमन्विच्छेन्न भुञ्जीयात् कदाचन इति। सत्रभोजनेऽप्येवम्।

### பதினுயிரம், ஆயிரம் இந்தப் போஜனங்களில் ப்ராயச்சித்தம்.

**மார்க்கண்டேயர்:**— *அயுத (பதினுயிரம்) ப்ராம்ஹண போஜனத்திலாவது, ஸஹஸ்ர (ஆயிரம்) ப்ராம்ஹண போஜனத்திலாவது ப்ராம்ஹணன் நாக்கின் சபலத்தால் புஜித்தாலும், ஜலபானம் செய்தாலும், ஒரு பக்ஷம் அல்லது ஒரு மாஸம் இடைவிடாது புஜித்தால் முறையே பராக க்ருச்ரத்தையும், சாந்தராயண க்ருச்ரத்தையும் அனுஷ்டித்தால் சுத்தனுவான். ஒரு வர்ஷத்திற்கு மேல் புஜித்தால் சூத்ரத் தன்மையை யடைகிறுன், நிச்சயம்.* **தேவலர்:**— *அனேக வர்ணத்தார் கூடியதும், பதிதன், நபும்ஸகன், பைடாலன், வ்ராத்யன் (உபநயன மில்லாதவன்), திருடன் இவர்களால் நிறைந்ததும், குண்டர், கோளகர் இவர்களால் வ்யாபித்ததும், நடன், பாடுபவன் இவர்களால் நிறைந்ததும், பாஷண்டன்,*

பாதகிகள் இவர்களுடன் சேர்ந்ததும், உச்சிஷ்டமான பாத்ரங்களில் சமைக்கப்படுவதும், ஸ்த்ரீகள் நிறைந்ததும், ஆகிய அயுத போஜனத்திலாவது ஸஹஸ்ர போஜனத்திலாவது புண்யலோகத்தை விரும்பும் ப்ராம்ஹணன் ஒருகாலும் புஜிக்கக் கூடாது. ஸத்ரத்தில் புஜிப்பதும் இவ்விதமே நிஷேதம்.

## दीर्घसत्रभोजने प्रायश्चित्तम्।

दीर्घसत्रभोजने प्रायश्चित्तमाह देवलः – वर्षद्वयं वा वर्षं वा यो वा को वा द्विजो भुवि । सङ्कल्प्य भोजयेद्विप्रान् तद्दीर्घं सत्रमुच्यते । विप्रस्तत्र न भुञ्जीयात् पूर्ववद्दुष्टसङ्गमात्। पक्षं वा मासमथ वा भुक्त्वा निष्कृतिमाचरेत्। पक्षभुक्तौ पराकं स्याच्चान्द्रं स्यान्मासभोजने इति।

### தீர்க்க ஸத்ர போஜனத்தில் ப்ராயச்சித்தம்.

தேவலர்:— எவனாவது ப்ராம்ஹணன் இரண்டு வர்ஷம், அல்லது ஒரு வர்ஷம் வரையில் ப்ராம்ஹணர்களுக்கு அன்னதானம் செய்வதாய் ஸங்கல்பம் செய்து கொண்டு ப்ராம்ஹணர்களைப் புஜிப்பித்தால் அது தீர்க்க ஸத்ரம் எனப்படுகிறது. ப்ராம்ஹணன் அதில் புஜிக்கக் கூடாது. முன்போல் துஷ்டர்கள் சேர்வார்களாகையால். ஒரு பக்ஷம் அல்லது ஒரு மாஸம் புஜித்தால் ப்ராயச்சித்தம் செய்து கொள்ள வேண்டும். ஒரு பக்ஷம் புஜித்தால் பராகக்ருச்ரமும், ஒரு மாஸம் புஜித்தால் சாந்த்ராயண க்ருச்ரமும் ப்ராயச்சித்தம்.

## शूद्रसत्रभोजने प्रायश्चित्तम्।

शूद्रसत्रभोजने प्रायश्चित्तमाह स एव – शूद्रसत्रभोजने प्रायश्चित्तमाह स एव — शूद्रसत्रे न भुञ्जीत प्राणैः कण्ठगतैरपि । भुञ्जन्नरकमासाद्य वायसत्वमवाप्नुयात्। पक्षे मास ऋतावब्दे भोजने तु यथाक्रमम् । यावकं तप्तकृच्छ्रं च प्राजापत्यमथैन्दवम् । कृत्वा शुद्धिमवाप्नोति द्विजः पापक्षयात् क्रमात् इति।

**சூத்ர ஸத்ரத்தில் புஜித்தால் ப்ராயஶ்சித்தம்.**

தேவலர்:— ப்ராணன்கள் கழுத்தில் இருந்தாலும் சூத்ரன் அமைத்த ஸத்ரத்தில் ப்ராம்ஹணன் புஜிக்கக் கூடாது. புஜித்தவன் நரகத்தை யடைந்து காக்கையின் ஜன்மத்தை யடைவான். ஒரு பக்ஷம் வரையில் புஜித்தால் யாவகம் ப்ராயஶ்சித்தம். ஒரு மாஸம் ஆனுல் தப்த க்ருச்ரம். இரண்டு மாஸம் ஆனுல் ப்ராஜாபத்ய க்ருச்ரம். ஒரு வர்ஷமானுல் சாந்த்ராயண க்ருச்ரம். இவ்விதம் செய்தால் சுத்தியை யடைகிறுன்.

**शूद्रवेश्यादिगृहे स्वयंपाकादिना भोजने प्रायश्चित्तम्।**

शूद्रादिगृहे स्वयंपाकान्नभोजने प्रायश्चित्तमाह पराशरः – शूद्रालये वा वेश्याया गृहे वाऽऽमं तदर्पितम्। पक्त्वा भुक्त्वा स पापीयान्महान्तं नरकं व्रजेत्॥ तद्दोषपरिहारार्थं प्रायश्चित्तमिदं स्मृतम्। परेद्युर्वा तदानीं वा वापयित्वा शिरोरुहान्। स्नानं कृत्वा ततः पश्चात्तप्तकृच्छ्रं समाचरेत्। पञ्चगव्यं पिबेत् पश्चाच्छुद्धो भवति नान्यथा इति।

**சூத்ரன், வேசி முதலியவர்களின் வீட்டில் தானுகப் பாகம் முதலியதைச் செய்து சாப்பிடுவதில் ப்ராயஶ்சித்தம்.**

பராசரர்:— சூத்ரனின் வீட்டிலாவது, வேசியின் வீட்டிலாவது அவர்களால் கொடுக்கப்பட்ட அரிசி முதலியதைச் சமைத்துப் புஜித்தால் அந்த மஹாபாபீ கொடிய நரகத்தை யடைவான். அந்தப் பாபத்தைப் பரிஹரிப்பதற்கு இந்த ப்ராயஶ்சித்தம் சொல்லப் பட்டுள்ளது:- மறு நாளிலாவது அன்றேயாவது கேசங்களை வபனம் செய்து கொண்டு, ஸ்நானம் செய்து, பிறகு தப்த க்ருச்ரத்தை யனுஷ்டிக்க வேண்டும். பிறகு பஞ்சகவ்ய ப்ராசனம் செய்ய வேண்டும். பிறகு சுத்தனுகிறுன். மற்றப்படி சுத்தனுவதில்லை.

## संहतान्नभोजने प्रायश्चित्तम्।

संहतान्नभोजने प्रायश्चित्तमाह गौतमः – सङ्घीभूय द्विजा ये तु मार्गे तीर्थगमेऽपि वा। स्वद्रव्यमेलनं कृत्वा पक्त्वा भुक्त्वैकदेशतः। ते सर्वे नरकं यान्ति शूद्रतुल्या न संशयः। तेषामिदं मुनिप्रोक्तं प्रायश्चित्तं विशुद्धिदम्। एकरात्रे पञ्चगव्यं द्विरात्रे यावकं चरेत्। प्राजापत्यं त्रिरात्रे च पक्षे चान्द्रायणं स्मृतम्। मासे तु शूद्रतुल्यास्स्युः स्त्रीणामर्धं समीरितम् इति।

### கூட்டத்தாரின் போஜனத்தில் ப்ராயஶ்சித்தம்.

**கௌதமர்:—** *எந்த ப்ராம்ஹணர்கள் கூட்டமாய் கூடி வழியிலோ தீர்த்த யாத்ரையிலேயோ தங்கள் த்ரவ்யத்தை ஒன்று சேர்த்துச் சமைத்து ஒரே இடத்தில் சாப்பிடுகிறார்களோ அவர்கள் எல்லோரும் நரகத்தை யடைவார்கள். அவர்கள் சூத்ரருக்கு ஸமமாவார். ஸம்சயமில்லை. அவர்களுக்குச் சுத்தியைக் கொடுக்கும் ப்ராயஶ்சித்தம் முனிவரர்களால் இவ்விதம் சொல்லப் பட்டுள்ளது:– ஒரு நாள் புஜித்தால் பஞ்சகவ்ய ப்ராசனம். இரண்டு நாளானால் யாவகம். மூன்று நாளானால் ப்ராஜாபத்ய க்ருச்ரம். ஒரு பக்ஷமானால் சாந்த்ராயண க்ருச்ரம். ஒரு மாஸம் புஜித்தால் சூத்ரனுக்கு ஸமமாவர். ஸ்த்ரீகளுக்கானால் சொல்லியதில் பாதி ப்ராயஶ்சித்தம்.*

## क्रीतान्नभोजने प्रायश्चित्तम्।

देवालयेषु मार्गेषु ग्रामेषु नगरेषु च। विप्रः क्रीतान्नभोक्ता चेत्तदा नरकमाप्नुयात् इति। महाभारतेऽपि – क्रीतान्नं देवतागारे ग्रामे वा पत्तने पथि। यो भुङ्क्ते पूर्वजोऽज्ञानान्नरकं स समाप्नुयात् इति। हेमाद्रौ – विप्रः कण्ठगतप्राणः क्रीतान्नं भक्षयेद्यदि। ग्रामे वा नगरे तीर्थे महादेवालयेऽपि वा। स गत्वा नरकं घोरं नानायोनिषु जायते। तस्मात्तस्य विशुद्ध्यर्थं प्रायश्चित्तमुदीरितम्। त्रिरात्रं भोजने कार्यं पक्षे

तप्तं समाचरेत्। महातप्तं तु मासे च वत्सरे चान्द्रमुच्यते । अतःपरं शूद्रतुल्यो विद्वानपि न संशयः । विप्रस्त्रीणामेतदर्धं यतीनां द्विगुणं भवेत् इति।

### விலைக்கு வாங்கிய அன்னத்தைப் புஜிப்பதில் ப்ராயஶ்சித்தம்.

விலைக்கு வாங்கிய அன்னத்தைப் புஜிப்பதை நிந்திக்கிறார், தேவலர்:— தேவாலயங்கள், வழிகள், க்ராமங்கள், நகரங்கள் இவைகளில் ப்ராம்ஹணன் விலைக்கு வாங்கிய அன்னத்தைப் புஜித்தால், அப்பொழுது நரகத்தை யடைவான். மஹாபாரதத்திலும்:— தேவாலயம், க்ராமம், பட்டணம், வழி இவைகளில் விலைக்கு வாங்கிய அன்னத்தை எந்த ப்ராம்ஹணன் அறியாமையால் புஜிக்கின்றானோ அவன் நரகத்தை யடைவான். ஹேமாத்ரியில்:— ப்ராம்ஹணன் ப்ராணன் கழுத்தில் இருந்தாலும் க்ராமத்திலோ, நகரத்திலோ, தீர்த்தத்திலோ, சிவாலயத்திலோ விலைக்கு வாங்கிய அன்னத்தைப் புஜிப்பானாகில், அவன் கொடிய பலவித நரகத்தை யடைந்து பலவிதப் பிறப்புகளை யடைவான். ஆகையால். அந்தப் பாபத்தைப் போக்குவதற்கு ப்ராயஶ்சித்தம் சொல்லப்பட்டுள்ளது. மூன்று நாள் புஜித்தால், ப்ராஜாபத்ய க்ருச்ரம். ஒரு பக்ஷமானால் தப்த க்ருச்ரம். ஒரு மாஸமானால் மாஹாதப்த க்ருச்ரம். ஒரு வர்ஷமானால் சாந்த்ராயண க்ருச்ரம் ப்ராயஶ்சித்தம் என்று சொல்லப்படுகிறது. அதற்கு மேலானால் வித்வானானாலும் சூத்ரனுக்கு ஸமனாவான். ஸம்சயமில்லை ப்ராம்ஹண ஸ்த்ரீகளுக்கானால் சொல்லிய ப்ராயஶ்சித்தத்தில் பாதி. ஸந்யாஸிகளுக்கானால், இரண்டு மடங்கு ப்ராயஶ்சித்தம்.

### यागान्नभोजने प्रायश्चित्तम्।

यागान्नभोजने प्रायश्चित्तमाह कण्वः – यज्ञेषु पशुबन्धेषु अन्नमत्ति यदा द्विजः । स वै नरकमाप्नोति स बिडालसमो द्विजः । भुङ्क्ते

यदि वपाहोमात् प्राक्पापं महदश्नुते । पुनस्तस्योपनयनं प्राजापत्येन शुद्ध्यति । वपायागात् परं विप्रो यो भुङ्क्ते दीक्षितालये । प्राजापत्यं विशुद्ध्यर्थं मुनिभिः परिकीर्तितम् इति । कात्यायनः – ऋत्विजां च परस्त्रीणां भोक्तॄणां यागसद्मनि । उपोष्य रजनीमेकां पञ्चगव्येन शुद्ध्यति । सुवासिनी चेत्तद्भर्तुः पिबेत् पादोदकं तथा । विधवा वपनं कृत्वा प्रपिबेत् ब्रह्मकूर्चकम् । यतिश्च ब्रह्मचारी च पूर्वं यागान्नभक्षणे । चान्द्रं कुर्याद्वपाहोमात् परं कायं समाचरेत् इति ।

**யாகத்தில் அன்னத்தைப் புஜிப்பதில் ப்ராயஶ்சித்தம்.**

கண்வர்:— ப்ராம்ஹணன் யாகங்களிலும், பசுபந்தங்களிலும் அன்னத்தைப் புஜித்தால் அவன் நரகத்தை யடைவான். அவன் பூனைக்கு ஸமமாவான். அவன் வபாஹோமத்திற்கு முன்பு புஜித்தால் மஹாபாபத்தை யடைவான், அவனுக்குப் புனருபநயனம் செய்ய வேண்டும். ப்ராஜாபத்ய க்ருச்ரத்தால் சுத்தனுவான். தீக்ஷிதனின் வீட்டில் வபாயாகத்திற்குப் பிறகு எந்த ப்ராம்ஹணன் புஜிக்கிருனே, அவனுக்கு ப்ராஜாபத்ய க்ருச்ரம் ப்ராயஶ்சித்தம் என்று முனிவர்களால் சொல்லப்பட்டுள்ளது. காத்யாயனர்:— யாகசாலையில் புஜித்த ருத்விக்குகள், அன்ய ஸ்த்ரீகள், இவர்களுக்கு, ஒரு இரவு உபவாஸம் இருந்து பிறகு பஞ்சகவ்ய ப்ராசனம் செய்வதால் சுத்தி. ஸுமங்கலியானுல், தனது பர்த்தாவின் பாத தீர்த்தத்தைப் பருகவேண்டும். விதவையானுல், வபனம் செய்து கொண்டு ப்ரம்ஹகூர்ச்ச பஞ்சகவ்யத்தை ப்ராசனம் செய்ய வேண்டும். ஸந்யாஸியும், ப்ரம்ஹசாரியும் வபாஹோமத்திற்கு முன் யாகான்னத்தைப் புஜித்தால் சாந்த்ராயண க்ருச்ரத்தை யனுஷ்டிக்க வேண்டும். வபாஹோமத்திற்குப் பிறகு புஜித்தால் ப்ராஜாபத்ய க்ருச்ர ப்ராயஶ்சித்தத்தை யனுஷ்டிக்க வேண்டும்.

## अस्नात्वा भोजने प्रायश्चित्तम्।

अस्नात्वा भोजने प्रायश्चित्तमाह गौतमः – अस्नात्वा भोजनं विप्रो नीरोगः कुरुते यदि। स मलाशी सदा ज्ञेयस्सर्वकर्मबहिष्कृतः। श्राद्धकाले तु चान्द्रं स्यात् ग्रहणे तद्द्वयं स्मृतम्। पञ्चपर्वसु तप्तं स्यादितरत्र तु यावकम्। द्विगुणं विधवानां तु यतीनां ब्रह्मचारिणाम् इति।

### ஸ்நானம் செய்யாமல் புஜித்தால் ப்ராயச்சித்தம்.

கௌதமர்:— ரோகமில்லாத ப்ராம்ஹணன் ஸ்நானம் செய்யாமல் புஜிப்பானாகில், அவன் மலத்தைப் புஜிப்பவனாயும், எல்லாக் கர்மங்களுக்கும் அனர்ஹனாயுமாவான். ச்ராத்த காலத்திலானால், சாந்த்ராயண க்ருச்ரம ப்ராயச்சித்தம். க்ரஹணத்திலானால், இரண்டு சாந்த்ராயண க்ருச்ரம். பஞ்சபர்வங்களிலானால், தப்த க்ருச்ரம். (சுக்ல க்ருஷ்ண பக்ஷங்களில் சதுர்தசீ, அஷ்டமீ இந்தத் திதிகளும், அமை, பூர்ணிமை, ஸங்க்ரமணம் இவைகளும் பஞ்சபர்வங்கள் எனப்படுகின்றன.) மற்றக் காலங்களிலானால், யாவகக்ருச்ரம். விதவைகள், ஸந்யாஸிகள், ப்ரம்ஹசாரிகள் இவர்களுக்கு முன் சொல்லிய ப்ராயச்சித்தத்தில் இரண்டு மடங்கு.

## अशुचिकालभोजने प्रायश्चित्तम्।

शातातपः —मूत्रोच्चारं द्विजः कृत्वा ह्यकृत्वा शौचमात्मनः। मोहात् भुक्त्वा त्रिरात्रं स्यान्मत्या सान्तपनं चरेत्। मूत्रयित्वा व्रजन्मार्गं स्मृतिभ्रंशाज्जलं पिबेत्। अहोरात्रोषितः स्नात्वा जुहुयात् सर्पिषा हविः इति। व्याघ्रः – अस्पृश्यस्पर्शनं कृत्वा यदा भुङ्क्ते गृहाश्रमी। अकामतस्त्रिरात्रं स्यात् षड्रात्रं कामतश्चरेत् इति। प्रजापतिः – अस्नात्वा तु यदा भुङ्क्ते पिण्डं दत्वा पितुर्व्रती। स्पृष्ट्वा शवमुदक्यां वा

चण्डालं सूतिकां तथा। अकामतस्त्रिरात्रं स्यात् बुद्ध्या सान्तपनं चरेत् इति। पिण्डं - प्रेतपिण्डम्।

**அசுத்தனுயுள்ள காலத்தில் புஜிப்பதில் ப்ராயச்சித்தம்.**

சாதாதபர்:— ப்ராம்ஹணன், மூத்ர விஸர்க்கத்தைச் செய்து, சௌசம் செய்து கொள்ளாமல், அறியாமையால் புஜித்தால், மூன்று நாள் க்ருச்ரத்தை யனுஷ்டிக்க வேண்டும். புத்திபூர்வமாய்ப் புஜித்தால், ஸாந்தபன க்ருச்ரத்தை யனுஷ்டிக்க வேண்டும். மூத்ரோத்ஸர்க்கம் செய்து வழியில் செல்பவன் மறதியினுல் ஜலபானம் செய்தால், ஒரு நாள் முழுவதும் உபவாஸமிருந்து, ஸ்நானம் செய்து, நெய்யுடன் ஹவிஸ்ஸை ஹோமம் செய்ய வேண்டும். வ்யாக்ரர்:— க்ருஹஸ்தன் தொடக் கூடாதவரைத் தொட்ட பிறகு ஸ்நானம் செய்யாமல் போஜனம் செய்வாளுகில், அறியாமையாலுல், மூன்று நாள் க்ருச்ரம் அனுஷ்டிக்க வேண்டும். புத்திபூர்வமாலுல், ஆறுநாள் க்ருச்ரத்தை யனுஷ்டிக்க வேண்டும். ப்ரஜாபதி:— ப்ரம்ஹசாரி பிதாவுக்கு ப்ரேதபிண்டத்தைக் கொடுத்தபிறகு ஸ்நானம் செய்யாமல் புஜித்தாளுகில், அப்பொழுதும், சவத்தையாவது ரஜஸ்வலையையாவது சண்டாளனையாவது ப்ரஸவித்தவளையாவது தொட்டாலும் ஸ்நானம் செய்யாமல் புஜித்தால், அபுத்தி பூர்வமாலுல், மூன்று நாள் க்ருச்ரம் அனுஷ்டிக்க வேண்டும். புத்திபூர்வமாலுல், ஸாந்தபன க்ருச்ரத்தை யனுஷ்டிக்க வேண்டும்.

## पर्युषितान्नभोजने प्रायश्चित्तम्।

पर्युषितान्नभोजनेऽप्याह स एव – जले निधाय पूर्वेद्युर्यदन्नं पिठरे धृतम्। तत्पर्युषितसंज्ञं स्यात् भुक्त्वा चान्द्रायणं चरेत्। त्रिरात्रं पञ्चरात्रं वा भुक्त्वा पर्युषितं द्विजः। तस्योपनयनं भूयश्चान्द्रायणमथाचरेत्। हिङ्गुजीरकसंमिश्रं तिन्त्रिणीरसवेष्टितम्।

दुर्गन्धरहितं यत्तु भोक्तव्यं द्विजपुङ्गवैः । दध्ना घृतेन तैलेन यदन्नं संस्कृतं भवेत्। दुर्गन्धरहितं भोज्य मन्यथा चान्द्रमुच्यते इति।

### பழமையான அன்னத்தைப் புஜிப்பதில் ப்ராயஶ்சித்தம்.

ப்ரஜாபதி:— முதல் நாளில் பானையில் ஜலத்தில் போட்டு வைக்கப்பட்டுள்ள அன்னம் எதுவோ அது பர்யுஷிதம் எனப்படும். அதைப் புஜித்தால், சாந்த்ராயண க்ருச்ரம் அனுஷ்டிக்க வேண்டும். மூன்று நாள் அல்லது ஐந்து நாள் வரையில் ப்ராம்ஹணன், பர்யுஷிதத்தைப் புஜித்தால், அவனுக்குப் புநருபநயனத்துடன் சாந்த்ராயண க்ருச்ரம் ப்ராயஶ்சித்தம். பெருங்காயம், ஜீரகம் இவைகளுடன் கூடியதும், புளியின் ரஸத்துடன் சேர்ந்ததும், துர்நாற்றமற்றதுமான அன்னம் எதுவோ அது ப்ராம்ஹணர்களால் புஜிக்கத்தகுந்தது. தயிர், நெய், எண்ணெய் இவைகளால் எந்த அன்னம் சேர்க்கப்பட்டுள்ளதோ, அது துர்நாற்றமில்லாமலிருந்தால் புஜிக்கத் தகுந்தது. அவ்விதம் இல்லாவிடில், சாந்த்ராயண க்ருச்ரம் அனுஷ்டிக்க வேண்டும்.

### ओदनवटक माषवटकादि भक्षणे प्रायश्चित्तम्।

गालवः – ओदनान्निर्मितं वस्तु शुष्कीभूतं यदा भवेत्। अभोज्यं भक्षयित्वा तद्यावकं कृच्छ्रमाचरेत्। दुर्गन्धरहितं भक्ष्यं तथा पर्युषितं च यत्। वटकं माषसंभूतं शष्कुल्यादि तथैव च। तैलादिपाकहीनं च भक्ष्यमाहुर्मनीषिणः। माषसंभूतवटकान् शष्कुलीं च तथाविधाम्। निष्कारणतया विप्रो न भुञ्जीत कदाचन। पित्रर्थं देवकार्यार्थं पक्त्वा भुक्त्वा न दोषभाक्। वृथा तानीह भक्षित्वा यावकं कृच्छ्रमाचरेत् इति।

**சோற்று வடாம், உளுந்து வடாம் முதலியதைப் புஜித்தால் ப்ராயச்சித்தம்.**

காலவர்:— சோற்றினால் செய்யப்பட்ட பண்டம் உலர்ந்ததாயானால், அது புஜிக்கத்தகாதது. அதைப் புஜித்தால் யாவக க்ருச்ரத்தை யனுஷ்டிக்க வேண்டும். துர்நாற்றம் இல்லாமல் இருந்தால் புஜிக்கலாம். அவ்விதம் பர்யுஷிதமும் துர்நாற்றம் இல்லாமல் இருந்தால் புஜிக்கத் தகுந்தது. உளுந்தால் செய்யப்பட்ட வடாம், முறுக்கு முதலியது, எண்ணெய் முதலியதில் பாகம் செய்யப்படாதது, ஆகிய இவைகளை வித்வான்கள் புஜிக்கத் தகுந்தது என்கின்றனர். உளுந்தால் செய்யப்பட்ட வடாங்களையும், அவ்விதமான முறுக்கு முதலியதையும் காரணமில்லாமல் ஒரு பொழுதும் ப்ராம்ஹணன் புஜிக்கக் கூடாது. பித்ருக்களுக்காவும், தேவர்களுக்காகவும் சமைத்துப் புஜித்தால் தோஷத்தை யடைவதில்லை. அவ்விதம் இல்லாமல் வீணாக அவைகளைப் புஜித்தால் யாவக க்ருச்ரத்தை யனுஷ்டிக்க வேண்டும்.

परमान्नकृसरभक्षणे कालनियमः ।

देवलः – परमान्नं च कृसरं वृथा पक्त्वा द्विजोत्तमः । भुञ्जीत यदि छर्दित्वा उपोष्य रजनीं तथा । पञ्चगव्यं पिबेत् पश्चाच्छुद्धो भवति नान्यथा । रवौ धनुस्समायाते गृहे कन्या रजस्वला । पितृदेवनिमित्तं च परमान्नं प्रशस्यते इति । गौतमः – धनुर्मासे गृहे कन्या यदि स्यात् प्रथमार्तवा । तथैव देवयात्रायां कृसरान्नं न दोषकृत् । पितृकार्येषु सर्वेषु दैवे बन्धुसमागमे । पक्त्वा भोज्यं तदन्नं स्यात् प्रभूतक्षीरसंभवम् । निमित्तेन विना भुक्त्वा दिनमेकमभोजनम् । पञ्चगव्यं पिबेत्पश्चात् शुद्धो भवति निश्चितम् इति । धनुर्मासे च दुहितरि भगिन्यां स्नुषायां च प्रथमार्तवायां पितृदेवकार्ये बन्धुसमागमे च पायसकृसरान्नभोजने न दोषः । अन्यत्र एकरात्रोपवासः, पञ्चगव्यप्राशनं च प्रायश्चित्तमित्यर्थः ।

**பாயஸம், எள் சேர்ந்த பதார்த்தம் இவைகளைப் புஜிப்பதில் காலநியமம்.**

**தேவலர்:—** பாயஸம், எள்ளுருண்டை இவைகளை வீணாய்ச் சமைத்து (பித்ரு தேவர்களுக்கல்லாமல்) ப்ராம்ஹணன் புஜிப்பானாகில், உடனே வாந்தி செய்து, அன்றிரவு உபவாஸமிருந்து, பிறகு பஞ்சகவ்ய ப்ராசனம் செய்ய வேண்டும். பிறகு சுத்தனாவான். மற்றபடி சுத்தனாவதில்லை. ஸூர்யன் தனுர்ராசியை யடைந்த பொழுதும் (மார்கழி மாஸத்தில்), வீட்டில் கன்யகை ரஜஸ்வலையானாலும், பித்ருதேவர்களுக்காகவும், பாயஸம் ச்லாகிக்கப்படுகிறது. (பாயஸத்தைச் சமைக்க வேண்டும்.) **கௌதமர்:—** மார்கழி மாஸத்திலும், வீட்டில் கன்யகை முதல் தடவை ரஜஸ்வலையானாலும், தேவயாத்ரையிலும் எள்ளுடன் சேர்ந்த அன்னத்தைப் புஜிப்பது தோஷத்தைச் செய்யாது. எல்லாப் பித்ருகார்யங்களிலும், தேவகார்யங்களிலும், பந்துக்கள் வந்த காலத்திலும், அதிகமான பாலுடன் கூடிய அன்னத்தைச் சமைத்து அது புஜிக்கத் தகுந்ததாகும். காரணம் இல்லாமல் பாயஸ அன்னத்தைப் புஜித்தால் ஒரு நாள் உபவாஸம் ப்ராயஶ்சித்தம். பிறகு பஞ்சகவ்ய ப்ராசனம் செய்ய வேண்டும். பிறகு சுத்தனாகிறான். நிச்சயம். மார்கழி மாஸத்திலும், பெண்ணுவது, ஸஹோதரியவது, நாட்டுப் பெண்ணுவது முதல் தடவையாய் ரஜஸ்வலையானாலும், பித்ருகார்யத்திலும், தேவகார்யத்திலும், பந்துக்கள் வந்த காலத்திலும், பாயஸம், எள்ளன்னம் இவைகளைப் புஜிப்பதில் தோஷமில்லை. மற்ற காலத்தினால், ஒரு நாள் உபவாஸம் இருக்க வேண்டும். பஞ்சகவ்ய ப்ராசனமும் ப்ராயஶ்சித்தம், என்பது பொருள்.

**व्रात्यकुष्ठ्याद्यन्नभोजने प्रायश्चित्तम्।**

व्रात्याद्यन्नभोजने देवलः – व्रात्यान्नं यदि कुष्ठ्यन्नं भुङ्क्ते विप्रः क्षुधातुरः । एकादश्यन्नभुक्त्वैव शुद्ध्यै चान्द्रायणं चरेत् ।

कुण्डगोलकयोरन्नं परिवित्तेस्तथैव च । परिवेत्तुर्यदन्नं च भुक्त्वा चान्द्रायणं चरेत् । देवार्चकस्य यो भुङ्क्ते तथा गणकवेश्मनि । उभौ तौ पापिनौ प्रोक्तौ प्रायश्चित्तमथार्हतः । एकरात्रे पञ्चगव्यं द्विरात्रे यावकं स्मृतम् । मासमात्रे पराकं स्यादब्दे चान्द्रमुदीरितम् । ततःपरं तत्समस्स्यात् स्त्रीणामर्धमुदीरितम् । यतेराराधने भुक्त्वा यत्यन्नं भा(भो) जनोपरि । दंपत्योर्भुक्तशिष्टं यद्भुक्त्वा चान्द्रायणं चरेत् । उल्लङ्घितं पादहतं बिडालाखुविमर्दितम् । देवपूजाविहीनं यद्वैश्वदेवविवर्जितम् । देवालये च यद्भुक्तं यदन्नं मूल्यसंभवम् । शीतीकृतं यदन्नं च शूर्पेण वदनेन वा । तुषपाषाणसंयुक्तं फलीकरणमिश्रितम् । असाक्षिकं यदन्नं च यदन्नं जीवतण्डुलम् । एतत् भुक्त्वा विशुद्ध्यर्थं पराकं कृच्छ्रमाचरेत् इति । भोक्तुरागमनात् पूर्वं भोजनपात्रे यत् परिवेषितम्, तदसाक्षिकम् ।

**வ்ராத்யன், குஷ்டரோகி முதலியவரின் அன்னத்தைப் புஜித்தால் ப்ராயஸ்சித்தம்.**

தேவலர்:— *ப்ராம்ஹணன் பசியால் வருந்தியவனாய் வ்ராத்யன் (காலத்தில் உபநயன மாகாதவன்) குஷ்டரோகி இவர்களின் அன்னத்தைப் புஜித்தாலும், ஏகாதசியில் புஜித்தாலும், சுத்திக்காக, சாந்த்ராயண க்ருச்ரத்தை யனுஷ்டிக்க வேண்டும். குண்டன், கோளகன், பரிவித்தி, பரிவேத்தா இவர்களின் அன்னத்தைப் புஜித்தால் சாந்த்ராயண க்ருச்ரத்தை யனுஷ்டிக்க வேண்டும். தேவதையைப் பூஜை செய்பவன், கணக்கன் இவ்விருவர்களின் வீட்டில் புஜிப்பவர்கள் பாபிகள் எனப்படுகின்றனர். அவர்கள் ப்ராயஸ்சித்தத்திற்கு உரியவர்கள். ஒரு நாளாகில், பஞ்சகவ்ய ப்ராசனம் ப்ராயஸ்சித்தம். இரண்டு நாளாகில், யாவக க்ருச்ரம். ஒரு மாஸமானால், பராக க்ருச்ரம். ஒரு வர்ஷமானால், சாந்த்ராயண க்ருச்ரம். அதற்கு மேலானால், எவன்*

அன்னத்தைப் புஜித்தாலே அவனுக்கு ஸமனாவான். ஸ்த்ரீகளுக்கானால் பாதி ப்ராயஶ்சித்தம் சொல்லப் பட்டுள்ளது. ஸந்யாஸியின் ஆராதனத்தில் புஜித்தாலும், ஸந்யாஸியின் பாத்திரத்தில் உள்ள அன்னத்தைப் புஜித்தாலும், தம்பதிகள் போஜனம் செய்து மீதியுள்ளதைப் புஜித்தாலும் சாந்த்ராயண க்ருச்ரத்தை யனுஷ்டிக்க வேண்டும். காலால் தாண்டப்பட்டதும், காலால் மிதிக்கப்பட்டதும், பூனை, எலி இவைகளால் கெடுக்கப்பட்டதும், தேவதைக்கு நிவேதனம் செய்யப்படாததும், வைச்வதேவம் செய்யப்படாததுமான அன்னத்தைப் புஜித்தாலும், தேவாலயத்தில் புஜித்தாலும், விலைக்கு வாங்கிப் புஜித்தாலும், முறத்தினாலாவது, வாயினாலாவது குளிர்ந்ததாக்கப்பட்ட அன்னத்தைப் புஜித்தாலும், உமி, கல், தவிடு இவைகளுடன் கூடியதைப் புஜித்தாலும், சாக்ஷியில்லாத அன்னத்தைப் புஜித்தாலும், நன்றாகப் பாகமாகாத அன்னத்தைப் புஜித்தாலும், சுத்திக்காகப் பராக க்ருச்ரத்தை யனுஷ்டிக்க வேண்டும். புஜிப்பவன் வருவதற்கு முன் போஜன பாத்ரத்தில் வைக்கப்பட்ட அன்னம் அஸாக்ஷிகம் எனப்படுகிறது.

## अन्तश्शवग्रामभोजने प्रायश्चित्तम्।

अन्तः शवग्रामभोजने प्रायश्चित्तमाह संवर्तः – यत्र ग्रामे तु कुणपो विप्रो वर्तेत तत्र वै। पाकयज्ञं तथा भुक्तिं जलाहरणमेव च। न कुर्यात्तावतो विप्रो यावन्नान्यत्र नीयते। कुणपेनाश्रिते ग्रामे विप्रो भुक्त्वा स पापकृत्। प्राजापत्यं तु कुर्वीत पञ्चगव्यमतः परम्। बालानां क्षीरपाने तु न दोषो गृहमेधिनाम् इति।

## சவம் உள்ளிருக்கும் க்ராமத்தில் புஜித்தால் ப்ராயஶ்சித்தம்.

ஸம்வர்த்தர்:— எந்த க்ராமத்தில் ப்ராம்ஹணனின் சவம் இருக்கின்றதோ, அந்த க்ராமத்தில், பாகயஜ்ஞம்,

(வைச்வதேவம் முதலியது), போஜனம், ஜலத்தைக் கொண்டு வருவது, இவைகளை அந்தச் சவம் க்ராமத்திலிருந்து வெளியேற்றப்படும் வரையில் செய்யக் கூடாது. சவமுள்ள க்ராமத்தில் ப்ராம்ஹணன் புஜித்தால் பாபியாவான். அவன் ப்ராஜாபத்ய க்ருச்ரத்தை யனுஷ்டிக்க வேண்டும். பிறகு பஞ்சகவ்ய ப்ராசனம் செய்ய வேண்டும். க்ருஹஸ்தர்களின் குழந்தைகள் பாலைப் பருகுவதில் தோஷமில்லை.

## चन्द्रसूर्योपरागभोजने प्रायश्चित्तम्।

उपरागभोजने प्रायश्चित्तमाह मनुः – सूर्योपरागे यो भुङ्क्ते तस्य पापं महत्तरम् । तस्य पापविशुद्ध्यर्थं तप्तकृच्छ्रमुदीरितम् । चन्द्रोपरागकाले तु भुक्त्वा कायं समाचरेत् । उभयोर्भोजने विप्रः पुनस्संस्कारमर्हति इति । मरीचिरपि – सूर्यग्रहे तु नाश्नीयात् पूर्वं यामचतुष्टयम् । चन्द्रग्रहे तु यामांस्त्रीन् भुक्त्वा पापं समश्नुते । इमं धर्मं परित्यज्य यो विप्रस्त्वन्यथा चरेत् । तस्योपनयनं भूयस्तप्तं सान्तपनं स्मृतम् इति । सूर्यग्रहे भोजने तप्तकृच्छ्रम्, चन्द्रग्रहे सान्तपनम्, उभयोः पुनस्संस्कार इत्यर्थः ।

### சந்த்ர ஸூர்ய க்ரஹணத்தில் புஜிப்பதில் ப்ராயச்சித்தம்.

**மனு:**— ஸூர்ய க்ரஹணத்தில் எவன் புஜிப்பானோ அவனுக்கு மிகுந்த பாபமுண்டாகும். அப்பாபத்தைப் போக்குவதற்குக் தப்த க்ருச்ரம் ப்ராயச்சித்தம், என்று விதிக்கப்பட்டுள்ளது. சந்த்ர க்ரஹண காலத்தில் புஜித்தால், ப்ராஜாபத்ய க்ருச்ரத்தை யனுஷ்டிக்க வேண்டும். இவ்விரண்டு க்ரஹணத்திலும் புஜித்தால், புநருபநயனம் செய்து கொள்ள வேண்டும். **மரீசி:**— ஸூர்ய க்ரஹணத்தில் அதற்கு முன் நான்கு யாமங்களில் புஜிக்கக் கூடாது. சந்த்ர க்ரஹணத்திலானால் அதற்கு முன் மூன்று யாமங்களில்

புஜிக்கக் கூடாது. புஜித்தால் பாபத்தை யடைகிருன். இந்தத் தர்மத்தை விட்டு எந்த ப்ராம்ஹணன் வேறு விதமாய்ச் செய்வானே அவனுக்குப் புநருபநயனமும், தப்த க்ருச்ரமும், ஸாந்தபன க்ருச்ரமும் விதிக்கப்பட்டுள்ளது. ஸூர்ய க்ரஹணத்தில் புஜித்தால் தப்த க்ருச்ரமும், சந்த்ர க்ரஹணத்தில் புஜித்தால் ஸாந்தபன க்ருச்ரமும், இரண்டிலும் புஜித்தால் புநருபநயனமும், ப்ராயஶ்சித்தம் என்பது பொருள்.

## भिन्नपात्रभोजने प्रायश्चित्तम्।

भिन्नपात्रभोजने प्रायश्चित्तमाह गालवः – स्वर्णपात्रं तथा कांस्यं राजतं भिन्नमेव यत् । तत्र भुक्त्वा चरेत्कायमन्यथा दोषमाप्नुयात्। येषु पर्णेषु यो भुङ्क्ते यदा तत्र भुजिं चरेत्। पर्णान्तरं न युञ्जीत तथा चेदैन्दवं चरेत् इति । गौतमोऽपि – एकजातीयपर्णेषु कांस्ये चाभिन्नभाजने। भोजनं कुरुते यस्तु स पूर्णायुर्भवेदिह इति।

### உடைந்த பாத்ரத்தில் புஜிப்பதில் ப்ராயஶ்சித்தம்.

காலவர்:— ஸ்வர்ண பாத்ரம், வெண்கலப் பாத்ரம், வெள்ளிப் பாத்ரம் இவைகள் உடைந்திருந்தால், அதில் புஜித்தால், ப்ராஜாபத்ய க்ருச்ரம் அனுஷ்டிக்க வேண்டும். இல்லாவிடில் பாபத்தையடைவான். இலைகளில் போஜனம் செய்வானகில், புஜிக்கும் பொழுது வேறு ஜாதி இலையைச் சேர்த்துக் கொள்ளக் கூடாது. அப்படிச் சேர்த்துக் கொண்டால் சாந்த்ராயண க்ருச்ரத்தை யனுஷ்டிக்க வேண்டும். கௌதமரும்:— ஒரே ஜாதியான இலைகளிலும், வெண்கலப் பாத்ரத்திலும், உடையாத பாத்ரத்திலும் எவன் போஜனம் செய்கின்ருனே அவன் பூர்ணமான ஆயுஸ்ஸை இவ்வுலகில் அடைவான்.

## रजस्वलापकान्नभोजने प्रायश्चित्तम्।

रजस्वलापकान्नभोजने प्रायश्चित्तमाह मार्कण्डेयः – अज्ञात्वा

पुष्पिणी नारी कृत्वा वै पचनक्रियाम्। पश्चाच्छुष्कं रजो दृष्ट्वा यदा तस्मादपक्रमेत्। तां दृष्ट्वा भाषणं कृत्वा भुक्तवन्तो यदि द्विजाः। चान्द्रायणेन शुद्धास्स्युः पञ्चगव्येन ते तथा। पुनः कर्म प्रकुर्वीरन् भवेयुः पापिनोऽन्यथा इति।

### ரஜஸ்வலை சமைத்த அன்னத்தைப் புஜிப்பதில் ப்ராயஶ்சித்தம்.

**மார்க்கண்டேயர்:—** *ரஜஸ்வலையான ஸ்த்ரீ அறியாமையால் பாகம் செய்து, பிறகு உலர்ந்த ரஜஸ்ஸைப் பார்த்து அந்த இடத்தினின்றும் விலகினால், அவளைக் கண்டு அவளுடன் பேசி, ப்ராம்ஹணர்கள் புஜித்தால், அவர்கள் சாந்த்ராயண க்ருச்ரத்தாலும் பஞ்சகவ்ய ப்ராசனத்தாலும் சுத்தர்களாவார்கள். மறுபடி கர்மத்தைச் (உபநயனம்) செய்ய வேண்டும். அவ்விதம் செய்யாவிடில் பாபிகளாவார்கள்.*

### निषिद्धदिने द्विर्भोजने ब्रह्मयज्ञाद्यकरणे प्रायश्चित्तम्।

निषिद्धदिनेषु द्विर्भोजने प्रायश्चित्तमाह स एव – अर्कद्विपर्वरात्रौ च मृताहात् पूर्ववासरे। तथा चतुर्दश्यष्टम्योः सङ्क्रान्तौ च महोत्सवे। पितरौ व्याधिनाऽऽक्रान्तौ महाराजनिपातने। श्रोत्रिये मरणं प्राप्ते गुरूणां दुःखसम्भवे। न द्विवारं समश्नीयाद्विप्रो धर्ममनुस्मरन्। तस्य पापस्य शुद्ध्यर्थं सहसा निष्कृतिं चरेत्। अज्ञानात् कायकृच्छ्रं स्यात् ज्ञात्वा तप्तं समाचरेत्। पञ्चगव्येन शुद्धस्स्याद्विप्रो द्विवारभोजने इति। एतदनभ्यासविषयम्। अभ्यासे तु भोजनप्रकरणोक्तं अर्कद्विपर्वरात्रौ च इत्यादि प्रायश्चित्तं द्रष्टव्यम्।

### நிஷித்த தினத்தில், இருமுறை புஜிப்பதிலும், ப்ரம்ஹ யஜ்ஞம் முதலியதைச் செய்யாவிடிலும் ப்ராயஶ்சித்தம்.

**மார்க்கண்டேயர்:—** *ஞாயிற்றுக் கிழமை, அமை, பூர்ணிமை இவைகளின் இரவிலும், ச்ராத்த தினத்திற்கு*

முதல் நாள், சதுர்த்தசீ, அஷ்டமீ, ஸங்க்ரமணம், பெரிய உத்ஸவம், மாதாபிதாக்கள் வ்யாதியுடன் இருக்கும் காலம், மஹாராஜாவின் மரணம், ச்ரோத்ரியனின் மரணம், குருக்களுக்குத் துக்கம் நேரிட்ட காலம் இவைகளிலும் தர்மம் அறிந்த ப்ராம்ஹணன் இருமுறை புஜிக்கக் கூடாது. புஜித்தால் அப்பாபத்தைப் போக்குவதற்கு உடனே ப்ராயஸ்சித்தத்தை யனுஷ்டிக்க வேண்டும். அறியாமையால் புஜித்தால், ப்ராஜாபத்ய க்ருச்ரம் அனுஷ்டிக்கப்பட வேண்டும். அறிந்து புஜித்தால், தப்த க்ருச்ரத்தை யனுஷ்டிக்க வேண்டும். பிறகு பஞ்சகவ்ய ப்ராசனத்தாலும் சுத்தனுவான். இது அடிக்கடி செய்யாத விஷயத்தைப் பற்றியது. அடிக்கடி செய்திருந்தால், போஜன ப்ரகரணத்தில் (ஆஹ்னிக காண்டத்தில்) "அர்க்க த்விபர்வ ராத்ரௌ ச" என்று சொல்லிய ப்ராயஸ்சித்தத்தை அறியவும்.

स एव – वैश्वदेवं देवतार्चां नित्यहोमं तथाविधम् । ब्रह्मयज्ञं पितॄणां च तर्पणं द्विजवल्लभः । त्यक्त्वा भुक्त्वा तथा विप्रस्सुरापीत्युच्यते बुधैः । तप्तकृच्छ्रं चरेत् पापी तस्माद्दोषात् प्रमुच्यते । पञ्चगव्येन पूतात्मा नान्यथा शुद्धिरिष्यते इति । एतदसकृत्करणविषयम् । सकृत्करणे तु वेदोदितानां नित्यानां कर्मणां समतिक्रमे । स्नातकव्रतलोपे च प्रायश्चित्तमभोजनम् इति मनूक्त एकरात्रोपवासो द्रष्टव्यः ।

மார்க்கண்டேயரே:— வைச்வதேவம், தேவபூஜை, நித்ய ஹோமம், ப்ரம்ஹயஜ்ஞம், பித்ருதர்ப்பணம் இவைகளை விட்டு ப்ராம்ஹணன் புஜிப்பானுகில், அவன் ஸுராபானம் செய்தவனென்று அறிந்தவர்களால் சொல்லப்படுகிறுன். அவன் தப்த க்ருச்ரத்தை யனுஷ்டித்தால் அப்பாபத்தினின்றும் விடுபடுவான். பஞ்சகவ்ய ப்ராசநத்தாலும் சுத்தனுவான். இல்லாவிடில்

சுத்தனுகான். இது அடிக்கடி செய்ததைப் பற்றியது. ஒரு முறை மட்டில் செய்திருந்தால், "வேதத்தில் சொல்லப்பட்ட நித்ய கர்மங்களைச் செய்யாவிடினும், ஸ்நாதகனுக்கு வ்ரதலோபம் ஏற்பட்டாலும், அதில் ப்ராயஶ்சித்தம் உபவாஸம்" என்று மனுவினால் சொல்லப்பட்ட ஒரு நாள் உபவாஸம் ப்ராயஶ்சித்தம் என்று அறியத்தக்கது.

स्वस्वकाले गर्भाधान पुंसवन सीमन्तजातकर्मनामकरणान्न-प्राशन चौलाक्षरसंग्रह व्रताकरणे अजिनादित्यागे अग्निकार्याद्यकरणे च प्रायश्चित्तम्।

स्वस्वकाले गर्भाधानाद्यकरणे प्रायश्चित्तमुक्तं हेमाद्रौ – स्नातवत्यामृतौ पत्न्यां चतुर्थे पञ्चमेऽह्नि वा। कृत्वाऽऽभ्युदयिकं प्रातस्तद्रात्रौ मन्त्रपूर्वकम्। गर्भाधानं ततः कुर्यात् प्रतिगर्भं न तत् स्मृतम्। अन्यथा गर्भघाती स्याद्यथा जारस्तथैव सः॥ प्राजापत्यत्रयं कुर्यात् द्वितीये पुनरार्तवे। सीमन्तपुंसवनयोः स्वकालाकरणे सति। प्राजापत्यद्वयं कृत्वा शुद्धो भवति नान्यथा। जातकर्म न कुर्वीत नास्तिक्याद्यदि पूर्वजः। प्राजापत्यद्वयं कुर्यान्नास्ति(देवं) चौले तथा व्रते। एकादशे द्वादशे वा नामकर्म विधीयते। अतिपत्तौ पिता कुर्यात् प्राजापत्यद्वयं ततः। अन्नप्राशनचौलादि काले कुर्याद्व्रतेऽपि वा। मुख्यकालपरित्यागादन्नप्राशनकर्मणः। व्रतबन्धे तु गौणं स्यात् प्राजापत्यमुदीरितम्। देशकालानुरोधेन यदि चौलं विलम्बते। प्राजापत्यद्वयं कृत्वा तत्पापं परिशोधयेत्। पञ्चमाब्दं विलङ्घ्याशु शिशोरक्षरसङ्ग्रहे। कायिकं तत्र कर्तव्यमन्यथा दोषमाप्नुयात्। यदि कामादष्टमाब्दं लङ्घयित्वा चरेद्व्रतम्। नवमे तप्तकृच्छ्रं स्याद्दशमे तच्च कायिकम्। एकादशे द्वादशे वा ह्यतिक्रम्यैन्दवं चरेत्। तत आषोडशात् कुर्या दैन्दवत्रयमेव च। अजिनं मेखलां दण्डं ब्रह्मचारी यदि त्यजेत्।

प्राजापत्यं पक्षमात्रे मासे तप्तं समाचरेत् । अब्दमात्रं परित्यागे कुर्याच्चान्द्रायणव्रतम् । अग्निकार्यं ब्रह्मयज्ञं देवर्षिपितृतर्पणम् । अकृत्वा वत्सरे चान्द्रं तत्परं पतितो हि सः इति ।

**அதனதன் காலத்தில் கர்ப்பாதானம் முதலியதைச் செய்யாவிடில் ப்ராயஸ்சித்தம்.**

**ஹேமாத்ரியில்:—** *பத்னீ ரஜஸ்வலையாயிருந்து ஸ்நானம் செய்த பிறகு நான்காவது அல்லது ஐந்தாவது தினத்தின் காலையில் நாந்தீ ச்ராத்தம் செய்து, அன்று இரவில் மந்த்ர பூர்வமாய், கர்ப்பாதானத்தைச் செய்ய வேண்டும். அதை ஒவ்வொரு கர்ப்பத்திலும் செய்ய வேண்டியதில்லை. செய்யாவிடில் கர்ப்பஹத்தி தோஷத்தை யடைவான். அவன் ஜாரபுருஷன் போலவே ஆவான். அதற்காக இரண்டாவது ரஜஸ்ஸில், மூன்று ப்ராஜாபத்ய க்ருச்ரங்களை யனுஷ்டிக்க வேண்டும். ஸீமந்தம், பும்ஸவனம் இவைகளை விஹித காலத்தில் செய்யாவிடில், இரண்டு ப்ராஜாபத்ய க்ருச்ரத்தை யனுஷ்டித்தால், சுத்தனுவான். அதன்றியில் சுத்தனுகான். ப்ராம்ஹணன் நாஸ்திகத் தன்மையால் ஜாதகர்மத்தைச் செய்யாவிடில் இரண்டு ப்ராஜாபத்ய க்ருச்ரத்தை யனுஷ்டிக்க வேண்டும். சௌளத்திலும் வ்ரதத்திலும் அப்படியே. குழந்தை பிறந்த பதினொன்று அல்லது பன்னிரண்டாவது நாளில் நாமகரணம் விதிக்கப்படுகிறது. அதை அதிக்ரமித்தால் பிதா இரண்டு ப்ராஜாபத்ய க்ருச்ரத்தை யனுஷ்டிக்க வேண்டும். அன்னப்ராசனம், சௌளம் இவைகளை அந்தந்தக் காலத்தில் செய்ய வேண்டும். அல்லது உபநயன காலத்தில் செய்ய வேண்டும். அன்ன ப்ராசன கர்மத்தை முக்ய காலத்தில் செய்யாவிடில், உபநயன காலத்தில் செய்வது கௌணமாகும். அதற்கு ப்ராயஸ்சித்தம் ஒரு ப்ராஜாபத்ய க்ருச்ரம் விதிக்கப்பட்டுள்ளது. தேச காலங்களை யனுஸரித்து, சௌளத்தைச் செய்யத் தாமதித்தால் அந்தப்*

பாபத்தைப் பரிஹரிக்க இரண்டு ப்ராஜாபத்ய க்ருச்ரத்தை யனுஷ்டிக்க வேண்டும். ஐந்தாவது வயதைத் தாண்டி அக்ஷராரம்பத்தைத் தாமதித்தால் ப்ராஜாபத்ய க்ருச்ரத்தை யனுஷ்டிக்க வேண்டும். இல்லாவிடில் தோஷத்தை யடைவான். புத்திபூர்வமாய் உபநயனத்தில் எட்டாவது வயதை அதிக்ரமித்தால் ஒன்பதாவது வயதில் செய்தால் தப்த க்ருச்ரத்தையும், பத்தாவது வயதில் செய்தால் ப்ராஜாபத்ய க்ருச்ரத்தையும், பதினென்று அல்லது பன்னிரண்டாவது வயதை அதிக்ரமித்தால் சாந்த்ராயண க்ருச்ரத்தையும் அனுஷ்டிக்க வேண்டும். அதற்குப் பிறகு பதினறு வயது வரையில் மூன்று சாந்த்ராயண க்ருச்ரத்தை யனுஷ்டிக்க வேண்டும். க்ருஷ்ணஜினம், மேகலே, தண்டம், இவைகளை ப்ரம்ஹசாரீ பரித்யாகம் செய்தால், ஒரு பக்ஷமாகில் ப்ராஜாபத்ய க்ருச்ரம். ஒரு மாஸமானல் தப்த க்ருச்ரம். ஒரு வர்ஷமானல் சாந்த்ராயண க்ருச்ரம் அனுஷ்டிக்க வேண்டும். அக்னி கார்யம், ப்ரம்ஹயஜ்ஞம், தேவ ருஷி பித்ரு தர்ப்பணம் இவைகளை ஒரு வர்ஷம் செய்யாமல் இருந்தால் சாந்த்ராயணம் ப்ராயஶ்சித்தம். அதற்கு மேலானல் அவன் பதிதனுவான்.

## उष्णोदकस्नाने प्रायश्चित्तम्।

उष्णोदकस्नानादौ प्रायश्चित्तमाह जाबालिः – कूपोदकेन सप्ताहं स्नानमुष्णेन वारिणा । मृत्तिकाभिर्विना शौचं कृत्वा सप्ताहमेव च । प्राजापत्यं विशुद्ध्यर्थं चरेत् पूतो भवेत् द्विजः । पञ्चगव्यं ततः पीत्वा पूतो भवति नान्यथा इति ।

**வெந்நீரில் ஸ்நானம் செய்வதில் ப்ராயஶ்சித்தம்.**

ஜாபாலி:— ப்ராம்ஹணன் ஏழு நாள் வரையில் கிணற்று ஜலத்தாலும் வெந்நீராலும் ஸ்நானத்தையும், ம்ருத்திகையில்லாமல் சௌசத்தையும் செய்தானகில், சுத்திக்காக ப்ராஜாபத்ய க்ருச்ரத்தை யனுஷ்டித்தால்

சுத்தனுவான். பிறகு பஞ்சகவ்ய ப்ராசனமும் செய்ய வேண்டும். இல்லாவிடில் சுத்தனுகான்.

## यज्ञोपवीतादिना विना भोजने प्रायश्चित्तम्।

यज्ञोपवीतादिना विना भोजने प्रायश्चित्तमाह देवलः – विना यज्ञोपवीतेन शिखया च द्विजोत्तमः। उच्छिष्टो यदि मोहात्मा पापकृत् स भवेद्द्विजः। उपोष्य रजनीमेकां पञ्चगव्येन शुद्ध्यति इति। शिखया विना शिखाबन्धनेन विनेत्यर्थः।

### யஜ்ஞோபவீதமில்லாமல் போஜனம் செய்தால் ப்ராயம்ச்சித்தம்.

தேவலர்:— ப்ராம்ஹணன் யஜ்ஞோபவீதமில்லாமலும், சிகையைக் கட்டாமலும் அறியாமையால் புஜித்தானுகில், அவன் பாபம் செய்தவனுவான். ஒரு இரவு உபவாஸமிருந்து மறுநாளில் பஞ்சகவ்ய ப்ராசனத்தால் சுத்தனுவான்.

## शिखोपवीतभ्रंशे प्रायश्चित्तम्।

शिखानाशे तु गौतमः – शिखां विना द्विजश्रेष्ठः कर्णे गोवालरोमभिः। धृत्वा तद्दोषशान्त्यर्थं प्राजापत्यं समाचरेत्। यावच्छिखा पुनर्जाता तावत्कर्णेन धारयेत्। ब्रह्मविष्णुमहेशाख्या ब्रह्मसूत्रस्य तन्तवः। एकस्मिन् त्रुटिते विप्रः पुनर्धृत्वा नवं मुदा। नित्यकर्म प्रकुर्वीत त्रुटितं निक्षिपेज्जले। ब्रह्मसूत्रं तु वामांसात् भ्रष्टं स्याच्चतुरङ्गुलम्। प्राणायामत्रयं कृत्वा पुनः स्थाने नियोजयेत्। प्राणायामशतं कृत्वा स्वस्थाने पूर्ववत् क्षिपेत्। मणिबन्धे यदा भ्रष्टं प्राणायामसहस्रकम्। कृत्वा शुद्धिमवाप्नोति वामहस्तादधो गतम्। तत् सूत्रं सहसा त्यक्त्वा धारयेदन्यसूत्रकम्। जले भ्रष्टं परित्यज्य सहस्रं वेदमातरम्। जप्त्वा शुद्धिमवाप्नोति नान्यथा शुद्धिरीरिता इति।

**சிகை, யஜ்ஞோபவீதம் இவை கன்ஞல் ப்ராயச்சித்தம்.**

*சிகை போய்விட்டால், கௌதமர்:— ப்ராம்ஹணன் சிகையில்லாமலிருந்தால், பசுவின் வால் மயிரை காதில் தரித்துக் கொண்டு பாபத்தைப் போக்குவதற்கு ப்ராஜாபத்ய க்ருச்ரத்தை யனுஷ்டிக்க வேண்டும். சிகை மறுபடி உண்டாகும் வரையில் காதில் பசுவின் வால் மயிரைத் தரிக்க வேண்டும். யஜ்ஞோபவீதத்தின் மூன்று நூல்களும் ப்ரம்ஹா, விஷ்ணு, ருத்ரன் என்ற பெயருடையவைகள். அவைகளுள் ஒரு நூல் அறுந்தாலும் மறுபடி புதிதாகிய யஜ்ஞோபவீதத்தைத் தரித்து நித்ய கர்மத்தை யனுஷ்டிக்க வேண்டும். அறுந்ததை ஜலத்தில் போட வேண்டும். யஜ்ஞோபவீதம் இடது தோளிலிருந்து நான்கு அங்குலம் நழுவிவிட்டால், மூன்று ப்ராணுயாமம் செய்து மறுபடி தோளில் சேர்க்க வேண்டும். யஜ்ஞோபவீதம் இடது கையில் நழுவி விட்டால் நூறு ப்ராணுயாமம் செய்து, முன் போல் அதனுடைய இடத்தில் சேர்க்க வேண்டும். மணிக்கட்டு வரையில் நழுவி இருந்தால், ஆயிரம் ப்ராணுயாமத்தைச் செய்தால் சுத்தனுவான். இடது கையில் இருந்து கீழே நழுவினுல், அந்த உபவீதத்தை த்யஜித்து விட்டு வேறு உபவீதத்தைத் தரிக்க வேண்டும். ஜலத்தில் நழுவி விட்டால், ஆயிரம் முறை காயத்ரீ ஜபம் செய்தால் சுத்தியடைவான். அவ்விதம் செய்யாவிடில் சுத்தியில்லை.*

## भोजनकाले क्षुतजृम्भणापानवायूत्सर्गप्रायश्चित्तम्।

भोजनकाले क्षुतादौ प्रायश्चित्तमाह विष्णुः – द्विजो भोजनकाले तु जृंभणं क्षुतमेव च। अपानवायुमोक्षं वा कुर्वन्निष्कृतिमाचरेत्। अन्यो दर्भात् (दोर्भ्यां) जलं धृत्वा तस्य मूर्धनि विन्यसेत्। पृच्छेत्तं जन्मसदनं दिवा वा यदि वा निशि। क्षुते च जृम्भणे चैव कृत्वैवं स विशुद्ध्यति। अपानवायोरुत्सर्गे जातेऽन्नं परिवर्जयेत्। लोभेन भुक्त्वा तद्भक्तं स्नात्वा कायं समाचरेत् इति।

**போஜன காலத்தில் தும்மல், கொட்டாவி, அபானவாயு விடுதல் இவைகளில் ப்ராயஸ்சித்தம்.**

விஷ்ணு:— ப்ராம்ஹணன் போஜன காலத்தில் கொட்டாவி, தும்மல், அபானவாயு விடுதல் இவைகளைச் செய்தால், ப்ராயஸ்சித்தம் செய்து கொள்ள வேண்டும். மற்றொருவன் தர்ப்பத்தால் (கைகளால்) ஜலத்தை யெடுத்து அவன் தலையில் விட வேண்டும். அவனை உண்டாகிய இடத்தைக் கேட்க வேண்டும். பகலிலாகிலும், இரவிலாகிலும் இவ்விதம் செய்தால் அவன் சுத்தனாகிறான். அபானவாயு விடப்பட்டால், அந்த அன்னத்தைத் தள்ள வேண்டும். தள்ளாமல் லோபத்தால் அந்த அன்னத்தைப் புஜித்தால் ஸ்நானம் செய்து ப்ராஜாபத்ய க்ருச்ரத்தை யனுஷ்டிக்க வேண்டும்.

शिवनिर्माल्यभोजने प्रायश्चित्तम्।

शिवनिर्माल्यभोजने प्रायश्चित्तमाह देवलः – शम्भोर्निवेदितं भक्तं तत्तीर्थं शाकमेव वा। विप्रः सकृन्न भुञ्जीयाद्भुक्त्वा तप्तं समाचरेत् इति। मार्कण्डेयः – शिवे निवेदितं भक्तं प्रत्येकं देवतां विना। द्विजो ज्ञानाद्यदा भुङ्क्ते तप्तकृच्छ्रं समाचरेत् इति।

**சிவ நிர்மால்யத்தைப் புஜிப்பதில் ப்ராயஸ்சித்தம்.**

தேவலர்:— சிவனுக்கு நிவேதனம் செய்யப்பட்ட அன்னம், சாகம், தீர்த்தம் இவைகளை ப்ராம்ஹணன் ஒரு முறை கூடப் புஜிக்கக் கூடாது. புஜித்தால் தப்த க்ருச்ரத்தை யனுஷ்டிக்க வேண்டும். மார்க்கண்டேயர்:— மற்றத் தேவதைகளுடன் கூடியிராத சிவனுக்கு நிவேதனம் செய்யப்பட்ட அன்னத்தை ப்ராம்ஹணன் புத்திபூர்வமாய்ப் புஜித்தால் தப்த க்ருச்ரத்தை யனுஷ்டிக்க வேண்டும்.

सालिग्रामादिसाहित्ये प्रायश्चित्ताभावः।

सालिग्रामादि साहित्ये विशेषमाह जाबालिः – शिवे विष्ण्वादिभिर्देवैर्वेष्टिते यत्समर्पितम्। तद्भुक्त्वा विप्रवर्योऽसौ न

भवेद्दोषभाजनम् इति । हारीतोऽपि – सालिग्रामादिभिः शम्भो र्वेष्टितस्य यदर्पितम् । तद्भोक्तव्यं द्विजैर्नित्यं तत्तोयं च पिबेद्द्विजः इति । फलाधिक्यमप्याह यागयाज्ञवल्क्यः – शिवे निवेदितं भक्तं सालिग्रामादिवेष्टिते । तद्भक्तभोजने चान्द्रं कृतवान्नात्र संशयः । अन्यथा मांसतुल्यं स्यात्ततोयमसृजा समम् इति ।

**ஸாளிக்ராமம் முதலியதுடன் சேர்ந்து இருந்தால் ப்ராயஸ்சித்தம் இல்லை.**

ஜாபாலி:— விஷ்ணு முதலிய தேவர்களுடன் சேர்ந்துள்ள சிவனுக்கு நிவேதனம் செய்யப்பட்ட அன்னத்தைப் புஜித்தால் ப்ராம்ஹணன் தோஷத்தை யடைவதில்லை. ஹாரீதரும்:— ஸாளிக்ராமம் முதலிய தேவர்களால் சேர்ந்துள்ள சிவனுக்கு அர்ப்பணம் செய்யப்பட்ட அன்னத்தை ப்ராம்ஹணர்கள் எப்பொழுதும் புஜிக்க வேண்டும். அந்தத் தீர்த்தத்தையும் பருக வேண்டும். பலனின் அதிகத் தன்மையையம் சொல்லுகிறார், யோகயாஜ்ஞவல்க்யர் :— ஸாளிக்ராமம் முதலியவை களுடன் சேர்ந்துள்ள சிவனுக்கு நிவேதனம் செய்யப்பட்ட அன்னத்தைப் புஜித்தவன் சாந்த்ராயண க்ருச்ரத்தை யனுஷ்டித்தவனுவான். இதில் ஸம்சயமில்லை. இவ்விதம் இல்லாவிடில் அந்த அன்னம் மாம்ஸத்திற்கு ஸமம். அந்தத் தீர்த்தம் ரக்தத்திற்கு ஸமம்.

पत्न्या पुत्रानुजाभ्यां च सहभोजने प्रायश्चित्तम् ।

पत्न्या सह भोजने प्रायश्चित्तमाह देवलः – द्विजः कामातुरो यस्तु पत्न्या सह यदाऽन्नभुक् । पश्चाच्चान्द्रायणं कृत्वा शुद्धिमाप्नोति पौर्विकीम् इति । गालवः – एकयाने समारोह मेकपात्रे तु भोजनम् । विवाहे पथि यात्रायां कृत्वा विप्रो न दुष्यति । अन्यथा दोषमाप्नोति पश्चाच्चान्द्रायणं चरेत् । अभ्यासे द्विगुणं चैव कृत्वा शुद्धिमवाप्नुयात् इति । गौतमः – पिताऽनुजस्य पुत्रस्य तयोः प्रीतिं समुद्वहन् । निक्षिपेत्

कबलं तत्र न दोषस्तस्य भोजने । ताभ्यां सह न भुञ्जीत भुक्त्वा दोषमवाप्नुयात् इति ।

**பத்னீ, புத்ரன், தம்பி இவர்களுடன் சேர்ந்து புஜிப்பதில் ப்ராயஶ்சித்தம்.**

தேவலர்:— *காமுகனாகிய எந்த ப்ராம்ஹணன் பத்னியுடன் சேர்ந்து புஜிப்பானோ, அவன் பிறகு சாந்த்ராயண க்ருச்ரத்தை யனுஷ்டித்தால் முன் போல் சுத்தனாகிறான்.* காலவர்:— *ஒரே வாஹனத்தில் ஏறுவதையும், ஒரே பாத்ரத்தில் போஜனத்தையும், விவாஹம், வழி, யாத்ரை இவைகளில் செய்தால் ப்ராம்ஹணன் தோஷத்தை யடையான். மற்ற காலத்திலானால் தோஷத்தை யடைவான். பிறகு சாந்த்ராயண க்ருச்ரத்தை யனுஷ்டிக்க வேண்டும். அடிக்கடி செய்தால், இரண்டு மடங்கு ப்ராயஶ்சித்தத்தைச் செய்தால் சுத்தியடைவான்.* கௌதமர்:— *பிதாவானவன் தம்பி, புத்ரன் இவர்களுக்கு ஸந்தோஷத்திற்காகத் தனது அன்னத்தில் இருந்து ஒரு கபளத்தை அவர்களுக்குக் கொடுக்கலாம். அதை அவர்கள் புஜித்தால் தோஷமில்லை. அவர்களுடன் சேர்ந்து புஜிக்கலாகாது. புஜித்தால் பாபத்தை அடைவான்.*

नीलवस्त्रधारणनिषेधः ।

नीलवस्त्रधारणे त्वापस्तम्बः – नीलीरक्तं यदा वस्त्रं ब्राह्मणोऽङ्गेषु धारयेत् । अहोरात्रोषितो भूत्वा पञ्चगव्येन शुद्ध्यति । रोमकूपे यदा गच्छेद्रसो नील्यास्तु कस्यचित् । त्रिवर्णेषु तु सामान्यं तप्तकृच्छ्रं विशोधनम् । पालनं विक्रयं चैव तद्वृत्त्या तूपजीवनम् । पातनं तु भवेद्विप्रस्त्रिभिः कृच्छ्रैर्विशुद्ध्यति । स्नानं दानं जपो होमः स्वाध्यायः पितृतर्पणम् । वृथा तस्य महायज्ञा नीलसूत्रस्य धारणम् । नीलीमध्ये तु गच्छेद्यः प्रमादात् ब्राह्मणः क्वचित् । अहोरात्रोषितो भूत्वा पञ्चगव्येन

शुद्ध्यति । नीलीदारु यदा भिन्द्यात् ब्राह्मणस्य शरीरकम् । शोणितं दृश्यते यत्र द्विजश्चान्द्रायणं चरेत् । स्त्रीणां क्रीडार्थसंभूते शयनीये न दुष्यति । नीलीरक्तेन वस्त्रेण यदन्नमुपदीयते । दातारं नोपतिष्ठेत भोक्ता भुञ्जीत किल्बिषम् । कम्बले पट्टवस्त्रे च नीलीरागो न दुष्यति इति ।

**நீல வஸ்த்ரத்தைத் தரிப்பதற்கு நிஷேதம்.**

**ஆபஸ்தம்பர்:—** *அவுரிச்சாயமுள்ள வஸ்த்ரத்தை ப்ராம்ஹணன் தேஹத்தில் தரித்தால், அவன் ஒரு நாள் உபவாஸமிருந்து, பஞ்சகவ்ய ப்ராசனம் செய்தால் சுத்தனுவான். நீலி (அவுரி)யின் ரஸம் எவனுடைய மயிர்க்காலில் ப்ரவேசிக்கின்றதோ அவன் தப்த க்ருச்ரத்தை யனுஷ்டிக்க வேண்டும். இது, முதல் மூன்று வர்ணத்தாருக்கும் ஸமமாகும். நீலியைப் பரிபாலிப்பதும், விற்பதும், அதைக் கொண்டு ஜீவிப்பதும் ப்ராம்ஹணனுக்குப் பாபஹேதுவாகும். ப்ராம்ஹணன் மூன்று க்ருச்ரங்களால் சுத்தனுவான். நீலிச்சாயமுள்ள வஸ்த்ரத்தைத் தரித்தால் ப்ராம்ஹணனுக்கு ஸ்நானம், தானம், ஜபம், ஹோமம், வேதாத்யயனம், பித்ரு தர்ப்பணம், பஞ்சமஹாயஜ்ஞங்கள் இவையெல்லாம் வீணுகும். ப்ராம்ஹணன் எப்பொழுதாவது அறியாமையால் அவுரிச் செடிகளின் நடுவில் சென்றுல் அவன் ஒரு நாள் உபவாஸமிருந்து, பஞ்சகவ்ய ப்ராசனம் செய்தால் சுத்தனுவான். எந்த ப்ராம்ஹணனின் தேஹத்தை அவுரிக் கட்டைதாக்கி ரக்தம் உண்டாக்குகின்றதோ, அவன் சாந்த்ராயண க்ருச்ரத்தை யனுஷ்டிக்க வேண்டும். ஸ்த்ரீகளுக்கு விளையாட்டுக்காக உள்ள வஸ்த்ரத்திலும், படுக்கையிலும் அவுரிச்சாயத்துக்குத் தோஷமில்லை. அவுரிச் சாயமுள்ள வஸ்த்ரத்துடன் எந்த அன்னம் கொடுக்கப்படுகிறதோ அந்த அன்னம் கொடுப்பவனுக்குப் பலனையளிப்பதில்லை. புஜிப்பவன் பாபத்தைப் புஜிப்பான். கம்பளியிலும் பட்டு வஸ்த்ரத்திலும் அவுரிச் சாயம் தோஷத்தைச் செய்யாது.*

## नीलवस्त्रं धृत्वा भोजने प्रायश्चित्तम्।

नीलवस्त्रं धृत्वा भोजने प्रायश्चित्तमाह गालवः – नीलीवस्त्रं तु तच्चिह्नं धृत्वा कर्म करोति यः। स विप्रस्तु न कर्मार्हस्तत्कर्म विफलं भवेत्। एकस्मिन् दिवसे भुक्त्वा धृत्वा नीलीमयं पटम्। कुर्याद्देहविशुद्ध्यर्थं यावकं मुनिचोदितम्। अभ्यासे तु पराकं स्याद्वत्सरे चान्द्रमुच्यते इति। तच्चिह्नमिति वस्त्रान्ते मध्ये वा नील तन्तुभिश्चिह्नितमित्यर्थः। गौतमः – नीलीमयं पटं धृत्वा विप्रस्तच्चिह्नमेव वा। कृत्वा कर्माणि भुक्त्वा वा न तत् कर्मफलं लभेत्। भोजने मांसभुग्विप्रस्सर्वथा परिवर्जयेत् इति। देवलः – नीलवस्त्रं च तच्चिह्नं धृत्वा ज्ञानात्तु यश्चरेत्। स विप्रस्त्वशुचिर्नित्यं न कर्मार्हो भवेदिह इति।

**நீல வஸ்த்ரம் தரித்துப் புஜிப்பதில் ப்ராயஸ்சித்தம்.**

காலவர்:— கறுப்பு வஸ்த்ரத்தையாவது, கறுப்புக் குறியுள்ள வஸ்த்ரத்தையாவது தரித்த எந்த ப்ராம்ஹணன் கர்மத்தைச் செய்கின்றானோ அவன் கர்மத்தை யனுஷ்டிக்க அர்ஹனல்லன். அக்கர்மம் வீணாகும். ஒரு நாளில் அவுரிச் சாயமுள்ள வஸ்த்ரத்தைத் தரித்துப் போஜனம் செய்தானாகில் அவன் தேஹசுத்திக்காக முனிவர்களால் சொல்லப்பட்ட யாவக க்ருச்ரத்தை யனுஷ்டிக்க வேண்டும். அடிக்கடி செய்தால் பராக க்ருச்ரம் ப்ராயஸ்சித்தம். ஒரு வர்ஷம் செய்தால் சாந்த்ராயணம் ப்ராயஸ்சித்தம். மூலத்தில் உள்ள "தச்சிஹ்நம்" என்ற பதத்திற்கு வஸ்த்ரத்தின் நுனியிலாவது நடுவிலாவது கறுப்பு நூல்களால் அடையாளம் இடப்பட்டது என்பது பொருள். கௌதமர்:— ப்ராம்ஹணன் அவுரிச் சாயம் முழுவதும் உள்ள வஸ்த்ரத்தையாவது, அதன் குறியுள்ள வஸ்த்ரத்தையாவது தரித்துக் கர்மங்களை யனுஷ்டித்தாலும், போஜனம் செய்தாலும் அக்கர்மங்களின் பலனை

அடைவதில்லை. அவ்விதம் போஜனம் செய்தால் மாம்ஸத்தைப் புஜித்தவனாவான். ஆகையால் எப்பொழுதும் அதை வர்ஜிக்க வேண்டும். தேவலர்:— கறுப்பு வஸ்த்ரத்தையாவது, கறுப்புக் குறியுள்ள வஸ்த்ரத்தையாவது புத்திபூர்வமாகத் தரித்து எந்த ப்ராம்ஹணன் கர்மங்களை யனுஷ்டிக்கிறானோ அவன் எப்பொழுதும் அசுத்தனாவான். ஒரு கர்மத்துக்கும் இவ்வுலகில் அர்ஹனாகான்.

## परान्नभोजने विषमदानादौ च प्रायश्चित्तम्।

परान्नभोजने प्रायश्चित्तमाह शौनकः – यस्मिन्वयं जपेन्मन्त्रं शतवारं दिने दिने। सदा परान्नभोक्ता च विमुच्येत हि किल्बिषात् इति। यमः – न पङ्क्तौ विषमं दद्यान्न याचेन्न च दापयेत्। प्राजापत्येन कृच्छ्रेण मुच्यते कर्मणस्ततः इति।

### பராந்த போஜனத்திலும், பக்ஷபாதமாய்ப் பரிமாறுவதிலும் ப்ராயச்சித்தம்.

சௌனகர்:— "யஸ்மின் வயம்" என்ற மந்த்ரத்தை ஒவ்வொரு நாளிலும் நூறு முறை ஜபிக்க வேண்டும். எப்பொழுதும் பராந்நத்தைப் புஜிப்பவனும் பாபத்தினின்றும் விடுபடுவான். யமன்:— புஜிப்பவர்களின் பங்க்தியில் பேதமாய்க் கொடுக்கக் கூடாது. புஜிப்பவன் கேட்கவும் கூடாது. கொடுக்கச் செய்யவும் கூடாது. இவ்விதியை மீறிச் செய்தால், ப்ராஜாபத்ய க்ருச்ரத்தால் அப்பாபத்தினின்றும் விடுபடுவான்.

## नवश्राद्धादिभोजने प्रायश्चित्तम्।

श्राद्धभोजने प्रायश्चित्तमाह विष्णुः – प्राजापत्यं नवश्राद्धे पादोनं त्वाद्यमासिके। त्रैपक्षिके तदर्धं तु पञ्चगव्यं द्विमासिके इति। एतच्चापद्विषयम्। अनापदि तु - चान्द्रायणं नवश्राद्धे प्राजापत्यं तु

मिश्रके । एकाहस्तु पुराणेषु प्रायश्चित्तं विधीयते इति हारीतोक्तं द्रष्टव्यम्। प्राजापत्यं तु मिश्रके इत्याद्यमासिकविषयम् । ऊनमासिकादिषु तु पादोनप्राजापत्यादीनि कर्तव्यानि । तदुक्तं चतुर्विंशतिमते – प्राजापत्यं नवश्राद्धे पादोनं तूनमासिके। त्रैपक्षिके तदर्धं स्याद्द्वौ पादौ मासिके ततः । पादोनं कृच्छ्रमुद्दिष्टं षण्मासे चाब्दिके तथा। त्रिरात्रं चान्यमासेषु प्रत्यब्दं चेदहः स्मृतम् इति। अत्र प्राजापत्यं नवश्राद्धे इत्ययमंशः आपद्विषयः । अनापदि तु चान्द्रायणम्।

### நவ ச்ராத்தம் முதலியவைகளில் புஜிப்பதில் ப்ராயம்சித்தம்.

விஷ்ணு:— நவ ச்ராத்தத்தில் புஜித்தவனுக்கு ப்ராஜாபத்ய க்ருச்ரம் ப்ராயம்சித்தம். ஆத்ய மாஸிகத்தில் முக்கால் க்ருச்ரம். த்ரை பக்ஷிகத்தில் பாதி க்ருச்ரம். இரண்டாவது மாஸிகத்தில் பஞ்சகவ்ய ப்ராசனம் ப்ராயம்சித்தம். இவ்விதம் சொல்லியது ஆபத்தைப் பற்றியது. ஆபத்தில்லாத விஷயத்திலானால், ''நவ ச்ராத்தத்தில் சாந்த்ராயண க்ருச்ரம். ஆத்ய மாஸிகத்தில் ப்ராஜாபத்ய க்ருச்ரம். ப்ரத்யாப்திக ச்ராத்தங்களில் ஒரு நாள் ப்ராயம்சித்தம் விதிக்கப்படுகிறது'' என்று ஹாரீதர் சொல்லிய ப்ராயம்சித்தத்தை அறியவும். ''ப்ராஜாபத்யந்து மிம்ரகே'' என்றது ஆத்யமாஸிக விஷயம். ஊனமாஸிகம் முதலியவைகளில் முக்கால் க்ருச்ரம் முதலிய க்ருச்ரங்கள் அனுஷ்டிக்கப்பட வேண்டும். அது சொல்லப்பட்டுள்ளது. சதுர்விம்சதிமதத்தில்:— நவ ச்ராத்தத்தில் ப்ராஜாபத்யம். ஊனமாஸிகத்தில் முக்கால் க்ருச்ரம். த்ரைபக்ஷிகத்தில் பாதி ப்ராஜாபத்ய க்ருச்ரம். பிறகுள்ள மாஸிகத்தில் பாதி ப்ராஜாபத்ய க்ருச்ரம். ஷாண்மாஸிகத்தில் முக்கால் க்ருச்ரம். ஆப்திகத்திலும் அப்படியே. மற்ற மாஸிகங்களில் மூன்று நாள் க்ருச்ரம். ப்ரத்யாப்திகம் ஆனால் ஒரு நாள்

*ப்ராயஶ்சித்தம். இவ்விடத்தில் "ப்ராஜாபத்யம் நவச்ராத்தே" என்றது ஆபத் விஷயத்தைப் பற்றியது. ஆபத்து இல்லாத விஷயத்தில், சாந்த்ராயண க்ருச்ரம் ப்ராயஶ்சித்தம்.*

तथा च मरीचिः – नग्नश्राद्धं नवश्राद्ध माशौचाभ्यन्तरे द्वयम्। तत्रामं प्रतिगृह्याशु महारौरवमश्नुते । नग्नश्राद्धे नवश्राद्धे चान्द्रायणमुदीरितम् । आद्यश्राद्धे तथा चान्द्रं सपिण्डीप्रेतभोजने । चान्द्रायणं पराकं वा कुर्यात्तद्दोषशान्तये इति । प्राजापत्यं तु मिश्रके इत्येतदावृत्ताद्यमासिकविषयम् । तत्र चान्द्रायणं महैकोद्दिष्ट विषयम् । तदावृत्तौ तु चान्द्रायणत्रयं कार्यम् ।

*மரீசி:— ஆசௌசத்தின் நடுவில் நக்நச்ராத்தம், நவச்ராத்தம் என்ற இரண்டு ச்ராத்தங்கள். அவைகளில் ஆமத்தை ப்ரதிக்ரஹிப்பவன் மஹாரௌரவ நரகத்தை யடைவான். நக்ந ச்ராத்தத்திலும் நவ ச்ராத்தத்திலும் சாந்த்ராயணம் ப்ராயஶ்சித்தமாகச் சொல்லப்பட்டுள்ளது. ஆத்ய ச்ராத்தத்திலும் சாந்த்ராயண க்ருச்ரம் ப்ராயஶ்சித்தம். ஸபிண்டீகரணத்தில் ப்ரேதவர்ண போஜனத்தில் சாந்த்ராயணம் அல்லது பராகம் ப்ராயஶ்சித்தம். 'ப்ராஜாபத்யந்து மிச்ரேக" என்றது ஆவ்ருத்தாத்ய மாஸிகத்தைப் பற்றியது. அதில், சாந்த்ராயணம் என்று சொல்லியது மஹைகோத்திஷ்டத்தைப் பற்றியது. அடிக்கடி புஜித்தால் மூன்று சாந்த்ராயணம் ப்ராயஶ்சித்தம்.*

आद्यमासिकमेकश्चेद्भुंक्ते ब्राह्मण्यात् स हीयते । चान्द्रायणत्रयं कृत्वा कूश्माण्डैर्जुहुयात्ततः । पुनः कर्म प्रकुर्वीत ततः पूतो भवेत् द्विजः इति स्मृतेः । यत्तु शङ्खवचनम् – चान्द्रायणं नवश्राद्धे पराको मासिके स्मृतः । पक्षत्रयेऽतिकृच्छ्रं स्यात् षण्मासे कृच्छ्र एव तु । आब्दिके पादकृच्छ्रं स्यादेकाहं पुनराब्दिके इति । अत्र यत्पराकादिविधानं तत्सर्पादिहतविषयम्, अपाङ्क्तेय विषयं च । चण्डालादुदकात् सर्पात्

ब्राह्मणाद्वैद्युतादपि । दंष्ट्रिभ्यश्च पशुभ्यश्च मरणं पापकर्मणाम् । पतनानाशकैश्चैव विषोद्बन्धनकै स्तथा । भुक्त्वैषां षोडशश्राद्धे कुर्यादिन्दुव्रतं द्विजः । अपाङ्क्तेयान् यदुद्दिश्य श्राद्धमेकादशेऽहनि । ब्राह्मणस्तत्र भुक्त्वाऽन्नं शिशुचान्द्रायणं चरेत् । मास श्राद्धे तथा भुक्त्वा तप्तकृच्छ्रेण शुद्ध्यति । सङ्कल्पितेऽथ भुक्त्वा तु त्रिरात्रं क्षपणं भवेत् इति भरद्वाजेन प्रायश्चित्तविशेषाभिधानात् ।

''ஆத்யமாஸிகத்தை ஒருவன் புஜித்தால், அவன் ப்ராம்ஹணத் தன்மையினின்று குறைகிறான். அவன் மூன்று சாந்த்ராயண க்ருச்ரத்தை யனுஷ்டித்து, பிறகு கூச்மாண்ட ஹோமம் செய்ய வேண்டும். புநருபனயனம் செய்து கொள்ள வேண்டும். பிறகு சுத்தனாவான்'' என்று ஸ்ம்ருதி யிருப்பதால். ஆனால், சங்கரால் சொல்லப்பட்ட வசனம்:– ''நவச்ராத்தத்தில் சாந்த்ராயணம். மாஸிகத்தில் பராகம். த்ரைபக்ஷிகமாஸிகத்தில் அதிக்ருச்ரம். ஷாண்மாஸிகத்தில் ஒரு க்ருச்ரம். ஆப்திகத்தில் கால்க்ருச்ரம். ப்ரத்யாப்திகத்தில் ஒரு நாள் ப்ராயச்சித்தம்'' என்று உள்ளதேயெனில், இந்த வசனத்தில் பராகம் முதலியதை விதித்தது ஸர்ப்பம் முதலியதால் கொல்லப்பட்டவனைப் பற்றியது. பங்க்திக்கு அர்ஹனல்லாதவனைப் பற்றியதுமாகும். ''சண்டாளன், ஜலம், ஸர்ப்பம், ப்ராஹ்மணன், இடி, புலி முதலிய கொடிய மிருகங்கள், பசுக்கள், இவைகளினின்றும் மரணம் பாபிகளுக்கு ஏற்படும். விழுவது, உபவாஸம், விஷம், சுருக்கிட்டுக் கொள்ளுதல் இவைகளால் மரணம் பாபிகளுக்கு ஏற்படும். இவ்விதம் இறந்தவர்களின் பதினாறு ச்ராத்தங்களில் ப்ராம்ஹணன் புஜித்தால் சாந்த்ராயண க்ருச்ரத்தை யனுஷ்டிக்க வேண்டும். பங்க்திக்கு அர்ஹமல்லாதவரைக் குறித்துப் பதினோராவது நாளில் செய்யப்படும் ச்ராத்தத்தில் ப்ராம்ஹணன் அன்னத்தைப் புஜித்தால் சிசு சாந்த்ராயணத்தை

யனுஷ்டிக்க வேண்டும். மாஸிகத்தில் புஜித்தால் தப்தக்ருச்ரத்தால் சுத்தனுவான். இவர்களின் ஸங்கல்பிதமான ச்ராத்தத்தில் புஜித்தால் மூன்று நாள் க்ருச்ரத்தை யனுஷ்டிக்க வேண்டும்'' என்று பரத்வாஜரால் விசேஷ ப்ராயச்சித்தம் சொல்லப்பட்டு இருப்பதால்.

## श्राद्धभोजने ब्रह्मचारिणः प्रायश्चित्तम्।

ब्रह्मचारिणस्तु बृहद्यमो विशेषमाह — मासिकादिषु योऽश्नीयादसमाप्तव्रतो द्विजः । त्रिरात्रमुपवासोऽत्र प्रायश्चित्तं विधीयते। प्राणायामशतं कृत्वा घृतं प्राश्य विशुद्ध्यति इति । इदमज्ञानविषयम्। ज्ञानपूर्वके तु स एवाह – मधु मांसं तु योऽश्नीयात् श्राद्धे सूतक एव वा। प्राजापत्यं चरेत् कृच्छ्रं व्रतशेषं समापयेत् इति।

**ப்ரம்ஹசாரி, ச்ராத்தம் புஜித்தால் ப்ராயச்சித்தம்.** *ப்ரம்ஹசாரிக்கோவெனில், விசேஷத்தைச் சொல்லுகிறுர்,* **ப்ருஹத்யமன்:—** *ப்ரம்ஹசாரியான ப்ராம்ஹணன் எவன் மாஸிகம் முதலியவைகளில் புஜிக்கின்றுனே அவனுக்கு மூன்று நாள் க்ருச்ராசரணம் ப்ராயச்சித்தமாக விதிக்கப்படுகிறது. பிறகு நூறு ப்ராணுயாமம் செய்து, நெய்யைப் பருகினுல், சுத்தனுவான். இது அறியாமல் செய்ததைப் பற்றியது. அறிந்து செய்த விஷயத்திலோ வெனில் சொல்லுகிறுர்,* **ப்ருஹத்யமனே:—** *ச்ராத்தத்தில் மது, மாம்ஸம் இவைகளைப் புஜித்தாலும், ஆசௌச அன்னத்தைப் புஜித்தாலும் ப்ராஜாபத்ய க்ருச்ரத்தை யனுஷ்டிக்க வேண்டும். பிறகு வ்ரதத்தின் மீதியை முடிக்க வேண்டும்.*

## क्षत्रियादिश्राद्धभोजने प्रायश्चित्तम्।

क्षत्रियादिश्राद्धभोजने चतुर्विंशतिमते विशेष उक्तः – चान्द्रायणं नवश्राद्धे पराको मासिके स्मृतः। त्रैपक्षिके सान्तपनं कृच्छ्रं मासद्वये स्मृतम् । क्षत्रियस्य नवश्राद्धे व्रतमेतदुदाहृतम् ।

वैश्यस्यार्धाधिकं प्रोक्तं क्षत्रियात्तु मनीषिभिः । शूद्रस्य तु नवश्राद्धे चरेच्चान्द्रायणद्वयम् । सार्धं चान्द्रायणं मासे त्रिपक्षे त्वैन्दवं स्मृतम् । मासद्वये पराकं स्यादूर्ध्वं सान्तपनं स्मृतम् इति । यत्तूशनसोक्तम् – दशकृत्वः पिबेदापो गायत्र्या श्राद्धभुग्द्विजः । ततस्सन्ध्यामुपासीत शुद्ध्येत्तु तदनन्तरम् इति, तदनुक्तप्रायश्चित्तश्राद्धविषयम् ।

**க்ஷத்ரியன் முதலியவரின் ச்ராத்தத்தில் புஜிப்பதில் ப்ராயஸ்சித்தம்.**

சதுர்விம்சதிமதத்தில்: — *''நவச்ராத்தத்தில் சாந்த்ராயணம். மாஸிகத்தில் பராக க்ருச்ரம். த்ரை பக்ஷிக மாஸிகத்தில் ஸாந்தபன க்ருச்ரம். இரண்டாவது மாஸிகத்தில் ப்ராஜாபத்ய க்ருச்ரம் ப்ராயஸ்சித்தம். க்ஷத்ரியனின் நவச்ராத்தத்தில் இந்த ப்ராயஸ்சித்தம் சொல்லப்பட்டுள்ளது. வைச்யனுடைய ச்ராத்தத்திலானுல் க்ஷத்ரியன் விஷயத்தில் சொல்லிய ப்ராயஸ்சித்தத்தில் பாதி அதிகமாக ப்ராயஸ்சித்தம் சொல்லப்பட்டுள்ளது. சூத்ரனின் நவச்ராத்தத்திலானுல், இரண்டு சாந்த்ராயணத்தை யனுஷ்டிக்க வேண்டும். மாஸிகத்தில் ஒன்றரைச் சாந்த்ராயண க்ருச்ரம். த்ரைபக்ஷிக மாஸிகத்திலானுல் சாந்த்ராயணம் சொல்லப்பட்டுள்ளது. இரண்டாவது மாஸத்தில் பராக க்ருச்ரம். அதற்கு மேல் ஸாந்தபனம் ப்ராயஸ்சித்தம்,'' என்று விசேஷம் சொல்லப்பட்டுள்ளது. ஆனுல், உசநஸ்ஸினுல்:— ''ச்ராத்தத்தில் புஜித்த ப்ராம்ஹணன் காயத்ரீயினுல் பத்து தடவை ஜலத்தைப் பருக வேண்டும். பிறகு ஸந்த்யோபாஸனத்தைச் செய்ய வேண்டும். பிறகு சுத்தனுகிறுன்'' என்று சொல்லப்பட்டுள்ள வசனமோவெனில், அது ப்ராயஸ்சித்தம் விதிக்கப்படாத ச்ராத்தத்தைப் பற்றியது ஆகும்.*

### संस्काराङ्गनान्दीश्राद्धभोजने प्रायश्चित्तम्।

संस्काराङ्गश्राद्धभोजने तु व्यासः – प्रवृत्ते चूडहोमे तु प्राङ्नामकरणात्तथा। चरेत्सान्तपनं भुक्त्वा जातकर्मणि चैव हि। अतोऽन्येषु तु भुक्त्वाऽन्नं संस्कारेषु द्विजोत्तमः। नियोगादुपवासेन शुद्ध्यते निन्द्यभोजने इति। सीमन्तोन्नयनादिषु धौम्यो विशेषमाह – ब्रह्मौदने च सोमे च सीमन्तोन्नयने तथा। जातश्राद्धे नवश्राद्धे भुक्त्वा चान्द्रायणं चरेत् इति। तत्र ब्रह्मौदनाख्यं कर्माग्न्याधानाङ्गभूतम्। यत्तु भरद्वाजेनोक्तम् – भुक्तश्चेत्पार्वणश्राद्धे प्राणायामान् षडाचरेत्। उपवासस्त्रिमासादि वत्सरान्तं प्रकीर्तितः। प्राणायामत्रयं वृद्धा वहोरात्रं सपिण्डने। आमरूपे स्मृतं नक्तं व्रतपारणिके तथा। द्विगुणं क्षत्रियस्यैव त्रिगुणं वैश्यभोजने। साक्षाच्चतुर्गुणं चैव स्मृतं शूद्रस्य भोजने इति। एतदप्यापद्विषयम्। अनापद्यधिकप्रायश्चित्तस्योक्तत्वात्। आमश्राद्धे सर्वत्रार्धम्। आमश्राद्धे भवेदर्धम् इति षट्त्रिंशन्मतेऽभिधानात्।

### ஸம்ஸ்காரத்திற்கு அங்கமான நாந்தீச்ராத்தத்தில் புஜிப்பதற்கு ப்ராயச்சித்தம்.

**வ்யாஸர்:—** சௌளஹோமம், செய்யப்படும் பொழுதும், நாமகரணத்திற்கு முன்பும், ஜாதகர்மத்திலும், நாந்தீச்ராத்தத்தில் புஜித்தால் ஸாந்தபன க்ருச்ரத்தை யனுஷ்டிக்க வேண்டும். இவைகளைத் தவிர்த்த ஸம்ஸ்காரங்களில் அன்னத்தை ப்ராம்ஹணன் புஜித்தால், உபவாஸத்தால் சுத்தனாகிறான். **தௌம்யர்:—** ஸீமந்தம் முதலியவைகளில் விசேஷத்தைச் சொல்லுகிறார்:- ப்ரம்ஹௌதனத்திலும், ஸோமயாகத்திலும், ஸீமந்தத்திலும், ஜாதகர்ம ச்ராத்தத்திலும், நவச்ராத்தத்திலும் புஜித்தால் சாந்த்ராயண க்ருச்ரத்தை யனுஷ்டிக்க வேண்டும். அதில், ப்ரம்ஹௌதனம் என்ற கார்யம்

அக்ன்யாதானத்திற்கு அங்கமாகியது. ஆனால், பரத்வாஜரால்:— பார்வண ச்ராத்தத்தில் புஜித்தானாகில், ஆறு ப்ராணாயாமங்களைச் செய்ய வேண்டும். மூன்றாவது மாஸம் முதல் வர்ஷம் முடியும் வரையில் உள்ள ச்ராத்தங்களில் புஜித்தால் உபவாஸம் விதிக்கப் பட்டுள்ளது. நாந்தீ ச்ராத்தத்தில் மூன்று ப்ராணாயாமங்கள். ஸபிண்டீகரணத்தில் ஒரு நாள் உபவாஸம். ஆம ச்ராத்தத்தில் ஒரு இரவு உபவாஸம். வ்ரதபாரணிகத்திலும் அவ்விதமே. க்ஷத்ரிய ச்ராத்தத்திலானால் இந்த ப்ராயஸ்சித்தம் இரண்டு மடங்கு. வைச்ய ச்ராத்தத்தில் புஜித்தால், மூன்று மடங்கு ப்ராயஸ்சித்தம். சூத்ர ச்ராத்தத்தில் புஜித்தால், நான்கு மடங்கு ப்ராயஸ்சித்தம்.'' என்று சொல்லப்பட்டுள்ளதே யெனில், இதுவும் ஆபத்தைப் பற்றியது. ஆபத்தில்லாத விஷயத்தில் அதிக ப்ராயஸ்சித்தம் சொல்லப்பட்டிருப்பதால். ஆமச்ராத்தம் எல்லாவற்றிலும் பாதி ப்ராயஸ்சித்தம். ''ஆம ச்ராத்தத்தில் பாதி ப்ராயஸ்சித்தம் விதிக்கப்படுகிறது'' என்று ஷட்த்ரிம்சன்மதத்தில் சொல்லியிருப்பதால்.

## श्राद्धशिष्टान्नभोजन निषेधः ।

श्राद्धशिष्टान्नभोजनं प्रतिषेधति देवलः – अमायां पैतृकश्राद्धे मासिश्राद्धे महालये । श्राद्धे च षण्णवत्याख्ये सपिण्डीकरणे तथा । मासिकेषु तथा विप्रो न कुर्याच्छेषभोजनम् इति । महाभारते – श्राद्धकर्मणि भोक्तारो भोक्तारो यज्ञकर्मणि । श्राद्धशिष्टान्नभोक्तारस्ते वै निरयगामिनः । सगोत्राणां सकुल्यानां न दोषः शिष्टभोजने । पुत्रीणामन्यगोत्राणां विधवानां तु दुष्यति इति । जाबालिः – श्वशुरस्य गुरोर्वाऽपि मातुलस्य महात्मनः । एतेषां श्राद्धशिष्टान्नं भुक्त्वा दोषो न विद्यते । पित्रोश्च ब्रह्मनिष्ठस्य ज्येष्ठभ्रातुश्च ज्ञानिनः । पैतृकेषु न भोक्तव्यं विधवानां तु सर्वदा । विप्रस्त्वन्यकुले श्राद्धे कुर्याच्चेच्छिष्टभोजनम् । प्राजापत्येन शुद्धः स्यात् ज्ञातीनां तु न दोषभाक् । व्रतिनां च

स्वपित्रादौ न दोषः शिष्टभोजने । विधवा केशवपनं कृत्वा तप्तं समाचरेत्। यतिश्च ब्रह्मचारी च पराकं कृच्छ्रमाचरेत्। सन्यासी वपनं कृत्वा लक्षं च प्रणवं जपेत् इति । चन्द्रिकावदनेक स्मृतिवचनाभिधानपूर्वकं श्राद्धशिष्टान्नभोजनं न दोषावहमित्युक्तम्। तच्च प्रतिपादितमधस्तात् । हेमाद्रौ तु निषेधवचनमुदाहृत्य श्राद्धशिष्टान्नभोजने प्रायश्चित्तं चाभिहितम्। अत्र निषेधस्य प्रबल्यात् श्राद्धशिष्टान्नभोजने प्रायश्चित्तोपदेशात् शिष्टाचारबाहुल्याच्च तद्वर्जनमेव युक्तमित्याहुः ।

**ச்ராத்தசேஷ அன்னத்தைப் புஜிப்பதில் நிஷேதம்.**

தேவலர்:— *அமாச்ராத்தம், மாதாபித்ரு ச்ராத்தம், மாஸி ச்ராத்தம், மஹாளய ச்ராத்தம், ஷண்ணவதி ச்ராத்தம், ஸபிண்டீகரண ச்ராத்தம், மாஸிகங்கள், இவைகளில் ச்ராத்தசேஷமான அன்னத்தைப் ப்ராம்ஹணன் புஜிக்கக் கூடாது.* மஹாபாரதத்தில்:— *ச்ராத்த கார்யம், யஜ்ஞகார்யம், இவைகளில் புஜிப்பவரும், ச்ராத்த சேஷமான அன்னத்தைப் புஜிப்பவரும் நரகத்தை யடைகின்றனர். ஸகோத்ரர்களுக்கும், பந்துக்களுக்கும், அந்ய கோத்ரத்தில் உள்ள புத்ரிகளுக்கும், ச்ராத்த சேஷ போஜனத்தில் தோஷம் இல்லை. விதவைகளுக்கானால் ச்ராத்த சேஷ அன்னபோஜனம் தோஷப்ரதமாகும்.* ஜாபாலி:— *மஹாத்மாவான மாமனார், குரு, அம்மான், இவர்களின் ச்ராத்த சேஷமான அன்னத்தைப் புஜித்தால் தோஷமில்லை. மாதா பிதாக்கள், ப்ரம்ஹநிஷ்டனும் ஜ்ஞாநியாயுமான ஜ்யேஷ்டப்ராதா, இவர்களின் ச்ராத்தங்களிலும் விதவைகள் ஒரு பொழுதும் புஜிக்கக் கூடாது. ப்ராம்ஹணன் அந்ய குலத்தானின் ச்ராத்தத்தில் மீதியுள்ள அன்னத்தைப் புஜித்தால், ப்ராஜாபத்ய க்ருச்ரத்தால் சுத்தனாவான். ஜ்ஞாதிகளுக்குத் தோஷமில்லை. ப்ரம்ஹசாரிகளுக்கும் தனது மாதா பிதாக்கள் முதலியவரின்*

விஷயத்தில் ச்ராத்த சேஷ அன்ன போஜனத்தில் தோஷமில்லை. விதவை புஜித்தால் க்ஷௌரம் செய்து கொண்டு தப்த க்ருச்ரத்தை யனுஷ்டிக்க வேண்டும். ஸந்யாஸீ புஜித்தால் க்ஷௌரம் செய்து கொண்டு லக்ஷம் முறை ப்ரணவத்தை ஜபிக்க வேண்டும். சந்த்ரிகை முதலிய க்ரந்தங்களில் அநேக ஸ்ம்ருதி வசனங்களை உதாஹரித்து, ச்ராத்த சேஷான்ன போஜனம் தோஷத்தைக் கொடுக்கக் கூடியதல்ல என்று சொல்லப்பட்டுள்ளது. அது கீழே சொல்லப்பட்டுள்ளது. ஹேமாத்ரியிலோவெனில் நிஷேதிக்கும் வசனத்தைச் சொல்லி, ச்ராத்த சேஷ அன்னத்தைப் புஜிப்பதில் ப்ராயஸ்சித்தமும் சொல்லப்பட்டுள்ளது. இவ்விஷயத்தில் நிஷேதம் ப்ரபலமாய் இருப்பதாலும் ச்ராத்த சேஷ அன்ன போஜனத்தில் ப்ராயஸ்சித்தம் சொல்லப்பட்டு இருப்பதாலும், சிஷ்டாசாரம் அதிகமாய் இருப்பதாலும், சேஷான்ன போஜனத்தை வர்ஜிப்பதே யுக்தம் என்கிறார்கள்.

## चौलाद्यन्नभोजने निषेधः ।

चौलाद्यन्नभोजने विशेषमाह देवलः – चौलकर्मणि सीमन्ते मुहूर्ताद्भोजने परम् । सुरापानसमं प्रोक्तमतो नेच्छन्ति सूरयः इति । गौतमः – सीमन्ते पुंसवे चैव चौलकर्मणि यो द्विजः । असगोत्रस्तदन्नादस्सुरापीत्युच्यते बुधैः इति । मार्कण्डेयः– चौलकर्मणि सीमन्ते पुंसवे योऽन्यगोत्रजः । मुहूर्तादूर्ध्वभुक् पापी सुरापानमवाप्नुयात् । प्रायश्चित्तं द्विजैः प्रोक्त मत्र दुष्टान्नभोजने । मुहूर्तात् परतस्तप्तं तत्पूर्वं भोजनं चरन् । जप्त्वा शुद्धिमवाप्नोति सहस्रं वेदमातरम् । स्त्रीणामर्धं यतीनां च व्रतिनां चान्द्रमुच्यते । चौलकर्मणि पूर्वत्र परत्र च समं भवेत् इति ।

**சௌளம் முதலியதில் அன்னத்தைப் புஜிப்பதில் நிஷேதம்.**

தேவலர்:— சௌளம், ஸீமந்தம் இவைகளில் முஹூர்த்தத்திற்குப் பிறகு புஜித்தால், அது ஸுராபானத்துக்கு ஸமமாகச் சொல்லப்பட்டுள்ளது. ஆகையால் அறிந்தவர்கள் அதை விரும்புவதில்லை. கௌதமர்:— ஸீமந்தம், பும்ஸவனம், சௌளம், இவைகளில் ஜ்ஞாதியில்லாத எந்த ப்ராம்ஹணன் புஜிப்பானோ அவன் அறிந்தவர்களால் ஸுராபாயீ எனப்படுகிறான். மார்க்கண்டேயர்:— சௌளம், ஸீமந்தம், பும்ஸவனம் இவைகளில் அந்யகோத்ரனான எவன் முஹூர்த்தத்திற்குப் பிறகு புஜிக்கின்றானோ அந்தப் பாபி ஸுராபானதோஷத்தை யடைவான். இந்தத் துஷ்ட அன்ன போஜனத்தில் ப்ராயஶ்சித்தம் ப்ராம்ஹணர்களால் சொல்லப்பட்டுள்ளது. முஹூர்தத்திற்குப் பிறகு புஜித்தால் தப்த க்ருச்ரம், முஹூர்த்தத்திற்கு முன் புஜித்தால் காயத்ரியை ஆயிரம் முறை ஜபித்தால் சுத்தனாவான். ஸ்த்ரீகளுக்குப் பாதி ப்ராயஶ்சித்தம். ஸந்யாஸிகளுக்கும் ப்ரம்ஹசாரிகளுக்கும் சாந்த்ராயணம் ப்ராயஶ்சித்தம் எனப்படுகிறது. சௌள கர்மாவிலானால் முஹூர்த்தத்திற்கு முன் புஜித்தாலும் பின்பு புஜித்தாலும் ப்ராயஶ்சித்தம் ஸமமேயாகும்.

स्मृत्यन्तरे तु – चौलोपनयने चैव सीमन्ते पुंसवे तथा । ऋतूत्सवेऽप्यहश्शेषं भुक्त्वा चान्द्रायणं चरेत् इति । अहश्शेषमिति वचनाद्रात्रौ तद्गृहभोजने नैतत् प्रायश्चित्तम् । उच्छिष्टभोजनादीनां प्रायश्चित्तमाह्निकपरिच्छेदे भोजनप्रकरणे निरूपितम्, तत एवावधार्यम् । अनुक्तप्रायश्चित्तविषये शङ्खलिखितौ – अविक्रेयविक्रयदुष्टभोजनप्रतिग्रहेष्वनादिष्टप्रायश्चित्तेषु सर्वेषु चान्द्रायणं प्राजापत्यं वा इति । मनुः – अभोज्यमन्नं नात्तव्य मात्मनश्शुद्धिमिच्छता । अज्ञातभुक्तमुद्धार्यं शोध्यं वाऽप्याशु शोधनैः

इति। स्मृत्यन्तरे – भक्ष्याभक्ष्याण्यशेषाणि ब्राह्मणानां विशेषतः। तत्र शिष्टा यथा ब्रूयुस्तत्कर्तव्यमिति स्मृतम् इति।

**மற்றோர் ஸ்ம்ருதியில்:—** சௌளம், உபநயனம், ஸீமந்தம், பும்ஸவனம், முதல் ரஜோதர்சனம் இவைகளில் அன்று பகலில் அன்னத்தைப் புஜித்தால் சாந்த்ராயண க்ருச்ரத்தை யனுஷ்டிக்க வேண்டும். மூலத்தில் 'அஹ:பேஷம்' என்று இருப்பதால் இரவில் அந்த க்ருஹத்தில் புஜித்தால் இந்த ப்ராயஸ்சித்தம் இல்லை. உச்சிஷ்ட போஜனம் முதலியவைகளுக்கு ப்ராயஸ்சித்தம் ஆஹ்னிக காண்டத்தில் போஜன ப்ரகரணத்தில் சொல்லப்பட்டுள்ளது. அங்கிருந்தே தெரிந்து கொள்ளவும். ப்ராயஸ்சித்தம் சொல்லப்படாத விஷயத்தில், **சங்கலிகிதர்கள்:—** விற்கக் கூடாத வஸ்துவை விற்பது, தோஷமுள்ள அன்னத்தைப் புஜிப்பது, துஷ்ட ப்ரதிக்ரஹம் இவைகளிலும், ப்ராயஸ்சித்தம் சொல்லப்படாத மற்ற எல்லாவற்றிலும் சாந்த்ராயணமாவது ப்ராஜாபத்யமாவது ப்ராயஸ்சித்தம். **மனு:—** நிஷித்தமான அன்னம் புஜிக்கத்தகாதது. தனக்குச் சுத்தியை நினைத்தவன் அறியாமல் புஜித்திருந்தால், வாந்தியால் வெளிப்படுத்த வேண்டும். சீக்ரமாய்ச் சுத்தி பண்ணக் கூடிய வழிகளாலாவது வெளிப்படுத்த வேண்டும். **ஓர் ஸ்ம்ருதியில்:—** ப்ராம்ஹணர்களுக்குப் புஜிக்கக் கூடிய வஸ்துக்களும் புஜிக்கக் கூடாத வஸ்துக்களும் பலவிதமாக இருக்கின்றன. அவ்விஷயத்தில் சிஷ்டர்கள் எவ்விதம் சொல்வார்களோ அதைச் செய்ய வேண்டும், என்று விதியுள்ளது.

## अविक्रेयविक्रये चक्रवृद्ध्यादिजीवने च प्रायश्चित्तम्।

अविक्रेयविक्रये प्रायश्चित्तमाह हारीतः – गुडतिलपुष्पमूल-फलपक्वान्नविक्रये सोमायनम्। लाक्षालवणमधूनां तैलक्षीरदधिघृत

गन्धचर्मवाससामन्यतमविक्रये चान्द्रायणम् । तथोर्णाकेशकेसरि भूधेनुवेश्माश्मशस्त्रविक्रये च मत्स्यमांसस्नाय्वस्थिशृङ्ग नखशुक्ति-विक्रये तप्तकृच्छ्रम् । हिङ्गुगुल्गुलुहरितालमनः शिलाञ्जनगैरिकलाक्षा-लवणमणिमुक्ताप्रवाल वैणवमृन्मयेषु च आराम तटाकोदपान पुष्करिणी सुकृत विक्रये त्रिषवणस्नाय्यधः शायी चतुर्थकालाहारो दशसहस्रं जपन् गायत्रीं संवत्सरेण पूतो भवति । हीनमानोन्मानोन्मापनसङ्करसङ्कीर्णविक्रये च इति ।

**விற்கக் கூடாததை விற்பது, சக்கரவட்டி முதலியதால் ஜீவிப்பதில் ப்ராயஶ்சித்தம்.**

ஹாரீதர்:— வெல்லம், எள், புஷ்பம், வேர், பழம், பக்வான்னம் இவைகளை விற்பதில் சாந்த்ராயண க்ருச்ரம் ப்ராயஶ்சித்தம். செம்மஞ்சி, உப்பு, தேன், எண்ணெய், பால், மோர், தயிர், நெய், சந்தனம், தோல், வஸ்த்ரம், இவைகளுள் எதையாவது விற்றால் சாந்த்ராயணம் ப்ராயஶ்சித்தம். கம்பளம், மயிர், கேஸரி, பூ, பசு, வீடு, கல், ஆயுதம் இவைகளை விற்றாலும், மீன், மாம்ஸம், ஸ்நாயு, எலும்பு, கொம்பு, நகம், கிளிஞ்சில் இவைகளை விற்றாலும் தப்த க்ருச்ரம் ப்ராயஶ்சித்தம். பெருங்காயம், குங்கிலியம், ஹரிதாளம், மனச்சிலா, மை, கைரிகம், செம்மஞ்சி, உப்பு, ரத்னம், முத்து, பவழம், மூங்கிலால் செய்யப்பட்டவை, மண்ணினால் செய்யப்பட்டவை, தோட்டம், குளம், கிணறு, ஓடை, புண்யம் இவைகளை விற்றால், மூன்று காலங்களிலும் ஸ்நானம் செய்பவனாய், பூமியில் படுப்பவனாய், நான்காவது போஜன காலத்தில் புஜிப்பவனாய், பதினாயிரம் முறை காயத்ரியை ஜபிப்பவனாய், ஒரு வர்ஷம் முழுவதும் இருந்தால் சுத்தனாகிறான். குறைந்த அளவு, குறைந்த நிறை, குறைந்து அளக்கச் செய்வது, அன்ய வஸ்துக்களைச் சேர்ப்பது, சேர்ந்த வஸ்துக்களை விற்பது இவைகளிலும் (முன் சொல்லப்பட்ட ப்ராயஶ்சித்தம்).

चतुर्विंशतिमते – सुराया विक्रयं कृत्वा चरेत् सौम्यचतुष्टयम्। लाक्षालवणमांसानां चरेच्चान्द्रायणत्रयम् । मध्वाज्यतैलसोमानां चरेच्चान्द्रायणद्वयम् । पयःपायसापूपानां चरेच्चान्द्रायण व्रतम् । दध्याज्येक्षुरसानां च गुडखण्डादिविक्रये। सर्वेषां स्नेहपक्वानां पराकं तु समाचरेत्। सिद्धान्नविक्रये विप्रः प्राजापत्यं समाचरेत्। उपवासं तु तक्रस्य नक्तं काञ्जिक विक्रये। पूगीफलानि मञ्जिष्ठां राजखर्जूरमेव च। एतेषां विक्रये कृच्छ्रं पनसस्य दिनद्वयम्। कदलीनालिकेरं च नारङ्गं बीजपूरकम् । एतेषां पादकृच्छ्रं स्याज्जम्बीरादेस्तथैव च । कस्तूरिकादिगन्धानां विक्रये कृच्छ्रमाचरेत्। कर्पूरादेस्तदर्धं स्याद्दिनं हिंग्वादिविक्रये। तिलानां विक्रयं कृत्वा प्राजापत्यं समाचरेत्।

சதுர்விம்சதிமதத்தில்:— ஸுரையை விற்ருல், நான்கு சாந்த்ராயண க்ருச்ரத்தை அனுஷ்டிக்க வேண்டும். செம்மஞ்சி, உப்பு, மாம்ஸம் இவைகளை விற்ருல், மூன்று சாந்த்ராயண க்ருச்ரம் அனுஷ்டிக்க வேண்டும்; தேன், நெய், எண்ணெய், ஸோமலதை இவைகளை விற்ருல், இரண்டு சாந்த்ராயணத்தை யனுஷ்டிக்க வேண்டும். பால், பாயஸான்னம், அப்பம் இவைகளை விற்ருல், சாந்த்ராயணத்தை யனுஷ்டிக்க வேண்டும். தயிர், நெய், கரும்புச்சாறு, வெல்லக்கட்டி முதலியவைகளை விற்ருலும், எண்ணெய், நெய் இவைகளில் பக்வமான எந்த வஸ்துக்களை விற்ருலும், ப்ராக க்ருச்ரத்தை யனுஷ்டிக்க வேண்டும். சமைத்த அன்னத்தை ப்ராம்ஹணன் விற்ருல் ப்ராஜாபத்ய க்ருச்ரத்தை யனுஷ்டிக்க வேண்டும். மோரை விற்ருல் உபவாஸம் ப்ராயஸ்சித்தம். காடி விற்ருல் ஒரு இரவு உபவாஸம். பாக்கு, மஞ்சிஷ்டை, பேரீச்சை இவைகளை விற்ருல், ப்ராஜாபத்ய க்ருச்ரம் ப்ராயஸ்சித்தம். பலாப்பழத்தை விற்ருல், இரண்டு நாள் உபவாஸம். வாழை, தேங்காய், நார்த்தை, மாதுளை இவைகளை விற்ருல், கால் ப்ராஜாபத்ய க்ருச்ரம். எலுமிச்சை முதலியவை

விற்பதிலும் அப்படியே. கஸ்தூரி முதலிய வாஸனை த்ரவ்யங்களை விற்றால், ப்ராஜாபத்ய க்ருச்ரத்தை யனுஷ்டிக்க வேண்டும். கர்ப்பூரம் முதலியதை விற்றால் பாதி ப்ராஜாபத்ய க்ருச்ரம் விதிக்கப்படுகிறது. பெருங்காயம் முதலியதை விற்றால் ஒரு நாள் ப்ராயஶ்சித்தம். எள்ளை விற்றால் ப்ராஜாபத்ய க்ருச்ரம் அனுஷ்டிக்க வேண்டும்.

यज्ञार्थं कृषिजातानां दानलब्धस्य विक्रये। रक्तपीतानि वस्त्राणि कृष्णाजिनमथैव वा। एतेषां विक्रये कृच्छ्रं गर्गस्य वचनं यथा। गोविक्रयं द्विजः कुर्याल्लाभार्थं धनमोहितः। प्राजापत्यं प्रकुर्वीत गजानां चैन्दवं स्मृतम्। खराश्वाजादिकानां च करभाणां च विक्रये। पराकं तत्र कुर्वीत शुनां द्विगुणमाचरेत्। नारीणां विक्रयं कृत्वा चरेच्चान्द्रयणव्रतम्। द्विगुणं पुरुषाणां च व्रतमाहुर्मनीषिणः। चान्द्रायणं प्रकुर्वीत एकाहं वेदविक्रये। अङ्गानां तु पराकं स्यात् स्मृतीनां कृच्छ्रमाचरेत्। इतिहासपुराणानां चरेत् सान्तपनं द्विजः। रहस्यपाञ्चरात्राणां कृच्छ्रं तत्र समाचरेत्। गाथानां नीतिशास्त्राणां प्राकृतानां तथैव च। सर्वासामेव विद्यानां पादकृच्छ्रं समाचरेत् इति।

யஜ்ஞத்திற்காக ஸம்பாதித்ததையும், க்ருஷியால் கிடைத்ததையும், தானத்தால் கிடைத்ததையும் விற்றாலும், சிகப்பு வஸ்த்ரம், மஞ்சள் வஸ்த்ரம், க்ருஷ்ணாஜிநம் இவைகளை விற்றாலும், கர்க்கரின் வசனப்படி ப்ராஜாபத்ய க்ருச்ரம் ப்ராயஶ்சித்தம். ப்ராம்ஹணன் தனத்தில் ஆசையுள்ளவனாய் லாபத்திற்காகப் பசுக்களை விற்றால், ப்ராஜாபத்ய க்ருச்ரத்தை யனுஷ்டிக்க வேண்டும். யானைகளை விற்றால், சாந்த்ராயண க்ருச்ரம் விதிக்கப்பட்டுள்ளது. கழுதை, குதிரை, ஆடு முதலியது, ஒட்டகம் இவைகளை விற்றால், பராக க்ருச்ரத்தை யனுஷ்டிக்க வேண்டும். நாயை விற்றால் இரண்டு மடங்கு ப்ராயஶ்சித்தம். பெண்களை

விற்ருல், சாந்த்ராயண க்ருச்ரத்தை யனுஷ்டிக்க வேண்டும். ஆண்களை விற்ருல், இரண்டு மடங்கு ப்ராயஶ்சித்தம். வேதத்தை விற்ருல் சாந்த்ராயண க்ருச்ரமும் ஒரு நாள் உபவாஸமும் ப்ராயஶ்சித்தம். வேதாங்கங்களை விற்ருல், பராகக்ருச்ரம். ஸ்ம்ருதிகளை விற்ருல், ப்ராஜாபத்ய க்ருச்ரம். இதிஹாஸம் புராணம் இவைகளை விற்ருல், ப்ராம்ஹணன் ஸாந்தபன க்ருச்ரத்தை யனுஷ்டிக்க வேண்டும். ரஹஸ்யம், பாஞ்சராத்ரம் இவைகளை விற்ருல், ப்ராஜாபத்ய க்ருச்ரத்தை யனுஷ்டிக்க வேண்டும். காதைகள், நீதிசாஸ்த்ரங்கள், ப்ராக்ருதங்கள், மற்ற எல்லா வித்யைகள் இவைகளை விற்ருல் கால் க்ருச்ரத்தை யனுஷ்டிக்க வேண்டும்.

नारदः – तण्डुलांश्च तिलान्माषान् फल पुष्प गुडानपि । नागवल्लीदलं पूगं चूर्णं कर्पूरमेव च । कस्तूरीं कुङ्कुमं मूलं मुद्गं दधि घृतं तथा । कृष्णाजिनं च रुद्राक्षान् ब्रह्मसूत्रं कमण्डलुम् । ताम्रं कांस्यं तथा वस्त्रं कम्बलं रोचनं तथा । तिन्त्रिणीं लवणं मूलं पक्वमन्नं द्विजो यदि । विक्रयित्वा तु यो जीवेत् स तु शूद्रो न संशयः । एतानि विक्रयित्वा तु हव्यकव्यानि नाचरेत् । एतानि विक्रयित्वा तु प्राजापत्यं समाचरेत् । धनस्य सङ्ग्रहार्थं तु द्विगुणं कृच्छ्रमाचरेत् । विप्रस्तु पक्षमात्रं च गोरसं विक्रयेद्यदि । तस्य देहविशुद्ध्यर्थं तप्तकृच्छ्रमुदीरितम् । मासमात्रं विक्रयित्वा चरेच्चान्द्रायणव्रतम् । ऋतुद्वयं विक्रयित्वा मण्डलं यावकं चरेत् । ऋतुत्रयं विक्रयित्वा ब्रह्महन्ता भवेद्ध्रुवम् । षाण्मासं गोरसं पक्वं पीत्वा शुद्धिमवाप्नुयात् । लवणं पक्वमन्नं च यदि मासं तु विक्रयेत् । तस्यैव निष्कृतिरियं वत्सरं यावकं चरेत् । तस्योपनयनं भूयः कर्तव्यं शुद्धिमिच्छता इति ।

நாரதர்:— *அரிசி, எள், உளுந்து, பழம், புஷ்பம், வெல்லம், வெற்றிலே, பாக்கு, சுண்ணும்பு, கர்ப்பூரம், கஸ்தூரீ, குங்குமப்பூ, வேர், பயறு, தயிர், நெய், மான்*

தோல், ருத்ராக்ஷம், யஜ்ஞோபவீதம், கமண்டலு, தாம்ரம், வெண்கலம், வஸ்த்ரம், கம்பளி, ரோசனம், புளி, உப்பு, பக்குவம் செய்யப்பட்ட அன்னம் இவைகளை ப்ராம்ஹணன் விற்றுப்பிழைத்தால், அவன் சூத்ரனுக்கு ஸமனுவான். ஸம்சயமில்லை. இவைகளை விற்று ஹவ்யகவ்யங்களைச் செய்யக் கூடாது. இவைகளை விற்றால் ப்ராஜாபத்ய க்ருச்ரத்தை யனுஷ்டிக்க வேண்டும். பணத்தைச் சேர்ப்பதற்காக விற்றால், இரண்டு மடங்கு ப்ராயஶ்சித்தத்தை யனுஷ்டிக்க வேண்டும். ப்ராம்ஹணன் பதினைந்து நாள் மோரை விற்றால், அவனுக்குச் சுத்திக்காகத் தப்த க்ருச்ரம் விதிக்கப்பட்டுள்ளது. ஒரு மாஸம் வரையில் விற்றால், சாந்த்ராயண க்ருச்ரத்தை யனுஷ்டிக்க வேண்டும். நான்கு மாஸம் விற்றால், ஒரு மண்டலம் வரையில் யாவக க்ருச்ரத்தை யனுஷ்டிக்க வேண்டும். ஆறு மாஸம் வரையில் விற்றால், ப்ரம்ஹஹத்தியை செய்தவனுவான். நிச்சயம். அவன் ஆறு மாஸம் வரையில் காய்ச்சப்பட்ட மோரைப் பருகியிருந்தால் சுத்தனுவான். உப்பு, பக்வமான அன்னம் இவைகளை ஒரு மாஸம் வரையில் விற்றால், ஒரு வர்ஷம் வரையில் யாவக க்ருச்ரத்தை யனுஷ்டிப்பது ப்ராயஶ்சித்தம். அவனுக்குப் புநருபநயனமும் செய்யப்பட வேண்டும்.

कूर्मपुराणे – अश्वधेनुमनुष्याश्च रासभः कुञ्जरस्तथा । कन्या नारी च मेषश्च पुस्तकं ब्रह्मसूत्रकम् । लवणं पललं चर्म लशुनं गृञ्जनं तथा । पिप्पली च मरीचाश्च हरिद्राश्च लवङ्गकाः । औषधानीह यावन्ति मत्स्यकुक्कुटसूकराः । हिङ्गुजीरकवस्तूनि ताम्रं कांस्यादिकं तथा । एतानि मूल्यैः क्रीत्वा तु स्वल्पैर्वाऽपि तथाऽधिकैः । विक्रयित्वाऽऽत्मभरणं कुर्याद्यदि स पापभाक् । मृत्वा नरकमासाद्य कृमिकूपे पतत्यधः । तस्मादेतद्विशुद्ध्यर्थं प्रायश्चित्तमिहोच्यते । एकवारं द्विवारं वा बहुवारमनेकशः । तप्तं पराकं चान्द्रं च यावकं

वर्षमाचरेत् । तस्योपनयनं भूयः पञ्चगव्येन शुद्ध्यति । वृद्धेरपि च या वृद्धिश्चक्रवृद्धिरुदाहृता । मासि मासि च या वृद्धिस्सा शिखावृद्धिरुच्यते । ताभ्यां जीवेद्यदा विप्रस्स वार्द्धुषिक उच्यते । मासं जीवेद्यदा वृद्ध्या पराकं कृच्छ्रमाचरेत् । मासद्वये च तप्तं स्याच्चान्द्रं मासत्रये स्मृतम् । षण्मासे तु महाचान्द्रं वत्सरे द्विगुणं स्मृतम् । पतितस्स्यात् परं विप्रस्सर्वकर्मबहिष्कृतः इति ।

**கூர்மபுராணத்தில்:—** குதிரை, பசு, மனிதன், கழுதை, யானை, கன்யகை, ஸ்த்ரீ, ஆடு, புஸ்தகம், யஜ்ஞோபவீதம், உப்பு, மாம்ஸம், தோல், பூண்டு, க்ருஞ்சனம், திப்பிலீ, மிளகு, மஞ்சள், லவங்கம், பலவிதமான ஒளஷதங்கள், மீன், கோழி, பன்றி, பெருங்காயம், ஜீரகம், தாம்ரம், வெண்கலம் முதலியவை இவைகளை ஸ்வல்பமாகவாவது, அதிகமாகவாவது உள்ள க்ரயத்துக்கு வாங்கி, அதிக விலைக்கு விற்று, ஜீவித்தால் அவன் பாபியாவான். மரித்த பிறகு நரகத்தை யடைந்து, புழுக்கிணற்றில் விழுவான். ஆகையால் பாபத்தைப் போக்குவதற்கு ப்ராயச்சித்தம் இங்கு சொல்லப்படுகிறது. ஒரு தடவை, இரண்டு தடவை, மூன்று தடவை, அநேகத் தடவை செய்தால், முறையே தப்த க்ருச்ரம், பராக க்ருச்ரம், சாந்த்ராயண க்ருச்ரம், யாவக க்ருச்ரம் இவைகளை ஒரு வர்ஷம் அனுஷ்டிக்க வேண்டும். அவனுக்குப் புனருபநயனமும், பஞ்சகவ்ய ப்ராசனமும் செய்யப்பட வேண்டும். அதனுல் சுத்தனுவான். வட்டிக்கும் வட்டி என்பது சக்ரவ்ருத்தி என்பது.(விருத்தி-வட்டி) ஒவ்வொரு மாஸத்திலும் எந்த வட்டியோ அது சிகா வ்ருத்தி எனப்படுகிறது. இந்த இரண்டு வட்டிகளால் ப்ராம்ஹணன் ஜீவித்தால் அவன் வார்த்துஷிகன் எனப்படுகிறுன். ஒரு மாஸம் வட்டியினுல் ஜீவித்தால், பராக க்ருச்ரத்தை யனுஷ்டிக்க வேண்டும். இரண்டு மாஸம் ஜீவித்தால் தப்த க்ருச்ரம் ப்ராயச்சித்தம். மூன்று மாஸம் ஜீவித்தால்,

சாந்த்ராயண க்ருச்ரம் சொல்லப்பட்டுள்ளது. ஆறு மாஸம் ஜீவித்தால், மஹாசாந்த்ராயண க்ருச்ரம். ஒரு வர்ஷம் ஜீவித்தால் இரண்டு மடங்கு ப்ராயஶ்சித்தம். அதற்கு மேல் ஜீவித்தால் அவன் பதிதனுவான். எல்லாக் கர்மங்களிலும் அனர்ஹனுவான்.

### ऋणादि कृत्वा व्रताद्याचरण निषेधः ।

हेमाद्रौ – स्वस्याकिञ्चन्यमज्ञात्वा ऋणं कृत्वा व्रतं चरन् । भोगासक्तश्च यः स्वात्मविक्रयीत्युच्यते बुधैः । नित्यकर्माणि काम्यानि इष्टापूर्तादिकानि च । सर्वं तस्यैव भवति स्वयं वै निष्फलो भवेत् । अर्वाक् धनस्य द्वैगुण्यात्तस्माद्द्यात्सवृद्धिकम् । ऊर्ध्वं तु कर्मणां भ्रंशात् पतितस्स्यान्न संशयः । हिरण्यगर्भं तस्योक्तं प्रायश्चित्तं महर्षिभिः । धनिने च धनं दत्वा प्रायश्चित्तं समाचरेत् इति । कल्पान्ते भ्रूणहा मुच्येदृणी तु न कदाचन इति वचनमकृतप्रायश्चित्तविषयम् । यत्तु संवर्त आह – अग्निहोत्री तपस्वी च ऋणवान्म्रियते यदि । अग्निहोत्रं तपश्चैव सर्वं तद्धनिनां धनम् इति, तद्द्वैगुण्यादूर्ध्वं मरणे धनग्राहिपुत्राद्यभावे चावगन्तव्यम् ।

### கடன் முதலியதை வாங்கி வ்ரதம் முதலியதைச் செய்வதன் நிஷேதம்.

ஹேமாத்ரியில்:— தனது ஏழ்மையை அறியாமல் கடன் வாங்கி வ்ரதம் செய்பவனும், தனது போகத்தில் ஆசையுற்றவனும், ஆத்ம விக்ரயீ என அறிந்தவர்களால் சொல்லப்படுகிறுன். அவன் செய்த நித்ய கர்மங்களும், காம்ய கர்மங்களும், இஷ்டா பூர்த்தம் முதலியவைகளும் இவையெல்லாம் கடன் கொடுத்தவனுடையதாகின்றது. செய்தவன் தான் பலன் இல்லாதவனுக ஆகிறுன். கடன் வாங்கிய தனம் இரண்டு மடங்கு ஆவதற்குள் வட்டியுடன் கொடுக்க வேண்டும். அதற்கு மேலானுல், கர்ம ப்ரஷ்டனுவதால் பதிதனுவான். ஸம்சயமில்லை. அவனுக்கு

ப்ராயஶ்சித்தம் மஹர்ஷிகளால் ஹிரண்ய கர்ப்பம் ப்ராயஶ்சித்தம் எனச் சொல்லப்பட்டுள்ளது. கடன் கொடுத்தவனுக்குத் தனத்தைக் கொடுத்து விட்டு ப்ராயஶ்சித்தத்தை யனுஷ்டிக்க வேண்டும். ''ப்ரூணஹத்யை செய்தவன் கல்பத்தின் முடிவில் பாபத்தினின்றும் விடுபடுவான். கடன் வாங்கியவன், (கடன் தீர்க்காவிடில்) ஒரு நாளும் விடுபடுவதில்லை'' என்ற வசனம் ப்ராயஶ்சித்தம் செய்து கொள்ளாதவனைப் பற்றியது. ஆனால், ஸம்வர்த்தர்:— ''அக்னி ஹோத்ரமுள்ளவனும், தபஸ்வியானவனும் கடனுடையவனாய் மரித்தால், அவன் செய்த அக்னி ஹோத்ரம், தபஸ் எல்லாம் கடன் கொடுத்தவனைச் சேர்ந்ததாகும்'' என்று சொல்லிய வசனமோவெனில், அந்த வசனம் கடன் வாங்கிய த்ரவ்யம் இரண்டு மடங்கு ஆகியதற்கு மேல் இறந்தாலும் தனத்தை க்ரஹித்தவனுக்குப் புத்ரன் முதலியவர் இல்லாவிடினும் என்றதைப் பற்றியது, என்று அறியவும்.

## ब्राह्मणादिविक्रये पुत्रपत्नीकन्यादासीनित्यकर्मादि विक्रये च प्रायश्चित्तम्।

हेमाद्रौ – पूर्वजः पूर्वजं वाऽपि बाहुजोरुजपादजान् । वशीकृत्यौषधैर्मन्त्रैर्विक्रयेद्यदि पापधीः । बाले चान्द्रं द्विजं प्रोक्तं पौगण्डे तद्द्वयं चरेत् । तरुणे तु महाचान्द्रं प्रौढे प्रोक्तं तु तत्त्रयम् । भिन्नवर्णे तु विक्रीय सहस्रं कृच्छ्रमाचरेत् । विप्रं यः क्षत्रियो हृत्वा विक्रयेद्यदि पापधीः । ब्रह्महत्याव्रतं कृत्वा शुद्धिमाप्नोति पौर्विकीम् । तदर्धेनैव शुद्धः स्यादूरुजो विप्रविक्रये । शूद्रस्तु विक्रयेद्विप्रं मौसल्यवधमर्हति । जारजं वाऽऽत्मजं वाऽपि विक्रीणीयात् सुतं यदि । तद्दोषपरिहारार्थं महासान्तपनं चरेत् । बाले सान्तपनं प्रोक्तं पौगण्डे तद्द्वयं स्मृतम् । कौमारे प्रौढकाले च महासान्तपनत्रयम् ।

**ப்ராம்ஹணர் முதலியவரை விற்பது, புத்ரன், பத்னீ, கந்யகை, வேலைக்காரி, நித்யகர்மம் முதலியது இவைகளை விற்பதில் ப்ராயஸ்சித்தம்**

**ஹேமாத்ரியில்:—** *பாபபுத்தியுள்ள ப்ராம்ஹணன், ப்ராம்ஹணனையாவது, க்ஷத்ரியன், வைச்யன், சூத்ரன் இவர்களையாவது ஔஷதங்களாலும் மந்த்ரங்களாலும் வசப்படுத்தி, விற்பானுகில், விற்கப்பட்டவன் ப்ராம்ஹண பாலனுகில் சாந்த்ராயண க்ருச்ரம் ப்ராயஸ்சித்தமாகச் சொல்லப்பட்டுள்ளது. பௌகண்டனுகில், இரண்டு மடங்கு ப்ராயஸ்சித்தம். யௌவனமுள்ளவனுகில், மஹாசாந்த்ராயணம் ப்ராயஸ்சித்தம். வ்ருத்தனுகில், மூன்று மடங்கு ப்ராயஸ்சித்தம். (க்ஷத்ரியன் முதலிய) அந்யவர்ணனை விற்ருல், ஸஹஸ்ரக்ருச்ரத்தை யனுஷ்டிக்க வேண்டும். பாபபுத்தியுள்ள க்ஷத்ரியன் ப்ராம்ஹணனை அபஹரித்து விற்ருல், ப்ரம்ஹஹத்யா ப்ராயஸ்சித்தத்தை யனுஷ்டித்தால் முன் போல் சுத்தனுவான். வைச்யன் ப்ராம்ஹணனை விற்ருல், முன் சொல்லிய ப்ராயஸ்சித்தத்தின் பாதியால் சுத்தனுவான். சூத்ரன் ப்ராம்ஹணனை விற்ருல், உலக்கையினுல் கொலைக்கு அர்ஹனுவான். கள்ளபுருஷனுக்குப் பிறந்தவனுயினும் தனக்குப் பிறந்தவனுயினும் பிள்ளையை விற்ருல், அந்தப் பாபத்தைப் போக்குவதற்கு மஹாஸாந்தபன க்ருச்ரத்தை யனுஷ்டிக்க வேண்டும். விற்கப்பட்டவன் பாலனுனுல், ஸாந்தபன க்ருச்ரம் சொல்லப்பட்டுள்ளது. பௌகண்டனுகில், இரண்டு மடங்கு ப்ராயஸ்சித்தம். குமாரனுனுலும், வ்ருத்தனுனுலும், மூன்று மஹாஸாந்தபன க்ருச்ரம் ப்ராயஸ்சித்தம்.*

स्वपत्नीं विक्रयेद्यस्तु सतीं दुष्टामथाऽपि वा। सतीं विक्रीय चान्द्रं स्यात् पराकं दुष्टचारिणीम्। बालिकायां षडब्दं स्याद्वृद्धायां नास्ति निष्कृतिः। ज्ञात्वा विक्रयते यस्तु द्विगुणं व्रतमाचरेत्। विवाहार्थं धनं गृह्णन् यत्किञ्चिद्व्याजमाश्रितः । स कन्याविक्रयी तस्य

शुद्धिश्चान्द्रायणत्रयात्। द्विजस्सम्पाद्य यो दासीं गृहकर्मसुखाप्तये। युवतीं विक्रयित्वा तां षडब्दं कृच्छ्रमाचरेत्। स्नानादि नित्यकर्माणि इष्टापूर्तादिकानि च। उपोषणव्रतादीनि श्रौतस्मार्तादिकानि च। विक्रीणीयात्तु यो विप्रो माघस्नानं तथैव च। चान्द्रायणत्रयं कृत्वा पुनस्संस्कारकृत्तदा। पञ्चगव्यं ततः पीत्वा शुद्धिमाप्नोति नैष्ठिकीम् इति।

பதிவ்ரதையானாலும், துஷ்டையானாலும் தனது பத்னியை எவன் விற்பானோ, விற்கப்பட்ட அவள் பதிவ்ரதையாகில், சாந்த்ராயண க்ருச்ரமும், துஷ்டையாகில், பராகக்ருச்ரமும் ப்ராயச்சித்தம். விற்கப்பட்டவள் சிறியவளாகில் ஷடப்த க்ருச்ரம் ப்ராயச்சித்தம். வ்ருத்தையானால், ப்ராயச்சித்தம் இல்லை. அறிந்து விற்பானாகில், இரண்டு மடங்கு ப்ராயச்சித்தத்தை யனுஷ்டிக்க வேண்டும். பெண்ணின் விவாஹத்திற்காக ஏதாவது ஒரு கபடத்தை ஆச்ரயித்து, தனத்தை க்ரஹித்தால் அவன் கன்யகையை விற்றவன் எனப்படுவான். அவனுக்கு மூன்று சாந்த்ராயண க்ருச்ரத்தால் சுத்தி. வீட்டின் வேலையால் ஸுகத்தை யடைவதற்காக வேலைக்காரியை ஸம்பாதித்து எந்த க்ருஹஸ்தன் யுவதியாகிய அவளை விற்பானோ அவன் ஷடப்த க்ருச்ரத்தை ப்ராயச்சித்தமாக அனுஷ்டிக்க வேண்டும். ஸ்நானம் முதலிய நித்யகர்மங்கள், இஷ்டாபூர்த்தம் முதலியது, உபவாஸம், வ்ரதம் முதலியவை, ச்ரௌதம் ஸ்மார்த்தம் முதலிய கர்மங்கள், மாகஸ்நானம் இவைகளை எந்த ப்ராம்ஹணன் விற்கின்றானோ, அவன் மூன்று சாந்த்ராயண க்ருச்ரத்தை யனுஷ்டித்து, புநருபநயனத்தைச் செய்து கொள்ள வேண்டும். பிறகு பஞ்சகவ்ய ப்ராசனம் செய்தால் முன் போல் சுத்தியடைகிறான்.

श्रुतिस्मृत्यादेः सालिग्रामादेः विक्रये प्रायश्चित्तम्।

वसिष्ठः – श्रुतिं स्मृतिं धर्मशास्त्रं पुराणं ज्योतिषं तथा। पुस्तकं फलकं वाऽपि तत्साधनमथापि वा। विक्रयेद्यदि लोभात्मा महान्तं नरकं व्रजेत्। चान्द्रायणं पराकं च कृत्वा शुद्धिमवाप्नुयात् इति। मार्कण्डेयः – सालिग्रामशिलां यो वै तत्तचक्राङ्कितां द्विजः। शिवलिङ्गं चक्रपाणिप्रतिमां यदि विक्रयेत्। चान्द्रायणं प्रकुर्वीत पश्चात्तापसमन्वितः। लक्ष्मीनृसिंह रामं च गोपालं श्रीधरं तता। लक्ष्मीनारायणं चैव दधिवामनमेव च। हिरण्यगर्भमित्यादिमूर्तीः पापापहारिणीः। रामादिविक्रये विप्रश्चरेच्चान्द्रायणत्रयम्। लक्ष्मीनारायणे चैव तद्द्वयं दधिवामने। महाचान्द्रं प्रकुर्वीत लक्ष्मीनृसिंहविक्रये। पराकं देहशुद्ध्यर्थं चरेद्विप्रोऽविचारयन्। लिङ्गे तु स्फाटिके चैव तथा मारकते द्विजः। मासं दीक्षामुपागम्य प्रातः स्नात्वा यथा विधि। सूर्योदयं समारभ्य यावदस्तङ्गतो रविः। प्रत्यहं दशसाहस्रं जपेच्चैवं षडक्षरम्। फलाहारं प्रकुर्वीत यदा मन्दायते रविः। स्थण्डिले शयनं कृत्वा मासान्ते शुद्धिमाप्नुयात् इति।

**வேதம், ஸ்ம்ருதி முதலியவைகளையும், ஸாளிக்ராமம் முதலியவைகளையும் விற்பதில் ப்ராயச்சித்தம்.**

**வஸிஷ்டர்:—** *வேதம், ஸ்ம்ருதி, தர்மசாஸ்த்ரம், புராணம், ஜ்யோதிஷம், புஸ்தகம், பலகை, அதன் ஸாதனம், இவைகளில் எதையாவது லோபத்தால் விற்றுறுகில் கொடிய நரகத்தை யடைவான். சாந்த்ராயண க்ருச்ரம், பராகக்ருச்ரம் இவைகளை யனுஷ்டித்தால் சுத்தியை யடைவான்.* **மார்க்கண்டேயர்:—** *அந்தந்தச் சக்ரத்துடன் கூடிய ஸாளிக்ராமச் சிலையையாவது, சிவலிங்கத்தையாவது, சக்ரபாணி ப்ரதிமையையாவது விற்பானுகில், பிறகு பச்சாத்தாபத்துடன் கூடியவனாய், சாந்த்ராயண க்ருச்ரத்தை யனுஷ்டிக்க வேண்டும்.*

லக்ஷ்மீந்ருஸிம்ஹன், ராமன், கோபாலன், ஸ்ரீதரன், லக்ஷ்மீநாராயணன், ததிவாமனன், ஹிரண்யகர்ப்பன் இவை முதலிய பாபத்தைப் போக்கும் மூர்த்திகளை விற்றாலும், ராமன் முதலிய மூர்த்திகளை விற்றாலும் மூன்று சாந்த்ராயண க்ருச்ரத்தை யனுஷ்டிக்க வேண்டும். லக்ஷ்மீ நாராயணனை விற்றால், இரண்டு சாந்த்ராயண க்ருச்ரம். ததிவாமனனை விற்றால், மஹாசாந்த்ராயண க்ருச்ரம் அனுஷ்டிக்க வேண்டும். லக்ஷ்மீந்ருஸிம்ஹனை விற்றால், பராகக்ருச்ரத்தை ஸந்தேஹமில்லாமல் அனுஷ்டிக்க வேண்டும். ஸ்படிகலிங்கம், மரகதலிங்கம் இவைகளை விற்றால், ஒரு மாஸம் தீக்ஷையை ஸங்கல்பித்து, காலையில் விதிப்படி ஸ்நானம் செய்து, ஸூர்யோதயம் முதல் ஸூர்யாஸ்தமயம் வரையில் ஒவ்வொரு நாளிலும் பதினாயிரம் முறை ஷடக்ஷர மந்த்ரத்தை ஜபிக்க வேண்டும். ஸூர்யாஸ்தமயத்திற்குப் பிறகு பழத்தை ஆஹாரமாகக் கொள்ள வேண்டும். தரையில் படுக்க வேண்டும். இவ்விதம் இருந்தால், ஒரு மாஸத்திற்குப் பிறகு சுத்தியை யடைவான்.

### जलाग्न्यादिषु मर्तुमुद्यम्य निवृत्तस्य प्रायश्चित्तम् ।

चतुर्षु वर्णेषु यः कोऽपि स्वात्मघातार्थ मुद्यम्य कथञ्चित् घातात् प्रागेव निवर्तते तस्य प्रायश्चित्तं प्रश्नपूर्वकमाह पराशरः – जलाग्निपतने चैव प्रव्रज्यानाशकेषु च । प्रत्यावसितवर्णानां कथं शुद्धिर्विधीयते । प्राजापत्यद्वयेनैव तीर्थाभिगमनेन च । वृषैकादशदानेन वर्णाः शुद्ध्यन्ति ते त्रयः । ब्राह्मणस्य प्रवक्ष्यामि वनं गत्वा चतुष्पथे । सशिखं वपनं कृत्वा प्राजापत्यद्वयं चरेत् । गोद्वयं दक्षिणां दद्याच्छुद्धिं पाराशरोऽब्रवीत् । मुच्यते तेन पापेन ब्राह्मणत्वं च गच्छति इति ।

**ஜலம், அக்னி முதலியவைகளில் மரிப்பதற்காக முயற்சித்துப் பிறகு திரும்பினால் ப்ராயஶ்சித்தம்.**

நான்கு வர்ணத்தாருள் எவனாயினும் தன்னைக் கொல்வதற்காக முயற்சித்து, எக்காரணத்தாலாவது கொல்லுவதனின்றும் திரும்புகின்றானோ அவனுக்கு ப்ராயஶ்சித்தத்தைக் கேள்வியுடன் சொல்லுகிறார் பராசரர்:— ஜலம், நெருப்பு இவைகளில் விழுவது, ஸந்யாஸம், உண்ணாவ்ரதம் இவைகளைச் செய்வதாய் முயற்சித்து, செய்யாமல் திரும்பியவர்க்கு ப்ராயஶ்சித்தம் எப்படி விதிக்கப்படுகிறது ? (எனில்):— இரண்டு ப்ராஜாபத்ய க்ருச்ரம், புண்ய தீர்த்த யாத்ரை, ஒரு வ்ருஷபத்துடன் பத்துப் பசுக்களைத் தானம் செய்வது இவைகளால் மூன்று வர்ணத்தாரும் (க்ஷத்ரிய, வைச்ய, சூத்ர) முறையே சுத்தியடைகின்றனர். ப்ராம்ஹணனுக்கு விதியைச் சொல்லுகிறேன். காட்டிற்குச் சென்று நாற்சந்தியில் சிகையைச் சேர்த்து க்ஷவரம் செய்து கொண்டு இரண்டு ப்ராஜாபத்ய க்ருச்ரத்தை யனுஷ்டிக்க வேண்டும். இரண்டு பசுக்களைத் தக்ஷிணையாகக் கொடுக்க வேண்டும். இவ்விதம் சுத்தியைப் பராசரர் விதித்தார். அந்தப் பாபத்தினின்றும் விடுபடுவான். ப்ராம்ஹணத் தன்மையையும் அடைவான்.

नदीतटाकादिप्रवेशनमग्निप्रवेशनं भृगुपतनं महाप्रस्थानगमनं अनशनं चेति जलाग्न्यादयः पञ्च मरणहेतवः । तत्र जलादिमरणं द्विविधं विहितं प्रतिषिद्धं चेति । तत्र विहितमपि द्विविधम् । काम्यतपोरूपं प्रायश्चित्तरूपं चेति । तत्तु कलौ वर्जनीयम् । युगान्तरेष्वपि विहितत्वेन न प्रायश्चित्तार्हम् । क्रोधादिना यज्जलादिमरणं तत्प्रतिषिद्धम् । तदेवात्र परिशिष्यते । जलाग्नीति विषभक्षणोद्बन्धनादेरप्युपलक्षणम् । तत्र काम्यतपोरूपं कूर्मपुराणे नर्मदामाहात्म्ये प्रदर्शितम् – अग्निप्रवेशं यः कुर्यात् सोमतीर्थे

नराधिप । जले वाऽनाशके वाऽपि नासौ मर्त्योऽभिजायते इति । तत्रैव प्रयागमाहात्म्येऽभिहितम् – गङ्गायमुनयोर्मध्ये करीषाग्निं विशेत्तु यः । अहीनाङ्गो ह्यरोगश्च पञ्चेन्द्रियसमन्वितः । यावन्ति रोमकूपाणि तस्य गात्रेषु मानवः । तावद्वर्ष सहस्राणि स्वर्गे लोके महीयते । जलप्रवेशं यः कुर्यात् सङ्गमे लोकविश्रुते । राहुग्रस्ते यदा सोमे विमुक्तस्सर्वपातकैः । सोमलोकमवाप्नोति सोमेन सह मोदते इति, तदेतत् प्रायश्चित्तरूपं मरणम् । मर्तुमुद्यम्य मृतस्य दुर्मरणत्वेऽपि न तत्रेदं प्रायश्चित्तम्, कर्तुरेवाभावात् । यस्तूद्यम्य मरणान्निवर्तते, तस्य मरणोद्यमनिमित्तमिदं प्रायश्चित्तम् । जलाग्न्यादिभिर्मर्तुमुद्यम्य ततो निवृत्ताः - प्रत्यवसिताः । तत्र क्षत्रियस्य प्राजापत्यद्वयम् । वैश्यस्य तीर्थयात्रा । शूद्रस्य वृषसहितगोदशकदानम् । ब्राह्मणस्य वनगमनादिव्रतम् । आत्महननोद्यमेन ब्राह्मणत्वमपगतम् । चण्डालत्वमायातम् । पुनर्व्रतचरणेन चण्डालत्वनिवृत्तौ पुनः पूर्वसिद्धं ब्राह्मण्यं प्रत्यापद्यते । तदाह वृद्धपराशरः – अनाशकान्निवृत्तस्तु चातुर्वर्ण्यव्यवस्थितः । चण्डालः स तु विज्ञेयो वर्जनीयः प्रयत्नतः । ब्राह्मणानां प्रसादेन तीर्थाभिगमनेन च । गवां दशकदानेन वर्णाः शुद्ध्यन्ति ते त्रयः । ब्राह्मणस्य प्रवक्ष्यामि गत्वाऽऽरण्यं चतुष्पथम् । सशिखं वपनं कृत्वा त्रिसन्ध्यमवगाहनम् । सावित्र्यष्टसहस्रं तु जपेच्चैव दिने दिने । मुच्यते सर्वपापेभ्यो ब्राह्मणत्वं च गच्छति । भैक्षार्थी विचरेत् ग्राम्यं गृह्णान् सप्तवने वसन् । धौतां भिक्षां समश्नीयादब्दार्धेन विशुद्ध्यति इति ।

நதீ, தடாகம் முதலியதில் விழுவது, நெருப்பில் நுழைவது, மலைச்சரிவிலிருந்து விழுவது, மஹாப்ரஸ்தானம் செல்வது, உண்ணாவ்ரதம் என்று இவ்விதம் ஐந்தும் மரணத்துக்குக் காரணங்கள். அதில் ஜலம் முதலியதால் மரிப்பது என்பது இரண்டுவிதமுள்ளது –

விதிக்கப்பட்டது என்றும் தடுக்கப்பட்டது என்றும். அதில் விதிக்கப்பட்டது என்பது இரண்டு விதம். காம்யதபஸ் என்றும் ப்ராயஶ்சித்த ரூபம் என்றும், அது கலியில் வர்ஜிக்கத்தக்கது. மற்ற யுகங்களிலும் விதிக்கப்பட்டிருப்பதால் ப்ராயஶ்சித்தத்திற்குரியது அல்ல. கோபம் முதலியதால் ஜலம் முதலியதில் விழுந்து மரிப்பது என்பது தடுக்கப்பட்டது. அது தான் இங்கு மீதியாகிறது. ஜலம், நெருப்பு என்று சொல்லியது விஷத்தை உட்கொள்வது, சுருக்கிட்டுக் கொள்வது முதலியதையும் சொல்வதாகும். அதில் மரிப்பதற்கு முயற்சித்து, இறந்தவனுக்கு துர்மரணமாகினும் இந்த ப்ராயஶ்சித்தம் இல்லை, செய்து கொள்ளுகிறவனே இல்லாததால். எவன் முயற்சித்து மரணத்தினின்றும் திரும்புகின்றானோ, அவனுக்கு மரணத்துக்கு முயற்சித்ததற்காக இந்த ப்ராயஶ்சித்தம். மூலத்திலுள்ள ''ப்ரத்யவஸிதா:'' என்ற பதத்திற்கு ஜலம் நெருப்பு முதலியதால் மரிப்பதற்கு முயற்சித்து அதனின்றும் திரும்பியவர்கள் என்பது பொருள். அதில் க்ஷத்ரியனுக்கு இரண்டு ப்ராஜாபத்ய க்ருச்ரம். வைச்யனுக்குத் தீர்த்த யாத்ரை, சூத்ரனுக்கு ஒரு வ்ருஷபத்துடன் கூடிய பத்துப் பசுக்களின் தானம். ப்ராம்ஹணனுக்குக் காட்டுக்குச் செல்வது முதலிய வ்ரதம். தன்னைக் கொல்வதற்கு முயற்சித்ததால், ப்ராம்ஹணத் தன்மை போய்விட்டது. சண்டாளத் தன்மை வந்து விட்டது. மறுபடி ப்ராயஶ்சித்தத்தை யனுஷ்டிப்பதால் சண்டாளத் தன்மை நிவ்ருத்தித்த பிறகு மறுபடி முன்னுள்ள ப்ராம்ஹணத் தன்மையை யடைகிறான். அதைச் சொல்லுகிறார், காம்ய தபோரூபமான ப்ராயஶ்சித்தம் கூர்ம புராணத்தில் நர்மதா மாஹாத்ம்யத்தில் சொல்லப்பட்டுள்ளது:— ஓ! அரசனே! எந்த மனிதன் ஸோம தீர்த்தத்தில் அக்நி ப்ரவேசத்தையாவது, ஜலப்ரவேசத்தையாவது, உபவாஸத்தையாவது செய்து மரணத்தை யடைகின்றானோ அவன் மறுபடி மனிதனுய்ப்

பிறப்பதில்லை, என்று. அதிலேயே ப்ரயாக மாஹாத்ம்யத்தில் சொல்லப்பட்டுள்ளது:— எந்த மனிதன், அங்கஹானி யில்லாதவனாயும், ரோகமில்லாதவனாயும், ஐந்து இந்த்ரியங்களுடன் கூடியவனாயும் இருந்தும், கங்கை, யமுனை இவைகளின் நடுவில் கரீஷாக்னியில் (சாணங்களால் உண்டாகிய நெருப்பில்) ப்ரவேசிக்கின்றானோ, அவன் தனது தேஹத்தில் எவ்வளவு மயிர்க்குழிகள் உள்ளனவோ அவ்வளவு ஆயிரம் வர்ஷங்கள் வரை ஸ்வர்க்க லோகத்தில் சிறப்பை அடைவான். எவன் கங்கா யமுனா ஸங்கமத்தில் சந்த்ரக்ரஹண காலத்தில் ஜலத்தில் ப்ரவேசித்து மரிக்கின்றானோ, அவன் ஸகல பாபங்களாலும் விடப்பட்டவனாய்ச் சந்த்ரலோகத்தையடைந்து சந்த்ரனோடு கூட ஸந்தோஷிக்கின்றான். இது தான் ப்ராயஶ்சித்தரூபமான மரணம். வ்ருத்த பராசரர்:— உண்ணா வ்ரதத்தினின்று திரும்பியவன் நான்கு வர்ணத்தாருள் ஒருவனாகில் சண்டாளன் என்று அறியப்பட வேண்டும். அவனை அவச்யம் வர்ஜிக்க வேண்டும். ப்ராம்ஹணர்களின் அனுக்ரஹத்தாலும், தீர்த்த யாத்ரையாலும், பத்துப் பசுக்களின் தானத்தாலும், (க்ஷத்ரியன் முதலிய) மூன்று வர்ணத்தாரும் சுத்தராகின்றனர். ப்ராம்ஹணனுக்கு ப்ராயஶ்சித்தத்தைச் சொல்லுகிறேன். அவன் அரண்யத்தையடைந்து, நாற்சந்தியில் சிகையுடன் வபனம் செய்து கொண்டு மூன்று காலங்களிலும் ஸ்நானம் செய்து, ஒவ்வொரு தினத்திலும் எண்ணாயிரம் முறை காயத்ரியை ஜபிக்க வேண்டும். இவ்விதம் செய்தால் எல்லாப் பாபங்களினின்றும் விடுபடுவான். ப்ராம்ஹணத் தன்மையையும் அடைவான். பிக்ஷான்னத்தை வேண்டியவனாய் க்ராமத்தில் ஸஞ்சரிக்க வேண்டும். ஏழு வீடுகளில் பிக்ஷையை அடைய வேண்டும். வனத்தில் வஸிக்க வேண்டும். பிக்ஷான்னத்தை அலம்பிப் புஜிக்க வேண்டும். இவ்விதம் ஆறு மாஸம் செய்தால் சுத்தனாவான்.

अत्रैव व्रतान्तराण्याह वसिष्ठः – जीवन्नात्मत्यागी कृच्छ्रं वा द्वादशरात्रं चरेत् । त्रिरात्रं वाऽप्युपवसेन्नित्यं स्निग्धेन वाससा । प्राणानात्मनि संयम्य त्रिः पठेदघमर्षणम् । अपि वै तेन कल्पेन गायत्रीं परिवर्तयेत् । अपि वाऽग्निं समाधाय कूश्माण्डैर्जुहुयाद्घृतम् इति । तत्र जपहोमौ विद्वद्विषये कल्पनीयौ । द्वादशरात्र त्रिरात्रौ त्वविद्वद्विषये शक्ताशक्तभेदेन व्यवस्थापनीयाविति माधवीये ।

87. இவ்விஷயத்தில் வேறு வ்ரதங்களைச் சொல்லுகிறார், வஸிஷ்டர்:— தன்னைக் கொல்ல முயற்சித்துத் திரும்பிப் பிழைத்தவன் ப்ராஜாபத்ய க்ருச்ரத்தையாவது அனுஷ்டிக்க வேண்டும். அல்லது, மூன்று நாள் முழுவதும், உபவாஸம் இருக்க வேண்டும். எப்பொழுதும் ஈரமான வஸ்த்ரத்துடன் இருக்க வேண்டும். ப்ராணாயாமம் செய்து மூன்று முறை அகமர்ஷன ஸூக்தத்தை ஜபிக்க வேண்டும். அல்லது, இதே வ்ரதத்துடன் காயத்ரியை ஜபிக்க வேண்டும். அல்லது, அக்னியை கல்பித்து, கூச்மாண்ட மந்த்ரங்களால் நெய்யை ஹோமம் செய்ய வேண்டும். அதில் ஜபம், ஹோமம் என்றது வித்வானைப் பற்றியது. பன்னிரண்டு நாள் உபவாஸம், மூன்று நாள் உபவாஸம் என்றது. அவித்வானைப் பற்றியது என்றது. சக்தியுள்ளவன், சக்தியில்லாதவன் என்றவரைப் பற்றியதாய் வ்யவஸ்தை செய்ய வேண்டும், என்று மாதவீயத்தில் உள்ளது.

## पारिव्राज्यात् प्रच्युतौ प्रायश्चित्तम् ।

प्रव्रज्यानाशकेषु च इति पराशरवचने यः प्रव्रज्याशब्दः तस्यार्थान्तरमप्युक्तं तत्रैव । पारिव्राज्यं तेन विवक्ष्यते । तथा च सति पारिव्राज्यात् प्रच्युतस्य ब्राह्मणस्य प्राजापत्यं प्रायश्चित्तमुक्तं भवति । तदिदं श्रद्धालोः पुनरुपनयनादि पुरस्सरं पारिव्राज्यं जिघृक्षोर्वेदितव्यम् ।मोहान्निवृत्तौ संवर्तः —सन्न्यस्य दुर्मतिः कश्चित्

प्रत्यापत्तिं व्रजेद्यदि। स कुर्यात्कृच्छ्रमश्रान्तष्षण्मासान् प्रत्यनन्तरम्। पुनः परिव्रजेद्विप्रो यथाविधि समाहितः इति।

**ஸந்யாஸத்திலிருந்து நழுவுவதில் ப்ராயஶ்சித்தம்.**

*''ப்ரவ்ரஜ்யா நாசகேஷு''* என்ற பராசர வசனத்தில் உள்ள *''ப்ரவ்ரஜ்யா''* சப்தம் எதுவோ அதற்கு வேறு ஒரு அர்த்தமும் சொல்லப்பட்டுள்ளது அதிலேயே. அந்தச் சப்தத்தால் ஸந்யாஸித் தன்மை சொல்லப்படுகிறது. அப்படி இருக்கும் பொழுது, ஸந்யாஸ ஆச்ரமத்தில் இருந்து நழுவிய ப்ராம்ஹணனுக்கு ப்ராஜாபத்ய க்ருச்ரம் ப்ராயஶ்சித்தம் என்று சொல்லப்பட்டதாக ஆகிறது. ஆகையால் இது, ச்ரத்தையுள்ளவனுய் புநருபனயனம் முதலியது முதற் கொண்டு மறுபடி ஸந்யாஸத்தை க்ரஹிக்க விரும்பியவனுக்கு என்று அறியப்பட வேண்டும். அறியாமையால் நழுவிய விஷயத்தில், ஸம்வர்த்தர்:— துர்ப்புத்தியாகிய ஒருவன் ஸந்யாஸம் செய்து கொண்டு அதில் இருந்து நழுவினுல், அவன் ஆறுமாஸம் வரையில், இடைவிடாது ப்ராஜாபத்ய க்ருச்ரத்தை யனுஷ்டிக்க வேண்டும். மறுபடி விதிப்படி ஸந்யாஸத்தை யடையவேண்டும்.

अत्यन्ताशक्तमुग्धविषये वृद्धपराशरः – यः प्रत्यवसितो विप्रः प्रव्रज्यातो विनिर्गतः। अनाशकनिवृत्तश्च गार्हस्थ्यं चेच्चिकीर्षति। चरेत्त्रीणि च कृच्छ्राणि त्रीणि चान्द्रायणानि च। जातकर्मादिभिः सर्वैस्संस्कृतश्शुद्धिमाप्नुयात् धति। शक्तो यस्तु पुनः पारिव्राज्यं न जिघृक्षति, तस्य मरणान्तं राजदासत्वादिकम्। अत्र नारदः – राज्ञ एव तु दासस्स्यात् प्रव्रज्यावसितो द्विजः। न तस्य प्रतिमोक्षोऽस्ति न विशुद्धिः कथञ्चन इति।

மிகவும் சக்தியில்லாத விஷயத்தில் வ்ருத்தபராசரர்:— எந்த ப்ராம்ஹணன் ஸந்யாஸத்தில்

இருந்து வெளியேறியவனே அவனும், எவன் உண்ணு வ்ரதத்தில் இருந்து வெளியேறியவனே அவனும், க்ருஹஸ்தத் தன்மையை யடைவதற்கு விரும்பினால், மூன்று ப்ராஜாபத்ய க்ருச்ரத்தையும் மூன்று சாந்த்ராயண க்ருச்ரத்தையும் அனுஷ்டிக்க வேண்டும். அவன் ஜாதகர்மம் முதலிய எல்லா ஸம்ஸ்காரங்களையும் அனுஷ்டித்தால் சுத்தியை யடைவான். சக்தியுடைய எவன் மறுபடி ஸந்யாஸத்தை க்ரஹிக்க விரும்பவில்லையோ, அவனுக்கு மரணம் வரையில் அரசனுக்குத் தாஸனாயிருப்பது முதலியது ப்ராயஶ்சித்தம். இதில், நாரதர்:— ஸந்யாஸத்தில் இருந்து திரும்பிய ப்ராம்ஹணன் அரசனுக்குத் தாஸனாகவே இருக்க வேண்டும். அவனுக்குத் திரும்புவதென்பது இல்லை. எவ்விதத்திலும் அவனுக்குச் சுத்தியில்லை.

कात्यायनः – प्रव्रज्यावसिता यत्र त्रयो वर्णा द्विजातयः । निर्वासं कारयेद्विप्रं दास्यं क्षत्रविशोर्नृपे इति । दक्षः – पारिव्राज्यं गृहीत्वा तु यः स्वधर्मे न तिष्ठति । श्वपदेनाङ्कयित्वा तं राजा शीघ्रं प्रवासयेत् इति । याज्ञवल्क्यः – प्रव्रज्यावसितो राज्ञो दासस्स्यान्मरणान्तकम् इति ।

காத்யாயனர்:— எந்த ராஜ்யத்தில் முந்திய மூன்று வர்ணத்தாரும் ஸந்யாஸத்தினின்றும் நழுவியவரா யுள்ளனரோ, அந்தத் தேசத்தினின்று ப்ராம்ஹணனை வெளியேற்ற வேண்டும். க்ஷத்ரிய வைச்யர்களை அரசனிடத்தில் அடிமையாக்க வேண்டும். தக்ஷர்:— எவன் ஸந்யாஸத்தை க்ரஹித்து, தனது தர்மத்தில் இல்லையோ அவனை நாயின் காலினால் சூடிட்டுத் தன் தேசத்தினின்று அரசன் சீக்கிரமாக வெளியேற்ற வேண்டும். யாஜ்ஞவல்க்யர்:— ஸந்யாஸத்தினின்று நழுவியவன் மரணம் வரையில் அரசனுக்கு அடிமையாக வேண்டும்.

अङ्गिराः – सन्यासं चैव यः कृत्वा पुनरुत्तिष्ठते द्विजः । न तस्य निष्कृतिर्दृष्टा स्वधर्मात् प्रच्युतस्य च । आरूढो नैष्ठिकं कर्म पुनरावर्तयेद्यतिः । आरूढपतितो ज्ञेयः सर्वकर्मबहिष्कृतः । चण्डालाः प्रत्यवसिताः परिव्राजकतापसाः । तेषां जातान्यपत्यानि चण्डालैस्सह वासयेत् । नैष्ठिकानां वनस्थानां यतीनामवकीर्णिनाम् । शुद्धानामपि लोकेऽस्मिन् प्रत्यापत्तिर्न विद्यते इति । बह्वृचपरिशिष्टे – धीपूर्वं रेत उत्सर्गो द्रव्यसंग्रह एव च । पतत्यसौ ध्रुवं भिक्षुर्यस्य भिक्षोर्द्वयं भवेत् इति ।

அங்கிரஸ்:— எந்த ப்ராம்ஹணன் ஸந்யாஸம் செய்து கொண்டு மறுபடி க்ருஹஸ்தாச்ரமத்தை யடைகிருனே அவனுக்கு ப்ராயப்ஸித்தம் என்பது விதிக்கப்படவில்லை. ஸ்வதர்மத்தை விட்டவனுக்கும் அப்படியே. ஸந்யாஸத்தை க்ரஹித்தவன் மறுபடி கீழ் ஆச்ரமத்திற்கு இறங்கிஞல், அவனை ஆரூடபதிதன் என்று அறியவும். அவன் எல்லாக் கர்மங்களுக்கும் அர்ஹனல்லாதவன். ஸந்யாஸிகளும், வானப்ரஸ்தர்களும் தமது ஆச்ரமத்திலிருந்து நழுவிஞல் சண்டாளர்கள் ஆவர். அவர்களுக்குப் பிறந்த குழந்தைகளைச் சண்டாளர்களுடன் சேர்ந்து இருக்கச் செய்ய வேண்டும். நைஷ்டிக ப்ரம்ஹசாரிகள், வானப்ரஸ்தர்கள், ஸந்யாஸிகள் இவர்கள் அவகீர்ணிகளாஞல் (ப்ரம்ஹசர்யத்தை இழந்தால்), அவர்கள் ப்ராயப்ஸித்தம் செய்து கொண்டாலும் இவ்வுலகில் வ்யவஹாரயோக்யதை இல்லை. பஹ்வ்ருச பரிசிஷ்டத்தில்:— எந்த ஸந்யாஸிக்குப் புத்தி பூர்வமாய் ரேதஸ்ஸ்கலனமும் பணத்தைச் சேர்ப்பதும் என்ற இவ்விரண்டும் உள்ளதோ. அந்த ஸந்யாஸீ நிச்சயமாய்ப் பதிதஞகிருன்.

## आत्मघातिनश्शववहनादौ प्रायश्चित्तम्।

आत्महननस्यातिकष्टत्वं प्रतिपाद्य तच्छववहनादौ प्रायश्चित्तमाह पराशरः – अतिमानादतिक्रोधात् स्नेहादौ यदि वा भयात् । उद्बद्ध्नीयात् स्त्री पुमान् वा गतिरेषा विधीयते । पूयशोणितसंपूर्णे त्वन्धे तमसि मज्जति । षष्टिं वर्ष सहस्राणि नरकं प्रतिपद्यते । नाशौचं नोदकं नाग्निं नाश्रुपातं च कारयेत् । वोढारोऽग्निप्रदातारः पाशच्छेदकरास्तथा । तप्तकृच्छ्रेण शुद्ध्यन्तीत्येवमाह प्रजापतिः । तप्तकृच्छ्रेण शुद्धास्ते कुर्युर्ब्राह्मणभोजनम्। अनडुत्सहितां गां वा दद्युर्विप्राय दक्षिणाम् इति । अन्धन्तमः - तीव्रो नरकविशेषः ।

## தற்கொலை செய்து கொண்டவனின் சவத்தைச் சுமப்பது முதலியதில் ப்ராயஶ்சித்தம்.

*தற்கொலைக்கும் கஷ்டத் தன்மையைச் சொல்லி அவனது சவத்தை வஹிப்பது முதலியதில் ப்ராயஶ்சித்தத்தைச் சொல்லுகிறார்,* பராசரர்:— *அதிக அஹங்காரத்தாலோ, அதிக கோபத்தாலோ, அதிஸ்நேஹத்தாலோ, அதிக பயத்தாலோ, ஸ்த்ரீயாவது புருஷனாவது சுருக்கிட்டுக் கொண்டு மரித்தால், அவனுக்கு இவ்விதம் கதி சொல்லப்படுகிறது. பூயம், ரக்தம், இவைகளால் நிறைந்த அந்த தமஸம் என்கிற கொடிய நரகத்தில் முழுகுவான். அறுபதினாயிரம் வர்ஷங்கள் நரகத்தையடைவான். அவன் விஷயத்தில் ஆசௌசம், உதகதானம், அக்னிதானம், ரோதனம் இவைகளைச் செய்யக் கூடாது. அந்தச் சவத்தைச் சுமந்தவர்கள், அக்னிதானம் செய்தவர்கள், கயிற்றை அறுத்தவர்கள் இவர்கள் தப்த க்ருச்ரத்தால் சுத்தராகின்றனர் என்றார் ப்ரஜாபதி. அவர்கள் தப்த க்ருச்ரத்தினால் சுத்தர்களான பிறகு ப்ராம்ஹணர்களுக்குப் போஜனம் செய்விக்க வேண்டும்.*

*காளையுடன் கூடிய ஒரு பசுவையும் ப்ராம்ஹணனுக்குத் தக்ஷிணையாகக் கொடுக்க வேண்டும்.*

यत्तु स्मृत्यन्तरे – एतानि पतितानां तु यः करोति विमोहितः। तप्तकृच्छ्रद्वयेनैव तस्य शुद्धिर्न चान्यथा इति। एतानि - दाहादीनि। तेषां तत्र प्रकृतत्वात्। तत् कामकारविषयम्। विहितं यदकामानां कामात्तु द्विगुणं भवेत् इति स्मरणात्। यच्च बृहस्पतिनोक्तम् – विषोद्बन्धनशस्त्रेण यस्त्वात्मानं प्रमापयेत्। मृतोऽमेध्येन लेप्तव्यो नान्यं संस्कारमर्हति। पाशच्छेत्ता तु यस्तस्य वोढा चाग्निप्रदस्तथा। सोऽतिकृच्छ्रेण शुद्ध्येत पिण्डदो वा नराधमः इति।

*ஆனால், மற்றோர் ஸ்ம்ருதி:— பதிதர்களுக்குத் தஹனம் முதலியவைகளை எவன் அறியாமையால் செய்கிறானோ அவனுக்கு இரண்டு தப்த க்ருச்ரத்தால் சுத்தி. வேறு விதத்தால் சுத்தியில்லை'' என்று சொல்லிய வசனம், அறிந்து செய்த விஷயம். ''அறியாமையால் செய்தவருக்கு விதித்துள்ள ப்ராயஶ்சித்தம் எதுவோ, அது அறிந்து செய்தவர் விஷயத்தில் இரண்டு மடங்காகும்'' என்று ஸ்ம்ருதி இருப்பதால். ப்ருஹஸ்பதி:— விஷம், சுருக்கு, ஆயுதம், இவைகளால் எவன் தன்னைக் கொலை செய்து கொள்ளுகிறானோ அவன் அமேத்யத்தால் பூசப்பட வேண்டும். வேறு ஸ்ம்ஸ்காரம் இல்லை. அவனது கயிற்றை யறுத்தவனும், சவத்தைச் சுமந்தவனும், அக்னி தானம் செய்தவனும், பிண்டதானம் செய்தவனும் அதிக்ருச்ரத்தால் சுத்தராவார்கள், என்று.*

यच्च यमेनोक्तम् – यो ब्राह्मणं हतं दग्ध्वा मृतमुद्बन्धनेन च। पाशं छित्वा तदा तस्य कृच्छ्रं सान्तपनं चरेत् इति, तद्देशकालादि तारतम्यापेक्षयोक्तम्। देशकालादितारतम्यस्य प्रायश्चित्ततारतम्ये हेतुत्वात्। तथा च व्याघ्रः – देशं कालं वयश्शक्तिं ज्ञानं बुद्धिकृतं तथा। अबुद्धिकृतमभ्यासं ज्ञात्वा निष्क्रयणं भवेत् इति।

शक्त्यादितारतम्यवन्निमित्तादितारतम्यमपि प्रायश्चित्ततारतम्ये कारणम्। अत एव प्रजापतिः स्पर्शाद्यल्पनिमित्ते स्वल्पं प्रायश्चित्तमाह – तच्छवं केवलं स्पृष्ट्वा पातयित्वाऽश्रु वा तथा । एकरात्रं तु नाश्नीयात्त्रिरात्रं बुद्धिपूर्वकम् इति । निमित्तभूयस्त्वेऽधिकं प्रायश्चित्तमाह वसिष्ठः – य आत्मत्यागिनां कुर्यात्कृत्स्नां प्रेतक्रियां द्विजः । स तप्तकृच्छ्रसहितं चरेच्चान्द्रायणव्रतम् इति । प्रामादिकमरणे पातित्याभावान्नैतत् प्रायश्चित्तम्। तच्चाधस्तात् प्रतिपादितम्।

யமனுல்:— சுருக்கினுல் இறந்த ப்ராம்ஹணனை எவன் தஹித்தானே, இறந்தவனுடைய கயிற்றை எவன் அறுத்தானே அவன் ஸாந்தபன க்ருச்ரத்தை யனுஷ்டிக்க வேண்டும், என்று சொல்லப்பட்ட வசனமும், தேசம், காலம் முதலியதின் தாரதம்யத்தை அபேக்ஷித்துச் சொல்லப்பட்டது ஆகும். தேசகாலதாரதம்யம் ப்ராயஶ்சித்தத்தின் தாரதம்யத்திற்குக் காரணமாகிறது. அவ்விதமே, வ்யாக்ரர்:— தேசம், காலம், வயஸ், சக்தி, ஜ்ஞானம், புத்தியால் செய்யப்பட்டது. அறியாமையால் செய்யப்பட்டது. அடிக்கடி செய்வது. இவைகளை அறிந்து உசிதப்படி ப்ராயஶ்சித்தம் விதிக்கப்பட வேண்டும். சக்தி முதலியதின் தாரதம்யம் போல் காரணம் முதலியதின் தாரதம்யமும் ப்ராயச்சித்தத்தில் காரணமாகும். ஆகையாலேயே ப்ரஜாபதி தொடுவது முதலியதாகிய அல்ப காரணத்தில் ஸ்வல்பமான ப்ராயஶ்சித்தத்தைச் சொல்லுகிறுர்:— அவனின் சவத்தைத் தொட்டாலும், கண்ணீர் விட்டாலும், ஒரு நாள் முழுவதும் உபவாஸம் இருக்க வேண்டும். புத்திபூர்வமாய் அவைகளைச் செய்து இருந்தால் மூன்று நாள் புஜிக்கக் கூடாது. காரணங்கள் அதிகமானுல் அதிக ப்ராயஶ்சித்தத்தைச் சொல்லுகிறுர், வஸிஷ்டர்:— தற்கொலை செய்து கொண்டவருக்கு ப்ரேத க்ரியை முழுவதையும் எவன் செய்வானே அவன் தப்த க்ருச்ரம், சாந்த்ராயண க்ருச்ரம் இவைகளை யனுஷ்டிக்க

வேண்டும். கவனமின்மையால் ஏற்பட்ட மரணத்தில் பாதித்யம் இல்லாததால் இந்த ப்ராயஶ்சித்தம் இல்லை. அது கீழே சொல்லப்பட்டுள்ளது. (ஆசௌசகாண்டத்தில்)

अनृतभाषणे प्रायश्चित्तम् – अनृतभाषणप्रायश्चित्तमाह मनुः – वाग्देवत्यैस्तु चरुभिर्यजेरंस्ते सरस्वतीम्। अनृतस्यैनसस्तस्य कुर्वाणा निष्कृतिं पराम्। कूश्माण्डैर्वाऽपि जुहुयाद्धृतमग्नौ यथाविधि। उदित्यृचा वा वारुण्या त्र्यृचेनाब्दैवतेन वा। अनृती सोमपः कुर्यात्त्रिरात्रं परमं तपः। पूर्णाहुतिं वा जुहुयात् सप्तवत्या घृतेन तु इति। याज्ञवल्क्यः – मयि तेज इतिच्छायां स्वां दृष्ट्वाऽम्बुगतां जपेत्। सावित्रीमशुचौ दृष्टे चापल्ये चानृतेऽपि च इति। एतत् कामकारे द्रष्टव्यम्। अकामकृते त्वनृतवचने मनुराह – सुप्त्वा क्षुत्वा च भुक्त्वा च निष्ठीव्योक्त्वाऽनृतानि च। पीत्वाऽपोऽध्येष्यमाणश्च आचामेत् प्रयतोऽपि सन् इति।

**பொய் சொல்லுவதில் ப்ராயஶ்சித்தம்.**

**மனு:—** *அவர்கள் (பொய் சொல்லுகிறவர்கள்) அந்தப் பொய்யினால் உண்டாகிய பாபத்திற்கு ப்ராயஶ்சித்தத்தைச் செய்பவர்காய் ஸரஸ்வதீ தேவதாகமான சருக்களால் ஸரஸ்வதியைக் குறித்து யாகம் செய்ய வேண்டும். அல்லது கூச்மாண்ட மந்த்ரங்களால் அக்னியில் நெய்யை விதிப்படி ஹோமம் செய்ய வேண்டும். உதுத்தமம் என்ற வருணதேவதாகமான ருக்கினாலாவது, அப்தேவதாகமான மூன்று ருக்குக்களாலாவது ஹோமம் செய்ய வேண்டும். ஸோமபானம் செய்தவன் பொய் சொன்னால் இவ்விதம் சிறந்த தபஸ்ஸைச் செய்ய வேண்டும். அல்லது ஸப்தவதீ என்ற ருக்கினால் பூர்ணாஹுதியைச் செய்ய வேண்டும்.* **யாஜ்ஞவல்க்யர்:—** *ஜலத்தில் தனது நிழலைப் பார்த்தால் 'மயிதேஜ:'' என்ற மந்த்ரத்தை ஜபிக்க வேண்டும். அசுத்தமான வஸ்துவைப் பார்த்தாலும், வாக் முதலியதின்*

சாபலத்திலும் பொய் பேசினாலும் காயத்ரியை ஜபிக்க வேண்டும். இது புத்திபூர்வமாய்ச் செய்த விஷயத்தில் என்று அறியவும். அபுத்திபூர்வமாய்ச் சொல்லப்பட்ட பொய்யில் சொல்லுகிறார், மனு:— தூங்கினாலும், தும்மினாலும், புஜித்தாலும், துப்பினாலும், பொய் பேசினாலும், ஜலத்தைப் பருகினாலும், அத்யயனம் செய்வதற்கு முன்பும், சுத்தனாயிருந்தாலும் ஆசமனம் செய்ய வேண்டும்.

## मिथ्याभूत चातुर्वर्ण्यवधशपथे प्रायश्चित्तम् ।

एतस्य कार्यस्याकरणे चतुर्षु वर्णेष्वन्यतमं हतवानस्तीति शपथं कृत्वा यस्तत्कार्यं न करोति, तस्य प्रायश्चित्तमाह यमः – विप्रस्य वधसंयुक्तं कृत्वा तु शपथं मृषा । ब्राह्मणो यावकान्नेन व्रतं चान्द्रायणं चरेत् । क्षत्रियस्य पराकं तु प्राजापत्यं तथा विशः । वृषलस्य त्रिरात्रं तु व्रतं शूद्रहणश्चरेत् । केचिदाहुरपापं तु वृषलस्य वधं मुधा । नैतन्मम मतं यस्माद्धतस्तेन भवत्यसौ इति ।

## பொய்யாக நான்கு வர்ணத்தாரை வதம் செய்வதாய் சப்தமிட்டால் ப்ராயச்சித்தம்.

இக்கார்யத்தைச் செய்யாவிடில் நான்கு வர்ணத்தாருள் ஒருவனைக் கொன்றவனாவேன் என்று சபதம் செய்து, எவன் அக்கார்யத்தைச் செய்யவில்லையோ அவனுக்கு ப்ராயச்சித்தத்தைச் சொல்லுகிறார், யமன்:— ப்ராம்ஹணன், ப்ராம்ஹணனைக் கொல்வதுடன் சேர்ந்த சபதத்தைப் பொய்யாகச் செய்தால் யவான்னத்தால் சாந்த்ராயண க்ருச்ரத்தை யனுஷ்டிக்க வேண்டும். க்ஷத்ரியனைக் கொன்ற பாபம் என்று சபதம் செய்தால் பராக க்ருச்ரம். வைச்யனைக் கொன்ற பாபம் என்று சபதம் செய்தால் ப்ராஜாபத்ய க்ருச்ரம். சூத்ரனைக் கொன்ற பாபம் என்று சபதம் செய்தால் மூன்று நாள் வ்ரதத்தை யனுஷ்டிக்கவும். சிலர் சூத்ர விஷயத்தில் பொய்யான

சபதத்தைப் பாபமில்லை என்கின்றனர். இது எனக்கு இஷ்டமில்லை. ஏனெனில், அவனால் இவன் கொல்லப்பட்டவனாகவே ஆகிறான்.

प्रतिश्रुत्यानृतोक्तौ हारीतः – प्रतिश्रुत्यानृतं ब्रूयान्मिथ्या सत्यमथापि वा । स तप्तकृच्छ्रसहितं चरेच्चान्द्रायणव्रतम् इति । ब्रह्मचार्यादिविषये गर्ग आह – त्रिरात्रमेकरात्रं वा ब्रह्मचार्यनृतं चरेत् । मासं भुक्त्वा ब्रह्मचारी पुनः संस्कारमाचरेत् । अभ्यासे चैन्दवं कुर्यान्नैष्ठिको द्विगुणं चरेत् । वनस्थस्त्रिगुणं कुर्याद्यतिः कुर्याच्चतुर्गुणम् । मांसाशनेऽनृतोक्तौ च शवनिस्सारणे तथा इति ।

ப்ரதிஜ்ஞை செய்து பொய் சொன்னால் ப்ராயஶ்சித்தம் சொல்லுகிறார் ஹாரீதர்:— ஒருவனுக்கு வாக்களித்துப் பிறகு பொய் சொன்னாலும், உண்மை சொன்னாலும், அவன் தப்த க்ருச்ரத்துடன் கூடிய சாந்த்ராயண க்ருச்ரத்தை யனுஷ்டிக்க வேண்டும். ப்ரம்ஹசாரி முதலியவர்கள் விஷயத்தில் சொல்லுகிறார், கர்க்கர்:— ப்ரம்ஹசாரீ பொய் பேசினால், மூன்று நாள் அல்லது ஒரு நாள் வ்ரதத்தை யனுஷ்டிக்க வேண்டும். ப்ரம்ஹசாரீ மாம்ஸத்தைப் புஜித்தால் புநருபநயனம் செய்து கொள்ள வேண்டும். அடிக்கடி செய்த விஷயத்தில் சாந்த்ராயண க்ருச்ரத்தை யனுஷ்டிக்க வேண்டும். நைஷ்டிக ப்ரம்ஹசாரியானால் இரண்டு மடங்கு ப்ராயஶ்சித்தத்தை யனுஷ்டிக்க வேண்டும். வானப்ரஸ்தன் மூன்று மடங்கு ப்ராயஶ்சித்தத்தை யனுஷ்டிக்க வேண்டும். ஸந்யாஸியானால் நான்கு மடங்கு அனுஷ்டிக்க வேண்டும். மாம்ஸத்தைப் புஜித்தாலும், பொய் சொன்னாலும், சவத்தைக் கடத்தினாலும் அப்படியே ப்ராயஶ்சித்தம்.

क्वचित्तु निमित्तविशेषे अनृतमपि बुद्धिपूर्वं वक्तव्यम् । तदाह याज्ञवल्क्यः – वर्णिनां तु वधो यत्र तत्र साक्ष्यनृतं वदेत् । तत्पावनाय निर्वाप्यश्चरुस्सारस्वतो द्विजैः इति । स्वोत्कर्षेऽनृतवचनं मनुना –

अनृतं च समुत्कर्षे राजगामि च पैशुनम् इति ब्रह्महत्यासमेषु मध्ये पठितम्। निषिद्धभक्षणं जैह्म्यमुत्कर्षे च वचोऽनृतम् इति याज्ञवल्क्येन सुरापानसमेषु पठितम्।

*சில இடத்தில் காரண விசேஷத்தை அபேக்ஷித்துப் பொய்யும் அறிந்தே சொல்லப்பட வேண்டும். அதைச் சொல்லுகிறார், யாஜ்ஞவல்க்யர்:— ப்ரம்ஹசாரிகளுக்கு வதம் ஏற்படும் விஷயமானால் அதில் ஸாக்ஷி பொய் சொல்லலாம் அந்தப் பாபத்தைப் போக்குவதற்காக ஸரஸ்வதீ தேவதாகமான சருவைச் செய்ய வேண்டும். தன்னைச் சிறப்பிப்பதற்காகப் பொய் சொல்லுதல், மனுவினால் "தன்னைச் சிறப்பிப்பதற்காகச் சொல்லப்படும் பொய்யும், அரசனிடம் கோட் சொல்லுவதும்" என்று ப்ரம்ஹஹத்யா ஸமபாபங்களின் நடுவில் சொல்லப்பட்டுள்ளது. "நிஷித்த வஸ்துவைப் பக்ஷிப்பதும், குடிலத் தன்மையும், தன்னைச் சிறப்பிப்பதற்காகப் பொய்வார்த்தையும்", என்று யாஜ்ஞவல்க்யரால் ஸுராபான ஸமபாபங்களில் சொல்லப்பட்டுள்ளது.*

विष्णुना तु – अनृतवचनमुत्कर्षे इति तस्योपपातकत्वमुक्तम्। अत्र च विषयभेद उक्तो माधवीये – द्वेष्यं पुरुषं राजादिभिर्मारयितुं तस्मिन्नविद्यमानमपि महान्तमपराधमारोप्यानृतं चेत् ब्रूयात्, तत् ब्रह्महत्यासमं वधपर्यवसायित्वात्। यस्तु लाभपूजाख्यातिकामो राजसभादौ स्वस्मिन्नविद्यमानमपि चतुर्वेदाभिज्ञत्वादिकं प्रकटयितुमनृतं ब्रूते, तत् सुरापानसमम्, अतिगर्हिततत्वात्। यस्तु सखिगोष्ठ्यादौ परोपकारमन्तरेण वृथाऽनृतं ब्रूते तस्यैतदुपपातकम् इति।

*விஷ்ணுவினாலோவெனில், "தன்னைச் சிறப்பிப்பதற்காகப் பொய் சொல்வது," என்று அதற்கு உபபாதகத் தன்மை சொல்லப்பட்டுள்ளது. இவ்விடத்தில்*

விஷயபேதம் சொல்லப்பட்டுள்ளது, மாதவீயத்தில்:— "த்வேஷிக்கப்பட்ட மனிதனை அரசன் முதலியவர்களால் கொல்லச் செய்வதற்காக அவனிடத்தில் இல்லாமல் இருந்தாலும் பெரிய குற்றத்தை ஏற்றி வைத்துப் பொய்யைச் சொல்வானாகில், அது ப்ரம்ஹஹத்யா பாபத்திற்கு ஸமமாகும். கொலையில் முடிவதால். எவன் தனலாபம், மர்யாதை, கீர்த்தி இவைகளில் ஆசையுடையவனாய் ராஜஸபை முதலிய இடத்தில் தன்னிடத்தில் இல்லாமல் இருந்தாலும் நான்கு வேதங்களையும் அறிந்த தன்மை முதலியதை வெளியிடுவதற்குப் பொய்யைச் சொல்லுகின்றானோ, அவனுக்கு அந்தப் பொய் ஸுராபான பாபத்துக்கு ஸமம், மிகவும் இழிவானதால். எவன் மித்திரர்களின் கூட்டம் முதலியதில் பிறருக்கு உபகாரமில்லாமல் வீணாய்ப் பொய்யைச் சொல்லுகிறானோ, அவனுக்கு அந்தப் பொய் உபபாதகத்துக்கு ஸமம்," என்று சொல்லப்பட்டுள்ளது.

तत्राद्ययोः प्रायश्चित्तं विष्णुनोक्तम् – समुत्कर्षेऽनृते गुरोरलीकनिर्बन्धे तदवज्ञानकरणे च मासं पयसा वर्तेत इति। तृतीये तु याज्ञवल्क्याद्युक्तं द्रष्टव्यम्। शतमश्वानृते हन्ति सहस्रं तु गवानृते इत्यादिना प्रतिपादिते दोषतारतम्ययुक्ते अनृते उक्तप्रायश्चित्तेषु तारतम्यं द्रष्टव्यम्।

அவைகளுள் முதல் இரண்டுக்கும் ப்ராயஶ்சித்தம் சொல்லப்பட்டுள்ளது, விஷ்ணுவினால்:— தன்னைச் சிறப்பிப்பதற்காகப் பொய் சொல்வதிலும், குரு விஷயத்தில் பொய்யாக நிர்பந்தம் செய்வதிலும், குருவை அவமதிப்பதிலும், ஒரு மாஸம் முழுவதும் பாலை மட்டும் பருகி ப்ராயஶ்சித்தத்தை யனுஷ்டிக்க வேண்டும். மூன்றாவது விஷயத்திலோவெனில், யாஜ்ஞவல்க்யர் முதலியவர் சொல்லிய ப்ராயஶ்சித்தத்தை அறியவும், "குதிரை விஷயமாய்ப் பொய் சொன்னால், நூறு

குதிரைகளைக் கொன்றவனாவான். பசு விஷயமாய்ப் பொய் சொன்னால், ஆயிரம் பசுக்களைக் கொன்றவனாவான்'' என்பது முதலியதால் சொல்லப்பட்டுள்ள பாபத்தின் தாரதம்யத்துடன் கூடிய பொய்யில் சொல்லப்பட்டுள்ள ப்ராயஶ்சித்தங்களில் தாரதம்யத்தை அறிய வேண்டும்.

## श्रौताग्नित्यागे प्रायश्चित्तम्।

श्रौताग्नित्यागे प्रायश्चित्तमाह विष्णुः – अग्न्युत्सादी त्रिषवणस्नाय्यधश्शायी संवत्सरं सकृत् भैक्षेण वर्तेत इति। वसिष्ठः – योऽग्नीनपविध्येत् स कृच्छ्रद्वादशरात्रं चरित्वा पुनराधानं कारयेत् इति। मनुः – अग्निहोत्र्यपविद्ध्याग्नीन् ब्राह्मणः कामकारतः। चान्द्रायणं चरेन्मासं वीरहत्यासमं हि तत्। अग्निहोत्र्यपविध्याग्नीन्मासादूर्ध्वं तु कामतः। कृच्छ्रं चान्द्रायणं चैव कुर्यादेवाविचारयन् इति। हारीतः – संत्सरोत्सन्नेऽग्निहोत्रे चान्द्रायणं चरित्वा पुनरादध्यात्। द्विवर्षोत्सन्ने चान्द्रायणं सोमायनं च कुर्यात्। त्रिवर्षोत्सन्ने संवत्सरं कृच्छ्रमभ्यस्य पुनरादध्यात् इति।

### ச்ரௌதாக்னியை விடுவதில் ப்ராயஶ்சித்தம்.

விஷ்ணு:— அக்னிகளை விட்டவன், மூன்று காலமும் ஸ்நானம் செய்பவனாய், பூமியில் படுப்பவனாய், ஒரு வர்ஷம் முடியும் வரையில் ஒரு வேளை பிக்ஷான்னத்தால் ஜீவிக்க வேண்டும். வஸிஷ்டர்:— எவன் அக்னிகளை விடுவானோ அவன் பன்னிரண்டு நாள் ப்ராஜாபத்ய க்ருச்ரத்தை யனுஷ்டித்து மறுபடி அக்னியாதானம் செய்து கொள்ள வேண்டும். மனு:— அக்னிஹோத்ரியான 'ப்ராம்ஹணன் அக்னிகளைப் புத்திபூர்வமாய் விட்டால், ஒரு மாஸம் வரையில் சாந்த்ராயண க்ருச்ரத்தை யனுஷ்டிக்க வேண்டும். அது வீர(புத்ர)ஹத்திக்கு ஸமமல்லவா. அக்னிஹோத்ரியானவன் புத்திபூர்வமாய் ஒரு மாஸத்துக்கு மேல் அக்னிகளை விட்டிருந்தால், ஸந்தேஹமில்லாமல்

சாந்த்ராயண க்ருச்ரத்தை யனுஷ்டிக்க வேண்டும். ஹாரீதர்:— ஒரு வர்ஷம் அக்னிஹோத்ரத்தை விட்டிருந்தால், சாந்த்ராயண க்ருச்ரத்தை யனுஷ்டித்து, புனராதானம் செய்ய வேண்டும். இரண்டு வர்ஷம் விட்டிருந்தால், சாந்த்ராயண க்ருச்ரத்தையும் ஸோமாயனத்தையும் செய்ய வேண்டும். மூன்று வர்ஷம் விட்டிருந்தால், ஒரு வர்ஷம் ப்ராஜாபத்ய க்ருச்ரத்தை யனுஷ்டித்து, புநராதானம் செய்ய வேண்டும்.

शङ्खोऽपि — अग्न्युत्सादी संवत्सरं प्राजापत्यं चरेद्गां च दद्यात् इति । भारद्वाजः – द्वादशाहातिक्रमे त्र्यहमुपवासो मासातिक्रमे द्वादशाहमुपवासः संवत्सरातिक्रमे मासोपवासः पयोभक्षणं च इति ।

சங்கரும்:— அக்னிகளை விட்டவன் ஒரு வர்ஷம் ப்ராஜாபத்ய க்ருச்ரத்தை யனுஷ்டிக்க வேண்டும். பசுவையும் கொடுக்க வேண்டும். பாரத்வாஜர்:— பன்னிரண்டு நாள் அக்னிஹோத்ரத்தை அதிக்ரமித்தால், மூன்று நாள் உபவாஸம். ஒரு மாஸம் அதிக்ரமித்தால், பன்னிரண்டு நாள் உபவாஸம். ஒரு வர்ஷம் அதிக்ரமித்தால், ஒரு மாஸம் உபவாஸமும், க்ஷீரபானமும்.

एतत्सर्वमालस्यादिनिमित्तत्यागविषयम् । यत्तु भारद्वाजगृह्येऽभिहितम् – प्राणायामशतमादशरात्रं कुर्यादुपवासः स्यादाविंशतिरात्रमत ऊर्ध्वमाषष्टिरात्रात्तिस्रो रात्रीरुपवसेदत ऊर्ध्वमासंवत्सरात् प्राजापत्यं चरेदत ऊर्ध्वं कालबहुत्वे दोषगुरुत्वम् इति तत् प्रमादादग्नि त्यागविषयम् । यत्तु जातूकर्ण्य आह अतिकालं च जुहुयादग्नौ, विप्राय वा यवम् । नष्टेऽग्नौ विधिवद्दद्यात्कृत्वाऽऽधानं पुनर्द्विजः । इति तदौपासनाग्नि विषयम् ।

இவையெலாம் சோம்பல் முதலிய காரணத்தால் அக்னி ஹோத்ரத்தை விட்டதைப் பற்றியது. ஆனால், பாரத்வாஜ க்ருஹ்யத்தில்:— "பத்து நாள் வரையில் அக்னி

ஹோத்ரத்தை விட்டிருந்தால், நூறு ப்ராணாயாமம் ப்ராயஶ்சித்தம். இருபது நாள் வரையில், உபவாஸம் ப்ராயஶ்சித்தம். அதற்கு மேல் அறுபது நாள் வரையில், மூன்று நாள் உபவாஸம். அதற்கு மேல் ஒரு வர்ஷம் வரையில், ப்ராஜாபத்ய க்ருச்ரத்தை யனுஷ்டிக்க வேண்டும். அதற்கு மேல் அதிகாலம் ஆனால், தோஷம் அதிகம்'' என்று சொல்லப்பட்டுள்ளதே யெனில், அது கவனமின்மையால் அக்னிகளை விட்டதைப் பற்றியது. ஆனால், ஜாதுகர்ண்யர்:— ''அதிக்ராந்தமான காலத்தின் ஹோமத்தையும் அக்னியில் செய்ய வேண்டும். அல்லது ப்ராம்ஹணனுக்கு யவத்தையாவது தானம் செய்ய வேண்டும். அக்னி நஷ்டமானால், மறுபடி விதிப்படி ஆதானம் செய்து கொண்டு தானம் செய்ய வேண்டும்.'' என்று சொல்லியுள்ளாரே யெனில், அது ஔபாஸன அக்நியைப் பற்றியது.

## नास्तिक्यप्रायश्चित्तम्।

नास्तिक्यप्रायश्चित्तमाह वसिष्ठः – नास्तिकः कृच्छ्रं द्वादशाहं चरित्वा विरमेन्नास्तिक्यात् इति। तदेतदुपपातकनास्तिक्य विषयम्। पातकनास्तिक्ये तु शङ्खः – नास्तिको नास्तिकवृत्तिः कृतघ्नः कूटव्यवहारी मिथ्याभिशंसी चेत्येवं पञ्च संवत्सरं ब्राह्मणगृहे भैक्षं चरेयुः इति। नास्तिकस्य त्रैविध्यमुक्तं माधवीये – नास्तिकः त्रिविधः प्रोक्तो धर्मज्ञैस्तत्वदर्शिभिः। क्रियादुष्टो मनोदुष्टो वाग्दुष्टश्च तथैव च। उपपातकस्तु वाग्दुष्टो मनोदुष्टस्तु पातकः। अभ्यासात्तु क्रियादुष्टो महापातक उच्यते इति।

### நாஸ்திகத் தன்மைக்கு ப்ராயஶ்சித்தம்.

**வஸிஷ்டர்:—** *நாஸ்திகன் (தெய்வமில்லை என்பவன்) பன்னிரண்டு நாள் ப்ராஜாபத்ய க்ருச்ரத்தை யனுஷ்டித்து, நாஸ்திகத் தன்மையினின்றும் விலக வேண்டும். இந்த*

வசனம் உபபாதகமான நாஸ்திக்யத்தைப் பற்றியது. பாதக நாஸ்திக்யவிஷயத்திலோ வெனில், சங்கர்:— நாஸ்திகன், நாஸ்திக்யத்தால் பிழைப்பவன், நன்றி மறந்தவன், வஞ்சனையாய் வ்யாபாரம் செய்பவன், பொய்யாக அபவாதம் சொல்பவன் என்ற இந்த ஐவரும் ஒரு வர்ஷம் வரையில் ப்ராம்ஹணரின் க்ருஹத்தில் பிக்ஷை வாங்க வேண்டும். நாஸ்திகன் மூன்றுவிதம் என்று சொல்லப் பட்டுள்ளது, மாதவீயத்தில்:— தர்மமறிந்தவரும், உண்மையறிந்தவருமாகியவர்களால் நாஸ்திகன் மூன்று விதமாவான் என்று சொல்லப்பட்டுள்ளது:— க்ரியாதுஷ்டன், மனோதுஷ்டன், வாக்துஷ்டன் என்று. வாக்துஷ்டன் உபபாதகமுடையவன், மனோதுஷ்டன் பாதகீ, அடிக்கடி நாஸ்திக்யத்தைச் செய்பவன் க்ரியாதுஷ்டன். அவன் மஹாபாதகீ என்று சொல்லப்படுகிறான்.

महापातकनास्तिक्ये तु हारीतः – कन्यादूषी सोमविक्रयी वृषलीपतिः कौमारदारत्यागी सुरामद्यपः शूद्रयाजको गुरोः प्रतिहन्ता नास्तिको नास्तिकवृत्तिः कृतघ्नः कूटव्यवहारी ब्राह्मण मित्रघ्नो मिथ्याभिशंसी पतितसंव्यवहारी मित्रध्रुक् शरणागतघाती प्रतिरूपकवृत्तिरित्येते पञ्चतपोऽभ्रावकाशजलशयनान्यनुतिष्ठेयुः क्रमेण ग्रीष्मवर्षाहेमन्तेषु मासं गोमूत्रयावकमश्नीयुः इति।

மஹாபாதகமாகிய நாஸ்திக்ய விஷயத்தில், ஹாரீதர்:— கன்யகையைத் தூஷிப்பவன், ஸோமலதையை விற்பவன், வ்ருஷளீபதி, இளமையான பத்னியைத் தள்ளியவன், ஸுரை, மத்யம் இவைகளைப் பருகியவன், சூத்ரனுக்கு யாகம் செய்விப்பவன், குருவைத் தடுப்பவன், நாஸ்திகன், நாஸ்திகத்தால் பிழைப்பவன், நன்றிமறந்தவன், வஞ்சனையால் வ்யாபாரம் செய்பவன், ப்ராம்ஹணனை மித்ரனைக் கொன்றவன், பொய்யாக அபவாதம் சொல்பவன், பதிதனுடன் சேர்ந்திருப்பவன்,

மித்ரனுக்கு த்ரோஹம் செய்பவன், சரணம் அடைந்தவனைக் கொன்றவன், ப்ரதிரூபகவ்ருத்தி என்ற இவர்கள் பஞ்சாக்னிதபஸ், ஆகாசத்தை நோக்கி நிற்பது, ஜலத்தில் படுத்திருப்பது இவைகளை அனுஷ்டிக்க வேண்டும். முறையே க்ரீஷ்மருது, வர்ஷருது, ஹேமந்தருது இக்காலங்களில் ஒரு மாஸம் கோமூத்ரத்தில் பக்வமான யவான்னத்தைப் புஜிக்க வேண்டும்.

## एकपङ्क्तौ वैषम्येण दाने प्रायश्चित्तम्।

एकपंक्त्युपविष्टानां वैषम्येण दानादावाह यमः – न पंक्त्यां विषमं दद्यान्न याचेन्न च दापयेत्। प्राजापत्येन कृच्छ्रेण मुच्यते कर्मणस्ततः इति।

### ஒரே பங்க்தியில் பேதமாகப் பரிமாறுவதில் ப்ராயஶ்சித்தம்.

யமன்:— ஒரு பங்க்தியில் உட்கார்ந்து புஜிப்பவர்க்குப் பேதமாகப் பரிமாறக்கூடாது. புஜிப்பவன் கேட்கவும் கூடாது. பரிமாறுகிறவன் கொடுக்கவும் கூடாது. அவ்விதம் பேதமாகச் செய்தால் ப்ராஜாபத்ய க்ருச்ரத்தால் அப்பாபத்தினின்றும் விடுபடுவான்.

## अपाङ्क्तेयपङ्क्तिभोजने पतितादि संभाषणे अप्सु मूत्रपुरीषादि करणे च प्रायश्चित्तम्।

अपाङ्क्तेय पङ्क्तिभोजने मार्कण्डेयः – अपाङ्क्तेयस्य यः कश्चित् पङ्क्तौ भुङ्क्ते द्विजोत्तमः। अहोरात्रोषितो भूत्वा पञ्चगव्येन शुद्ध्यति इति। पतितादिसम्भाषणे प्रायश्चित्तमाह गौतमः – न म्लेच्छाशुच्य-धार्मिकैस्सह संभाषेत सम्भाष्य पुण्यकृतो मनसा ध्यायेत् ब्राह्मणेन वा सम्भाषेत इति। अप्सु मूत्रपुरीषकरणे सुमन्तुः – अप्स्वग्नौ वा मेहतस्तप्तकृच्छ्रम् इति। आर्तविषये तु मनुः – विनाद्भिरप्सु वाऽप्यार्तः शारीरं सन्निवेश्य च। सचेलो बहिराप्लुत्य गामालभ्य विशुद्ध्यति इति।

विनाऽद्भिरित्यकामकारविषयम्। कामकारे त्वाह यमः – आपद्गतो विना तोयं शारीरं यो निषेवते । एकाहं क्षपणं कृत्वा सचेलः स्नानमाचरेत् इति ।

**பங்க்திக்கு அர்ஹரல்லாதவரின் பங்க்தியில் புஜிப்பது, பதிதன் முதலியவருடன் பேசுவது, ஜலத்தில் மூத்ர மல த்யாகம் செய்வது இவைகளில் ப்ராயஶ்சித்தம்.**

**மார்க்கண்டேயர்:—** *பங்க்திக்கு அர்ஹனல்லாதவனின் பங்க்தியில் எந்த நல்ல ப்ராம்ஹணன் புஜிக்கின்றானோ அவன் ஒரு நாள் முழுவதும் உபவாஸமிருந்து பஞ்சகவ்ய ப்ராசனத்தால் சுத்தனாவான். பதிதர் முதலானவர்களுடன் பேசும் விஷயத்தில்,* **கௌதமர்:—** *ம்லேச்சன், அசுத்தன், அதார்மிகன் இவர்களுடன் பேசக்கூடாது. பேசினால் புண்யம் செய்தவர்களை மனஸினால் த்யானிக்க வேண்டும். அல்லது ப்ராம்ஹணனுடன் பேச வேண்டும். ஜலத்தில் மூத்ர த்யாகம் செய்வதில்,* **ஸுமந்து:—** *ஜலத்திலாவது அக்னியிலாவது மூத்ர த்யாகம் செய்தவனுக்குத் தப்தக்ருச்ரம் ப்ராயஶ்சித்தம். வ்யாதியுள்ளவன் விஷயத்தில்,* **மனு:—** *ஜலமில்லாமல் மூத்ரத்யாகம் செய்தாலும், வ்யாதியுள்ளவன் ஜலத்தில் மூத்ரத்யாகம் செய்தாலும் வஸ்த்ரத்துடன் கிராமத்திற்கு வெளியில் சென்று நதி முதலியதில் மூழ்கி, பசுவை ஸ்பர்சம் செய்தால் சுத்தனாவான். இது அறியாமற் செய்த விஷயத்தில், புத்திபூர்வமாய்ச் செய்த விஷயத்தில்,* **யமன்:—** *ஆபத்திலிருப்பவன் ஜலம் கிடைக்காததால் மூத்ர த்யாகம் செய்தால், ஒரு நாள் உபவாஸமிருந்து, ஸசேலஸ்நானம் செய்ய வேண்டும்.*

### ब्रह्मसूत्रं विना मूत्रपुरीषादिकरणे अनाचम्य पानादौ च प्रायश्चित्तम्।

ब्रह्मसूत्रं विना मूत्रपुरीषादिकरणे प्रायश्चित्तमुक्तं स्मृत्यन्तरे – विना यज्ञोपवीतेन यद्युच्छिष्टो भवेद्द्विजः । प्रायश्चित्तमहोरात्रं गायत्र्यष्टशतं तु वा । अकामतस्तु पिबतो मेहतश्चैव भुञ्जतः । प्राणायामत्रिकं षट्कं नक्तं च त्रितयं क्रमात् इति । संवर्तः – अनाचान्तः पिबेद्यस्तु अपि वा भक्षयेत् द्विजः । गायत्र्यष्टसहस्रं तु जपं कृत्वा विशुद्ध्यति इति ।

### யஜ்ஞோபவீதமில்லாமல் மல மூத்ர விஸர்க்கம் செய்தாலும், ஆசமனம் செய்யாமல் ஜலபானம் செய்வது முதலியதிலும் ப்ராயஶ்சித்தம்.

*ஓர் ஸ்ம்ருதியில்:— யஜ்ஞோபவீதமில்லாமல் ப்ராம்ஹணன் மல மூத்ர த்யாகம் செய்தால், ஒரு நாள் உபவாஸம், அல்லது நூற்றெட்டு முறை காயத்ரீ ஜபம் ப்ராயஶ்சித்தம். அறியாமல் ஜலத்தைக் குடிப்பவனுக்கும் மலமூத்ர விஸர்க்கம் செய்பவனுக்கும், போஜனம் செய்பவனுக்கும் முறையே மூன்று ப்ராணாயாமங்களும், ஆறு ப்ராணாயாமங்களும், ராத்ரி உபவாஸமும் ப்ராயஶ்சித்தம். ஸம்வர்த்தர்:— எவன் ஆசமனம் செய்யாமல் ஜலபானம் செய்கிறானோ, அல்லது போஜனம் செய்கிறானோ, அவன் காயத்ரியை ஆயிரத்தெட்டு முறை ஜபித்தால் சுத்தனாவான்.*

### पलाशदारुणा शयनादिकरणे विप्रद्वयादिमध्यगमने क्षत्रियस्य रणे पृष्ठदाने फलवृक्षच्छेदने दुःस्वप्नारिष्टदर्शनादौ च प्रायश्चित्तम्।

शङ्खः – अध्यास्य शयनं यान मासनं पादुके तथा । द्विजः पलाशवृक्षस्य त्रिरात्रं तु व्रती भवेत् । द्वौ विप्रौ ब्राह्मणाग्नी वा दम्पती गोद्विजोत्तमौ । अन्तरेण यदा गच्छेत् कृच्छ्रं सान्तपनं चरेत् । होमकाले

तथा दोहे स्वाध्याये दारसंग्रहे। अन्तरेण यदा गच्छेत् द्विजश्चान्द्रायणं चरेत् । क्षत्रियस्तु रणे पृष्ठं दत्वा प्राणपरायणः । संवत्सरं व्रतं कुर्याच्छित्वा वृक्षं फलप्रदम् इति। स एव – दुःस्वप्नारिष्टदर्शनादौ घृतं हिरण्यं च दद्यात् इति।

**புரசு மரத்தின் பலகையில் படுப்பது முதலியதில் ப்ராயஶ்சித்தம்.**

சங்கர்:— ப்ராம்ஹணன் பலாசமரத்தினால் செய்யப்பட்ட கட்டில், வண்டி, ஆஸனம், பாதுகை இவைகளில் ஏறினால், மூன்று நாள் உபவாஸமிருக்க வேண்டும். இரண்டு ப்ராம்ஹணர்கள், ப்ராம்ஹணன் அக்னி இவர்கள் நடுவிலும், தம்பதிகள் நடுவிலும், பசு, ப்ராம்ஹணன் இவ்விருவர்கள் நடுவிலும் சென்றால், ஸாந்தபனக்ருச்ரத்தை யனுஷ்டிக்க வேண்டும். ஹோம காலத்திலும், பசு கறக்கும் பொழுதும், வேதாத்யயன காலத்திலும், விவாஹ காலத்திலும் நடுவில் சென்றாலும், ப்ராம்ஹணன் சாந்த்ராயணத்தை யனுஷ்டிக்க வேண்டும். க்ஷத்ரியன், யுத்தத்தில் ப்ராணனைக் காப்பாற்றுவதற்காக முதுகைக் காண்பித்தால், ஒரு வர்ஷம் முழுவதும் நியமத்துடன் இருக்க வேண்டும். பழத்தைக் கொடுக்கும் மரத்தை வெட்டினாலும் அப்படியே. சங்கரே:— துஸ்வப்னம், அபசகுனம் முதலியதைப் பார்த்தால், பொன், நெய் இவைகளைத் தானம் செய்ய வேண்டும்.

**श्राद्धे निमन्त्रितस्य कालातिक्रमे प्रायश्चित्तम्।**

श्राद्धे निमन्त्रितस्य कालातिक्रमे यम आह – केतनं कारयित्वा तु योऽतिपातयते द्विजः । ब्रह्महत्यामवाप्नोति शूद्रयोनौ प्रजायते । एतस्मिन्नेनसि प्राप्ते ब्राह्मणो नियतव्रतः । यतिचान्द्रायणं तीर्त्वा ततश्चान्द्रायणं चरेत् इति।

**ச்ராத்தத்தில் வரிக்கப்பட்டவன் காலத்தை அதிக்ரமித்தால் ப்ராயச்சித்தம்.**

யமன்:— எந்த ப்ராம்ஹணன் ச்ராத்தத்தில் நிமந்த்ரணத்தை ஒப்புக் கொண்டு, காலதாமதம் செய்கிறானோ அவன் ப்ரம்ஹஹத்யா தோஷத்தையடைவான். சூத்ர ஜாதியிலும் பிறப்பான். இந்தப் பாபம் நேர்ந்தால் ப்ராம்ஹணன் நியமத்துடன் யதி சாந்த்ராயணத்தைச் செய்து பிறகு சாந்த்ராயணத்தையும் அனுஷ்டிக்க வேண்டும்.

**क्षत्रियवैश्यशूद्रशय्यारूढादेरभिवादने अन्यत्र निमन्त्रितस्यान्यत्र भोजने शूद्रस्य वेदश्रवणादौ च प्रायश्चित्तम्।**

क्षत्रियाद्यभिवादने हारीतः – क्षत्रियाभिवादनेऽहोरात्रमुपवसेत्। वैश्यस्य द्विरात्रम्। शूद्रस्याभिवादने त्रिरात्रमुपवासः। तथा शय्यारूढपादुकोपानहारोपित पादोच्छिष्टान्धकारस्थ श्राद्धकृज्जपदेवपूजादिरताभिवादने त्रिरात्रमुपवासः स्यादन्यत्र निमन्त्रितस्यान्यत्र भोजनेऽपि त्रिरात्रमुपवासः इति। शूद्रस्य वेदवाक्यश्रवणादौ गौतमः – अथ हास्य वेदमुपशृण्वतस्त्रपुजतुभ्यां श्रोत्रप्रतिपूरणमुदाहरणे जिह्वाच्छेदो धारणे शरीरभेदः इति।

**க்ஷத்ரியர் முதலியவரை அபிவாதனம் செய்தால் ப்ராயச்சித்தம்.**

ஹாரீதர்:— க்ஷத்ரியனுக்கு அபிவாதனம் செய்தால், ஒரு நாள் முழுவதும் உபவாஸமிருக்க வேண்டும். வைச்யனுக்குச் செய்தால், இரண்டு நாள் உபவாஸம். சூத்ரனுக்குச் செய்தால், மூன்று நாள் உபவாஸம். அவ்விதம் படுக்கையிலிருப்பவன், பாதுகை, பாதரக்ஷை இவைகளில் காலை வைத்துக் கொண்டிருப்பவன், உச்சிஷ்டன் (அசுத்தன்), இருளில் இருப்பவன், ச்ராத்தம் செய்பவன், ஜபம் செய்பவன், தேவ பூஜை முதலியதைச்

செய்பவன் இவர்களுக்கு அபிவாதனம் செய்தால், மூன்று நாள் உபவாஸம் ப்ராயஶ்சித்தம். மற்ருரிடத்தில் ச்ராத்தத்திற்கு வரிக்கப்பட்டவன் அதை விட்டு மற்ருரிடத்தில் புஜித்தாலும் மூன்று நாள் உபவாஸம் ப்ராயஶ்சித்தம். சூத்ரன் வேதவாக்யத்தைக் கேட்பது முதலியதில் ப்ராயஶ்சித்தம். கௌதமர்:— சூத்ரன் வேதத்தைக் கேட்டால், அவனது காதைக் காய்ச்சிய ஈயம், அரக்கு இவைகளால் நிரப்புவது ப்ராயஶ்சித்தம். அவன் வேதவாக்யத்தை உச்சரித்தால், நாக்கைத் துண்டிப்பதும், வேத வாக்யத்தை மனதில் தரித்தால், சரீரத்தைப் பேதிப்பதும் ப்ராயஶ்சித்தம்.

## प्रतिग्रहविचारः ।

अथ प्रतिग्रहो निरूप्यते – तत्र वृत्त्यर्थं सत्प्रतिग्रहे न प्रायश्चित्तापेक्षा – विदितात् प्रतिगृह्णीयात् गृहधर्मप्र(वृ)सिद्धये । आत्मनो वृत्तिमन्विच्छन् गृह्णीयात् साधुतस्सदा । अनापद्यपि धर्मेण याज्यतश्शिष्यतस्तथा । गृह्णन् प्रतिग्रहं विप्रो न धर्मात् परिहीयते इत्यादिस्मृतेः । असत्प्रतिग्रहे प्रायश्चित्तं कर्तव्यम् । स च पञ्चविधः । असत्प्रतिग्रहः प्रोक्तः कालतो देशतस्तता । स्वरूपतो जातितश्च कर्मतश्चेति पञ्चधा इति स्मरणात् । कालः - ग्रहणादिः । देशः - कुरुक्षेत्रादिः । स्वरूपं - मेषीकृष्णाजिनतुलोभयतो मुख्यादिकम् । जातिः - शूद्रादिः । कर्म - पतनीयवृत्तिः ।

### ப்ரதிக்ரஹத்தைப் பற்றிய விசாரம்.

இனி ப்ரதிக்ரஹம் சொல்லப்படுகிறது. அது விஷயத்தில் ஜீவனத்திற்காக ஸாதுப்ரதிக்ரஹம் செய்தால் ப்ராயஶ்சித்தம் வேண்டுவதில்லை. ''க்ருஹஸ்த தர்மம் ஸித்திப்பதற்காக அறிந்த மனிதனிடமிருந்து வாங்கலாம். தனக்கு ஜீவனத்தை வேண்டியவன் நல்லவனிடமிருந்து ப்ரதிக்ரஹிக்கலாம். ஆபத்தில்லாத காலத்திலும்,

தர்மத்துடன் யாஜ்யனிடத்தினின்றும் (யாகம் செய்விக்கப் பட்டவன்), சிஷ்யனிடமிருந்தும் ப்ரதிக்ரஹத்தைப் பெற்றால் ப்ராம்ஹணன் தர்மத்தினின்றும் நழுவுவதில்லை,'' என்பது முதலிய ஸ்ம்ருதி இருப்பதால். அஸாதுக்களிடமிருந்து ப்ரதிக்ரஹம் செய்தால் ப்ராயஸ்சித்தம் செய்து கொள்ள வேண்டும். அது ஐந்து விதமாகும். ''அஸாது (துஷ்ட) ப்ரதிக்ரஹம் என்பது காலம், தேசம், ஸ்வரூபம், ஜாதி, கர்மா என்று இந்த ஐந்தாலும் துஷ்டமாகி ஐந்து விதம் எனப்படும்,'' என்று ஸ்ம்ருதி இருப்பதால். காலம் - க்ரஹணம் முதலியது. தேசம் - குருக்ஷேத்ரம் முதலியது. ஸ்வரூபம் - பெண் ஆடு, மான்தோல், துலாபாரம், இருபுறம் முகம் உள்ள பசு ஆடு முதலியது (ஈன்றும் காலத்தில் கன்றின் தலை மாத்ரம் வெளியில் தெரியும் ஸமயம்). கர்மம் - பாதித்யத்தைக் கொடுக்கும் பிழைப்பு.

मनुः – प्रतिग्रहः प्रत्यवरो व्रात्ये विप्रस्य गर्हितः । प्रतिग्रहेण विप्राणां ब्राह्मं तेजो विनश्यति । प्रतिग्रहीतुर्यत् पुण्यं दातारमधिगच्छति । प्रायश्चित्तमतः कार्यं भीरुणा चानुतापिना । यद्गर्हितेनार्जयन्ति कर्मणा ब्राह्मणा धनम् । तस्योत्सर्गेण शुद्ध्यन्ति जपेन तपसैव च इति । उत्सर्गेण - त्यागेन, जपेन - वेदपारायणगायत्र्यादि जपेन, तपसा - कृच्छ्रचान्द्रायणादिना च शुद्ध्यन्तीत्यर्थः ।

மனு:— ''ப்ராம்ஹணன் வ்ராத்யனிடமிருந்து ப்ரதிக்ரஹம் செய்வது நிஷித்தமாகிறது. ப்ராம்ஹணர்கள் ப்ரதிக்ரஹித்தால் அவரது ப்ரம்ஹதேஜஸ் நசிக்கின்றது. ப்ரதிக்ரஹம் பெற்றவனின் புண்யம் எதுவோ அது கொடுப்பவனை யடைகின்றது. கொடுப்பவனின் பாபம் எதுவோ அது ப்ரதிக்ரஹம் பெற்றவனை அடைகின்றது. ஆகையால், பயந்தவன் பச்சாத்தாபமடைந்து ப்ராயஸ்சித்தம் செய்து கொள்ள வேண்டும்.

ப்ராம்ஹணர்கள் நிஷித்தமான கர்மத்தால் எந்தத் தனத்தை ஸம்பாதிக்கின்றனரோ அந்தத் தனத்தைத் தானம் செய்வதாலும், ஜபத்தாலும், தபஸாலும் சுத்தராகின்றனர்.'' உத்ஸர்க்கம் - த்யாகம் (தானம்). ஜபம் - வேதபாராயணம், காயத்ரீ முதலியதின் ஜபம். தபஸ் - க்ருச்ரம், சாந்த்ராயணம் முதலியது. இவைகளால் சுத்தராகின்றனர் என்பது பொருள்.

वृद्धमनुः — कृषेस्तु विंशकं भागं वाणिज्यात् षष्ठमंशकम्। प्रतिग्रहे तुरीयांशं त्यक्त्वा पापात् प्रमुच्यते इति । व्यासः – वाणिज्यस्याष्टमं भागं भागं विंशतमं कृषेः । प्रतिग्रहे चतुर्थांशं त्यक्त्वा पापैः प्रमुच्यते । अन्यथा निष्कृतिर्नास्ति जपैस्तीर्थनिषेवया इति । चतुर्विंशतिमते – प्रतिषिद्धेषु दानेषु षष्ठांशं परिकल्पयेत् इति । हेमाद्रौ – अथ चेत् प्रतिगृह्णाति ब्राह्मणो वृत्तिकर्शितः । दशांशमार्जिताद्द्द्या देवं तत्र न हीयते । गृहीतात् षोडशांशं तु पञ्चमांशमथापि वा इति ।

வ்ருத்தமனு:— க்ருஷி (உழவு) செய்தால் இருபதில் ஒரு பாகத்தையும், வ்யாபாரம் செய்தால் ஆறில் ஒரு பாகத்தையும், ப்ரதிக்ரஹம் செய்தால் நான்கில் ஒரு பாகத்தையும் தானம் செய்தால் பாபத்தினின்றும் விடுபடுவான். வ்யாஸர்:— வ்யாபாரம் செய்தால் எட்டில் ஒரு பாகத்தையும், க்ருஷி செய்தால் இருபதில் ஒரு பாகத்தையும், ப்ரதிக்ரஹம் செய்தால் நான்கில் ஒரு பாகத்தையும் தானம் செய்தால் பாபங்களால் விடுபடுவான். அப்படித் தானம் செய்யாவிடில் ஜபங்களாலும், தீர்த்த ஸ்நானத்தாலும் ப்ராயஶ்சித்தம் என்பது இல்லை. சதுர்விம்சதிமதத்தில்:— நிஷேதிக்கப் பட்ட தானங்கள் விஷயத்தில் ஆறில் ஒரு பாகத்தைத் தானம் செய்ய வேண்டும். ஹேமாத்ரியில்:— ஜீவனம் இல்லாததால் ப்ராம்ஹணன் ப்ரதிக்ரஹம் பெற்றால், ஸம்பாதித்த பணத்திலிருந்து பத்தில் ஒரு பாகத்தைத்

*தானம் செய்ய வேண்டும். இவ்விதம் செய்தால் அவன் குறைவை அடைவதில்லை. அல்லது பதினைறில் ஒரு பாகத்தையாவது அல்லது ஐந்தில் ஒரு பாகத்தையாவது தானம் செய்ய வேண்டும்.*

अत्राभियुक्तैर्व्यवस्था दर्शिता – पञ्चदोष दुष्टप्रतिग्रहे साङ्गं द्रव्यत्यागं कुर्यात्। अज्ञानाद्यदि वा मोहादसद्द्रव्यं प्रगृह्य तु। सर्वद्रव्यं समुत्सृज्य चान्द्रायण मथाचरेत् इति स्मरणात्। त्यक्तं च द्रव्यं ब्राह्मण एव गृह्णीयात्। प्रहीणं ब्राह्मणस्य इति स्मरणात्। एवं कृत्वा जपतपोभ्यां शुद्धिः कार्या। दोषत्रययुक्तस्य चतुर्दोष दुष्टस्यापि दरिद्रस्य चतुर्थांशत्यागः कार्यः। आढ्यस्य त्वर्धत्यागः। असत्प्रतिग्रहे त्वर्धं त्यक्त्वा पापात् प्रमुच्यते इति स्मरणात्। दोषद्वययुक्तस्य पञ्चमांशत्यागः। एकदोषदुष्टस्य षष्ठांशत्यागः। दरिद्रस्योभयत्रापि दशांशत्यागष्षोडशांशत्यागो वा कार्यः। सर्वत्र द्रव्यत्यागानन्तरं जपादिरूपं प्रायश्चित्तं च कर्तव्यम्। कृष्णाजिनकालपुरुषतिलधेनूभयतोमुखी महिषीमेषीदानादीनां निषिद्धप्रधानद्रव्याणां प्रधानद्रव्यं दक्षिणाद्यङ्गद्रव्यस्य चतुर्थांशं च त्यक्त्वा प्रायश्चित्तं कार्यम्। अन्ये तु प्रधानद्रव्यं परित्यज्य दक्षिणाद्यङ्गद्रव्यं स्वीकृत्य प्रायश्चित्तं कर्तव्यम् इति।

*இவ்விஷயத்தில் சிஷ்டர்கள் இவ்விதம் வ்யவஸ்தையைக் காண்பித்துள்ளனர். ஐந்து விதமான தோஷங்களுடன் கூடிய ப்ரதி க்ரஹத்தில் அங்கங்களுடன் கூடியதாய் த்ரவ்யத்தைத் தானம் செய்ய வேண்டும். "அறியாமையாலோ, மோஹத்தாலோ துஷ்ட ப்ரதிக்ரஹத்தைப் பெற்ருல், அந்த த்ரவ்யம் முழுவதையும் கொடுத்து விட்டு, பிறகு சாந்த்ராயண க்ருச்ரத்தை யனுஷ்டிக்க வேண்டும்" என்று ஸ்ம்ருதி இருப்பதால். அவன் தானம் செய்த த்ரவ்யத்தையும் ப்ராம்ஹணனே வாங்கிக் கொள்ள வேண்டும். "விடப்பட்டது*

ப்ராம்ஹணனுடையது'' என்று ஸ்ம்ருதியிருப்பதால். இவ்விதம் செய்து விட்டு ஜபம், தபஸ் இவைகளால் சுத்தியைச் செய்து கொள்ள வேண்டும். தரித்ரன், மூன்று தோஷங்களோ அல்லது நான்கு தோஷங்களோ உள்ள ப்ரதிக்ரஹத்தைப் பெற்றால் அவன் நான்கில் ஒரு பாகத்தை த்யாகம் செய்ய வேண்டும். ப்ரதிக்ரஹம் பெற்றவன் தனிகனாகில் பாதியை த்யாகம் செய்யவேண்டும். ''துஷ்ட ப்ரதிக்ரஹம் பெற்றால் பாதி த்ரவ்யத்தை த்யாகம் செய்தால் பாபத்தினின்றும் விடுபடுவான்'' என்று ஸ்ம்ருதியிருப்பதால். இரண்டு தோஷங்களுள்ள ப்ரதிக்ரஹத்தில், ஐந்தில் ஒரு பாகத்தை த்யாகம் செய்ய வேண்டும். ஒரு தோஷமுள்ள ப்ரதிக்ரஹத்தில், ஆறில் ஒரு பாகத்தை த்யாகம் செய்ய வேண்டும். ப்ரதிக்ரஹம் பெற்றவன் தரித்ரனாகில், இரண்டு விஷயத்திலும் பத்தில் ஒரு பாகத்தையாவது பதினாறில் ஒரு பாகத்தையாவது த்யாகம் செய்ய வேண்டும். எல்லா ப்ரகாரத்திலும் த்ரவ்யத்தை த்யாகம் செய்த பிறகு ஜபம் முதலிய ப்ராயஶ்சித்தத்தையும் செய்ய வேண்டும். மான்தோல், கால புருஷன், எள்ளினால் செய்யப்பட்ட பசு, இருமுகமுள்ள எருமை, ஆடு இவைகளின் தானம் முதலிய தானங்களின் விஷயத்தில் நிஷித்தமான ப்ரதான த்ரவ்யங்களை த்யாகம் செய்வதுடன் தக்ஷிணையான த்ரவ்யத்தின் நான்கில் ஒரு பாகத்தையும் கொடுத்து விட்டு ப்ராயஶ்சித்தம் செய்து கொள்ள வேண்டும். மற்றவரோவெனில், ''ப்ரதான த்ரவ்யத்தை விட்டுவிட்டு, தக்ஷிணை முதலிய அங்க த்ரவ்யத்தை தானே எடுத்துக் கொண்டு, ப்ராயஶ்சித்தத்தைச் செய்து கொள்ள வேண்டும்'' என்கின்றனர்.

## स्वल्पद्रव्यस्य मणिवासोगवादेश्च प्रतिग्रहे प्रायश्चित्तम्।

स्वल्पद्रव्याणां प्रतिग्रहे प्रायश्चित्तमुक्तं षट्त्रिंशन्मते– भिक्षामात्रे गृहीते तु पुण्यमन्त्रमुदीरयेदिति। हारीतः – मणिवासो

गवादीनां प्रतिग्रहे सावित्र्यष्टसहस्रं जपेत् इति । याज्ञवल्क्यः – गोष्ठे वसन् ब्रह्मचारी मासमेकं पयोव्रतः । गायत्रीजप्यनिरतः शुद्ध्यतेऽसत् प्रतिग्रहात् इति । अत्र जपसङ्ख्या मनुना दर्शिता – जपित्वा त्रीणि सावित्र्याः सहस्राणि समाहितः । मासं गोष्ठे पयः पीत्वा मुच्यतेऽसत्प्रतिग्रहादिति ।

**ஸ்வல்பமான த்ரவ்யத்தையும், ரத்னம், வஸ்த்ரம், பசு முதலியதையும் ப்ரதிக்ரஹித்தால் ப்ராயச்சித்தம்.**

ஷட்த்ரிம்சந்மதத்தில்:— பிக்ஷையைமட்டில் க்ரஹித்தால் புண்யமான மந்த்ரத்தை ஜபிக்க வேண்டும். ஹாரீதர்:— ரத்னம், வஸ்த்ரம், பசு முதலியவைகளை ப்ரதிக்ரஹித்தால் ஆயிரத்தெட்டு முறை காயத்ரியை ஜபிக்க வேண்டும். யாஜ்ஞவல்க்யர்:— துஷ்ட ப்ரதிக்ரஹம் பெற்றவன், பசுக்கொட்டிலில் வஸிப்பவனாய், ப்ரம்ஹசர்ய வ்ரதமுடையவனாய், பாலைமட்டில் பருகுகிறவனாய், காயத்ரீ ஜபத்தைச் செய்பவனாய், ஒரு மாஸம் முழுவதும் இருந்தால் சுத்தனாகிறான். இவ்விஷயத்தில் ஜபத்தின் கணக்கு மனுவினால் சொல்லப்பட்டுள்ளது:- துஷ்ட ப்ரதிக்ரஹம் செய்தவன், பசுக்கொட்டிலில் ஒரு மாஸம் முழுவதும் க்ஷீரத்தை மட்டில் பருகுபவனாய், நியமமுடையவனாய், மூவாயிரம் முறை காயத்ரியை ஜபித்தால் அந்தப் பாபத்தினின்றும் விடுபடுவான்.

एतच्च दातृद्रव्ययोरुभयोरसत्त्वे वेदितव्यम् । अन्यतरस्यासत्त्वे तु षट्त्रिंशन्मते दर्शितम् – ऐन्दवेन मृगारेष्ट्या कदाचिन्मित्रविन्दया । पवित्रेष्ट्या विशुद्ध्यन्ति सर्वे घोराः प्रतिग्रहाः । देव्या लक्षजपेनैव शुद्ध्यन्तेऽसत्प्रतिग्रहात् इति । यत्तु वृद्धहारीतवचनम् – राज्ञः प्रतिग्रहं कृत्वा मासमप्सु सदा वसेत् । षष्ठे काले पयोभक्षः पूर्णे मासे प्रमुच्यते । तर्पयित्वा द्विजान् कामैस्सततं नियतव्रतः इति तत् पञ्चदोषदुष्टप्रतिग्रहविषयमिति माधवीये ।

க்ருச்ரமாவது, ப்ராஜாபத்ய க்ருச்ரமாவது ப்ராயஶ்சித்தமாகும்.

शातातपः – अनुक्तेषु विधिं ज्ञात्वा प्राजापत्यं समाचरेत्। सर्वत्र सर्वपापेषु द्विजश्चान्द्रायणं चरेत् इति। उशनाः – यत्रोक्तं यत्र वा नोक्त मिह पातकनाशनम्। प्राजापत्येन कृच्छ्रेण शुद्ध्यन्ते नात्र संशयः इति। मनु विष्णु विश्वामित्राः – अनुक्तनिष्कृतीनां तु पापानामपनुत्तये। शक्तिं चावेक्ष्य पापं च प्रायश्चित्तं प्रकल्पयेत् इति।

சாதாதபர்:— ப்ராயஶ்சித்தம் சொல்லப்படாத விஷயங்களில் சாஸ்த்ரத்தை யறிந்து ப்ராஜாபத்ய க்ருச்ரத்தை யனுஷ்டிக்க வேண்டும். ப்ராம்ஹணன் எக்கார்யங்களிலும் எல்லாப் பாபங்களிலும் சாந்த்ராயண க்ருச்ரத்தை யனுஷ்டிக்க வேண்டும். உசனஸ்:— இவ்விஷயத்தில், எதற்கு ப்ராயஶ்சித்தம் சொல்லப் பட்டுள்ளதோ, எதற்கு ப்ராயஶ்சித்தம் சொல்லப் படவில்லையோ அவ்விஷயத்தில் ப்ராஜாபத்ய க்ருச்ரத்தை யனுஷ்டித்தால் சுத்தராகின்றனர். இதில் ஸம்சயமில்லை. மனு, விஷ்ணு, விச்வாமித்ரர்:— ப்ராயஶ்சித்தம் விதிக்கப்படாத பாபங்களைப் போக்குவதற்குப் பாபியின் சக்தியையும் பாபத்தையும் ஆலோசித்து ப்ராயஶ்சித்தத்தை விதிக்க வேண்டும்.

याज्ञवल्क्यः – देशं कालं वयश्शक्तिं पापं चावेक्ष्य यत्नतः। प्रायश्चित्तं प्रकल्प्यं स्याद्यत्र चोक्ता न निष्कृतिः इति। स एव – यत्र यत्र च संकीर्णमात्मानं मन्यते द्विजः। तत्र तत्र तिलैर्होमो गायत्र्या वाचनं तथा इति।

யாஜ்ஞவல்க்யர்:— தேசம், காலம், வயது, சக்தி, பாபம் இவைகளை நன்றாக ஆராய்ந்து ப்ராயஶ்சித்தத்தை விதிக்க வேண்டும். எவ்விஷயத்தில் ப்ராயஶ்சித்தம் சொல்லப்படவில்லையோ அதிலும் இவ்விதமே.

யாஜ்ஞவல்க்யரே:— ப்ராம்ஹணன் எந்தெந்தக் கார்யங்களில் தன்னை பாபத்துடன் சேர்ந்ததாக நினைக்கின்றானோ அந்தந்தக் கார்யங்களில் காயத்ரியால் திலஹோமஞ் செய்ய வேண்டும், அப்படியே திலதானமும் செய்ய வேண்டும்.

गौतमः – संवत्सरष्षण्मासाश्चत्वारस्त्रयो द्वावेकश्चतुर्विंशत्यहो द्वादशाहष्षडह स्त्र्यहोऽहोरात्र इति काला एतान्येवानादेशे विकल्पेन क्रियेरन्नेनस्सु गुरुषु गुरूणि लघुषु लघूनि कृच्छ्रातिकृच्छ्रौ चान्द्रायणमिति सर्वप्रायश्चित्तम् इति ।

கௌதமர்:— ஒரு வர்ஷம், ஆறு மாஸம், நான்கு, மூன்று, இரண்டு, ஒரு மாதங்கள், இருபத்து நான்கு நாட்கள், பன்னிரண்டு நாட்கள், ஆறு, மூன்று நாட்கள், அல்லது ஒரு நாள், இவைகளுள் சக்திக்குத் தகுந்தபடி காலத்தை அவலம்பிக்கவும். கீழே விதிக்கப்பட்ட ப்ராயஶ்சித்தாதிகள் விசேஷ விதியில்லாத விடங்களில் விகல்பமாக அனுஷ்டிக்கத்தக்கவை. ஆனால் பாபங்களின் தன்மைக்கேற்றபடி அனுஷ்டிக்கத்தக்கவை. ஆனால் பாபங்களின் தன்மைக்கேற்றபடி விகல்பிக்கப்படும். பாபங்கள் பெரியவையாயிருந்தால் பெரிய ப்ராயஶ்சித்தங்கள். லகுக்களானால் லகு ப்ராயஶ்சித்தங்கள். க்ருச்ரம், அதிக்ருச்ரம், சாந்த்ராயணம் என்ற ப்ராயஶ்சித்தங்கள் பொதுவாக எல்லாவற்றிற்கும் உபயோகப்படக் கூடியவை.

स्मृत्यन्तरे – सर्वजन्मार्जितानीह भ्रूणहत्यादिकान्यपि । सर्वपापानि नश्यन्ति कृच्छ्रैर्द्वादशवार्षिकैः । जन्मप्रभृति यत् किञ्चित् पातकं चोपपातकम् । अर्वाक् तु भ्रूणहत्यायाः षडब्दान्नश्यति ध्रुवम् । अब्दात्तु सकृदभ्यस्तं बुद्धिपूर्वं समं महत् । तच्छुद्ध्यत्यब्दकृच्छ्रेण महतः पातकादृते इति । त्रिंशत्कृच्छ्राः अब्दकृच्छ्रः । कृच्छ्रः प्राजापत्यः । स च प्रतिनिधिना कार्यः ।

ஓர் ஸ்ம்ருதியில்:— எல்லா ஜன்மங்களிலும் செய்யப்பட்டதும் ப்ரம்ஹஹத்யா முதலியதும் ஆகிய எல்லாப் பாபங்களும் இந்த ஜன்மத்தில் பன்னிரண்டு வர்ஷம் அனுஷ்டிக்கப்பட்ட க்ருச்ரங்களால் நசிக்கின்றன. பிறவி முதற்கொண்டு செய்யப்பட்ட பாதகமும் உபபாதகமும் ப்ரம்ஹஹத்திக்குக் கீழ்ப்பட்டுள்ளது. ஆறு அப்த (108) க்ருச்ரங்களால் நசிக்கும். நிச்சயம். ஒரு வர்ஷத்துக்குள் ஒரு தடவை புத்திபூர்வமாய்த் திருப்பி செய்யப்பட்ட ஸமபாதகம் அப்த க்ருச்ரத்திஞல் (30) சுத்தமாகும்; மஹாபாதகம் தவிர. முப்பது க்ருச்ரம் அப்த க்ருச்ரம் எனப்படும். க்ருச்ரம் என்பது ப்ராஜாபத்ய க்ருச்ரம். அதை ப்ரதிநிதியால் அனுஷ்டிக்க வேண்டும்.

## रहस्यपापप्रायश्चित्तम्।

अथ रहस्यप्रायश्चित्तान्यभिधीयन्ते । यत्पापं कर्तृव्यतिरिक्तेनान्येन केनचिदपि न ज्ञातम्, तद्रहस्यम् । तस्य प्रायश्चित्तमपि रहस्येव कर्तव्यम् । तथा च यमहारीतौ – रहस्ये रहस्यं प्रकाशे प्रकाशम् इति । रहस्यत्वादेव नास्ति परिषदनुमत्यपेक्षा । तदाहतुर्बृहस्पतियाज्ञवल्क्यौ – विख्यातदोषः कुर्वीत पर्षदोऽनुमतं व्रतम् । अनभिख्यातदोषस्तु रहस्यव्रतमाचरेत् इति ।

### ரஹஸ்ய பாபத்திற்கு ப்ராயஶ்சித்தம்.

இனி ரஹஸ்ய ப்ராயஶ்சித்தங்கள் சொல்லப் படுகின்றன. எந்தப் பாபமானது செய்தவனைத் தவிர்த்த மற்ற எவனாலும் அறியப்படவில்லையோ அது ரஹஸ்யம் எனப்படும். அதற்கு ப்ராயஶ்சித்தமும் ரஹஸ்யத்திலேயே செய்யப்பட வேண்டும். அவ்விதமே, யமனும், ஹாரீதரும்:— ரஹஸ்ய பாப விஷயத்தில் ரஹஸ்ய ப்ராயஶ்சித்தம். ப்ரகாசமான பாபவிஷயத்தில் ப்ரகாச ப்ராயஶ்சித்தம். ரஹஸ்யமாய் இருப்பதனாலேயே பரிஷத்தின் உத்தரவை அபேக்ஷிப்பது என்பது இல்லை.

அதைச் சொல்லுகிறார்கள், ப்ருஹஸ்பதி, யாஜ்ஞவல்க்யர்:— ப்ரஸித்தமான பாபத்தையுடையவன் பரிஷத் விதித்த ப்ராயஶ்சித்தத்தைச் செய்ய வேண்டும். ப்ரஸித்தமில்லாத பாபத்தையுடையவன் ரஹஸ்யமான ப்ராயஶ்சித்தத்தைச் செய்து கொள்ள வேண்டும்.

न च विना परिषदं व्रतज्ञानाभाव इति शङ्कनीयम्। शास्त्रज्ञस्य तद्विज्ञानसम्भवात् । इतरेणापि बुद्धिमता विद्वद्गोष्ठ्यां केनचिद्व्याजेनावगन्तुं शक्यत्वात् । रहस्यकृतं पापं स्वल्पेनापि जपादिना निवर्तते । अत एव प्राजापत्यादिव्रतानां जपादीनां च व्यवस्थामाह मनुः – एतैर्द्विजातयश्शोध्या व्रतैराविष्कृतैनसः । अनाविष्कृतपापांस्तु मन्त्रैर्होमैश्च शोधयेत् इति ।

பரிஷத் இல்லாவிடில் ப்ராயஶ்சித்தத்தைத் தெரிந்து கொள்ள முடியாது என்று ஸந்தேஹிக்க வேண்டாம். சாஸ்த்ரம் அறிந்தவர்க்கு ப்ராயஶ்சித்தத்தை அறிந்து கொள்வது என்பது ஸம்பவிக்கும் ஆதலால். சாஸ்த்ரம் அறியாதவனும் புத்திமானுகில் வித்வான்களின் ஸபையில் ஏதாவதொரு கபடத்தால் அறிந்து கொள்ள முடியுமாகையால். ரஹஸ்யத்தில் செய்யப்பட்ட பாபம் ஸ்வல்பமான ஜபம் முதலியதால் நிவ்ருத்திக்கும். ஆகையால் தான் ப்ராஜாபத்யம் முதலிய வ்ரதங்களுக்கும் ஜபம் முதலியதற்கும் வ்யவஸ்தையைச் சொல்லுகிறார், மனு:— ப்ரகாசமான பாபங்களையுடைய த்விஜர்கள் இந்த (ப்ராஜாபத்யாதி) வ்ரதங்களால் சுத்தப்படுத்தப்பட வேண்டியவர்கள். ரஹஸ்யமான பாபங்களை உடையவர்களையோ வெனில் மந்த்ரங்களாலும் ஹோமங்களாலும் சுத்தர்களாகச் செய்ய வேண்டும்.

## रहस्यपापसाधारण प्रायश्चित्तम्।

तत्र रहस्यानां साधारणं प्रायश्चित्तमाह स एव – वेदाभ्यासोऽन्वहं शक्त्या महायज्ञक्रिया क्षमा। नाशयन्त्याशु पापानि

महापातकजान्यपि। यथैधस्तेजसा वह्निः प्राप्तं निर्दहति क्षणात्। तथा ज्ञानाग्निना पापं सर्वं दहति वेदवित्। सव्याहृतिप्रणवकाः प्राणायामास्तु षोडश। अपि भ्रूणहनं मासात् पुनन्त्यहरहः कृताः इति। बोधायनः – यदुपस्थकृतं पापं पद्भ्यां वा यत्कृतं भवेत्। बाहुभ्यां मनसा वाचा श्रोत्रत्वग्घ्राणचक्षुषा। सर्वं दहति निश्शेषं प्राणायामैस्त्रिभिः कृतैः इति।

**ரஹஸ்ய பாபங்களுக்கு ஸாதாரணமான ப்ராயஶ்சித்தம்.**

**மனு:—** *ப்ரதிதினம் யதாசக்தி வேதாத்யயனமும், உசித்தபடி பஞ்ச மஹாயஜ்ஞங்கள் செய்வதும், என்ற இவைகள் மஹாபாதகங்களால் உண்டாகிய பாபங்களையும் சீக்ரம் நாசப்படுத்துகின்றன. எப்படி அக்னி தேஜஸ்ஸினுல் தன்னை யடைந்த விறகு முதலியதை உடனே தஹிக்கின்றதோ, அப்படி வேதமறிந்தவன் ஜ்ஞானுக்னியால் பாபம் முழுவதையும் தஹிக்கின்றுன். வ்யாஹ்ருதி ப்ரணவங்களுடன் கூடிய ப்ராணுயாமங்கள் ப்ரதி தினமும் பதினுறு முறை ஒரு மாஸம் வரையில் செய்யப்பட்டால் ப்ரம்ஹஹத்தி செய்தவனையும் சுத்தப்படுத்துகின்றன.* **போதாயனர்:—** *உபஸ்தேந்த்ரியத்தாலோ, கால்களாலோ, கைகளாலோ, மனதினுலோ, வாக்கினுலோ, காது, தோல், மூக்கு, கண் இவைகளாலோ எந்தெந்தப் பாபம் செய்யப்பட்டதோ அதையெல்லாம் மீதியில்லாமல் மூன்று தடவை செய்யப்பட்ட ப்ராணுயாமங்களால் தஹிப்பான்.*

गौतमः – अनार्जव पैशुनप्रतिषिद्धाचारानाद्य प्राशनेषु शूद्रायां च रेतस्सिक्त्वाऽयोनौ च दोषवति कर्मण्यभिसन्धि पूर्वेऽप्यब्लिङ्गाभिरप उपस्पृशेद्वारुणीभिरन्यैर्वा पवित्रैः प्रतिषिद्धवाङ्मनसापचारे- व्याहृतयः पञ्च सर्वास्वपो वाऽऽचामेदहश्च मादित्यश्च पुनात्विति

प्रातारात्रिश्च मा वरुणश्च पुनात्विति सायमष्टौ वा समिध आदध्याद्देवकृतस्येति हुत्वैव सर्वस्मादेनसो मुच्यते इति ।

கௌதமர்:— ருஜுவாயில்லாமை, கோள் சொல்வது, நிந்திக்கப்பட்டதைச் செய்வது, நிஷித்தமானதைச் சாப்பிடுவது, சூத்ர ஸ்த்ரீயினிடத்தில் ரேதஸ்ஸேகம் செய்வது, அயோனியில் ரேதஸ்ஸேகம் செய்வது, பாபமுள்ள கார்யத்தில் புத்திபூர்வமாக ப்ரவர்த்திப்பது என்ற இவைகளில் "ஆபோஹிஷ்ட" முதலிய மந்த்ரங்களால், அல்லது வருணதேவதாக மந்தரங்களால், அல்லது வேறு பரிசுத்த மந்த்ரங்களால் ஸ்நானம் செய்ய வேண்டும். நிஷித்த விஷயத்தில் வாக்கினுலாவது மனதினுலாவது அதிக்ரமம் ஏற்பட்டால், ஐந்து வ்யாஹ்ருதிகளை ஜபிக்கவும். எல்லாப் பாப க்ரியைகளிலும் மேலே சொல்லப்படும் மந்த்ரங்களால் ஆசமனம் செய்ய வேண்டும். "அஹஶ்சமா புநாது" என்று பகலில். "ராத்ரிஶ்சமா வருணஶ்ச புநாது" என்று இரவில். "தேவ க்ருதஸ்ய" என்பது முதலிய மந்த்ரங்களால் எட்டு ஸமித்துக்களை அக்னியில் ஹோமம் செய்யவும். இவ்விதம் செய்வதாலேயே எல்லாப் பாபங்களினின்றும் விடுபடுவான்.

अनार्जवमनृजुत्वं मानसं कर्म शाठ्यं वा । पैशुनं - परपरिवादः वाचिकम् । प्रतिषिद्धाचारः - नियमलोपः कायिकम् । अनाद्यस्यानेकविधस्योपभोगः - अनाद्यप्राशनम् । एतदादौ दोषवति कर्मणि चाब्लिङ्गाभिर्वारुणीभिश्चाप उपस्पृश्य प्रयतो भवति । ओं पूर्वाभिर्व्याहृतिभिस्सर्वाभिस्सर्वपापेष्वाचामेत् । आचमनादेव सर्वस्मात् पापात् प्रमुच्यते ।

அனார்ஜவம் - நேராக இல்லாமலிருப்பது, மானஸிகமான கர்மம், வக்ரத்தன்மையாவது. பைசுனம் - பிறரைத் தூஷிப்பது. வாக்கின் கர்மம். ப்ரதிஷித்தாசாரம் -

நியமங்களை அனுஷ்டிக்காமல் இருப்பது, தேஹத்தின் கர்மம். அஞத்யப்ராசனம் - புஜிக்கக் கூடாத அநேகவித வஸ்துக்களைப் புஜிப்பது. இது முதலிய பாபமுள்ள கார்யத்திலும், ஆபோஹிஷ்ட முதலிய மந்த்ரங்களாலும் வருணதேவதாக மந்த்ரங்களாலும் ஸ்நானம் செய்தால் சுத்தனுவான். ஓங்காரத்தை முன்னுள்ள எல்லா வ்யாஹ்ருதிகளாலும் எல்லாப் பாபங்களிலும் ஆசமனம் செய்ய வேண்டும். ஆசமனம் செய்வதாலேயே எல்லாப் பாபங்களினின்றும் விடுபடுவான்.

अष्टौ वा समिध आदध्यात्। देवकृतस्यैनसोऽवयजनमसि स्वाहा। मनुष्यकृतस्यैनसोऽवयजनमसि स्वाहा। पितृकृतस्यैनसोऽव-यजनमसि स्वाहा। आत्मकृतस्यैनसोऽवयजनमसि स्वाहा। यद्दिवा च नक्तं चैनश्चकृम तस्यावयजनमसि स्वाहा। यत्स्वपन्तश्च जाग्रतश्चैनश्चकृम तस्यावयजनमसि स्वाहा। यद्विद्वा॑ꣳसश्चा-विद्वा॑ꣳसश्चैनश्चकृमतस्यावयजनमसि स्वाहा। एनस एनसोऽवयजनमसि स्वाहा। इत्येतैरष्टभिर्हुत्वा सर्वस्मात्पापात् प्रमुच्यते।

அல்லது எட்டு ஸமித்துக்களை ஹோமம் செய்ய வேண்டும். "தேவ க்ருதஸ்யைநஸோ + ஏனஸ ஏனஸோऽவயஜனமஸி ஸ்வாஹா" என்ற இந்த எட்டு மந்த்ரங்களால் ஹோமம் செய்தால், எல்லாப் பாபங்களினின்றும் விடுபடுவான்.

ऋतं च सत्यं चेत्येतदघमर्षणं त्रिरन्तर्जले पठेत्। सर्वस्मात् पापात् प्रमुच्यते। आऽयङ्गौः पृश्निरक्रमीदिति त्र्यृचं त्रिरन्तर्जले पठेत्, सर्वस्मात् पापात् प्रमुच्यते। द्रुपदादिवेन्मुमुचान इत्येतामृचं त्रिरन्तर्जले पठेत्। सर्वस्मात् पापात् प्रमुच्यते।

"ருதஞ்ச" என்பது முதலிய அகர்மஷண மந்த்ரத்தை மூன்று முறை ஜலத்திற்குள் மூழ்கிப் படிக்க வேண்டும். எல்லாப் பாபங்களினின்றும் விடுபடுவான். "ஆயங்கௌ:" என்ற மூன்று ருக்கை மூன்று முறை ஜலத்தில் மூழ்கி ஜபித்தால் எல்லாப் பாபங்களினின்றும் விடுபடுவான். "த்ருபதாதிவ" என்ற ருக்கை ஜலத்தில் மூழ்கி மூன்று முறை படித்தால் எல்லாப் பாபங்களினின்றும் விடுபடுவான்.

हꣳसश्शुचिषदित्येतामृचं त्रिरन्तर्जले पठेत्। सर्वस्मात् पापात् प्रमुच्यते। अपि वा गायत्रीं सावित्रीं पच्छोऽर्धर्चशस्ततस्समस्तामिति त्रिरन्तर्जले पठेत् । सर्वस्मात् पापात् प्रमुच्यते । अपि वा व्याहृतीर्व्यस्तास्समस्ताश्चेति त्रिरन्तर्जले पठेत्। सर्वस्मात् पापात् प्रमुच्यते। अपि वा प्रणवमेव त्रिरन्तर्जले पठेत्। सर्वस्मात् पापात् प्रमुच्यते । पवित्रैर्मार्जनं कुर्वन् रुद्रैकादशिनीं जपन् । मुच्यते सर्वपापेभ्यो महतः पातकादृते इति।

"ஹகும்ஸஶ்ஶுசிஷத்" என்ற ருக்கை ஜலத்தில் மூழ்கி மூன்று முறை படித்தால் எல்லாப் பாபங்களினின்றும் விடுபடுவான். அல்லது காயத்ரியைப் பாதம் பாதமாயும், பாதி ருக்காயும், பிறகு முழுவதாயும் ஜலத்தில் மூழ்கி மூன்று தடவை ஜபித்தால் எல்லாப் பாபங்களினின்றும் விடுபடுவான். அல்லது வ்யாஹ்ருதிகளைத் தனித்தனியாகவாவது சேர்த்தாவது மூன்று முறை ஜலத்தில் மூழ்கி ஜபித்தால் எல்லாப் பாபங்களினின்றும் விடுபடுவான். அல்லது ப்ரணவத்தையே மூன்று முறை ஜலத்தில் மூழ்கிப் படித்தால் எல்லாப் பாபங்களினின்றும் விடுபடுவான். பரிசுத்தமான மந்த்ரங்களால் ப்ரோக்ஷணம் செய்து கொண்டு ருத்ரைகாதசிநியை ஜபித்தால் மஹாபாதகம் தவிர்த்த எல்லாப் பாபங்களினின்றும் விடுபடுவான்.

आपस्तम्बः – अनार्यपैशुनप्रतिषिद्धाचारेष्वभक्ष्याभोज्यापेयप्राशने शूद्रायां च रेतस्सिक्त्वाऽयोनौ च दोषवच्च कर्माभिसन्धिपूर्वं कृत्वाऽनभिसन्धिपूर्वं वाऽब्लिङ्गाभिरप उपस्पृशे द्वारुणीभिर्वाऽन्यैर्वा पवित्रैर्यथा कर्माभ्यासः इति।

ஆபஸ்தம்பர்:— ஆர்யாசாரத்திற்கு விருத்தமான செய்கை, பிறர் தோஷத்தைக் கூறுவது (கோள் சொல்வது), நிஷித்த ஆசாரங்களைக் கைக்கொள்வது இவைகளிலும், பக்ஷிக்கத்தகாதது, சாப்பிடக்கூடாதது, குடிக்கக் கூடாதது இவைகளை உபயோகிப்பது, சூத்ர ஸ்த்ரீயினிடமும் அயோனியிலும் ரேதஸ்ஸேகம் செய்வது, தோஷமுள்ள அபிசாராதி கர்மங்களைப் புத்திபூர்வமாகவோ, அறியாமலோ செய்வது இவைகளில் மேலே சொல்லப்படும் ப்ராயச்சித்தத்தைச் செய்து கொள்ளவும். ஆபோஹிஷ்ட முதலிய மந்த்ரங்களாலாவது, வருண தேவதாக மந்த்ரங்களாலாவது, வேறு பவித்ர மந்த்ரங்களாலாவது தோஷங்களின் அப்யாஸத்திற்குத் தகுந்தபடி ஸ்நான ப்ரோக்ஷணாதிகளைச் செய்து கொள்ள வேண்டும்.

यमः – विरजा द्विगुणं जप्त्वा तदह्नैव विशुद्ध्यति। (वामदेव्यं त्रिरावृत्य तदह्नैव विशुद्ध्यति।) पौरुषं सूक्तमावृत्य मुच्यते सर्वकिल्बिषात्। वृषभं शतशो जप्त्वा तदह्नैव विशुद्ध्यति। वेदमेकगुणं जप्त्वा तदह्नैव विशुद्ध्यति। रुद्रैकादशकं जप्त्वा तदह्नैव विशुद्ध्यति। जपेद्वाप्यस्य वामीयं पावमानीरथापि वा। कुन्तापं वालखिल्यांश्च निवित्प्रैषं वृषाकपिम्। होतॄन् रुद्रान् पितॄन् जप्त्वा मुच्यते सर्वपातकैः इति। होतॄन् - चित्तिः स्रुगित्यादीन्। पितॄन् - परेयुवांसमित्यादीन्।

யமன்:— விரஜா மந்த்ரங்களை இருமுறை ஜபித்தால் அன்றைக்கே சுத்தனுவான். (வாமதேவ்ய ஸாமத்தை

மூன்று முறை ஜபித்தால் அன்றே சுத்தனுவான்). புருஷ ஸூக்தத்தை ஆவ்ருத்தி செய்தால் எல்லாப் பாபத்தினின்றும் விடுபடுவான். வ்ருஷபத்தை நூறு முறை ஜபித்தால் அன்றே சுத்தனுவான். வேதத்தை ஒரு முறை ஜபித்தால் அன்றே சுத்தனுவான். ருத்ரத்தைப் பதினேரு முறை ஜபித்தால் அன்றே சுத்தனுவான். அஸ்யவாமஸ்ய என்பதையாவது, அல்லது பவமான மந்த்ரங்களையாவது ஜபிக்கவும். குந்தாபம், வாலகில்ய மந்த்ரங்கள், நிவித்ப்ரைஷம், வ்ருஷாகபி, ஹோத்ரு மந்த்ரங்கள் ருத்ர மந்த்ரங்கள், பித்ரு மந்த்ரங்கள் இவைகளை ஜபித்தால் எல்லாப் பாபங்களாலும் விடுபடுவான். ஹோத்ரு மந்த்ரங்கள் - சித்தி: ஸ்ருக் முதலியவை. பித்ரு மந்த்ரங்கள் - பரேயுவாம்ஸம் முதலியவை.

चतुर्विंशतिमते — पावमानीस्तथा कौत्सं पौरुषं सूक्तमेव च। जप्त्वा पापैः प्रमुच्येत सपुत्रं माधुछन्दसम्। मण्डूकब्राह्मणं रुद्रं शुक्रियामोक्षकं तथा। वामदेव्यं बृहत् साम जप्त्वा पापैः प्रमुच्यते। यज्ञायज्ञीयमादित्यं ज्येष्ठसाम च राजनम्। पारुच्छेपश्चसामानि जप्त्वा मुच्येत किल्बिषात्। अथर्वशिरसं चैव पुरुषसूक्तं तथैव च। नीलरुद्रांस्तथैवेन्द्रं जप्त्वा पापैः प्रमुच्यते। आथर्वणाश्च ये केचित् मन्त्राः कामविवर्जिताः। ते सर्वे पापहन्तारो याज्ञवल्क्यवचो यथा। अग्नेर्मन्वेऽनुवाकं तु जपेदेनमनुत्तमम्। सिंहे मे मन्युरित्येत मनुवाकं जपेद्द्विजः। जप्त्वा पापैः प्रमुच्येत बोधायनवचो यथा।

சதுர்விம்சதி மதத்தில்:— பாவமானிகள், கௌத்ஸம், புருஷ ஸூக்தம், புத்ரவர்க்கங்களோடு கூடிய மாதுசந்தஸம் இவைகளைப் படித்தால் பாபங்களால் விடுபடுவான். மண்டூக ப்ராம்ஹணம், ருத்ரம், சுக்ரியம், மோக்ஷகம், வாமதேவ்யம், ப்ருஹத்ஸாமம் இவைகளை ஜபித்தால் பாபங்களால் விடுபடுவான். யஜ்ஞாயஜ்ஞீயம், ஆதித்யம், ஜ்யேஷ்டஸாமம், ராஜனம், பாருச்சேபம் என்ற

ஐந்து ஸாமங்களை ஜபித்தால் பாபத்தினின்றும் விடுபடுவான். அதர்வசிரஸ், புருஷஸூக்தம், நீல ருத்ரங்கள், ஐந்த்ரம் இவைகளை ஜபித்தால் பாபங்களால் விடுபடுவான். அதர்வவேதத்தில் சொல்லப்பட்ட எந்த மந்த்ரங்கள் காம்ய பலத்துடன் இல்லையோ அவைகள் எல்லாம் பாபத்தைப் போக்கக் கூடியவைகள், யாஜ்ஞவல்க்யரின் வசனப்படி. அக்னேர் மந்வே என்ற சிறந்த அனுவாகத்தையும், ஸிம்ஹமேமேமன்யு: என்ற அனுவாகத்தையும் ப்ராம்ஹணன் ஜபிக்க வேண்டும். இவைகளை ஜபித்தால் பாபங்களால் விடுபடுவான், போதாயனர் வசனப்படி.

ऋग्वेदमभ्यसेद्यस्तु यजुःशाखामथापि वा । सामानि सरहस्यानि अथर्वाङ्गिरसस्तथा । यत् किञ्चित् पातकं कुर्याद्यत्किञ्चिदेमृचं जपेत् । हंसः शुचिषदित्येतां जपेद्वाऽपि त्रियम्बकम् । ब्राह्मणानि च कल्पांश्च षडङ्गानि तथैव च । आख्यानानि तथाऽन्यानि जप्त्वा पापैः प्रमुच्यते । इतिहासपुराणानि देवतास्तवनानि च । जप्त्वा पापैः प्रमुच्येत धर्मस्थानैस्तथा परैः इति ।

எவன் ருக்வேதத்தைப் படிக்கின்றானோ, அல்லது யஜுஸ்ச் சாகையைப் படிக்கின்றானோ. ரஹஸ்யங்களுடன் கூடிய ஸாமங்களையாவது, அதர்வ அங்கிர: என்ற மந்த்ரங்களையாவது படிக்கின்றானோ அவன் எல்லாப் பாபங்களாலும் விடுபடுவான். ஏதாவது பாபங்களைச் செய்தாலும் யத்கிஞ்சேதம் என்ற ருக்கை ஜபிக்க வேண்டும். ஹம்ஸஶ்ஶுசிஷத், த்ரியம்பகம், ப்ராம்ஹணங்கள், கல்பங்கள், ஆறு அங்கங்கள், ஆக்யானங்கள் இவைகளையும் மற்றவைகளையும் ஜபித்தால் பாபங்களால் விடுபடுவான். இதிஹாஸங்கள், புராணங்கள், தேவதா ஸ்தோத்ரங்கள் இவைகளையும், மற்றத் தர்ம சாஸ்த்ர க்ரந்தங்களையும் படித்தால் பாபங்களால் விடுபடுவான்.

विष्णुः – अथातस्सर्वदेव पवित्राणि भवन्ति । येषां जपैश्च होमैश्च द्विजातयः पापैश्च पूयन्ते । अघमर्षणं देवकृतं शुद्धवत्यस्तरत्समन्दी धावति कूश्माण्ड्यः पावमान्यः दुर्गासावित्री अभिषङ्ग्यः पदस्तोभा व्याहृतयो भारुण्डानीन्द्र सामपुरुषव्रतं रैवतं भासमब्लिङ्गं बार्हस्पत्यं वाक् सूक्तं गोसूक्तमश्वसूक्तं मध्वृचस्सामानि चेन्द्रशुद्धं शतरुद्रीयमथर्वशिरस्त्रिसुपर्णो महाव्रतं नारायणीयं पुरुषसूक्तं त्रीण्याज्यस्तोमानि रथन्तरं चाग्नेर्व्रतं वामदेव्यं बृहच्चैतानि जप्त्वा पुनन्ति जन्तून् जातिस्मरणत्वं लभते य इच्छेत् इति ।

விஷ்ணு:— இனி சொல்லப்படுபவைகள் எப்பொழுதுமே சுத்திகரங்களாகும்; இவைகளை ஜபிப்பதாலும், இவைகளால் ஹோமம் செய்தாலும் ப்ராம்ஹணர்கள் பாபங்களால் விடுபடுவார்கள். அகமர்ஷணம், தேவக்ருதம், சுத்தவதிகள், தரத்ஸமந்தீதாவதி, கூச்மாண்டிகள், பாவமானிகள், துர்க்கா மந்த்ரம், ஸாவித்ரீ, அபிஷங்கீ, பதஸ்தோபங்கள், வ்யாஹ்ருதிகள், பாருண்டங்கள், இந்த்ரஸாமம், புருஷவ்ரதம், ரைவதம், பாஸம், அப்லிங்கம், பார்ஹஸ்பத்யம், வாக்ஸூக்தம், கோஸூக்தம், அச்வஸூக்தம், மதுருக்குகள், ஸாமங்கள், இந்த்ரசுத்தம், நாராயணீயம், புருஷ ஸூக்தம், மூன்று ஆஜ்யஸ்தோமங்கள், ரதந்தரம், அக்நேர்வ்ரதம், வாமதேவ்யம், ப்ருஹத் என்ற இவைகளை ஜபித்தால், அவை ப்ராணிகளைச் சுத்தம் செய்கின்றன. விரும்பினால் பூர்வஜன்ம ஜ்ஞானம் உண்டாகும்.

पैठीनसिः –सर्वपापप्रसक्तोऽपि ध्यायन्निमिषमच्युतम् । पुनस्तपस्वी भवति पङ्क्तिपावनपावनः इति । वसिष्ठः – हित्वा सकलपापानि लब्ध्वा सुकृतसञ्चयम् । स पूतो जायते धीमान्मुरभिन्नाम कीर्तनात् इति । भृगुः – कोटिशो मनुजानां वै भीतिदं समुपस्थितम् ।

राम रामेति संकीर्त्य तन्नाशयति मानवः । सर्वेषामेव पापानां प्रायश्चित्तमिदं स्मृतम् । नातः परतरं पुण्यं त्रिषु लोकेषु विद्यते इति ।

பைடீனஸி:— எல்லாப் பாபங்களையும் செய்பவனுயினும் ஒரு நிமிஷகாலம் அச்யுதனை த்யானம் செய்தால் அவன் மறுபடி தபஸ்வியாக ஆகிறுன். தனது பங்க்தியைச் சுத்தம் செய்பவர்களையும் சுத்தி செய்பவனுவான். வஸிஷ்டர்:— விஷ்ணுவின் நாமத்தைக் கீர்த்தனம் செய்கிற நற்புத்தியுடையவன் ஸகல பாபங்களையும் தொலைத்து, புண்யக் குவியலையடைந்து பரிசுத்தனுக ஆகிறுன். ப்ருகு:— மனிதர்களுக்குப் பயத்தைக் கொடுக்கக் கூடியது, கோடிக் கணக்காய் ஸமீபத்திலுள்ளது. மனிதன் ராம ராம என்று சொன்னல் அதை நாசம் செய்கிறுன். எல்லாப் பாபங்களுக்கும் இது ப்ராயஶ்சித்தமாகச் சொல்லப்பட்டுள்ளது. இதைக் காட்டிலும் சிறந்த புண்யத்தைக் கொடுப்பது மூவுலகிலுமில்லை.

योगयाज्ञवल्क्यः – न तावत्पापमेधेत यन्नाम्ना न हृतं हरेः । अतिरेकभयादाहुः प्रायश्चित्तान्तरं वृथा इति । ब्रह्मकैवर्ते – सर्वपापयुतो वाऽपि कीर्तयन्ननिशं हरम् । शुद्धान्तः करणो भूत्वा जायते पङ्क्तिपावनः इति ।

யோகயாஜ்ஞவல்க்யர்:— ஹரியின் நாமோச்சாரணத்தால் போக்கப்படாத பாபம் இல்லை. ஆனுல் (பாபம்) அதிகம் இருக்கக் கூடும் என்ற பயத்தால் மஹர்ஷிகள் வேறு ப்ராயஶ்சித்தத்தை வீணுகச் சொல்லியுள்ளனர். ப்ரம்ஹகைவர்த்தத்தில்:— எல்லாப் பாபங்களுடனும் கூடியவனுயினும் ஈச்வரனை எப்பொழுதும் கீர்த்தனம் செய்பவன் சுத்தமனம் உடையவனுக ஆகி, பங்க்தியைச் சுத்தம் செய்பவனுக ஆகிறுன்.

रहस्यब्रह्महत्यादि पापानां प्रतिपदोक्तप्रायश्चित्तानि ।

तत्र व्यासः – योऽनूचानं द्विजं मर्त्यो हतवानर्थलोभतः । स जपेत् पौरुषं सूक्तं जलस्थश्चिन्तयन् हरिम् । तदैव ब्रह्महत्याया मुच्यते नात्र संशयः इति । यमः – ब्रह्महत्यासुरापानस्वर्णस्तेयगुरुतल्पेषु प्राणायामैः श्रान्तोऽघमर्षणं जपेत् इति । याज्ञवल्क्यः – त्रिरात्रोपोषितो जप्त्वा ब्रह्महा त्वघमर्षणम् । अन्तर्जले विशुद्ध्येत गां च दत्वा पयस्विनीमिति ।

**ரஹஸ்யத்தில் செய்த ப்ரம்ஹஹத்யை முதலிய பாபங்களுக்குத் தனியாகச் சொல்லப்பட்ட ப்ராயஶ்சித்தம்.**

**வ்யாஸர்:—** *எந்த மனிதன் பணத்தாசையால் அங்கத்துடன் கூடிய வேதத்தை அத்யயனம் செய்த ப்ராம்ஹணனைக் கொன்றானோ, அவன் ஜலத்திலிருந்து விஷ்ணுவைச் சிந்திப்பவனாய் புருஷஸூக்தத்தை ஜபிக்க வேண்டும். அப்பொழுதே ப்ரம்ஹஹத்யையினின்றும் விடுபடுவான். ஸம்சயமில்லை.* **யமன்:—** *ப்ரம்ஹஹத்யை, ஸுராபானம், ஸ்வர்ணஸ்தேயம், குருதல்பகமனம் இவைகளைச் செய்தால் ப்ராணாயாமங்களால் ச்ராந்தனாய், அகமர்ஷண மந்த்ரத்தை ஜபிக்க வேண்டும்.* **யாஜ்ஞவல்க்யர்:—** *ப்ரம்ஹஹத்யை செய்தவன் மூன்று நாள் உபவாஸமிருந்து அகமர்ஷணத்தை ஜலத்தினுள் ஜபித்துப் பால் உள்ள பசுவையும் தானம் செய்தால் சுத்தனாவான்.*

शङ्खलिखितावपि – ब्रह्महा त्रिरात्रोपोषितोऽन्तर्जलेऽघमर्षणं त्रिरावर्तयेत् इति । चतुर्विंशतिमते – त्रिमधु त्रिसुपर्णं च नाचिकेतत्रयं तथा । नारायणं जपेत् सर्वं मुच्यते ब्रह्महत्यया इति ।

**சங்கலிகிதர்களும்:—** *ப்ரம்ஹஹத்தி செய்தவன் மூன்று நாள் உபவாஸமிருந்து, ஜலத்தினுள் அகமர்ஷண*

மந்த்ரத்தை மூன்று முறை ஜபிக்க வேண்டும். **சதுர்விம்சதிமதத்தில்:—** மூன்று மதுமதீ மந்த்ரங்கள், த்ரிஸுபர்ணம், மூன்று நாசிகேதம், நாராயணம் முழுவதும் இவைகளை ஜபித்தால் ப்ரம்ஹஹத்தி தோஷத்தால் விடுபடுவான்.

बोधायनः – ग्रामात् प्राचीमुदीचीं वा दिशमुपनिष्क्रम्य स्नातश्शुचिः शुचिवासा उदकान्ते स्थण्डिलमुपलिप्य सकृत्क्लिन्नवासा गोशकृत्पूतेन पाणिनाऽऽदित्याभिमुखोऽघमर्षणं स्वाध्यायमधीयीत। प्रातः शतं मध्याह्ने शतमपराह्ने शतमपरिमितश्चोदितेषु नक्षत्रेषु प्रसृतियावकं प्राश्नीयात्। ज्ञानकृतेभ्योऽज्ञानकृतेभ्यश्चोपपातकेभ्यः सप्तरात्रात् प्रमुच्यते द्वादशरात्रान्महापातकेभ्यो ब्रह्महननं गुरुतल्पगमनं स्वर्णस्तेयं सुरापानमिति वर्जयित्वैकविंशति-रात्रात्तान्यपि तरति इति। बृहद्विष्णुः – ब्रह्महत्यां कृत्वा प्राचीमुदीचीं वा दिशमुपनिष्क्रम्य प्रभूतेन्धनेनाग्निं प्रज्वाल्याघमर्षणेनाष्टसहस्र माज्याहुतीर्जुहुयात्तदेतस्मात् पूतो भवति इति।

**போதாயனர்:—** க்ராமத்தினின்று கிழக்கு அல்லது வடக்குத் திக்கை யடைந்து, ஸ்நானம் செய்து சுத்தனாய், சுத்த வஸ்த்ரமுடையவனாய், ஜல ஸமீபத்தில் மேடையை மெழுகி, (அதில் உட்கார்ந்து) ஒரு முறை நனைந்த வஸ்த்ரமுடையவனாய், பசுவின் சாணத்தால் சுத்தமான கையுடன் ஸூர்யனுக்கு நேராக அகமர்ஷணம் என்கிற வேதத்தை ஜபிக்க வேண்டும். காலையில் நூறு முறை, மத்யாஹ்னத்தில் நூறு முறை, அபராஹ்ணத்தில் நூறு முறை அல்லது அநேக முறை. நக்ஷத்ர உதயத்திற்குப் பிறகு யவைக் கஞ்சியை ஒரு கையளவு குடிக்க வேண்டும். அறிந்து செய்ததும், அறியாமற் செய்ததுமாகிய உபபாதகங்களினின்றும் ஏழு நாட்களால் விடுபடுவான். பன்னிரண்டு நாள் செய்தால் மஹாபாதகங்களினின்றும்

விடுபடுவான். ப்ரம்ஹஹத்தி, குருதல்பகமனம், ஸ்வர்ணஸ்தேயம், ஸுராபானம் இவைகளைத் தவிர்த்து. இருபத்தொருநாள் செய்தால் அந்தப் பாபங்களையும் தாண்டுவான். ப்ருஹத்விஷ்ணு:— ப்ரம்ஹஹத்தி செய்தால், கிழக்கு அல்லது வடக்குத் திக்கில் சென்று, அதிகமான ஸமித்தினால் அக்னியை எரிக்கச் செய்து, அகமர்ஷண மந்த்ரத்தால் எண்ணாயிரம் முறை ஆஜ்ய ஆஹுதிகளைச் செய்ய வேண்டும். அதனால் இந்தப் பாபத்தினின்றும் சுத்தனாகிறான்.

मनुः – कौत्सं जप्त्वाऽप इत्येतद्वासिष्ठं च प्रतीत्यृचम्। माहित्रं शुद्धवत्यश्च सुरापोऽपि विशुद्ध्यति । सकृज्जप्त्वाऽस्य वामीयं शिवसङ्कल्पमेव च । सुवर्णमपहृत्यापि क्षणाद्भवति निर्मलः । हविष्पान्तीयमभ्यस्य नतमंह इतीति च। जप्त्वा च पौरुषं सूक्तं मुच्यते गुरुतल्पगः । मन्त्रैश्शाकलहोमीयैरब्दं हुत्वा घृतं द्विजः । सुगुर्वप्यपहन्त्येनो जप्त्वा वा नम इत्यृचम् । महापातक-संयुक्तोऽनुगच्छेद्गाः समाहितः । अभ्यस्याब्दं पावमानीर्भैक्षाहारो विशुद्ध्यति । अरण्ये वा त्रिरभ्यस्य प्रयतो वेदसंहिताम् । मुच्यते तूपवसेद्युक्तस्त्रिरह्नोऽभ्यु-पयन्नपः । मुच्यतेपातकैः सर्वैः पराकैः शोधितस्त्रिभिः । त्र्यहं पातकैस्सर्वैस्त्रिर्जपित्वाऽघ-मर्षणम् इति।

மனு:— கௌத்ஸம் - "அபநஃ சோசுசதகம்" என்ற ஸூக்தத்தையும், வாஸிஷ்டம் = "ப்ரதிஸ்தோமேபி ருஷஸம்" என்ற ருக்கையும் மாஹித்ரம் - 'மஹித்ரீணா மவோ஽ஸ்து' என்ற ஸூக்தத்தையும், சுத்தவத்ய: - "ஏதோன்மிந்தரம்" என்ற மூன்று ருக்குக்களையும், ஒரு மாஸம் முழுவதும் தினந்தோறும், பதினாறு முறை ஜபித்தால் ஸுராபானம் செய்தவனும் சுத்தனாகிறான். "அஸ்யவாமஸ்ய" என்ற ஸூக்தத்தையும், "யஜ்ஜாக்ரதோதூரம்" என்று வாஜஸநேயகத்தில் உள்ள

சிவஸங்கல்பத்தையும் ஒரு மாஸம் ப்ரதி தினம் ஒரு முறை ஜபித்தால் ப்ராம்ஹண ஸ்வர்ணத்தை அபஹரித்தவனும் உடனே சுத்தனுவான். ஹவிஷ்பாந்தீயம் = "ஹவிஷ்பாந்தமஜரம்" என்ற பத்தொன்பது ருக்குகளேயும், நதமம்ஹ: - "ந தமம்ஹோாந துரிதம்", என்பதையும் பதிறு ருக்குகளுள்ள புருஷ ஸூக்தத்தையும் ஒரு மாஸம் முடிய ப்ரதிதினம் பதிறு முறை ஜபித்தால் குருதல்பகமனம் செய்தவன் அப்பாபத்தினின்றும் உடனே விடுபடுவான். "தேவக்ருதஸ்ய" என்பது முதலிய சகல ஹோாம மந்த்ரங்களால் ஒரு வர்ஷம் வரையில் ப்ரதி தினம் ஆஜ்ய ஹோாமத்தைச் செய்தாலும், "நம இந்த்ரஸ்ச" என்ற ருக்கை ஒரு வர்ஷம் முழுவதும் ஜபித்தாலும் மஹாபாபத்தையும் ப்ராம்ஹணன் போக்குவான். மஹாபாதகத்துடன் கூடியவன் ஜிதேந்த்ரியனுய், பசுக்களேப் பின் தொடர்ந்து செல்ல வேண்டும். ப்ரதி தினம் ய: பாவமானீ: என்ற மந்த்ரங்களே அடிக்கடி ஜபித்து, பிக்ஷான்னத்தை மட்டில் புஜிப்பவனுய் ஒரு வர்ஷம் வரையில் இருந்தால் அந்தப் பாபத்தினின்றும் சுத்தனுவான். மூன்று பராக க்ருச்ரங்களால் சுத்தனுகி, மந்த்ர ப்ராம்ஹண ரூபமான வேத ஸம்ஹிதையை அரண்யத்தில் சுத்தனுய் மூன்று தடவை ஜபித்தால் மஹாபாபங்கள் எல்லாவற்றினின்றும் சுத்தனுவான். மூன்று நாள் உபவாஸமிருக்க வேண்டும். நியமம் உள்ளவனுய் ஒவ்வொரு நாளிலும் மூன்று காலங்களிலும் ஸ்நானம் செய்ய வேண்டும். மூன்று கால ஸ்நானங்களிலும் ஜலத்தினுள் மூழ்கி அகமர்ஷண ஸூக்தத்தை மூன்று முறை ஜபிக்க வேண்டும். ஸகல பாபங்களாலும் விடுபடுவான்.

यमः – सुरापः कण्ठमात्रमुदकमवतीर्य सुतसोमात् प्रसृतिमादायोङ्कारेणाभिमन्त्र्य पिबेत्ततोऽप्सु निमग्नो मानस्तोकीयं जपेत् । ब्राह्मण सुवर्णस्तेयं कृत्वा हिरण्यशालायां प्रक्षिप्याप्सु

निष्णातो ग्रीवमात्र उदके हिरण्यवर्णाभिश्चतसृभिरात्मान मभ्युक्ष्य त्रीन् प्राणायामान् कृत्वा तदेतस्मात् पूतो भवति । गुरुतल्पगमनं कृत्वाऽघमर्षण मन्तर्जले त्रिरावर्त्य तदेतस्मात् पूतो भवति इति ।

**யமன்:—** ஸுராபானம் செய்தவன், கழுத்தளவு ஜலத்திலிறங்கி, ஸுதஸோமம் என்கிற மந்த்ரத்தால் கையளவு ஜலத்தை எடுத்துக் கொண்டு, ஓங்காரத்தினுல் அபிமந்த்ரணம் செய்து, பானம் செய்ய வேண்டும். பிறகு ஜலத்தினுள் மூழ்கி "மானஸ்தோகே" என்ற ருக்கை ஜபிக்க வேண்டும். ப்ராம்ஹணனின் ஸ்வர்ணத்தைத் திருடினுல், ஸ்வர்ணசாலையில் அதைப் போட்டு ஜலத்திலிறங்கி ஸ்நானம் செய்து, "ஹிரண்யவர்ணு:" என்ற நான்கு ருக்குகளால் தன்னை ப்ரோக்ஷித்துக் கொண்டு, மூன்று ப்ராணுயாமங்கள் செய்தால் அந்தப் பாபத்தினின்றும் சுத்தனுவான். குருதல்பகமனம் செய்தால் அகமர்ஷண ஸூக்தத்தை ஜலத்தில் மூழ்கி மூன்று தடவை ஜபித்தால் அந்தப் பாபத்தினின்றும் சுத்தனுவான்.

## रहस्यसुरापानादि प्रायश्चित्तम् ।

सुरापानादौ याज्ञवल्क्यः – त्रिरात्रोपोषितो हुत्वा कूश्माण्डीभिर्घृतं शुचिः । ब्राह्मणः स्वर्णहारी तु रुद्रजापी जले स्थितः । सहस्रशीर्षाजापी तु मुच्यते गुरुतल्पगः । गौर्देया कर्मणोऽस्यान्ते पृथगेभिः पयस्विनी इति ।

## ரஹஸ்ய ஸுராபானம் முதலியவைகளில் ப்ராயஶ்சித்தம்.

**யாஜ்ஞவல்க்யர்:—** மூன்று நாள் உபவாஸமிருந்து சுத்தனுய், கூச்மாண்ட மந்த்ரங்களால் ஆஜ்யஹோமம் செய்தால் (ஸுராபான பாபத்தில் இருந்து விடுபடுவான்) ஜலத்தில் நின்று ருத்ரத்தை ஜபித்தால் ப்ராம்ஹணனின் ஸ்வர்ணத்தை அபஹரித்தவன் பாபத்தினின்றும்

விடுபடுவான். குருதல்பகமனம் செய்தவன் ஸஹஸ்ர சீர்ஷா என்ற புருஷஸூக்தத்தை ஜபித்தால் அந்தப் பாபத்தினின்றும் விடுபடுவான். இந்த ப்ராயச்சித்த கர்மம் முடிந்த பிறகு இந்தப் பாபிகள் தனித்தனியே பால் உள்ள பசுவைத் தானம் செய்ய வேண்டும்.

शातातपः – मद्यं पीत्वा गुरुदारांश्च गत्वा स्तेयं कृत्वा ब्रह्महत्यां च कृत्वा । भस्मच्छन्नो भस्मशय्याशयानो रुद्राध्यायी मुच्यते सर्वपापैः इति । जपश्चैकादशकृत्वः कार्यः । तदाहात्रिः – एकादशगुणान्वाऽपि रुद्रानावर्त्य धर्मवित् । महापापैरपि स्पृष्टो मुच्यते नात्र संशयः इति । बोधायनः – अघमर्षणं देवकृतं शुद्धवत्यस्तरत्समाः । कूश्माण्ड्यः पावमान्यश्च विरजा मृत्युलाङ्गलम् । दुर्गाव्याहृतयो रुद्रा महापातकनाशनाः इति ।

சாதாதபர்:— ஸுராபானம் செய்தாலும், குருதல்பகமனம் செய்தாலும், ஸ்வர்ணஸ்தேயம் செய்தாலும், ப்ரம்ஹஹத்யை செய்தாலும் விபூதியினால் மூடப்பட்டு, விபூதிப் படுக்கையில் படுத்தவனாய், பதினொரு முறை ருத்ரத்தை ஜபிப்பவன் எல்லாப் பாபங்களாலும் விடுபடுவான். ருத்ர ஜபத்தைப் பதினொரு முறை செய்ய வேண்டும். அதைச் சொல்லுகிறார், அத்ரி:— தர்மத்தை யறிந்தவன் ருத்ர மந்த்ரங்களைப் பதினொரு முறை ஆவ்ருத்தி செய்தாலாவது மஹாபாபங்களாலும் விடுபடுவான். இதில் ஸம்சயமில்லை. போதாயனர்:— அகமர்ஷண மந்த்ரம், தேவக்ருதஸ்ய என்பது முதலிய மந்த்ரங்கள், சுத்தவதீ ருக்குகள், தரத்ஸமா: என்ற ருக்குகள், கூச்மாண்ட ஹோம மந்த்ரங்கள், பாவமானீ மந்த்ரங்கள், விரஜா மந்த்ரங்கள், ம்ருத்யுலாங்கலம், துர்க்கா மந்த்ரங்கள், வ்யாஹ்ருதிகள், ருத்ர மந்த்ரங்கள் இவைகள் மஹாபாதகங்களையும் போக்கக் கூடியவைகள்.

आश्वलायनः – कुन्तापं वालखिल्यांश्च जप्त्वा पापैः प्रमुच्यते। ब्रह्महत्यादिपापेभ्यः पावमानात् प्रमुच्यते इति। संवर्तः – षण्मासं पञ्चमासं वा नियतो नियताशनः। जप्त्वा तु पौरुषं सूक्तं मुच्यते सर्वपातकैः इति। बोधायनः – मातृदुहितृस्नुषा स्वसृसवर्णाविधवाऽ-गमनं कृत्वा यः पुरुषसूक्तं त्रिरुच्चारयेत्तदानीमेव पूतो भवति इति।

ஆச்வலாயனர்:— குந்தாபம், வாலகில்யங்கள், இவைகளை ஜபித்தால் பாபங்களால் விடுபடுவான். பாவமானீ மந்த்ரங்களை ஜபித்தால் ப்ரம்ஹஹத்யாதி பாபங்களினின்றும் விடுபடுவான். ஸம்வர்த்தர்:— ஆறு மாஸம் அல்லது ஐந்து மாஸம் வரையில் நியமமுடையவனாய், ஆஹார நியமமுடையவனாய், புருஷஸூக்தத்தை ஜபித்து வந்தால் எல்லாப் பாபங்களாலும் விடுபடுவான். போதாயனர்:— மாதா, பெண், நாட்டுப் பெண், ஸஹோதரீ, ஸவர்ணஸ்த்ரீ, விதவை இவர்களைச் சேர்ந்தாலும் எவன் புருஷ ஸூக்தத்தை மூன்று முறை ஜபிப்பானோ அவன் அப்பொழுதே சுத்தனாகிறான்.

कूर्मपुराणे – जपस्तपस्तीर्थसेवा देवब्राह्मणभोजनम्। ग्रहणादिषु कालेषु महापातकशोधनम्। उपोषितश्चतुर्दश्यां कृष्णपक्षे समाहितः। यमाय धर्मराजाय मृत्यवे चान्तकाय च। वैवस्वताय कालाय सर्वभूतक्षयाय च। प्रत्येकं तिलसंयुक्तान् दद्यात् सप्तोदकाञ्जलीन्। स्नात्वा नद्यां तु पूर्वाह्णे मुच्यते सर्वपातकैः इति। अत्र ज्ञानाज्ञानाभ्यासानभ्यासैर्व्यवस्था द्रष्टव्या। संसर्गी तदीयमेव प्रायश्चित्तं कुर्यात्, स तस्यैव व्रतं कुर्यात्, इति पूर्वमेवोक्तत्वात्।

கூர்மபுராணத்தில்:— க்ரஹணம் முதலிய புண்ய காலங்களில் செய்யப்படும் ஜபம், தபஸ், தீர்த்த ஸேவை, தேவ ப்ராம்ஹணர்களைப் பூஜிப்பது இவை மஹாபாதகங்களையும் போக்குவதாகும். க்ருஷ்ண

பக்ஷத்தில் சதுர்த்தசியில் உபவாஸமிருந்து நியமம் உடையவனுய், பகலின் முன் பாகத்தில் நதியில் ஸ்நானம் செய்து யமன் முதல் ஸர்வபூதக்ஷயன் வரையுள்ள ஏழு நாமங்களால் யமனுக்குத் தனித்தனியே திலதர்ப்பணம் செய்ய வேண்டும். ஸர்வ பாபங்களாலும் விடுபடுவான். இந்த ப்ராயப்ஸ்சித்தங்களில், அறிந்து செய்வது, அறியாமல் செய்வது, ஒரு முறை செய்வது, பலமுறை செய்வது என்பவைகளை அனுஸரித்து தகுந்தபடி வ்யவஸ்தையை அறியவேண்டும். பாபியுடன் ஸம்ஸர்க்கம் செய்தவன் பாபியின் ப்ராயப்ஸ்சித்தத்தையே அனுஷ்டிக்க வேண்டும். இவ்விஷயம் முன்பே சொல்லப்பட்டு இருப்பதால்.

## उपपातकरहस्यप्रायश्चित्तम्।

उपपातकरहस्यप्रायश्चित्तमाह याज्ञवल्क्यः – प्राणायामशतं कार्यं सर्वपापापनुत्तये। उपपातकजातानामनादिष्टस्य चैव हि इति। स्मृत्यन्तरे – दशप्रणवसंयुक्तैः प्राणायामैश्चतुःशतैः। मुच्यते ब्रह्महत्यायाः किं पुनश्शेषपातकैः इति।

### உபபாதகங்களில் ரஹஸ்ய விஷய ப்ராயப்ஸ்சித்தம்.

யாஜ்ஞவல்க்யர்:— எல்லாப் பாபங்களையும் போக்குவதற்கும், உபபாதகங்களுக்கும், ப்ராயப்ஸ்சித்தம் சொல்லப்படாத பாபத்திற்கும், நூறு தடவை ப்ராணுயாமத்தைச் செய்ய வேண்டும். ஓர் ஸ்ம்ருதியில்:— பத்து ப்ரணவங்களுடன் கூடிய நானூறு ப்ராணுயாமங்களால் ப்ரம்ஹஹத்யா பாபத்தினின்றும் விடுபடுவான். மற்றப் பாபங்களால் விடுபடுவான் என்பதைச் சொல்வதேன்?

## प्राजापत्यकृच्छ्रलक्षणम्।

अथ कृच्छ्राणां लक्षणमुच्यते। तत्र प्राजापत्यकृच्छ्रलक्षणमाह बोधायनः – प्राजापत्यो भवेत् कृच्छ्रो दिवारात्रावयाचितम्। क्रमशो

वायुभक्षश्च द्वादशाहं त्र्यहं त्र्यहम् इति । आपस्तम्बः – त्र्यहमनक्ताश्यदिवाशी ततस्त्र्यहं त्र्यहमयाचितव्रतस्त्र्यहं नाश्नाति किञ्चनेति कृच्छ्रू द्वादशरात्रस्य विधिरिति । मनुः – त्र्यहं प्रातस्त्र्यहं सायं त्र्यहमद्यादयाचितम् । त्र्यहं परं तु नाश्नीयात् प्राजापत्यं चरन् द्विजः इति ।

**ப்ராஜாபத்ய க்ருச்ர லக்ஷணம்.**

*இனி க்ருச்ரங்களுக்கு லக்ஷணம் சொல்லப்படுகிறது. ப்ராஜாபத்ய க்ருச்ர லக்ஷணத்தைச் சொல்லுகிறார்,* **போதாயனர்:—** *மூன்று நாள் பகலில் மட்டும், மூன்று நாள் இரவில் மட்டும் புஜிப்பது, மூன்று நாள் யாசிக்காமல் கிடைத்ததை மட்டில் புஜிப்பது, மூன்று நாள் காற்றை மட்டில் புஜிப்பது, என்று முறையே பன்னிரண்டுநாள் இருப்பது ப்ராஜாபத்ய க்ருச்ரம்.* **ஆபஸ்தம்பர்:—** *மூன்று நாள் பகலில் மட்டில் புஜிப்பவனும், மூன்று நாள் இரவில் மட்டில் புஜிப்பவனும், மூன்று நாள் யாசிக்காமல் கிடைத்ததை மட்டில் புஜிப்பவனும், மூன்று நாள் ஒன்றும் புஜிக்காதவனும் இருந்தால், என்பது பன்னிரண்டு நாள் அனுஷ்டிக்க வேண்டிய ப்ராஜாபத்ய க்ருச்ரத்தின் விதி.* **மனு:=** *ப்ராஜாபத்ய க்ருச்ரத்தை யனுஷ்டிக்கும் ப்ராம்ஹணன், மூன்று நாள் பகலிலும், மூன்று நாள் இரவிலும், மூன்று நாள் யாசிக்கப்படாததையும் புஜித்து, மூன்று நாள் ஒன்றையும் புஜிக்காமல் இருக்க வேண்டும்.*

अस्यैवाधिकारिभेदेन प्रयोगान्तरमाह वसिष्ठः – अहः प्रातरहर्नक्तमहरेकमयाचितम् । अहश्चोपवसेदेकमेवं चतुरहौ परौ । अनुग्रहार्थं विप्राणां मनुर्धर्मभृतां वरः । बालवृद्धातुराणां च शिशुकृच्छ्रमुवाच ह इति । बोधायनोऽपि – अहरेकं तथा नक्तं अज्ञातं वायुभक्षता । त्रिवृदेष परावृत्तो बालानां कृच्छ्र उच्यते इति ।

இந்த க்ரச்ரத்திற்கே அதிகாரிக்குத் தகுந்தபடி வேறு ப்ரயோகத்தைச் சொல்லுகிறார், வஸிஷ்டர்:— ஒரு நாள் பகலிலும், ஒரு நாள் இரவிலும், ஒரு நாள் யாசிக்காமல் கிடைத்ததையும் புஜிக்கவும். ஒரு நாள் உபவாஸம் இருக்க வேண்டும். இவ்விதம் மற்ற இரண்டு நான்கு நாட்களிலும் அனுஷ்டிக்கவும். இவ்விதம் க்ருச்ரத்தை - பாலர், வ்ருத்தர், வ்யாதிஸ்தர்கள் முதலிய ப்ராம்ஹணர்களுக்கு அனுக்ரஹத்துக்காகச் சிசுக்ருச்ரத்தை மஹாதர்மிஷ்டரான மனு விதித்தார். போதாயனரும்:— ஒரு நாள் பகலிலும், ஒரு நாள் இரவிலும் ஒரு நாள் யாசிக்காமலும் புஜித்து, ஒரு நாள் வாயுவை மட்டில் புஜித்து, இவ்விதம் மூன்று தடவை செய்வது, பாலகர்களுக்கு க்ருச்ரம் (சிசுக்ருச்ரம்) எனப்படுகிறது.

एतदुभयमपि प्राजापत्यकृच्छ्रमाह याज्ञवल्क्यः – एकभक्तेन नक्तेन तथैवायाचितेन च । उपवासेन चैकेन पादकृच्छ्रः प्रकीर्तितः । यथाकथञ्चित्त्रिगुणः प्राजापत्योऽयमुच्यते इति । एकभक्तेन - दिवैव सकृद्भोजनेन, नक्तेन - रात्रौ सकृद्भोजनेन, अयाचितेन - न विद्यते याचितं यस्मिन् भोजने, तदयाचितम्, तेनात्र कालविशेषाप्रतीतेर्दिवा रात्रौ वा सकृद्भोजनेन । उपवासेन चैकेन - एकस्मिन् दिने अनशनेन च, पादकृच्छ्रो भवति । अयमेव पादकृच्छ्रः स्वस्यावृत्त्या स्वस्थानवृद्ध्या वा यथाकथञ्चित्त्रिगुणः - त्रिरभ्यस्तः प्राजापत्य इत्युच्यते इत्यर्थः ।

இவ்விதம் உள்ள இரண்டு விதமான ப்ராஜாபத்ய க்ருச்ரத்தையும் சொல்லுகிறார், யாஜ்ஞவல்க்யர்:— ஒரு நாள் பகலில் புஜிப்பதும், ஒரு நாள் இரவில் புஜிப்பதும், ஒரு நாள் யாசிக்காமல் கிடைத்ததைப் புஜிப்பதும், ஒரு நாள் உபவாஸமிருப்பதும், என்ற இது பாத க்ருச்ரம் எனப்படுகிறது. எவ்விதத்தாலாவது இதை மூன்று தடவை செய்தால் இது ப்ராஜாபத்ய க்ருச்ரம் எனப்படுகிறது. ஏகபக்தேந - பகலில் மட்டில் ஒரு முறை புஜிப்பதால்.

நக்தேந - இரவில் மட்டில் ஒரு முறை புஜிப்பதால். அயாசிதேந - யாசிப்பது என்பது இல்லாத போஜனத்தால். இதில் காலவிசேஷம் அறியப்படாததால் பகலிலாவது ராத்ரியிலாவது ஒரு முறை புஜிப்பதால். உபவாஸேந சைகேந - ஒரு நாள் முழுவதும் புஜிக்காமல் இருப்பதாலும் பாத க்ருச்ரமாகிறது. இந்தப் பாத க்ருச்ரமே அதைத் திரும்புவதாலாவது, தன்னுடைய ஸ்தானத்தின் வ்ருத்தியாலாவது, மூன்று முறை ஆவ்ருத்தி செய்யப்பட்டால் ப்ராஜாபத்யம் என்று சொல்லப்படுகிறது, என்று பொருள்.

एकभक्तादिषु ग्राससङ्ख्या ग्रासप्रमाणं चापस्तम्बेन दर्शिते– सायं द्वाविंशतिर्ग्रासाः प्रातः षड्विंशतिः स्मृताः । चतुर्विंशतिरायाच्याः परं निरशनं स्मृतम् । कुक्कुटाण्डप्रमाणं तु यथा वाऽऽस्यं विशेत् स्वयम् इति । चतुर्विंशतिमते प्रकारान्तरेण संख्या श्रूयते – प्रातस्तु द्वादश ग्रासास्सायं पञ्चदशैव तु । अयाचितेन द्वावष्टौ त्रियहं मारुताशनः इति । अत्र शक्त्यपेक्षया व्यवस्था द्रष्टव्या ।

ஒரு வேளை புஜிப்பது முதலியதில், கபளத்தின் கணக்கும், கபளத்தின் அளவும் சொல்லப்பட்டுள்ளது. **ஆபஸ்தம்பரால்:—** இரவில் இருபத்திரண்டு கபளங்கள், பகலில் இருபத்தாறு கபளங்கள், விதிக்கப்பட்டுள்ளன. யாசிக்கப்படாமல் புஜிப்பதில் இருபத்து நான்கு கபளங்கள். பிறகு உபவாஸம் விதிக்கப்பட்டுள்ளது. கோழி முட்டையின் அளவுள்ளது. அல்லது தானாக வாய்க்குள் எப்படி நுழையுமோ அவ்வளவு உள்ளது (ஒரு கபளம்) **சதுர்விம்சதிமதத்தில்:—** மற்றொரு ப்ரகாரமாய்க் கணக்குச் சொல்லப்படுகிறது. பகலில் பன்னிரண்டு கபளங்கள். இரவில் பதினைந்து கபளங்களே. யாசிக்கப்படாமல் புஜிப்பதில் பதினாறு கபளங்கள். மூன்று நாள் வாயுவே ஆஹாரம். இவ்விஷயத்தில் அவரவர் சக்தியை அபேக்ஷித்து வ்யவஸ்தையை அறியவும்.

## पादकृच्छ्राणां वर्णभेदेन व्यवस्था।

आपस्तम्बस्तु चतुरः पादकृच्छ्रानुक्त्वा तेषां वर्णभेदेन व्यवस्थामाह – त्र्यहं निरशनं पादः पादश्चायाचितं त्र्यहम्। सायं त्र्यहं तथा पादः प्रातः पादस्तथा त्र्यहम्। प्रातः पादं चरेच्छूद्रस्सायं वैश्यस्य दापयेत्। अयाचितं तु राजन्ये त्रिरात्रं ब्राह्मणे स्मृतम् इति।

## பாத க்ருச்ரங்களுக்கு வர்ண பேதத்தைக் கொண்டு வ்யவஸ்தை.

ஆபஸ்தம்பரோவெனில் நான்கு விதமான பாத க்ருச்ரங்களைச் சொல்லி, அவைகளுக்கு வர்ண பேதத்தால் வ்யவஸ்தையைச் சொல்லுகிறார்:— மூன்று நாள் உபவாஸம் ஒரு பாதம். மூன்று நாள் யாசிக்காமல் கிடைத்ததைப் புஜிப்பது ஒரு பாதம். மூன்று நாள் இரவில் மட்டில் புஜிப்பது ஒரு பாதம். மூன்று நாள் பகலில் மட்டில் புஜிப்பது ஒரு பாதம். பகலில் புஜிப்பது என்ற பாத க்ருச்ரத்தைச் சூத்ரன் அனுஷ்டிக்க வேண்டும். இரவில் மட்டில் புஜிப்பது என்ற பாத க்ருச்ரத்தை வைச்யன் அனுஷ்டிக்க வேண்டும். யாசிக்காமல் கிடைத்ததைப் புஜிப்பது என்ற பாத க்ருச்ரத்தை க்ஷத்ரியன் அனுஷ்டிக்க வேண்டும். மூன்று நாள் உபவாஸம் என்ற பாத க்ருச்ரம் ப்ராம்ஹணனுக்கு விதிக்கப்பட்டுள்ளது.

## अर्धकृच्छ्रं पादोनकृच्छ्रं च।

अर्धकृच्छ्रपादोनकृच्छ्रयोरपि स्वरूपमाह स एव – सायं प्रातर्विनाऽर्धं स्यात् पादोनं नक्तवर्जितम् इति। अयमर्थः – अयाचितोपवासत्र्यहद्वयानुष्ठानेनार्धकृच्छ्रो भवति। नक्तत्रयव्यतिरिक्तत्र्यहत्रयानुष्ठानेन पादोनकृच्छ्रो भवति इति। अर्धकृच्छ्रः प्रकारान्तरेणापि तेनैवोक्तः – सायं प्रातस्तथैवोक्तं दिनद्वयमयाचितम्। दिनद्वयं तु नाश्नीयात् कृच्छ्रार्धं तद्विधीयते इति।

பாதி க்ருச்ரமும், முக்கால் க்ருச்ரமும்.

**ஆபஸ்தம்பர்:—** *பகலிலும் இரவிலும் புஜிப்பது என்பதை விட்டால் மற்ற இரண்டையும் அனுஷ்டித்தால் அது அர்த்த க்ருச்ரம். இரவில் புஜிப்பது என்பதைத் தள்ளினல் அது முக்கால் க்ருச்ரம். இதன் பொருள்:— அயாசிதம், உபவாஸம் இவ்விரண்டையும் மும்மூன்று நாட்கள் அனுஷ்டித்தால் அர்த்த க்ருச்ரமாகிறது. மூன்று நாள் இரவு போஜனம் என்பதைத் தவிர்த்து மற்ற மூன்றையும் மும்மூன்று நாட்கள் அனுஷ்டிப்பதால் முக்கால் க்ருச்ரமாகிறது. பாதி க்ருச்ரமானது வேறு ப்ரகாரமாயும் சொல்லப்பட்டுள்ளது.* **ஆபஸ்தம்பராலேயே :—** *ஒரு நாள் இரவில் மட்டும், ஒரு நாள் பகலில் மட்டும், இரண்டு நாள் யாசிக்காமல் கிடைத்ததை மட்டும் புஜிப்பது, இரண்டு நாள் புஜிக்காமலே யிருப்பது என்பது, அர்த்த க்ருச்ரம் என்று சொல்லப்பட்டுள்ளது.*

यत्तु जपहोमादिबह्वङ्गसहितं प्राजापत्यकृच्छ्रं गौतमेनाभिहितम् – हविष्यान् प्रातराशान् भुक्त्वा तिस्रो रात्रीर्नाश्नीया दथापरं त्र्यहं नक्तं भुञ्जीताथापरं त्र्यहं न कञ्चन याचेताथापरं त्र्यहमुपवसेत् । तिष्ठेदहनि रात्रावासीत क्षिप्रकामस्सत्यं वदेदनार्यैर्न संभाषेत रौरवयौधाजये नित्यं प्रयुञ्जीतानुसवनमुदकोपस्पर्शन मापोहिष्ठेति तिसृभिः पवित्रवतीभिर्मार्जयीत हिरण्यवर्णाश्शुचय इत्यष्टाभिः, अथोदकतर्पणं नमो हमाय मोहमाय मंहमाय धून्वते तापसाय पुनर्वसवे नमो मौञ्ज्यायोर्म्याय सौम्याय शम्याय शिवाय वसुविन्दाय सर्वविन्दाय नमो नमः पाराय सुपाराय महापाराय पारयिष्णवे नमो नमो रुद्राय पशुपतये महते देवाय त्र्यम्बकायैकचरायाधिपतये हरये शर्वायेशानायोग्राय वज्रिणे घृणिने कपर्दिने नमो नमस्सूर्यायादित्याय नमो नमो नीलग्रीवाय शितिकण्ठाय नमो नमः कृष्णाय पिङ्गलाय नमो

नमो ज्येष्ठाय श्रेष्ठाय वृद्धायेन्द्राय हरिकेशायोर्ध्वरेतसे नमो नमस्सत्याय पावकाय पावकवर्णाय कामाय कामरूपिणे नमो नमो दीप्ताय दीप्तरूपिणे नमो नमस्तीक्ष्णाय तीक्ष्णरूपिणे नमो नमस्सोम्याय सुपुरुषाय महापुरुषाय मध्यमपुरुषायोत्तमपुरुषाय ब्रह्मचारिणे नमो नमश्चन्द्र ललाटाय कृत्तिवाससे नम इति। एतदेवादित्योपस्थानम्। एता एवाज्याहुतयः।

ஆனுல் கௌதமரால் ஜபம் ஹோமம் முதலிய அநேக அங்கங்களுடன் கூடிய ப்ராஜாபத்ய க்ருச்ரம் சொல்லப்பட்டுள்ளது:— அதாவது, மூன்று நாள் பகலில் மட்டில் ஹவிரன்னங்களைப் புஜித்து, அந்த மூன்று இரவிலும் புஜிக்கக் கூடாது. பிறகு மூன்று நாள் இரவில் மட்டில் புஜிக்க வேண்டும். பிறகு மூன்று நாள் ஒருவரையும் யாசிக்கக் கூடாது. பிறகு மூன்று நாள் உபவாஸம் இருக்க வேண்டும். பகலில் நிற்க வேண்டும். இரவில் உட்கார்ந்திருக்க வேண்டும். சீக்ரம் பாப நிவ்ருத்தியை அபேக்ஷிப்பவன். உண்மையே பேச வேண்டும். ஆர்யர் அல்லாதவருடன் ஸம்பாஷிக்கக் கூடாது. ரௌரவம், யௌதாஜயம் என்ற ஸாமங்களைப் ப்ரதி தினமும் கானம் செய்ய வேண்டும். மூன்று காலங்களிலும் ஸ்நானம் செய்ய வேண்டும். ஆபோஹிஷ்ட என்ற மூன்று ருக்குகளாலும், பவித்ரவதீகளாலும், ஹிரண்யவர்ணா: ஶுசய: என்ற எட்டு ருக்குகளாலும் ப்ரோக்ஷித்துக் கொள்ள வேண்டும். இனி ஜலதர்ப்பணம் சொல்லப்படுகிறது. ''நமோஹமாய'' என்பது முதல் ''க்ருத்தி வாஸஸே'' என்பது வரையில் உள்ள மந்தரங்களால் ஜலதர்ப்பணம் செய்யவும். இவையே ஸூர்யனுக்கு உபஸ்தான மந்த்ரங்கள். இந்த மந்த்ரங்களே ஆஜ்யாஹுதிக்கு மந்த்ரங்கள்.

द्वादशरात्रस्यान्ते चरुं श्रपयित्वैताभ्यो देवताभ्यो जुहुयात्। अग्नये स्वाहा सोमाय स्वाहाऽग्नीषोमाभ्यामिन्द्राग्निभ्यामिन्द्राय

विश्वेभ्यो देवेभ्यो ब्रह्मणे प्रजापतयेऽग्नये स्विष्टकृत इति । ततो ब्राह्मण तर्पणम् इति ।

பன்னிரண்டு நாட்களுக்குப் பிறகு சருவைப் பாகம் செய்து, அக்னயே ஸ்வாஹா என்பது முதல் அக்நயே ஸ்விஷ்டக்ருதே என்பது வரையில் உள்ள தேவதைகளுக்கு ஹோமம் செய்யவும். பிறகு ப்ராம்ஹணர்களுக்குப் போஜனம் செய்விக்கவும்.

हविष्यानित्याद्युपवसेदित्यन्तेन प्राजापत्य स्वरूपमुक्तम् । तिष्ठेदित्यादिना तस्यैवेतिकर्तव्यतोच्यते । क्षिप्रकामः - शीघ्रं शुद्धिकामः, भोजनाद्यविरुद्धकालेषु अहनि तिष्ठेत्, रात्रौ निद्रामप्यासीन एव सेवेत, एवं सत्यं वदेदित्याद्यङ्गकलापे क्षिप्रकाम इत्यधिकारिविशेषणमनुषञ्जनीयम् । अनेन यः शनैः शनैः शुद्धो भवामीति मन्यते तस्य नायं नियम इति गम्यते । रौरवयौधाजये - सामनी । नमो हमायेत्यादयस्त्रयोदश मन्त्रास्तर्पणसूर्योपस्थानाज्य होमेषु द्रष्टव्याः । अथवा संप्रदानविभक्त्यन्ताष्षट्पञ्चाशन्मन्त्रा इति । एतन्मन्वाद्युक्तजपहोमाद्यङ्गरहित प्राजापत्यद्वयस्थाने वेदितव्यमिति माधवीये ।

''ஹவிஷ்யான்'' என்பது முதல் ''உபவஸேத்'' என்பது வரையில் உள்ள ஸூத்ரத்தால் ப்ராஜாபத்ய க்ருச்ரஸ்வரூபம் சொல்லப்பட்டுள்ளது. ''திஷ்டேத்'' என்பது முதலியதால் அந்த க்ருச்ரத்திலேயே செய்ய வேண்டிய ப்ரகாரம் சொல்லப்பட்டுள்ளது. க்ஷிப்ரகாம: = சீக்ரம் சுத்தியை விரும்புகிறவன். போஜனம் முதலியதற்கு விரோதமில்லாத காலங்களில் பகலில் நிற்க வேண்டும். இரவில் நித்ரையையும் உட்கார்ந்தே செய்ய வேண்டும். இவ்விதம் உண்மை பேச வேண்டும் என்பது முதலிய அங்கங்களிலும் சீக்ரம் சுத்தியை விரும்பியவன் என்ற விசேஷணத்தைச் சேர்க்க வேண்டும். இதனால் எவன்

மெல்ல மெல்லச் சுத்தனுகிறுன் என்று எண்ணுகிறுனே அவனுக்கு இந்த நியமம் இல்லை, என்று எண்ணப்படுகிறது. ரௌரவம், யௌதாஜயம் - ஸாமங்கள். "நமோஹமாய" என்பது முதல் பதின்மூன்று மந்த்ரங்கள், தர்ப்பணம், ஸூர்யோப ஸ்தானம், ஆஜ்யஹோமம் இவைகளில் என்று அறிய வேண்டும். அல்லது நான்காவது வேற்றுமையை முடிவில் உள்ள ஐம்பத்தாறு மந்த்ரங்கள் என்று கணக்கு. இது, மன்வாதிகள் சொல்லியதும், ஜப ஹோமம் முதலிய அங்கங்கள் இல்லாததுமாகிய இரண்டு வித ப்ராஜாபத்ய க்ருச்ரங்களின் ஸ்தானத்தில் அறியத்தகுந்தது, என்று மாதவீயத்தில் உள்ளது.

## अतिकृच्छ्रलक्षणम्।

अतिकृच्छ्रस्य लक्षणमाह मनुः – एकैकं ग्रासमश्नीयात्त्र्यहाणि त्रीणि पूर्ववत्। त्र्यहं चोपवसेदन्त्यमतिकृच्छ्रं चरन् द्विजः इति। एकभक्तनक्तायाचितदिवसेषु नवस्वेकैकग्रासमश्नीयात्त्र्यहं चोपवसेत्। अयमतिकृच्छ्रो भवतीत्यर्थः। यमः – एकैकं पिण्डमश्नीयात्त्र्यहं काले त्र्यहं निशि। अयाचितं त्र्यहं चैव वायुभक्षः परं त्र्यहम्। अति कृच्छ्रं चरेदेतत् पवित्रं पापनाशनम् इति।

### அதிக்ருச்ர லக்ஷணம்.

**மனு:—** அதிக்ருச்ரத்தை யனுஷ்டிக்கும் ப்ராம்ஹணன் மூன்று நாட்களில் பகலில் மட்டில் ஒவ்வொரு கபளத்தைப் புஜிக்க வேண்டும். மறு மூன்று நாளில் இரவில் மட்டில் ஒவ்வொரு கபளத்தையும், மறு மூன்று நாளில் யாசிக்காமல் கிடைத்தால் ஒவ்வொரு கபளத்தையும் புஜிக்க வேண்டும். மறு மூன்று நாளில் உபவாஸமிருக்க வேண்டும். **யமன்:—** மூன்று நாள் பகலில் ஒவ்வொரு கபளத்தைப் புஜிக்க வேண்டும். மூன்று நாள் இரவில் ஒவ்வொரு கபளத்தைப் புஜிக்க வேண்டும். மூன்று நாள் யாசிக்காமல் கிடைத்தால் ஒவ்வொரு கபளத்தைப் புஜிக்க

வேண்டும். பிறகு மூன்று நாள் வாயுவை மட்டில் பக்ஷிப்பவனுயிருக்க வேண்டும். இவ்விதம் பரிசுத்தமாயும் பாபத்தைப் போக்குவதுமாகிய அதிக்ருச்ரத்தை யனுஷ்டிக்க வேண்டும்.

बोधायनोऽपि – एकैकं ग्रासमश्नीयात् पूर्वोक्तेन त्र्यहं त्र्यहम्। वायुभक्षस्त्र्यहं चान्यदतिकृच्छ्रोऽघनाशनः इति । यत्तु याज्ञवल्क्येनोक्तम् – अयमेवातिकृच्छ्रः स्यात् पाणिपूरान्नभोजनः इति । अयमेव प्राजापत्यकृच्छ्रः एकभक्तनक्तायाचितदिवसेषु नवसु पाणिपरान्नभोजनयुक्तोऽतिकृच्छ्रो भवतीत्यर्थः । तथा च पराशरः – नवाहमतिकृच्छ्रः स्यात् पाणिपूरान्नभोजनः । त्रिरात्रमुपवासी स्यादतिकृच्छ्रस्स उच्यते इति । तदेतदशक्तविषयम्, पाणिपूरान्नस्य ग्रासपरिमितादन्नादधिकपरिमाणत्वात्।

போதாயனரும்:— முன் சொல்லியபடி ஒவ்வொரு மும்மூன்று நாட்களிலும் ஒவ்வொரு கபளத்தைப் புஜிக்க வேண்டும். மூன்று நாள் வாயுவை மட்டில் புஜிக்க வேண்டும். இது பாபத்தைப் போக்கும் அதிக்ருச்ரம். ஆனால், யாஜ்ஞவல்க்யரால் சொல்லப்பட்ட "இதுவே அதிக்ருச்ரமாகும். கை நிறைந்த அன்னத்தைப் புஜிப்பதை யுடையது" என்ற விதி, இந்த ப்ராஜாபத்ய க்ருச்ரமே முதலில் உள்ள பகலில் மட்டும், இரவில் மட்டும் யாசிக்காமல் கிடைத்ததை மட்டும் என்று சொல்லிய ஒன்பது நாட்களிலும் கை நிறைந்துள்ள அன்னத்தைப் புஜிப்பதானுல் அதிக்ருச்ரம் என்றுகிறது, என்பது பொருள். பராசரர்:— ஒன்பது நாள் கை நிறைவுள்ள அன்னத்தைப் புஜிப்பது என்பது அதிக்ருச்ரமாகும். மூன்று நாள் உபவாஸமுள்ளவனுய் இருக்க வேண்டும். அது அதிக்ருச்ரம் எனப்படுகிறது. இந்த வசனம் சக்தியற்றவனைப் பற்றியது. கை நிறைந்துள்ள அன்னம் கபள அன்னத்திற்கு மேல் அதிக அளவுள்ளதாகையால்.

## कृच्छ्रातिकृच्छ्रलक्षणम्।

कृच्छ्रातिकृच्छ्रस्य लक्षणमाह बोधायनः – अब्भक्षस्त्रियहानेतान् वायुभक्षस्ततः परम्। एष कृच्छ्रातिकृच्छ्रस्तु विज्ञेयस्सोऽतिपावनः इति। एकभक्तनक्तायाचितदिवसेषु यो भोजनकालः, तस्मिन्नेव काले केवलमुदकेनैव वर्तनं त्रिरात्रोपवासश्च कृच्छ्रातिकृच्छ्र इत्यर्थः। यत्तु एकविंशतिदिनपर्यंतं क्षीरेण वर्तनमुक्तं याज्ञवल्क्येन– कृच्छ्रातिकृच्छ्रः पयसा दिवसानेकविंशतिम् इति तदशक्तविषयम्।

### க்ருச்ராதி க்ருச்ரத்தின் லக்ஷணம்

போதாயனர்:— மூன்று மூன்று நாட்களில் ஜலத்தைப் பக்ஷிப்பவனும், பிறகு மூன்று நாட்களில் வாயுவை மட்டில் பக்ஷிப்பவனும் இருக்க வேண்டும். இது மிகப் பரிசுத்திகரமான க்ருச்ராதிக்ருச்ரமென்று அறியப்பட வேண்டும். பகலில் மட்டில், இரவில் மட்டில், யாசிக்காமல் கிடைத்ததை மட்டில் புஜிப்பது என்ற மூன்று காலங்களிலும் ஜலத்தை மட்டில் பருகி இருப்பதுடன் மூன்று நாள் உபவாஸம் இருப்பது க்ருச்ராதி க்ருச்ரம், என்பது பொருள். ஆனால், இருபத்தொரு நாள் வரையில் பாலை மட்டில் பருகி இருப்பது என்று யாஜ்ஞவல்க்யரால் சொல்லப்பட்டுள்ளது:— "பாலை மட்டில் இருபத்தொரு நாள் பருகி இருப்பது க்ருச்ராதி க்ருச்ரம்" என்பது அசக்தனைப் பற்றியது.

## तप्तकृच्छ्रलक्षणम्।

तप्तकृच्छ्रलक्षणमाह मनुः – तप्तकृच्छ्रं चरन् विप्रः जलक्षीरघृतानिलान्। प्रतित्र्यहं पिबेदुष्णान् सकृत् स्नायी समाहितः इति। बोधायनः – त्र्यहं त्र्यहं पिबेदुष्णं पयस्सर्पिः कुशोदकम्। वायुभक्षस्त्र्यहं चान्यत्तप्तकृच्छ्रस्स उच्यते इति।

**தப்த க்ருச்ர லக்ஷணம்.**

**மனு:—** தப்த க்ருச்ரத்தை யனுஷ்டிக்கும் ப்ராம்ஹணன், ஒவ்வொரு மும்மூன்று நாட்களிலும் முறையே ஜலம், பால், நெய், காற்று இவைகளை உஷ்ணமாய்ப் பருக வேண்டும். ப்ரதிதினம் ஒரு முறை ஸ்நானம் செய்பவனுயும் நியமம் உடையவனுயும் இருக்க வேண்டும். **போதாயனர்:—** ஒவ்வொரு மும்மூன்று நாட்களிலும் உஷ்ணமான பால், நெய், தர்ப்பை, ஜலம் இவைகளைப் பருக வேண்டும். மூன்று நாள் வாயு பக்ஷனுயிருக்க வேண்டும். அது தப்த க்ருச்ரம் எனப்படுகிறது.

## सान्तपनकृच्छ्रलक्षणम्।

सान्तपनकृच्छ्रस्य लक्षणमाहतुः मनुबोधायनौ – गोमूत्रं गोमयं क्षीरं दधि सर्पिः कुशोदकम्। एकरात्रोपवासश्च कृच्छ्रं सान्तपनं स्मृतम् इति। एतस्य द्विरात्रसाध्यत्वमाह याज्ञवल्क्यः – गोमूत्रं गोमयं क्षीरं दधि सर्पिः कुशोदकम्। जग्ध्वा परेऽह्न्युपवसेत् कृच्छ्रं सान्तपनं चरन् इति।

**ஸாந்தபன க்ருச்ர லக்ஷணம்.**

**மனு, போதாயனர்:—** கோமூத்ரம், கோமயம், பால், தயிர், நெய், தர்ப்பை ஜலம் இவைகளை முறையே ஒவ்வொரு நாளிலும் பருகி ஏழாவது நாளில் உபவாஸம் இருப்பது ஸாந்தபன க்ருச்ரம் எனப்படுகிறது. இதற்கே இரண்டு நாள் அனுஷ்டானத்தைச் சொல்லுகிருர், **யாஜ்ஞவல்க்யர்:—** ஸாந்தபன க்ருச்ரத்தை யனுஷ்டிப்பவன் கோமூத்ரம், கோமயம், பால், தயிர், நெய், தர்ப்பையின் ஜலம் இவைகளை ஒரு நாளில் பருகி, மறுநாளில் உபவாஸம் இருக்க வேண்டும்.

## त्रिविधमहासान्तपनलक्षणम्।

महासान्तपनं त्रिविधम्, सप्तरात्रं पञ्चदशरात्रमेकविंशतिरात्रं चेति । तत्र सप्तरात्रस्य स्वरूपमाह याज्ञवल्क्यः – पृथक् सान्तपनद्रव्यैःषडहः सोपवासकः । सप्ताहेन तु कृच्छ्रोऽयं महासान्तपनस्स्मृतः सति।

### மூன்று விதமான மஹாஸாந்தபன க்ருச்ரத்தின் லக்ஷணம்.

மஹாஸாந்தபன க்ருச்ரம் என்பது மூன்று விதமாகும் — ஏழு நாள் உள்ளது, பதினைந்து நாள் உள்ளது, இருபத்தொரு நாள் உள்ளது என்று. அவைகளுள், ஏழு நாள் உள்ள க்ருச்ரத்தின் ஸ்வரூபத்தைச் சொல்லுகிறார், யாஜ்ஞவல்க்யர்:— ஸாந்தபன க்ருச்ரத்தில் சொல்லிய த்ரவ்யங்களைத் தனித்தனி ஆறு நாட்களில் உட்கொண்டு, ஏழாவது நாள் உபவாஸம் இருப்பது, என்ற இது மஹாஸாந்தபனம் என்கிற க்ருச்ரம் ஆகும்.

यमेन पञ्चदशाहसंपाद्यो महासान्तपनोऽभिहितः – त्र्यहं पिबेत्तु गोमूत्रं त्र्यहं वै गोमयं पिबेत् । त्र्यहं दधि त्र्यहं क्षीरं त्र्यहं सर्पिस्ततः शुचिः । महासान्तपनं ह्येतत् सर्वपापप्रणाशनम् इति । जाबाले तु एकविंशतिरात्रनिर्वर्त्यो महासान्तपन उक्तः – षण्णामेकैकमेतेषां त्रिरात्रमुपयोजयेत् । त्र्यहं चोपवसेदन्त्यं महासान्तपनं विदुः इति । एतत् त्रयं पापतारतम्यविषयं द्रष्टव्यम्।

யமனால் பதினைந்து நாட்களால் செய்யக் கூடிய மஹாஸாந்தபன க்ருச்ரம் சொல்லப்பட்டுள்ளது:— மூன்று நாள் கோமூத்ரத்தையும், மூன்று நாள் கோமயத்தையும், மூன்று நாள் தயிரையும், மூன்று நாள் பாலையும், மூன்று நாள் நெய்யையும் பருகினால் பிறகு சுத்தனாகிறான். இது எல்லாப் பாபங்களையும் போக்கும் மஹாஸாந்தபனம்

ஆகும். ஜாபாலரால் இருபத்தொரு நாட்களால் முடிக்கக் கூடிய மஹாஸாந்தபனம் சொல்லப்பட்டுள்ளது:— முன் சொல்லிய ஆறு த்ரவ்யங்களையும் மும்மூன்று நாட்களில் முறையே உபயோகிக்க வேண்டும். கடைசியில் மூன்று நாள் உபவாஸம் இருக்க வேண்டும். இது மஹாஸாந்தபனம் என்கின்றனர். இம்மூன்றும் பாபத்தின் தாரதம்யத்தை அபேக்ஷித்து உள்ளது என்று அறியவும்.

## पराककृच्छ्रलक्षणम्।

पराककृच्छ्रलक्षणमाह मनुः – यतात्मनोऽप्रमत्तस्य द्वादशाहमभोजनम्। पराको नाम कृच्छ्रोऽयं सर्वपापापनोदनः इति। यमोऽपि – द्वादशाहं निराहारो यतात्मा संशितव्रतः। कृच्छ्रः पराक नामैष सर्वपापप्रणाशनः इति।

### பராக க்ருச்ர லக்ஷணம்.

மனு:— ஜிதேந்த்ரியனாய், கவனமுள்ளவனாய் இருப்பவன் பன்னிரண்டு நாள் உபவாஸம் இருப்பது எல்லாப் பாபங்களையும் போக்கும் பராகம் என்னும் க்ருச்ரமாம். யமனும்:— ஜிதேந்த்ரியனாய், நல்ல வ்ரதமுடையவனாய் பன்னிரண்டு நாள் ஆஹாரம் இல்லாமல் இருந்தால் இது எல்லாப் பாபங்களையும் போக்கும் பராகம் எனும் க்ருச்ரம்.

## पर्णकृच्छ्र लक्षणम्।

पर्णकृच्छ्र लक्षणमाह याज्ञवल्क्यः – पर्णोदुम्बरराजीवबिल्वपत्रकुशोदकैः। प्रत्येकं प्रत्यहं पीतैः पर्णकृच्छ्र उदाहृतः इति। पलाशोदुम्बरारविन्दबिल्वपर्णानामेकैकेन काथितमुदकं प्रत्यहं पिबेत्। कुशोदकं चैकस्मिन्नहनीति पञ्चाहसाध्यः पर्णकृच्छ्रः। पर्णकृच्छ्रस्य लक्षणान्तरमाह यमः – एतान्येव समस्तानि त्रिरात्रोपोषितः शुचिः। काथयित्वा पिबेदद्भिः पर्णकृच्छ्रस्य लक्षणम्

इति। पलाशादिपत्राण्येकीकृत्याम्भसा काथयित्वा त्रिरात्रोपवासान्ते कथितं तत् पिबेत्। अयं पर्णकृच्छ्रो भवतीत्यर्थः।

**பர்ண க்ருச்ர லக்ஷணம்.**

**யாஜ்ஞவல்க்யர்:—** *புரசு, அத்தி, தாமரை, பில்வம் இவைகளின் இலைகளைத் தனித்தனியே ஜலத்துடன் காய்ச்சி, அந்த ஜலத்தை மட்டில் முறையே நான்கு நாட்களில் ஒவ்வொரு நாளிலும் பருகி ஐந்தாவது நாளில் தர்ப்பத்தின் ஜலத்தைப் பருகி இருப்பது ஐந்து நாட்களில் செய்யக் கூடிய பர்ண க்ருச்ரம் எனப்படும். இதற்கே வேறொரு லக்ஷணத்தைச் சொல்லுகிறார்,* **யமன்:—** *இந்த எல்லா இலைகளையும் சேர்த்துக் காய்ச்சப்பட்ட ஜலத்தை மூன்று நாள் உபவாஸத்திற்குப் பிறகு ஒரு நாளில் பருக வேண்டியது. இது பர்ண க்ருச்ரத்தின் லக்ஷணம். பலாசம் முதலிய இலைகளைச் சேர்த்து ஜலத்தால் காய்ச்சி, மூன்று நாள் உபவாஸத்தின் முடிவில், காய்ச்சின ஜலத்தைப் பருக வேண்டும். இது பர்ண க்ருச்ரமாக ஆகும் என்பது பொருள்.*

## फलकृच्छ्रादिलक्षणम्।

फलकृच्छ्रादीनां स्वरूपमाह मार्कण्डेयः :- फलैर्मासेन कथितः फलकृच्छ्रो मनीषिभिः। श्रीकृच्छ्रः श्रीफलैः प्रोक्तः पद्माक्षैरपरस्तथा। मासेनामलकैरेवं श्रीकृच्छ्रः परमः स्मृतः। पत्रैर्मतः पत्रकृच्छ्रः पुष्पैस्तत्कृच्छ्र उच्यते। मूलकृच्छ्रः स्मृतो मूलैस्तोयकृच्छ्रो जलेन तु इति। यदा बिल्वादिफलान्यम्भसा काथयित्वा मासमेकं तदम्भः पिबति, तदा फलकृच्छ्रो भवति। यदा बिल्वपद्माक्षामलकानामन्यतमस्य काथं कृत्वा मासमेकं पिबेत्, तदा श्रीकृच्छ्रो भवति। यदा त्वेषां पत्रपुष्पमूलानां काथं पिबेत् तदा पत्रपुष्पमूलकृच्छ्राणि भवन्ति इत्यर्थः।

பல க்ருச்ரம் முதலியதின் லக்ஷணம்.

பல க்ருச்ரம் முதலியதின் ஸ்வரூபத்தைச் சொல்லுகிறூர், மார்க்கண்டேயர்:— ஒரு மாஸம் முழுவதும் பழங்களால் இருப்பது வித்வான்களால் பல க்ருச்ரம் எனப்படுகிறது. பில்வப் பழங்களால் இருப்பது ஸ்ரீ க்ருச்ரம் எனப்படுகிறது. தாமரை விதைகளால் இருப்பது பத்மாக்ஷ க்ருச்ரம். நெல்லிக்கனிகளால் இவ்விதம் ஒரு மாஸம் இருப்பது சிறந்த ஸ்ரீ க்ருச்ரம் எனப்படுகிறது. இலைகளால் இருப்பது பத்ர க்ருச்ரம். புஷ்பங்களால் இருப்பது புஷ்ப க்ருச்ரம். வேர்களால் இருப்பது மூல க்ருச்ரம். ஜலத்தால் இருப்பது தோய க்ருச்ரம். எப்பொழுது பில்வம் முதலியதின் பழங்களை ஜலத்துடன் காய்ச்சி ஒரு மாஸம் முழுவதும் அந்த ஜலத்தைக் குடிக்கின்றூனே, அப்பொழுது பல க்ருச்ரம் எனப்படுகிறது. எப்பொழுது பில்வம், தாமரை விதை, நெல்லிக் கனி இவைகளுள் ஒன்றை ஜலத்துடன் காய்ச்சி ஒரு மாஸம் முழுவதும் அந்த ஜலத்தைப் பருகுகின்றூனே அப்பொழுது அது ஸ்ரீ க்ருச்ரம் எனப்படுகிறது. எப்பொழுது இவைகளின் இலை, புஷ்பம், வேர் இவைகளுள் ஒன்றைத் தனித்தனியே ஜலத்தில் காய்ச்சி அந்த ஜலத்தைப் பருகுகிறூனே அப்பொழுது அது முறையே பத்ர க்ருச்ரம், புஷ்ப க்ருச்ரம், மூல க்ருச்ரம் என்றுகின்றன, என்பது பொருள்.

वारुणस्त्रीसौम्यकृच्छ्रलक्षणम्।

वारुणस्त्रीकृच्छ्रयोर्लक्षणमाह यमः – ब्रह्मचारी जितक्रोधो मासेऽप्युदकसक्तुकान्। पिबेच्च नियताहारः कृच्छ्रं वारुणमुच्यते। त्र्यहं पिबेत्तु गोमूत्रं त्र्यहं वै गोमयं पिबेत्। त्र्यहं वै यावकेनैव स्त्रीकृच्छ्रं ह्येतदुच्यते इति।

**வாருண, ஸ்த்ரீ, ஸௌம்ய க்ருச்ரங்களின் லக்ஷணம்.**

**யமன்:—** ப்ரம்ஹசர்ய வ்ரதமுடையவனும், கோபத்தை விட்டவனும், ஒரு மாஸம் வரையில் ஜலத்துடன் சேர்ந்த மாவுகளை ஆஹார நியமம் உடையவனாய்க் குடித்தால் அது வாருண க்ருச்ரம் எனப்படுகிறது. மூன்று நாள் கோமூத்ரத்தை மட்டிலும், மூன்று நாள் கோமயத்தை மட்டிலும், மூன்று நாள் யவைக்கஞ்சியை மட்டிலும் பருகினால் அது ஸ்த்ரீ க்ருச்ரம் எனப்படுகிறது.

सौम्यकृच्छ्रस्वरूपमाह याज्ञवल्क्यः – पिण्याकाचामतक्राम्बु सक्तूनां प्रतिवासरम्। एकरात्रोपवासश्च कृच्छ्रस्सौम्योऽयमुच्यते इति। आचामः - ओदननिःस्रावः । पिण्याकादीनां पञ्चानामेकैकं प्रतिदिनमुपभुज्य षष्ठेऽहन्युपवसेत्। स एषः सौम्यः कृच्छ्रः । यत्तु जाबालेन चतुरहव्यापी सौम्यकृच्छ्र उक्तः । पिण्याकं सक्तवस्तक्रं चतुर्थेऽहन्यभोजनम्। वासो वै दक्षिणां दद्यात् सौम्योऽयं कृच्छ्र उच्यते इति, तदेतदशक्तविषयम्।

**யாஜ்ஞவல்க்யர்:—** பிண்ணாக்கு, வடிகஞ்சி, மோர், நீர், மாவு, இவைகளை ஒவ்வொரு நாளிலும் முறையே பருக வேண்டும். ஒரு நாள் உபவாஸம். இது ஸௌம்ய க்ருச்ரம் எனப்படுகிறது. பிண்ணாக்கு முதலிய ஐந்துகளை ஒவ்வொன்றை முறையே ஒவ்வொரு நாளிலும் உட்கொண்டு, ஆறுவது நாளில் உபவாஸம் இருக்க வேண்டும். இது ஸௌம்ய க்ருச்ரம். ஆனால், ஜாபாலரால் நான்கு நாட்களில் செய்யக் கூடிய ஸௌம்ய க்ருச்ரம் "பிண்ணாக்கு, மாவு, மோர், இவைகளை மூன்று நாள் பருகி, நான்காவது நாளில் உபவாஸம். பிறகு வஸ்த்ரத்தைத் தக்ஷிணையாய்க் கொடுக்க வேண்டும். இது ஸௌம்யக்ருச்ரம் எனப்படுகிறது," என்று சொல்லப்பட்டுள்ளதே எனில், அது சக்தியற்றவனைப் பற்றியது.

## तुलापुरुषकृच्छ्रलक्षणम्।

अथ तुलापुरुषकृच्छ्रमाह जाबालिः – पिण्याकं च तथाऽऽचामं तक्रं चोदकसक्तवः । त्रिरात्रमुपवासश्च तुलापुरुष उच्यते इति । सोऽयमष्टदिवससाध्यः। याज्ञवल्क्यस्तु पञ्चदशादिनसाध्यमाह – एषां त्रिरात्रमभ्यासादेकैकस्य यथाक्रमम् । तुलापुरुष इत्येष ज्ञेयः पञ्चदशाहिकः इति । एषां - पिण्याकादीनां पञ्चानाम् । यमस्त्वेकविंशतिदिवससाध्यमाह – आचाममथ पिण्याकं तक्रं चोदकसक्तुकान् । त्र्यहं त्र्यहं प्रयुञ्जानो वायुभक्षस्त्र्यहद्वयम् । एकविंशतिरात्रस्तु तुलापुरुष उच्यते इति । तदेतत् त्रयं पापतारतम्यविषयतया व्यवस्थापनीयम्।

### துலாபுருஷ க்ருச்ர லக்ஷணம்.

ஜாபாலி:— *பிண்ணாக்கு, கஞ்சி, மோர், ஜலம், மாவு, மூன்று நாள் உபவாஸம் இது துலாபுருஷ க்ருச்ரம் எனப்படுகிறது. இந்த க்ருச்ரம் எட்டு நாளில் ஸாதிக்கக் கூடியது.* **யாஜ்ஞவல்க்யரோ** *வெனில் பதினைந்து நாட்களில் ஸாதிக்கக் கூடியதைச் சொல்லுகிறார்:— பிண்ணாக்கு முதலிய ஐந்து த்ரவ்யங்களையும் முறையே ஒவ்வொன்றையும் மும்மூன்று நாட்களில் உபயோகிப்பதால் இது பதினைந்து நாட்களில் முடிக்கக் கூடிய துலாபுருஷ க்ருச்ரம் என்று சொல்லப்படுகிறது.* **யமனோ** *வெனில் இருபத்தொரு நாட்களில் ஸாதிக்கக்கூடியதாய்ச் சொல்லுகிறார்:— கஞ்சி, பிண்ணாக்கு, மோர், ஜலம், மாவு, இவ்வைந்தையும் முறையே ஒவ்வொரு மும்மூன்று நாட்களிலும் உபயோகித்து, பிறகு ஆறு நாட்கள் வாயுவைப் பக்ஷித்து இருந்தால் அது இருபத்தொரு நாட்களில் ஸாதிக்கக் கூடிய துலாபுருஷ க்ருச்ரம் எனப்படுகிறது. இம்மூன்றும் பாபத்தின் தாரதம்யத்தை அனுஸரித்தது, என்று வ்யவஸ்தையை யறியவும்.*

## अघमर्षणकृच्छ्रलक्षणम्।

अघमर्षणकृच्छ्रमाह शङ्खः – त्र्यहं त्रिषवणस्नायी मौनी स्नात्वाऽघमर्षणम्। मनसा त्रिः पठेदप्सु न भुञ्जीत दिनत्रयम्। अघमर्षण इत्येतद्व्रतं सर्वाघसूदनम् इति। प्रकारान्तरमाह विष्णुः – त्र्यहं नाश्नीयात्त्र्यहं त्रिषवणस्नान माचरेत्। अप्सु त्रिरघमर्षणं जपेद्दिवा तिष्ठेद्रात्रावासीत। कर्मणोऽन्ते पयस्विनीं गां दद्यादित्यघमर्षणम् इति।

### அகமர்ஷண க்ருச்ர லக்ஷணம்.

சங்கர்:— மூன்று நாள் மூன்று காலங்களிலும் ஸ்நானம் செய்பவனுய், மௌனியாய் இருக்க வேண்டும். ஜலத்தில் மூழ்கி அகமர்ஷண மந்த்ரத்தை மனதினுல் மூன்று முறை ஜபிக்க வேண்டும். மூன்று நாள் உபவாஸம் இருக்க வேண்டும். இது எல்லாப் பாபங்களேயும் போக்குவதான அகமர்ஷண க்ருச்ரம் எனப்படும். வேறு ப்ரகாரத்தைச் சொல்லுகிறுர் விஷ்ணு:— மூன்று நாள் புஜிக்கக்கூடாது. மூன்று நாள் மூன்று காலங்களிலும் ஸ்நானம் செய்ய வேண்டும். ஜலத்தில் மூழ்கி அகமர்ஷண மந்த்ரத்தை மூன்று முறை ஜபிக்க வேண்டும். பகலில் நிற்க வேண்டும். இரவில் உட்கார்ந்திருக்க வேண்டும். வ்ரதம் முடிந்த பிறகு பால் உள்ள பசுவைத் தானம் செய்ய வேண்டும். இவ்விதம் செய்வது அகமர்ஷண க்ருச்ரம்.

## दैवतकृच्छ्रलक्षणम्।

दैवतकृच्छ्रमाह यमः – यवागूं यावकं शाकं क्षीरं दधि घृतं तथा। त्र्यहं त्र्यहं तु प्राश्नीयाद्वायुभक्षः परं त्र्यहम्। कृच्छ्रं दैवकृतं नाम सर्वकिल्बिषनाशनम् इति।

**தைவத க்ருச்ர லக்ஷணம்.**

**யமன்:—** *கஞ்சி, யவைக்கஞ்சி, கீரை, பால், தயிர், நெய், இவைகளையே முறையே மும்மூன்று நாட்கள் உட்கொள்ள வேண்டும். பிறகு மூன்று நாள் வாயுவைப் பக்ஷிக்க வேண்டும். இது எல்லாப் பாபங்களையும் போக்குவதான தைவத க்ருச்ரம் எனப்படும்.*

यज्ञकृच्छ्रमाहाङ्गिराः – युक्तस्त्रिषवणं स्नायी संयतो मौनमास्थितः । प्रातःस्नानं समारभ्य कुर्याज्जप्यं च नित्यशः । सावित्रीं व्याहृतिं चैव जपेदष्टसहस्रकम् । ओङ्कारमादितः कृत्वा रूपे रूपे तथाऽन्ततः । भूमौ वीरासने युक्तः कुर्याज्जप्यं तु संयतः । आसीनश्च स्थितो वाऽपि पिबेद्गव्यं पयस्सकृत् । गव्यस्य पयसोऽलाभे गव्यमेव भवेद्दधि । दध्नोऽलाभे भवेत्तक्रं तक्रालाभे तु यावकम् । एषामन्यतमं यत्तु उपपद्येत तत्पिबेत् । गोमूत्रेण समायुक्तं यावकं चोपयोजयेत् । एकाहेन तु कृच्छ्रोऽयमुक्तस्त्वङ्गिरसा स्वयम् । सर्वपापहरो दिव्यो नाम्ना यज्ञ इति स्मृतः । एतत्पातकयुक्तानां तथाचाप्युपपातकैः । महद्भिश्चापि युक्तानां प्रायश्चित्तमिदं शुभम् इति ।

**யஜ்ஞ க்ருச்ரத்தைச் சொல்லுகிறார், அங்கிரஸ்:—** *நியமமுடையவனாய், மூன்று காலங்களிலும் ஸ்நானம் செய்பவனாய், ஜிதேந்த்ரியனாய், மௌனியாய் இருக்க வேண்டும். ப்ரதி தினம் ப்ராத:ஸ்நானம் முதற்கொண்டு ஜபத்தைச் செய்ய வேண்டும். காயத்ரியையும், வ்யாஹ்ருதியையும் எண்ணாயிரம் தடவை ஜபிக்க வேண்டும். ஒவ்வொரு தடவையிலும் ஆரம்பத்திலும் முடிவிலும் ஓங்காரத்தைச் சேர்த்து ஜபிக்க வேண்டும். பூமியில் வீராஸனத்தில் இருந்து ஜபம் செய்ய வேண்டும். உட்கார்ந்தாவது நின்றாவது ஜபிக்க வேண்டும். பசுவின் பாலை ஒரு முறை பருக வேண்டும். பசுவின் பால் கிடைக்காவிடில் பசுவின் தயிரை உபயோகிக்கவும். தயிர்*

கிடைக்காவிடில் மோரை உபயோகிக்கவும். மோர் கிடைக்காவிடில் யவைக்கஞ்சியைப் பருகவும். இவைகளுள் எது கிடைக்குமோ அதை உபயோகிக்கலாம். இவ்விதம் ஒரு நாள் செய்வது க்ருச்ரம் என்று அங்கிரஸ்ஸால் சொல்லப்பட்டுள்ளது. இது எல்லாப் பாபங்களையும் அபஹரிப்பது, இது யஜ்ஞக்ருச்ரம் என்று சொல்லப்பட்டுள்ளது. இது பாபங்களுடன் கூடியவர்க்கும், உபபாதகங்களுடன் கூடியவர்க்கும், மஹாபாதகங்களுடன் கூடியவர்க்கும் சிறந்த ப்ராயஶ்சித்தமாகும்.

## यावककृच्छ्र लक्षणम्।

यावककृच्छ्रमाह देवलः – यवानामप्सु साधितानां सप्तरात्रं पक्षं मासं वा प्राशनं यावकम् । एतेन यावकपायसोदक(पाक)ानि व्याख्यातानि इति । शङ्खः – गोपुरीषं यवाभ्यासो मासमेकं समाहितः। व्रतं तु यावकं कुर्यात् सर्वपापापनुत्तये इति ।

### யாவக க்ருச்ர லக்ஷணம்.

தேவலர்:— யவைகளை ஜலத்தில் சேர்த்துப் பாகம் செய்து, ஏழு நாள், அல்லது பதினைந்து நாள், அல்லது ஒரு மாஸம், புஜிப்பது யாவக க்ருச்ரம் எனப்படுகிறது. இதனால் யாவகம், பாயஸம், ஜலம் இவைகள் விவரிக்கப்பட்டுள்ளன. சங்கர்:— நியதனாய் ஒரு மாஸம் முழுவதும் கோமயத்துடன் யவையைப் புஜித்து எல்லாப் பாபங்களையும் போக்குவதற்கு யாவக வ்ரதத்தை அனுஷ்டிக்கவும்.

## प्रसृतियावककृच्छ्र लक्षणम्।

प्रसृतियावकमाह हारीतः – य आत्मकृतैः कर्मभिर्गुरुमात्मानं पश्येदात्मार्थं प्रसृतियावकं श्रपयेत् । ततोऽग्नौ जुहुयात् । तेन दैवबलिकर्म । शृतमभिमन्त्रयेत - यवोऽसि धान्यराजोऽसि वारुणो

मधुसंयुतः । निर्णोदः सर्वपापानां पवित्रमृषिभिः स्मृतः । घृतं यवा मधु यवा आपोहिष्ठामृतं यवाः । सर्वं पुनन्तु मे पापं यन्मया दुष्कृतं कृतम् । वाचा कृतं कर्मकृतं मनसा दुर्विचिन्तितम् । अलक्ष्मीं कालकण्ठीं च सर्वं पुनीत मे यवाः । मातापित्रोरशुश्रूषां वयसा कारितं तथा । श्वसूकरावलीढं च उच्छिष्टोपहतं च यत् । सुवर्णस्तेयं व्रात्यत्वं बाधित्वा चात्मजं तथा । ब्राह्मणानां परीवादं सर्वं पुनीत मे यवाः । श्रप्यमाणं रक्षां कुर्यात् नमो रुद्राय भूताधिपतये (द्यौ)स्सावित्री मानस्तोकेति । पात्रे त्रिर्निषिच्य ये देवा मनो जाता मनो युजस्सुदक्षा दक्षपितारस्ते नः पान्तु ते नोऽवन्तु तेभ्यो नमस्तेभ्यः स्वाहेत्यात्मनि जुहुयात् । त्रिरात्र मेवात्रातिपापकृत् षड्रात्रं पीत्वा पूतो भवति सप्तरात्रं च महापातकी द्वादशरात्रं पीत्वा सर्वं पुरुषकृतं पापं निर्दहति ।

**ப்ரஸ்ருதி யாவக க்ருச்ர லக்ஷணம்.**

**ஹாரீதர்:—** எவன் தான் செய்த கர்மங்களால் தன்னைப் பாபமுடையவனாய் நினைக்கின்றானோ அவன் தனக்காக ப்ரஸ்ருதி (ஒரு சேரை யளவுள்ள) யவையைப் பாகம் செய்ய வேண்டும். அதிலிருந்து அக்னியில் ஹோமம் செய்ய வேண்டும். அதனால் தைவகர்மம், பலிகர்மம் இவைகளைச் செய்யவும். பக்குவமாகிய அதைப் பார்த்து ஜபிக்க வேண்டும். ''யவோஸி'' என்பது முதல் ''ப்ராம்ஹணானாம் பரீவாதம் ஸர்வம் புனீதமேயவா:'' என்பது முடிய மந்த்ரங்களை ஜபிக்க வேண்டும். பாகமாகும் பொழுது 'நமோருத்ராய, காயத்ரீ, மானஸ்தோகே' என்ற மந்த்ரங்களால் ரக்ஷை செய்யவும். பாத்ரத்தில் மூன்று தடவை சேர்த்து, 'யேதேவா:,' முதல் ''தேப்ய:ஸ்வாஹா'' வரையில் உள்ள மந்த்ரங்களால் தன்னிடத்திலே ஹோமம் செய்யவும். மூன்று நாள் வரையில் அதிபாதகம் செய்தவன் செய்தால் சுத்தனாகிறான். அல்லது ஆறு நாள் பானம் செய்தால் சுத்தனாகிறான். மஹாபாதகியானால் ஏழு நாள்

*பானம் செய்தால் சுத்தனாகிறான். பன்னிரண்டு நாள் பானம் செய்தால், செய்த பாபங்கள் எல்லாவற்றையும் போக்குகிறான்.*

निर्वृत्तानां यवानामेकविंशतिरात्रं पीत्वा गणान् पश्यति गणाधिपतिं पश्यति विद्यां पश्यति विद्याधिपतिं पश्यति योऽश्नीयाद्यावकं पक्वं गोमूत्रेष्वसकृद्दधिक्षीरसर्पिष्षु मुच्यते सोंहसः क्षणादि त्याह भगवान्मैत्रायणिः इति।

*இவ்விதம் யாவகத்தை இருபத்தொரு நாள் பருகினால் கணங்கள், கணாதிபதிகள், வித்யை, வித்யாதிபதி இவர்களைத் தர்சனம் செய்வான். எவன் கோமூத்ரத்திலாவது அல்லது தயிர், பால், நெய் இவைகளில் பக்வமான யாவகத்தை அடிக்கடி பருகுவானோ அவன் பாபத்தினின்றும் உடனே விடுபடுவான், என்றார் பகவானாகிய மைத்ராயணி என்பவர்.*

## चान्द्रायणकृच्छ्रलक्षणम्।

अथ चान्द्रायणम्। तच्च द्विविधम्। पिपीलिकामध्यं यवमध्यं चेति। यथा पिपीलिकायाः शिरः पृष्ठभागौ स्थूलौ मध्यं शून्यम् तथैवास्य चान्द्रायणस्य मध्ये त्वमावास्यादिने सर्वग्रासह्रासः। तस्य मध्यमभागसौक्ष्म्यात् पिपीलिकामध्यत्वम्। तथा हि - कृष्णप्रतिपदि व्रतं सङ्कल्प्य चतुर्दश ग्रासान् भुञ्जीत। ततो द्वितीयामारभ्य प्रतिदिनमेकैकस्य ग्रासस्य ह्रासे सति अमावास्याया मुपवासस्संपद्यते। पुनः शुक्लप्रतिपदि ग्रासमेकमुपक्रम्य प्रतिदिन मेकैकग्रासवृद्ध्या पूर्णिमायां पञ्चदशग्रासाः संपद्यन्ते। स एष पिपीलिकामध्यचान्द्रायणस्यानुष्ठानप्रकारः। तथा यवं मध्यस्थूलमु-भावन्तौ शून्यौ। तथा हि - शुक्लप्रतिपदमारभ्य प्रतिदिनमेकैकग्रास-

वृद्ध्या पूर्णिमायां पञ्चदशग्रासास्संपद्यन्ते । कृष्णप्रतिपदमारभ्य प्रतिदिनमेकैकग्रासह्रासे सति अमावास्यायामुपवास इति मध्यभागस्थौल्याद्यवमध्यत्वम् ।

**சாந்த்ராயண க்ருச்ர லக்ஷணம்.**

இனி சாந்த்ராயண க்ருச்ரம் சொல்லப்படுகிறது. அது இருவிதமாகும் - பிபீலிகா மத்யம் என்றும், யவமத்யம் என்றும். எப்படி எறும்பினுடைய தலையும் பின்பாகமும் பருத்துள்ளனவோ, நடுப்பாகம் மெலிந்துள்ளதோ, அவ்விதமே இந்தச் சாந்த்ராயண க்ருச்ரத்திற்கு நடுவில் அமாவாஸ்யா தினத்தில் கபளங்கள் எல்லாவற்றிற்கும் குறைவு. அந்த க்ருச்ரம் நடுவில் ஸூக்ஷ்மமாக இருப்பதால் பிபீலிகாமத்யம் என்ற தன்மை. உதாஹரணம்:— க்ருஷ்ணபக்ஷ ப்ரதமையில் க்ருச்ரத்தை ஸங்கல்பித்துக் கொண்டு, பதினான்கு கபளங்கள் புஜிக்க வேண்டும். பிறகு த்விதீயையிலிருந்து ஒவ்வொரு தினத்திலும் ஒவ்வொரு கபளம் குறைவு செய்யும் பொழுது அமாவாஸ்யையில் உபவாஸம் ஏற்படுகிறது. மறுபடி சுக்லபக்ஷ ப்ரதமையில் ஒரு கபளத்தை யாரம்பித்து ஒவ்வொரு தினமும் ஒவ்வொரு கபளத்தை வ்ருத்தி செய்வதால் பூர்ணிமையில் பதினைந்து கபளங்கள் ஆகின்றன. சொல்லிய இது பிபீலிகாமத்ய சாந்த்ராயணத்தின் அனுஷ்டான ப்ரகாரம் ஆகும். அப்படியே, யவதான்யமானது நடுவில் பருத்துள்ளது. இருகோடிகளும் மெலிந்துள்ளன. உதாஹரணம்:— சுக்லபக்ஷ ப்ரதமையில் ஆரம்பித்து, ஒவ்வொரு நாளும் ஒவ்வொரு கபளம் வீதம் வ்ருத்தி செய்வதால் பூர்ணிமையில் பதினைந்து கபளங்கள் ஆகின்றன. க்ருஷ்ண பக்ஷ ப்ரதமை முதற்கொண்டு ஒவ்வொரு நாளும் ஒவ்வொரு கபளம் வீதம் குறைந்தால் அமாவாஸ்யையில் உபவாஸம் ஏற்படுகிறது, என்று. நடுப்பாகம் பருத்திருப்பதால் இதற்கு யவமத்யம் என்ற

தன்மை.

तत्र पिपीलिकामध्यमाह वसिष्ठः – मासस्य कृष्णपक्षादौ ग्रासानद्याच्चतुर्दश। ग्रासापचयभोजी सन् पक्षशेषं समापयेत्। तथैव शुक्लपक्षादौ ग्रासं भुञ्जीत चापरम्। ग्रासोपचयभोजी सन् पक्षशेषं समापयेत् इति।

*அவைகளுள் பிபீலிகாமத்யத்தைச் சொல்லுகிறார்,* **வஸிஷ்டர்:—** *மாஸத்தின் க்ருஷ்ணபக்ஷ ப்ரதமையில் பதினான்கு கபளங்களைப் புஜிக்க வேண்டும். இவ்விதம் கபளங்களைக் குறைத்துப் புஜிப்பவனாயிருந்து பக்ஷத்தின் மீதியை முடிக்க வேண்டும். அவ்விதமே சுக்ல பக்ஷத்தின் ப்ரதமையில் ஒரு கபளத்தைப் புஜிக்க வேண்டும். இவ்விதம் கபளங்களை வ்ருத்தி செய்து புஜிப்பவனாயிருந்து பக்ஷம் மீதியை முடிக்க வேண்டும்.*

पराशरोपि – एकैकं ह्रासयेत् ग्रासं कृष्णे शुक्ले तु वर्धयेत्। अमावास्यां न भुञ्जीत ह्येष चान्द्रायणे विधिः इति। चान्द्रायणद्वयमाह देवलः – चान्द्रायणं द्विविधं यवमध्यं पिपीलिकामध्यमिति। एकग्रासममावास्यादि यवमध्यम्, पञ्चदशग्रासं पौर्णमास्यादि पिपीलिकामध्यम् इति। मनुरपि – एकैकं ह्रासयेत् पिण्डं कृष्णे शुक्ले च वर्धयेत्। उपस्पृशंस्त्रिषवणमेतच्चान्द्रायणं स्मृतम्। एवमेव विधिं कृत्स्नमाचरेद्यवमध्यमे। शुक्लपक्षादिनियतश्चरं श्चान्द्रायणं व्रतम् इति।

**பராசரரும்:—** *க்ருஷ்ண பக்ஷத்தில் ஒவ்வொரு கபளத்தைக் குறைக்க வேண்டும். சுக்ல பக்ஷத்தில் வ்ருத்தி செய்ய வேண்டும். அமாவாஸ்யையில் புஜிக்கக் கூடாது. இது சாந்த்ராயண க்ருச்ரத்தின் விதி. இரு வித சாந்த்ராயணங்களையும் சொல்லுகிறார்,* **தேவலர்:—** *சாந்த்ராயணம் இருவிதமாகும் — யவமத்யம், பிபீலிகாமத்யம் என்று. அமாவாஸ்யை முதல் ஒவ்வொரு கபளத்தை அதிகரித்துப் புஜிப்பது யவமத்யம். பூர்ணிமை*

முதல் பதினைந்து க்ராஸமாய் புஜிப்பது பிபீலிகாமத்யம். **மனுவும்:—** க்ருஷ்ண பக்ஷத்தில் ஒவ்வொரு கபளத்தைக் குறைக்க வேண்டும். சுக்ல பக்ஷத்தில் ஒவ்வொரு கபளத்தை வ்ருத்தி செய்ய வேண்டும். மூன்று காலங்களிலும் ஸ்நானம் செய்ய வேண்டும். இது சாந்த்ராயண வ்ரதம் எனப்படுகிறது. சாந்திராயண வ்ரதத்தை யனுஷ்டிப்பவன் யவமத்யம சாந்த்ராயணத்தில் இந்த விதியையே சுக்லபக்ஷம் முதல் நியமம் உடையவனாய் அனுஷ்டிக்க வேண்டும்.

### वपनादीतिकर्तव्यताक्रमः ।

वपनाद्यङ्गस्येतिकर्तव्यतामाह गौतमः – वपनं व्रतं चरेत् श्वोभूतां पौर्णमासीमुपवसेदाप्यायस्व सन्ते पयांसि नवो नव इति चैताभिस्तर्पणमाज्यहोमो हविषश्चानुमन्त्रणमुपस्थानं चन्द्रमसः यद्देवा देवहेलनमिति चतसृभिराज्यं जुहुयात् । देवकृतस्येति चान्ते समिद्भिरोम्भूर्भुवस्सुवर्महर्जनस्तपस्सत्यं यशः श्रीरूर्ग्विडौजास्तेजः पुरुषो धर्मः शिव इत्येतैर्ग्रासानुमन्त्रणं प्रतिमन्त्रं मनसा नमः स्वाहेति नमः स्वाहेति वा सर्वानितैरेव ग्रासाननुभुञ्जीत ग्रासप्रमाणमास्या विकारेण चरुभैक्ष सक्तुकण यावक शाकपयो दधिघृतमूल फलादेकानि हवींष्युत्तरोत्तरं प्रशस्तानि द्वादशैतानि पौर्णमास्यां पञ्चदश ग्रासान् भुक्त्वैकैकापचयेनापरपक्षमश्नीयात् । अमावास्यायामुपोष्य एकैकोपचयेन पूर्वपक्षम् । विपरीत मेकेषा मेष चान्द्रायणो मासः इति ।

### வபனம் முதலிய நியமங்களின் க்ரமம்.

**கௌதமர்:—** சாந்த்ராயணத்தில் வபனமும் ப்ராயச்சித்த வ்ரதமாகச் செய்ய வேண்டியது. மறுநாள் பூர்ணிமை இருக்கும் பொழுது முதல் நாள் சதுர்த்தசியில் உபவாஸம் இருக்க வேண்டும். 'ஆப்யாயஸ்வ', 'ஸந்தேபயாம்ஸி', 'நவோநவ:', என்ற இந்த ருக்குகளால்

தர்ப்பணம், ஆஜ்யஹோமம், ஹவிஸ்ஸின் அனுமந்த்ரணம், சந்த்ரனுக்கு உபஸ்தானம் இவைகளைச் செய்யவும். ''யத்தேவா தேவஹேளனம்'' என்ற நான்கு மந்த்ரங்களால் ஆஜ்யஹோமம் செய்ய வேண்டும். கடைசியில் ''தேவக்ருதஸ்ய'' என்ற மந்த்ரங்களால் ஸமித்ஹோமம். ஓம்பூ:, புவ:, ஸுவ:, மஹ:, ஜந:, தப:, ஸத்யம், யச:, ஶ்ரீ:, ஊர்க், பிடௌஜா:, தேஜ:, புருஷ:, தர்ம:, சிவ: ஸ்வாஹா'' இந்த மந்த்ரத்தால் எல்லாக் கபளங்களையும் அனுமந்த்ரிக்கவும். கபளத்தின் ப்ரமாணம் வாயை விஸ்தரித்துக் கொள்ளாமல் ஸ்வபாவ நிலைமையில் உள்ளபடி வாய் கொண்ட அளவு. சரு, பிக்ஷான்னம், மாவு, நொய், யவைக்கஞ்சி, காய்கள், பால், தயிர், நெய், கிழங்கு, பழம், தீர்த்தம் இவை பன்னிரண்டில் மேல்மேல் உள்ளது ப்ரசஸ்தம் (உயர்ந்தது). இவ்வாறு (சதுர்த்தசியில் உபவாஸமிருந்து) பூர்ணிமையில் பதினைந்து கபளங்கள் புஜித்து, ப்ரதமை முதல் ஒவ்வொரு நாளும் ஒவ்வொரு கபளம் குறைவாக க்ருஷ்ணபக்ஷம் முடிய புஜிக்கவும். அமாவாஸ்யையில் உபவாஸமிருந்து, ப்ரதமை முதல் ஒவ்வொரு நாளும் ஒவ்வொரு கபளம் அதிகமாக வ்ருத்தி செய்து, சுக்ல பக்ஷத்தில் புஜிக்கவும். இதையே மாற்றிச் செய்வது என்பது சிலருடைய மதத்தில். இவ்வாறு ஒரு மாஸம் செய்வது சாந்த்ராயண க்ருச்ரம்.

## प्रकारान्तरेण चान्द्रायणस्य त्रैविध्यम्।

पुनरपि प्रकारान्तरेण चान्द्रायणं त्रिविधम्, ऋषिचान्द्रायणं शिशुचान्द्रायणं यतिचान्द्रायणं चेति । तेषां स्वरूपमाह यमः – त्रींस्त्रीन् पिण्डान् समश्नीयान्नियतात्मा दृढव्रतः । हविष्यान्नस्य वै मासमृषिचान्द्रायणं स्मृतम्। चतुरः प्रातरश्नीयाच्चतुरः सायमेव च। पिण्डानेतद्धि बालानां शिशुचान्द्रायणं स्मृतम् । पिण्डानष्टौ समश्नीयान्मासं मध्यन्दिने रवौ । यतिचान्द्रायणं ह्येतत् सर्वकल्मषनाशनम् इति।

**வேறுவிதமாய் சாந்த்ராயணம் மூன்று விதம்.**

மறுபடியும் வேறுவிதமாய், சாந்த்ராயணம் மூன்று விதமாகும்:— ருஷி சாந்த்ராயணம், சிசு சாந்த்ராயணம், யதி சாந்த்ராயணம் என்று. அவைகளின் ஸ்வரூபத்தைச் சொல்லுகிறார், யமன்:— ஒரு மாஸம் முழுவதும் ப்ரதிதினம் மூன்று கபளங்களை மட்டில் நியமமுடையவனாய், த்ருடவ்ருதனாய் ஹவிஸ் அன்னத்தைப் புஜிக்க வேண்டும். இது ருஷி சாந்த்ராயணம் எனப்பட்டுள்ளது. பகலில் நான்கு கபளங்களையும், இரவில் நான்கு கபளங்களையும் மட்டில் (புஜிக்கவும்). இது பாலர்களுக்கு, சிசு சாந்த்ராயணம் எனப்படும். ஒரு மாஸம் முழுவதும் மத்யாஹ்ன காலத்தில் எட்டுக் கபளங்களைப் புஜிக்கவும். இது எல்லாப் பாபங்களையும் போக்குவதான யதி சாந்த்ராயணம் எனப்படும்.

पञ्चविधचान्द्रायण निरूपणम्।

विष्णुः पञ्चविधं चान्द्रायणमाह – अथातश्चान्द्रायणं ग्रासानास्याविकारमश्नीयात्तांश्च कलाभिवृद्धौ क्रमेण वर्धयेत्। हानौ च ह्रासयेत्। अमावास्यायां च नाश्नीयात्। एष चान्द्रायणो यवमध्यः पिपीलिकामध्यो वा। यस्यामावास्या मध्या भवति,, स पिपीलिकामध्यः। यस्य पौर्णमासी स यवमध्यः। अष्टौ ग्रासान् प्रतिदिनमश्नीयात् स यतिचान्द्रायणः। सायं प्रातश्चतुरश्चतुरः स शिशुचान्द्रायणः। यथाकथञ्चित्पिण्डानां त्रिस्रोऽशीतीर्वाऽश्नीयात् सामान्यचान्द्रायणः इति।

**ஐந்து விதமான சாந்த்ராயணங்கள்.**

விஷ்ணு:— சாந்த்ராயணத்தை ஐந்து விதமாகச் சொல்லுகிறார்:— இனி, சாந்த்ராயணம் சொல்லப்படுகிறது. கபளங்களை வாய் கொண்ட அளவு புஜிக்க வேண்டும்.

அந்தக் களபங்களைச் சுக்ல பக்ஷத்தில் க்ரமமாய் வ்ருத்தி செய்ய வேண்டும். க்ருஷ்ண பக்ஷத்தில் குறைக்க வேண்டும். அமாவாஸ்யையில் புஜிக்கக் கூடாது. இது யவமத்யம், பிபீலிகாமத்யம் என்று. எதற்கு அமாவாஸ்யை நடுவில் வருகிறதோ அது பிபீலிகா மத்யம். எதற்குப் பூர்ணிமை நடுவில் வருகிறதோ அதற்கு யவமத்யம். ஒவ்வொரு நாளிலும் எட்டு கவளங்களைப் புஜிக்க வேண்டும். இது யதிசாந்த்ராயணம். இரவிலும் பகலிலும் நான்கு நான்கு கபளங்களைப் புஜிக்க வேண்டும். இது சிசுசாந்த்ராயணம். எந்த விதத்திலாவது இருநூற்று நாற்பது கபளங்களை ஒரு மாஸத்தில் புஜிக்க வேண்டும். இது ஸாமான்ய சாந்த்ராயணம் எனப்படும், என்று. ஒவ்வொரு நாளிலும் எட்டு வளங்களைப் புஜிக்க வேண்டும்.

## चान्द्रायणे ग्रासपरिमाणम्।

चान्द्रायणेऽभिहितस्य पिण्डस्य परिमाणमाह पराशरः – कुक्कुटाण्डप्रमाणं तु ग्रासं वै परिकल्पयेत्। अन्यथा भावदोषेण न धर्मो न च शुद्ध्यति इति।

### சாந்த்ராயணத்தில் கபளத்தின் பரிமாணம்.

சாந்த்ராயணத்தில் சொல்லப்பட்டுள்ள கபளத்தின் பரிமாணத்தைச் சொல்லுகிறார், பராசரர்:— கபளத்தைக் கோழியின் முட்டையளவுள்ளதாகச் செய்ய வேண்டும். வேறு விதமாகச் செய்தால் புண்யமில்லை. வ்ரதமும் ஸித்திப்பதில்லை.

## व्रतचरणानन्तरकर्तव्यम्।

व्रतचरणानन्तरं कर्तव्यमाह स एव – प्रायश्चित्ते ततश्चीर्णे कुर्यात् ब्राह्मणभोजनम्। गोद्वयं वस्त्रयुग्मं च दद्याद्विप्राय दक्षिणाम् इति। सङ्ख्याविशेषानुपादानाच्छक्त्यनुसारेण ब्राह्मणभोजनं वेद्यम्।

வ்ரதம் அனுஷ்டித்த பிறகு செய்ய வேண்டியது.

பராசரர்:— ப்ராயஸ்சித்தம் அனுஷ்டிக்கப்பட்ட பிறகு ப்ராம்ஹணர்களைப் புஜிப்பிக்க வேண்டும். இரண்டு பசுக்களையும், இரண்டு வஸ்த்ரங்களையும் ப்ராம்ஹணனுக்குத் தக்ஷிணையாகக் கொடுக்க வேண்டும். கணக்கைச் சொல்லாததால் சக்தியை யனுஸரித்து ப்ராம்ஹண போஜனத்தை அறியவும்.

## चान्द्रायणस्य फलनिरूपणम्।

चान्द्रायणस्य फलं दर्शयति यमः – यत् किञ्चित् क्रियते पापं कर्मणा मनसा गिरा । द्विजश्चान्द्रायणं कृत्वा तस्मात् पापात् प्रमुच्यते। एतानि विधिवत् कृत्वा षड्भिर्मासैः हविष्यभुक् । व्यपेतकल्मषो विप्रश्चन्द्रस्यैति सलोकताम् इति।

சாந்த்ராயண பலத்தின் நிருபணம்.

யமன்:— ப்ராம்ஹணன் தேஹத்தாலும், மனஸாலும், வாக்கினாலும் எந்தப் பாபத்தைச் செய்கிறானோ அந்தப் பாபத்தினின்றும் சாந்த்ராயணம் செய்தால் விடுபடுவான். ப்ராம்ஹணன் ஆறுமாஸம் வரையில் ஹவிஸ்ஸைப் புஜிப்பவனாய் இவைகளைச் செய்தால், பாபம் நீங்கியவனாய், சந்த்ரனின் ஸாலோக்யத்தை யடைகிறான்.

## व्रतग्रहणप्रकारः।

व्रतग्रहणप्रकारमाह विष्णुः – सर्वपापेषु सर्वेषां व्रतानां विधिपूर्वकम्। ग्रहणं संप्रवक्ष्यामि प्रायश्चित्ते चिकीर्षिते ।। दिनान्ते नखरोमादीन् प्रवाप्य स्नानमाचरेत् । भस्मगोमयमृद्वारि पञ्चगव्यादिकल्पितैः। मलापकर्षणं कार्यं बाह्यशौचोपसिद्धये इति। जाबालिः – आरम्भे सर्वकृच्छ्राणां समाप्तौ च विशेषतः। आज्येनैव

हि शालाग्नौ जुहुयाद्व्याहृतीः पृथक् । कायाभ्यङ्गं शिरोभ्यङ्गं ताम्बूलमनुलेपनम् । व्रतस्थो वर्जयेत् सर्वं यच्चान्यद्बलरागकृत् इति ।

**வ்ரதத்தை ஆரம்பிக்கும் ப்ரகாரம்.**

விஷ்ணு:— எல்லாப் பாபங்களுக்கும் செய்யப்படும் எல்லா வ்ரதங்களிலும் விதியுடன் ஆரம்பத்தைச் சொல்லுகிறேன். ப்ராயஶ்சித்தத்தைச் செய்ய விரும்பியிருக்கும் பொழுது, ஸாயங்காலத்தில் நகம், ரோமம் முதலியவைகளை வபனம் செய்து கொண்டு, ஸ்நானம் செய்ய வேண்டும். விபூதி, கோமயம், மண், தீர்த்தம், பஞ்சகவ்யம் முதலியதால் தேகம் சுத்தமாவதற்காக மலாபகர்ஷணம் செய்ய வேண்டும். ஜாபாலி:— எல்லா க்ருச்ரங்களின் ஆரம்பத்திலும், ஸமாப்தியிலும், அவச்யம் சாலாக்னியில் தனித்தனி வ்யாஹ்ருதிகளால் நெய்யினால் ஹோமம் செய்ய வேண்டும். தேஹத்தில் எண்ணெயைத் தடவுதல், தலையில் எண்ணெயைத் தடவுதல், தாம்பூலம், சந்தனம் பூசிக் கொள்ளுதல், இவைகளை எல்லாம் க்ருச்ரம் அனுஷ்டிப்பவன் வர்ஜிக்க வேண்டும். இதைத் தவிர்த்து வலிமையையும் காமத்தையும் செய்யக் கூடியது எதுவோ அதையும் விட வேண்டும்.

गृहीतस्य व्रतस्यासमापने प्रत्यवायः ।

गृहीतस्य व्रतस्यासमापने प्रत्यवायमाह छागलेयः - पूर्वं व्रतं गृहीत्वा तु नाचरेत् कामतो हि यः । जीवन् भवति चण्डालो मृतः श्वा चाभिजायते इति ।

**ஸங்கல்பிக்கப்பட்ட நியமத்தை அனுஷ்டிக்காவிடில் பாபம்.**

சாகலேயர்:— எவன் முதலில் நியமத்தை ஸங்கல்பித்துப் பிறகு ஸ்வேச்சையாய் அனுஷ்டிக்காமல்

*இருக்கின்றானோ அவன் பிழைத்து இருக்கும் போதே சண்டாளன் ஆகிறான். இறந்த பிறகு நாயாகப் பிறக்கிறான்.*

ब्रह्मकूर्च(पञ्चगव्य)स्वरूपं तत्प्रमाणं च।

ब्रह्मकूर्चस्वरूपमाह पराशरः – गोमूत्रं गोमयं क्षीरं दधि सर्पिः कुशोदकम्। निर्दिष्टं पञ्चगव्यं तु पवित्रं पापशोधनम्। गोमूत्रं कृष्णवर्णायाः श्वेतायाश्चैव गोमयम्। पयश्च ताम्रवर्णाया रक्ताया गृह्यते दधि॥ कपिलाया घृतं ग्राह्यं सर्वं कापिलमेव वा। मूत्रमेकफलं दद्यादङ्गुष्ठार्धं तु गोमयम्। क्षीरं सप्तपलं दद्याद्दधि त्रिपलमुच्यते। घृतमेकपलं दद्यात् पलमेकं कुशोदकम्। गायत्र्याऽऽदाय गोमूत्रं गन्धद्वारेति गोमयम्। आप्यायस्वेति च क्षीरं दधिक्रावृण्णस्तथा दधि। तथा शुक्रमसीत्याज्यं देवस्यत्वा कुशोदकम्। पञ्चगव्यमृचापूतं स्थापयेदग्निसन्निधौ। आपोहिष्ठेत्यृचाऽऽलोड्य मानस्तोकेति मन्त्रयेत्। सप्तावरास्तु ये दर्भा अच्छिन्नाग्राः शुकत्विषः। एतैरुद्धृत्य होतव्यं पञ्चगव्यं यथाविधि। इरावती इदं विष्णुर्मानस्तोके च शंवती। एताभिश्चैव होतव्यं हुतशेषं पिबेत् द्विजः। आलोड्य प्रणवेनैव प्रणवेनाभिमन्त्रयेत्। उद्धृत्य प्रणवेनैव पिबेच्च प्रणवेन तु। मध्यमेन पलाशस्य पद्मपत्रेण वा पिबेत्। स्वर्णपात्रेण रौप्येण ब्रह्मतीर्थेन वा पुनः। यत्त्वगस्थिगतं पापं देहे तिष्ठति देहिनाम्। ब्रह्मकूर्चो दहेत् सर्वं प्रदीप्तोऽग्निरिवेन्धनम्। पवित्रं त्रिषु कालेषु देवताभिरधिष्ठितम्। वरुणश्चैव गोमूत्रे गोमये हव्यवाहनः। दध्नि वायुः समुद्दिष्टः सोमः क्षीरे घृते रविः इति।

**ப்ரம்ஹ கூர்ச்சத்தின் ஸ்வரூபமும் அதன் ப்ரமாணமும்.**

பராசரர்:— *கோமூத்ரம், கோமயம், பால், தயிர், நெய், தர்ப்ப ஜலம் இவை பஞ்சகவ்யம் எனப்படுகிறது. இது சுத்திகரம். பாபத்தைப் போக்கக் கூடியது. கறுப்புப்*

பசுவின் மூத்ரமும், வெள்ளைப் பசுவின் கோமயமும், தாம்ரவர்ணப் பசுவின் பாலும், சிவப்புப் பசுவின் தயிரும், கபிலப் பசுவின் (காராம்பசு) நெய்யும் க்ரஹிக்கப்பட வேண்டும். அல்லது கபிலப் பசுவினின்றே எல்லாவற்றையும், க்ரஹிக்கலாம். ஒரு பலம் மூத்ரம், அரைக் கட்டை விரலளவு கோமயம், ஏழு பலம் பால், மூன்று பலம் தயிர், ஒரு பலம் நெய், ஒரு பலம் தர்ப்பை ஜலம் என்று சேர்க்கவும். காயத்ரியால் கோமூத்ரமும், கந்தத்வாராம் என்ற மந்த்ரத்தால் கோமயமும், ஆப்யாயஸ்வ என்ற மந்த்ரத்தால் பாலும், ததிக்ராவிண்ண: என்ற மந்த்ரத்தால் தயிரும், சுக்ரமஸி என்ற மந்த்ரத்தால் நெய்யும், தேவஸ்யத்வா என்ற மந்த்ரத்தால் தர்ப்ப ஜலமும் சேர்க்கப்பட வேண்டும். இவ்விதம் மந்த்ரத்தால் சுத்தமான பஞ்சகவ்யத்தை அக்னியின் எதிரில் வைக்க வேண்டும். ஆபோஹிஷ்ட என்ற மந்த்ரத்தால் கலக்கி, மானஸ்தோகே என்ற மந்த்ரத்தை ஜபிக்கவும். ஏழுக்குக் குறையாமல் உள்ளதும், நுனி உள்ளதும், கிளிபோல் பச்சை நிறமுள்ளதுமாகிய தர்ப்பங்களால் பஞ்சகவ்யத்தை எடுத்து விதிப்படி ஹோமம் செய்ய வேண்டும். இராவதீ, இதம் விஷ்ணு:, மானஸ்தோகே, சம்வதீ என்ற மந்த்ரங்களால் ஹோமம் செய்ய வேண்டும். இப்படி ஹோமம் செய்து, பிறகு மீதி உள்ளதை ப்ராம்ஹணன் பானம் செய்ய வேண்டும். ப்ரணவத்தால் கலக்கி, ப்ரணவத்தால் அபிமந்த்ரித்து, ப்ரணவத்தாலேயே எடுத்து, ப்ரவணத்தாலேயே பருக வேண்டும். பலாச வ்ருக்ஷத்தின் நடு இலையாலாவது தாமரை இலையாலாவது பானம் செய்ய வேண்டும் அல்லது ஸ்வர்ண பாத்ரம், வெள்ளிப் பாத்ரம், ப்ரம்ஹதீர்த்தம் இவைகளில் ஒன்றினுல் பருகலாம். ப்ராணிகளுக்குத் தேஹத்தில் தோல், எலும்பு, இவைகளில் எந்தப் பாபம் இருக்குமோ அப்பாபம் எல்லாவற்றையும் ப்ரம்ஹகூர்ச்ச பஞ்சகவ்யம், ஜ்வலிக்கின்ற நெருப்பு விறகை எரிப்பது போல் எரிக்கும். மூவுலகங்களுள்

பரிசுத்தமாகியது. தேவதைகளால் வஸிக்கப்பட்டது இது. கோமூத்ரத்தில் வருணனும், கோமயத்தில் அக்னியும், தயிரில் வாயும், பாலில் சந்த்ரனும், நெய்யில் ஸூர்யனும் வஸிக்கின்றார்கள், என்று சொல்லப்படுகிறது.

यथोक्तपरिमाणानि द्रव्याणि पालाशादिपत्रे गायत्र्यादिभिः संयोज्य स्थापयित्वाऽऽपोहिष्ठेति त्र्यृचेनालोड्य मानस्तोकेत्यभि-मन्त्र्य सप्तावरैर्हरितवर्णैर्दर्भैरवदाय इरावतीं इदं विष्णुर्मानस्तोके शन्नो देवीरभिष्टय इति चतसृभिरग्नये स्वाहा सोमाय स्वाहा सवित्रे स्वाहा ओं स्वाहा अग्नये स्विष्ट कृते स्वाहेति प्रजापत्युक्तैर्मन्त्रैश्च पलाशपत्रेण हुत्वा हुतशेषं हस्तेन काष्ठेन वा निर्मथ्य पिबेत्।

முன் சொல்லப்பட்ட அளவுள்ள த்ரவ்யங்களைப் புரசு முதலிய இலையில் காயத்ரீ முதலிய மந்த்ரங்களால் ஒன்று சேர்த்து வைத்து, ஆபோஹிஷ்ட என்ற மூன்று ருக்குகளால் கலக்கி, மானஸ்தோகே என்ற மந்த்ரத்தால் அபிமந்த்ரித்து, ஏழுக்குக் குறையாத பச்சை நிறமுள்ள தர்ப்பங்களால் எடுத்து, இராவதீ, இதம்விஷ்ணு:, மானஸ்தோகே, சந்நோதேவீ: என்ற நான்கு மந்த்ரங்களாலும், அக்நயே ஸ்வாஹா, ஸோமாய ஸ்வாஹா, ஸவித்ரே ஸ்வாஹா, ஓம் ஸ்வாஹா, அக்னயேஸ்விஷ்டக்ருதே ஸ்வாஹா என்று ப்ரஜாபதியினல் சொல்லப்பட்ட மந்த்ரங்களாலும் புரசு இலையால் ஹோமம் செய்து, ஹோமம் செய்த மீதியை கையாலாவது, ஸமித்தாலாவது கலக்கிக் குடிக்க வேண்டும்.

## गोमूत्रादीनां प्रमाणान्तरम्।

गोमूत्रादीनां प्रमाणान्तरमाह प्रजापतिः — गोमयाद्द्विगुणं मूत्रं सर्पिर्दद्याच्चतुर्गुणम्। क्षीरमष्टगुणं देयं दधि पञ्चगुणं तथा इति। अत्र गोमयस्य परिमाणविशेषानभिधाना द्वचनान्तरेणाङ्गुष्ठार्ध-परिमितं

गोमयं ग्राह्यम् । पर्वद्वयोपेतमङ्गुष्ठम् । तत्रोपरितनपर्वणा समानपरिमाणं गोमयं स्वीकृत्य यथोक्तोत्तराभिवृद्ध्या गोमूत्रादीनि योजयेत् । एतच्च पूर्वोक्तपरिमाणेन सह विकल्प्येत ।

**கோமூத்ரம் முதலியவைக்கு மற்ருெரு அளவு.**

ப்ரஜாபதி:— *கோமயத்தை விட இரண்டு மடங்கு கோமூத்ரமும், அதைவிட நான்கு மடங்கு நெய், அதைவிட எட்டு மடங்கு பால், அதைவிட ஐந்து மடங்கு தயிர் (என்று சேர்க்கப்படவேண்டும்). இந்த வசனத்தில் கோமயத்திற்கு அளவு சொல்லாததால், மற்ருெரு வசனத்தால் அரைக் கட்டை விரலளவு கோமயம் எடுத்துக் கொள்ளப்பட வேண்டும். இரண்டு கணு உள்ளது அங்குஷ்டம் என்பது. அந்த அங்குஷ்டத்தில் மேலுள்ள கணுவுடன் ஸரி அளவுள்ள கோமயத்தை க்ரஹித்து, முன் சொல்லிய படி மேல் மேல் வ்ருத்தியுடன் கோமூத்ரம் முதலியவைகளைச் சேர்க்க வேண்டும். இது முன் சொல்லிய அளவுடன் விகல்பிக்கப்படுகிறது. (இஷ்டப்படி ஏதாவது ஒரு அளவை க்ரஹிக்கலாம்.)*

स एव – पालाशं पद्मपत्रं वा ताम्रं वाऽथ हिरण्मयम् । गृहीत्वा सादयित्वाऽथ ततः कर्म समारभेत् । स्थापयित्वाऽथ दर्भेषु पालाशैः पत्रकैरथ । तत्समुद्धृत्य होतव्यं देवताभ्यो यथाक्रमम् । अग्नये चैव सोमाय सवित्रे च तथैव च । प्रणवेन तथा हुत्वा स्विष्टकृच्च तथैव च इति ।

ப்ரஜாபதி:— *பாலாச வ்ருக்ஷத்தின் இலை, தாமரை இலை, தாம்ர பாத்ரம், தங்கப் பாத்ரம் இவைகளில் ஒன்று எடுத்து வைத்து, பிறகு கர்மாவை ஆரம்பிக்க வேண்டும். தர்ப்பங்களில் வைத்து, புரசு இலைகளால் அதை யெடுத்து, மேற் சொல்லப்படும் தேவதைகளுக்கு க்ரமப்படி ஹோமம் செய்ய வேண்டும். அக்னி, ஸோமன், ஸவிதா,*

இவர்களுக்கும் ப்ரணவத்துடன் ஹோமம் செய்து, ஸ்விஷ்டக்ருத்து ஹோமம் செய்ய வேண்டும்.

## ब्रह्मकूर्चविधौ कालविशेषदेशविशेषौ।

ब्रह्मकूर्चस्य कालविशेषमाह स एव – चतुर्दश्यामुपोष्याथ पौर्णमास्यां समाचरेत् इति। जाबालिरपि – अहोरात्रोषितो भूत्वा पौर्णमास्यां विशेषतः। पञ्चगव्यं पिबेत् प्रातर्ब्रह्मकूर्चमिति स्मृतम् इति। देशविशेषमाह शातातपः – नदीतीरेषु गोष्ठेषु पुण्येष्वायतनेषु वा। तत्र गत्वा शुचौ देशे ब्रह्मकूर्चं समाचरेत् इति।

### ப்ரம்ஹ கூர்ச்சவிதியில் கால விசேஷமும் தேச விசேஷமும்.

**ப்ரஜாபதி:**— *சதுர்த்தசியில் உபவாஸமிருந்து, பூர்ணிமையில் செய்ய வேண்டும்.* **ஜாபாலியும்:**— *ஒரு நாள் உபவாஸமிருந்து பூர்ணிமையில் காலையில் ப்ரம்ஹகூர்ச்சம் என்கிற பஞ்சகவ்யத்தைப் பானம் செய்ய வேண்டும்.* **சாதாதபர்:**— *நதீதீரம், மாட்டுக்கொட்டில், புண்யமான தேவாலயங்கள், இவைகளில் ஒன்றை யடைந்து, சுத்தமான ப்ரதேசத்தில் ப்ரம்ஹகூர்ச்சத்தைச் செய்ய வேண்டும்.*

## प्राजापत्यादिप्रत्याम्नायनिरूपणम्।

अथ पूर्वोक्तानां व्रतानां केनचिन्निमित्तेनानुष्ठानाशक्तौ यथायोगं प्रत्याम्नाया उच्यन्ते। तत्र प्राजापत्यप्रत्याम्नायाश्चतुर्विंशतिमते दर्शिताः - कृच्छ्रोऽयुतं तु गायत्र्या उदवासस्तथैव च। धेनुप्रदानं विप्राय सममेतच्चतुष्टयम्। तिलहोम सहस्रं तु वेदपारायणं तथा। विप्रा द्वादश वा भोज्याः पावकेष्टिस्तथैव च। अथ वा पावमानेष्टिः समान्याहुर्मनीषिणः इति। तिलहोमसहस्रं गायत्र्या। पराशरः – कृच्छ्रो देव्ययुतं चैव प्राणायामशतद्वयम्। पुण्यतीर्थेऽनार्द्रशिरः स्नानं

द्वादश संख्यया । द्वियोजनं तीर्थयात्रा कृच्छ्रमेकं प्रकल्पितम् इति । अनार्द्रं शिरो यस्य असावनार्द्रशिराः । तस्य स्नानमनार्द्रशिरः स्नानम् । सकृत् स्नात्वा तदङ्गानुष्ठानं च कृत्वा केशान् शोषयित्वा ततो द्वितीयस्नानमाचरेत् । एवं विधस्नानद्वादशकं पुण्यतीर्थकृतमित्यर्थः । हेमाद्रौ – कृच्छ्रोऽयुतं तु गायत्र्याः विप्रद्वादशभोजनम् । तिलहोमसहस्रं वा सममेतच्चतुष्टयम् इति । द्वादशब्राह्मणभोजनं निर्धनविषयम् । धनिकस्य प्रतिदिनं पञ्च पञ्चेति द्वादशसु दिवसेषु षष्टिर्ब्राह्मणाः भोजनीयाः ।

**ப்ராஜாபத்ய க்ருச்ரம் முதலியதற்குச் சமமாயுள்ளவை.**

இனி முன் சொல்லப்பட்ட க்ருச்ரங்களை எக்காரணத்தாலாவது அனுஷ்டிக்கச் சக்தியில்லாவிடில், சாஸ்த்ரப்படி ப்ரத்யாம்நாயம் (ஸமமானது) சொல்லப்படுகிறது. அதில் ப்ராஜாபத்ய க்ருச்ரத்திற்கு ஸமமானவைகள் சொல்லப்பட்டுள்ளன. **சதுர்விம்சதிமதத்தில் :** – ப்ராஜாபத்யக்ருச்ரம், காயத்ரியின் பதினாயிரம் ஜபம், ஜலத்தில் வஸிப்பது, ப்ராம்ஹணனுக்குக் கோதானம் செய்வது, என்ற இந்நான்கும் ஸமமாகும். ஆயிரம் முறை திலஹோமம், வேதபாராயணம், பன்னிரண்டு ப்ராம்ஹணர்களுக்குப் போஜனம், பாவகேஷ்டி, அல்லது பாவமானேஷ்டி இவை ஸமம் என்கிறார்கள் வித்வான்கள். ஸஹஸ்ரதிலஹோமம் என்பது காயத்ரியினால் செய்ய வேண்டியது. **பராசரர்:**— ப்ராஜாபத்ய க்ருச்ரம், பதினாயிரம் காயத்ரீ ஜபம், இருநூறு ப்ராணாயாமம், புண்ய தீர்த்தத்தில் பன்னிரண்டு முறை காய்ந்த தலையுடன் ஸ்நானம், இரண்டு யோஜனை தூரத்திலுள்ள தீர்த்தத்திற்கு யாத்ரை செய்வது, இவை ஒரு க்ருச்ரம் எனப்படுகிறது. காய்ந்த தலை உள்ளவன் அனார்த்ரசிரஸ் எனப்படுவான். அவன் செய்யும் ஸ்நானம்

அனூர்த்ரசிரஸ்ஸ்நானம். ஒரு முறை ஸ்நானம் செய்து, ஸ்நான அங்கங்களேயும் அனுஷ்டித்து, மயிர்களே உலர்த்தி, பிறகு இரண்டாவது முறை ஸ்நானம் செய்ய வேண்டும். இவ்விதமாகப் பன்னிரண்டு ஸ்நானம் புண்ய தீர்த்தத்தில் செய்யப்பட்டது. என்று பொருள். ஹேமாத்ரியில்:— ப்ராஜாபத்ய க்ருச்ரம், பதினாயிரம் காயத்ரீ ஜபம், பன்னிரண்டு ப்ராம்ஹணர்களைப் புஜிப்பிப்பது, ஆயிரம் திலஹோமம், இவை நான்கும் ஸமம். பன்னிரண்டு ப்ராம்ஹணர்களுக்குப் போஜனம் என்றது பணமில்லாதவனைப் பற்றியது. பணமுள்ளவனுக்கு ஒவ்வொரு தினத்திலும் ஐந்து ப்ராம்ஹணர்கள் என்று பன்னிரண்டு நாட்களில் அறுபது ப்ராம்ஹணர்கள் புஜிப்பிக்கப்பட வேண்டும்.

अत एव स्मृत्यन्तरम् – प्राजापत्यं चरन्विप्रो यद्यशक्तः कथञ्चन । प्रत्यहं पञ्च विप्राग्र्यान्भोजयेत् सम्यगीप्सितान् इति । अन्यत्रापि – षष्टिश्चतुर्विंशतिर्वा भोज्या द्वादश वा द्विजाः । तावद्भोजनपर्याप्तं धान्यं तन्मूल्यमेव वा । तत्समृद्ध्यसमृद्धिभ्यां संख्यावैषम्यभाषणम् इति । माधवीये – प्राजापत्यक्रियाशक्तौ धेनुं दद्याद्द्विजोत्तमः । धेनोरभावे दातव्यं तन्मूल्यं वा न संशयः इति । मूल्यं च यथाशक्ति देयम्, गवामभावे निष्कं स्यात्त दर्धं पादमेव वा । पादहीनं न कर्तव्यमिति शातातपोऽब्रवीत् इति स्मरणात् । स्मृत्यन्तरे – कृच्छ्रोऽयुतं तु गायत्र्या उदवासस्तथैव च । समुद्रगानदीस्नानं सममेतच्चतुष्टयम् इति । नदीस्नानं - मृत्तिकास्नानम् ।

ஓர் ஸ்ம்ருதி:— ப்ராஜாபத்ய க்ருச்ரத்தை யனுஷ்டிக்கும் ப்ராம்ஹணன் எவ்விதத்தாலாவது சக்தியற்றவனாகில், ஒவ்வொரு நாளும்

விரும்பியவர்களாகிய சிறந்த ஐந்து ப்ராம்ஹணர்களை நன்ருகப் புஜிப்பிக்க வேண்டும், என்று. மற்ருேர் ஸ்ம்ருதியில்:— அறுபது, அல்லது இருபத்து நான்கு அல்லது பன்னிரண்டு ப்ராம்ஹணர்களைப் புஜிப்பிக்க வேண்டும் அல்லது அவ்வளவு போஜனத்திற்குப் போதுமான தான்யமாவது, தான்யத்தின் மூல்யமாவது கொடுக்கப்பட வேண்டும். அவ்விஷயத்தில் கணக்கில் உயர்வு குறைவு சொல்லியது அதிகாரியின் பணத்தின் நிறைவு குறைவுகளை அனுஸரித்துள்ளது. மாதவீயத்தில்:— ப்ராஜாபத்ய க்ருச்ரத்தை யனுஷ்டிக்கச் சக்தியில்லாவிடில், ப்ராம்ஹணன் பசுவைத் தானம் செய்ய வேண்டும். பசு இல்லாவிடில், பசுவின் மூல்யமாவது கொடுக்கப்பட வேண்டும். ஸம்சயமில்லை. மூல்யம் என்பது சக்திக்குத் தகுந்தபடி கொடுக்கப்பட வேண்டும். ''பசுக்களில்லாவிடில், ஒரு நிஷ்கத்தைக் கொடுக்க வேண்டும். அல்லது நிஷ்கத்தின் பாதியாவது, கால் பாகமாவது கொடுக்கப்பட வேண்டும். கால் பாகத்திற்குக் குறைந்து கொடுக்கக் கூடாது, என்ருர் சாதாதபர்'' என்று ஸ்ம்ருதி இருப்பதால். ஓர் ஸ்ம்ருதியில்:— ப்ராஜாபத்ய க்ருச்ரம், பதிஞயிரம் காயத்ரீ ஜபம், ஜலவாஸம், ஸமுத்ரத்தை யடையும் நதியில் ஸ்நானம் இந்நான்கும் ஸமமாகும். நதீ ஸ்நானம் என்றது ம்ருத்திகா ஸ்நான விதியுடன் செய்யும் ஸ்நானம்.

## चान्द्रायणादिप्रत्याम्नायाः ।

चान्द्रायणादीनां प्रत्याम्नायश्चतुर्विंशतिमते दर्शितः — चान्द्रायणं मृगारेष्टिः पवित्रेष्टिस्तथैव च । मित्रविन्दापशुश्चैव कृच्छ्रं मासत्रयं तथा । तिलहोमायुतं चैव पराकद्वयमेव च । गायत्र्या लक्षजप्यं च समान्याह बृहस्पतिः । नित्यनैमित्तिकानां च काम्यानां चैव कर्मणाम् । इष्टीनां पशुबन्धानामभावे चरवः स्मृताः ।

पराकतप्तकृच्छ्राणां स्थाने कृच्छ्रत्रयं चरेत् । व्रतहोमादिकं वाऽपि कल्पयेत् पूर्वकल्पवत् इति । स्मृत्यन्तरे – चान्द्रायणं त्रयः कृच्छ्रा गायत्र्या अयुतत्रयम् । तथा महानदीस्नानं सममेतच्चतुष्टयम् इति ।

**சாந்த்ராயணம் முதலியதற்கு ஸமமானவை**

சதுர்விம்சதிமதத்தில்:— சாந்த்ராயண க்ருச்ரம், ம்ருகாரேஷ்டி, பவித்ரேஷ்டி, மித்ரவிந்தா பசு, மூன்று மாஸங்களில் அனுஷ்டிக்கும் க்ருச்ரம், பதினாயிரம் திலஹோமம், இரண்டு பராக க்ருச்ரம், லக்ஷம் காயத்ரீ ஜபம் இவைகளை ஸமம் என்றார் ப்ருஹஸ்பதி. நித்யம், நைமித்திகம், காம்யம் என்ற கர்மங்கள், இஷ்டிகள், பசு பந்தங்கள் இவைகளைச் செய்ய முடியாவிடில், சருக்கள் விதிக்கப்பட்டுள்ளன. பராகம், தப்த க்ருச்ரம் இவைகளின் ஸ்தானத்தில் மூன்று க்ருச்ரங்களை யனுஷ்டிக்க வேண்டும். வ்ரதம், ஹோமம் முதலியதையாவது முன் சொல்லிய ப்ரயோகப்படி அனுஷ்டிக்க வேண்டும். ஓர் ஸ்ம்ருதியில்:— சாந்த்ராயணம், மூன்று ப்ராஜாபத்ய க்ருச்ரங்கள், முப்பதினாயிரம் காயத்ரீ ஜபம், மஹாநதியில் ஸ்நானம் இந்நான்கும் ஸமமாகும்.

## महानदीपरिगणनम् ।

महानद्यः परिगणिता देवलेन – अथ गङ्गा सरस्वती यमुना नर्मदा विपाशा वितस्ता कौशिकी नन्दा विरजा चन्द्रभागा सरयूः शरावती सिन्धुः कृष्णवेणी शोणा तापिनी पाषाणका गोमती गण्डकी बाहुदा पम्पा देविका कावेरी ताम्रपर्णी चर्मण्वती वेत्रवती गोदावरी तुङ्गभद्रा सुचक्षुररुणा चेति महानद्यः पुण्यतमाः इति ।

**மஹாநதிகளின் எண்ணிக்கை.**

தேவலர்:— கங்கை, ஸரஸ்வதீ, யமுனா, நர்மதா, விபாசா, விதஸ்தா, கௌசிகீ, நந்தா, விரஜா, சந்த்ரபாகா,

ஸரயூ, சராவதீ, ஸிந்து, க்ருஷ்ணவேணீ, சோணா, தாபினீ, பாஷாணகா, கோமதீ, கண்டகீ, பாஹுதா, பம்பா, தேவிகா, காவேரீ, தாம்ரபர்ணீ, சர்மண்வதீ, வேத்ரவதீ, கோதாவரீ, துங்கபத்ரா, ஸாசக்ஷா, அருணா இவைகள் அதிக புண்யமுள்ள மஹாநதிகளாம்.

चतुर्विंशतिमते – प्राजापत्ये तु गामेकां दद्यात् सान्तपने द्वयम्। पराकतप्तकृच्छ्रेषु तिस्रस्तिस्रस्तु गाः स्मृताः। अष्टौ चान्द्रायणे देयाः प्रत्याम्नायविधौ सदा। यथा वित्तानुसारेण दानं दद्याद्विशुद्धये इति।

சதுர்விம்சதிமதத்தில்:— ப்ரத்யாம்நாயம் செய்யும் விஷயத்தில் ப்ராஜாபத்ய க்ருச்ரத்தில் ஒரு பசுவைக் கொடுக்க வேண்டும். ஸாந்தபன க்ருச்ரத்தில் இரண்டு பசுவைக் கொடுக்க வேண்டும். பராக க்ருச்ரம் தப்தக்ருச்ரம் இவைகளில் மும்மூன்று பசுக்கள் கொடுக்கப்பட வேண்டும். சுத்தியின் பொருட்டு தனது தனத்துக்குத் தகுந்தபடி தானத்தைக் கொடுக்க வேண்டும்.

यत्तु स्मृत्यन्तरे चान्द्रायणस्य गोदानत्रयमभिहितम् – प्राजापत्ये तु गामेकामतिकृच्छ्रे द्वयं स्मृतम्। चान्द्रायणे पराके च तिस्रस्ता दक्षिणास्तथा इति, तन्निर्धनविषयम्। गोदानादावशक्तो गोभ्यस्तृणं दद्यात्। तथाऽऽह कण्वः – एकमध्ययनं कुर्यात् प्राजापत्यमथापि वा। दद्याद्द्वादश साहस्रं गवां षष्टीर्विचक्षणः इति।

ஓர் ஸ்ம்ருதியில்:— சாந்த்ராயணத்திற்கு மூன்று பசுக்களின் தானம்:- "ப்ராஜாபத்ய க்ருச்ரத்தில் ஒரு பசுவைக் கொடுக்கவும், அதிக்ருச்ரத்தில் இரண்டு பசுக்களின் தானம், சாந்த்ராயணம், பராகம் இவைகளில் மூன்று பசுக்கள் தக்ஷிணை" என்று விதிக்கப்பட்டிருப்பது, தனம் இல்லாதவனைப் பற்றியது. கோதானம் முதலியதில் சக்தியில்லாதவன் பசுக்களுக்குப் புல்லைக் கொடுக்க வேண்டும். அதைச் சொல்லுகிறார், கண்வர்:—

வேதாத்யயனம் ஒரு முறையாவது செய்ய வேண்டும். அல்லது ப்ராஜாபத்ய க்ருச்ரத்தை யனுஷ்டிக்க வேண்டும். அல்லது பன்னிரண்டாயிரம் முஷ்டி புற்களைப் பசுக்களுக்குக் கொடுக்க வேண்டும்.

चतुर्विंशतिमते – कृच्छ्रे पञ्चातिकृच्छ्रे त्रिगुणमहरहस्त्रिंशदेवं तृतीये चत्वारिंशच्च तप्ते त्रिगुणनगुणिता विंशतिः स्यात् पराके। कृच्छ्रे सान्तापनाख्ये भवति षडधिका विंशतिस्सैव हीना द्वाभ्यां चान्द्रायणे स्यात्तपसि कृशबलो भोजयेद्विप्रमुख्यान् इति । अहरहरिति सर्वत्र संबध्यते। तृतीयः - कृच्छ्रातिकृच्छ्रः।

சதுர்விம்சதிமதத்தில்:— ப்ராஜாபத்ய க்ருச்ரத்தில் ஒவ்வொரு நாளிலும் ஐந்து ப்ராம்ஹணர்களைப் புஜிப்பிக்கவும். அதிக்ருச்ரத்தில் பதினைந்து ப்ராம்ஹணர்களையும் மூன்றுவதாகிய க்ருச்ராதி க்ருச்ரத்தில் முப்பது ப்ராம்ஹணர்களையும், தப்த க்ருச்ரத்தில் நாற்பது ப்ராம்ஹணர்களையும், பராக க்ருச்ரத்தில் அறுபது ப்ராம்ஹணர்களையும், ஸாந்தபன க்ருச்ரத்தில் இருபத்தாறு ப்ராம்ஹணர்களையும், சாந்த்ராயணத்தில் இருபத்து நான்கு ப்ராம்ஹணர்களையும், க்ருச்ரத்தை யனுஷ்டிக்கச் சக்தியில்லாதவன் புஜிக்கச் செய்ய வேண்டும். ஒவ்வொரு நாளிலும் என்றதை எல்லாவற்றிலும் சேர்க்க வேண்டும்.

### अध्ययनादेः पुरुषविशेषेण व्यवस्था।

अध्ययनजपादीनां पुरुषविशेषेण व्यवस्था तत्रैव दर्शिता – धर्मनिष्ठास्तपोनिष्ठाः कदाचित् पापमागताः । जपहोमादिकं तेभ्यो विशेषेण विधीयते। नामधारकविप्रा ये मूर्खा धर्मविवर्जिताः। कृच्छ्र चान्द्रायणादीनि तेभ्यो दद्याद्विशेषतः । धनिना दक्षिणा देया प्रयत्नविहिता तु या। एवं नरविशेषेण प्रायश्चित्तानि दापयेत् इति। यत्र यावत्सङ्ख्यया प्राजापत्यादीन्यावर्तनीयानि भवन्ति तत्र तावत्संख्यया गोदानादीन्यावर्तनीयानि।

**வேதபாராயணம் முதலியதற்குப் புருஷர்களை அனுஸரித்து வ்யவஸ்தை.**

வேதபாராயணம், காயத்ரீஜபம் முதலியதற்குப் புருஷபேதத்தால் வ்யவஸ்தை அங்கேயே (சதுர்விம்சதிமதத்தில்) சொல்லப்பட்டுள்ளது. தர்ம நிஷ்டர்களாயும், தபோநிஷ்டர்களாயும் உள்ளவர்கள் ஒரு ஸமயத்தில் பாபத்தையடைந்தால் அவர்களுக்கு ஜபம் ஹோமம் முதலியவை விசேஷமாய் விதிக்கப்படுகின்றன. தர்மம் இல்லாதவரும், வித்யை இல்லாதவரும், ப்ராம்ஹணன் என்ற பெயரை மட்டில் தரித்தவரான ப்ராம்ஹணர்கள் எவரோ, அவர்களுக்கு க்ருச்ரம் சாந்த்ராயணம் முதலியவைகளை அவச்யம் விதிக்க வேண்டும். பணம் உள்ளவன் சாஸ்த்ரத்தால் விதிக்கப்பட்ட தக்ஷிணையைக் கொடுக்க வேண்டும். இவ்விதம் மனுஷ்யர்களை அனுஸரித்து ப்ராயச்சித்தத்தை விதிக்க வேண்டும். எந்த ப்ராயச்சித்தத்தில் ப்ராஜாபத்ய க்ருச்ரங்கள் அடிக்கடி செய்ய வேண்டியவைகளோ, அவ்விடத்தில் ப்ராஜாபத்ய க்ருச்ரத்தின் கணக்குப்படி கோதானம் முதலியவைகள் ஆவர்த்தி செய்யப்பட வேண்டும்.

तदपि चतुर्विंशातिमते दर्शितम् – जन्मप्रभृति पापानि बहूनि विविधानि च । कृत्वाऽर्वाक् भ्रूणहत्यायाष्षडब्दं कृच्छ्रमाचरेत् । प्रत्याम्नाये गवां देयं साऽशीति धनिना शतम् । तथाऽष्टादशलक्षाणि गायत्र्या वा जपेत् बुधः इति ।

அதுவும் சொல்லப்பட்டுள்ளது, சதுர்விம்சதிமதத்தில்:— பிறந்தது முதல் பலவிதமான பாபங்களைச் செய்தால் ப்ரம்ஹஹத்திக்குக் கீழ்ப்பட்டுள்ள அவைகளுக்கு 'ஆறு அப்தம்' நூற்றெண்பது ப்ராஜாபத்ய க்ருச்ரங்களை யனுஷ்டிக்க வேண்டும். ப்ரத்யாம்நாயம்

செய்யும் விஷயத்தில், பணமுள்ளவன் நூற்றெண்பது பசுக்களைத் தானம் செய்ய வேண்டும். அல்லது, அறிந்தவன் பதினெட்டு லக்ஷம் முறை காயத்ரீ ஜபத்தைச் செய்ய வேண்டும்.

*प्रायश्चित्तकाण्डः समाप्तः ।*

* * *

*इति स्मृतिमुक्ताफलाख्ये धर्मशास्त्रे*
*प्रायश्चित्तनिरूपणं नाम षष्ठः परिच्छेदः ।*

*स्मृतिमुक्ताफलं समाप्तम् ।*

*ஸ்ம்ருதிமுக்தாபலத்தில் ப்ராயஶ்சித்த நிருபணம் என்கிற ஆருவது காண்டம் முற்றிற்று.*

*ஸ்ம்ருதிமுக்தாபலம் முற்றிற்று*

